

இந்நூலின் ஆசிரியர்:

ஸ்ரீ. உ. வே.

கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

ஸ்ரீ:



# ஸந்த்யாவந்தந பாஷ்யம்

[இரண்டாம் பதிப்பு]




பதிப்பாசிரியர் :-

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்.

'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,

3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.

டிரஸ்டிகள்:-

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.B.L., அட்வகேட்,
S. ராம அய்யங்கார், B.Sc.B.L., அட்வகேட்.

விலை ரூ. 4.50. ❋ தபால் 0.75.



॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

# ஸந்த்யாவந்தந பாஷ்யம்

[ இரண்டாம் பதிப்பு ]

[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு.]



இயற்றியவர்:—

K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்ஸ்வாமி, அட்வகேட்.



கிடைக்குமிடம்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்.
3. புத்தூர் அக்ரஹாரம். திருச்சி.

விலை ரூ. [தபால் 0–75

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம். திருச்சி.

श्रीः
यजुर्वेदीय-

## ॥ कालत्रय सन्ध्यावन्दनम् ॥

யஜுர்வேதீய

## காலத்ரய ஸந்த்யாவந்தநம்

अपवित्रः पवित्रो वा सर्वावस्थां गतोऽपि वा।
यः स्मरेत् पुण्डरीकाक्षं स बाह्याभ्यन्तरः शुचिः॥

அபவித்ர: பவித்ரோ வா ஸர்வாவஸ்த்2ாம் க3தோऽபி வா।
ய: ஸ்மரேத் புண்ட3ரீகாக்ஷம் ஸ பா3ஹ்யாப்4யந்தர: ஶுசி:॥

[இதன் பொருள்:— பரிசுத்தனயில்லாவிடினும், இருந்தாலும், எந்நிலையிலிருந்தாலும், செந்தாமரைக்கண்ணனை நினைப்பவன் உள்ளும் புறமும் சுத்தனாகிறான்.]

| आचमनम्-ஆசமநம் | | பொருள் |
|---|---|---|
| ओं अच्युताय नमः। | ஓம் அச்யுதாய நம: | ஓம் அச்சுதனுக்கு நமஸ்காரம். |
| ,, अनन्ताय नमः। | ,, அநந்தாய நம: | ,, அநந்தனுக்கு ,, |
| ,, गोविन्दाय नमः। | ,, கோ3விந்த3ாயநம: | ,, கோவிந்தனுக்கு ,, |

வலதுகையை கோகர்ணம் (பசுவின் காது) போல் மடித்துக் கொண்டு, உள்ளங்கையில் (சுமார்) ஒரு உத்தரிணி தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு மேற்கூறிய மந்திரங்களில் ஒவ்வொன்றாக உச்சரித்துக்கொண்டு மூன்று தடவை நீரைப்பருகவேண்டும். அதற்குப்பின் இரண்டு தடவை உதடுகளைத் துடைக்கவேண்டியது. அதற்குப்பின்,—

| | | பொருள் |
|---|---|---|
| ओं केशवाय नमः | ஓம் கேஶவாய நம: | ஓம் கேசவனுக்கு நமஸ்காரம் |
| ,, नारायणाय नमः | ,, நாராயணாய ,, | ,, நாராயணனுக்கு ,, |
| ,, माधवाय नमः | ,, மாத4வாய ,, | ,, மாதவனுக்கு ,, |
| ,, गोविन्दाय नमः | ,, கோ3விந்த3ாய ,, | ,, கோவிந்தனுக்கு ,, |
| ,, विष्णवे नमः | ,, விஷ்ணவே ,, | ,, விஷ்ணுவுக்கு ,, |
| ,, मधुसूदनाय नमः | ,, மது4ஸூத3நாய ,, | ,, மதுஸூதநனுக்கு ,, |

,, त्रिविक्रमाय नमः .. த்ரிவிக்ரமாய ,, ,, த்ரிவிக்ரமனுக்கு ,,
,, वामनाय नमः ,, வாமனாய ,, ,, வாமனனுக்கு ,,
,, श्रीधराय नमः ,, ஸ்ரீத$_4$ராய ,, ,, ஸ்ரீதரனுக்கு ,,
,, हृषीकेशाय नमः ,, ஹ்ருஷீகேஶாய.. ,, ஹ்ருஷீகேஶனுக்கு,,
,, पद्मनाभाय नमः ,, பத்$_3$மநாப$_4$ாய ,, ,, பத்மநாபனுக்கு ,,
,, दामोदराय नमः ,,தா$_3$மோத$_3$ராய.. ,, தாமோதரனுக்கு ..

என்னும் பனிரண்டு மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, முறையே 1. வலது 2. இடது கன்னங்களை வலதுகைப் பெருவிரலாலும், 3. வலது 4. இடது கண்களை வலதுகைப் பவித்ர விரலாலும், 5. வலது 6. இடது மூக்குகளை வலது கை ஆள்காட்டி விரலாலும், 7. வலது 8. இடது காதுகளை வலதுகைச் சிறுவிரலாலும், 9. வலது 10. இடது தோள்களை வலதுகை நடுவிரலாலும், 11. ஹ்ருதயத்தையும், 12. தலையுச்சியையும் வலதுகை ஐந்து விரல்களாலும் ஸ்பர்சிப்பது ஆசமனமாகும்.

ப்ராணாயாமம்

१. ओं भूः। ओं भुवः। ओं सुवः। ओं महः। ओं जनः। ओं तपः। ओं सत्यं॥ ओं तत्सवितुर्वरेण्यम्। भर्गो देवस्य धीमहि। धियो यो नः प्रचोदयात्। ओं आपः ज्योती रसः अमृतं ब्रह्म भूर्भुवस्सुवरों।

1. ஓம் பூ$_4$:, ஓம் பு$_4$வ:, ஓம் ஸுவ:, ஓம் மஹ:,
ஓம் ஜந:, ஓம் தப:, ஓம் ஸத்யம் ||
ஓம் தத் ஸவிதுர் வரேண்யம் | ப$_3$ர்க்கோ$_3$ தே$_3$வஸ்ய தீ$_4$மஹி|
தி$_4$யோ யோ ந: ப்ரசோத$_3$யாத் ||
ஓம் ஆப: ஜ்யோதீ ரஸ: அம்ருதம் ப்$_3$ரஹ்ம
பூ$_4$ர்பு$_4$வஸ்ஸுவரோம் ||

இது ப்ராணாயாமமந்திரம். 'பூ$_4$:' 'பு$_4$வ:'......'ஸத்யம்'என்பவை ஏழு வ்யாஹ்ருதிகள் எனப்படும். 'ஓம் பூ$_4$:...ஓம் ஸத்யம்'' என்றதால், அந்த வ்யாஹ்ருதிகளால் சொல்லப்படுபவன் ஓங்காரவாச்யனை பகவானே என்று பொருளாகிறது. பூலோகம் முதல் ஸத்யலோகம்வரை எல்லாம் ஓங்கார வாச்யனை பகவானே; அதாவது,



இவையனைத்துக்கும் அவனே ஆத்மா என்று பொருள், இனி. இதற்குமேல் "தத் ஸவிதுர் வரேண்யம் ப$_4$ர்க்கோ$_3$ தே$_3$வஸ்ய தீ$_4$மஹி தி$_4$யோ யோ ந: ப்ரசோத$_3$யாத்'' என்னும் மந்திரப்பகுதி காயத்ரீமந்திரம் எனப்படும். அதன் பதவுரை வருமாறு.

*1.* **ஸவிது:**-உலகங்களை ஸ்ருஷ்டித்தவனாகிய, **தே$_3$வஸ்ய**-நாராயணனுடையவையும், **வரேண்யம்**-எல்லாராலும் வரிக்கத்தகுந்தவையுமான, **தத் ப$_4$ர்க்க$_3$:**-அந்தக் கல்யாணகுணங்களின் ஸமூஹத்தை, **தீ$_4$மஹி**—தியானம் செய்வோம்; **ய:**—எந்த தேவன், **ந:**-நம்முடைய, **தி$_4$ய:**-புத்திகளை, **ப்ரசோத$_3$யாத்**—(தன் விஷயமான உபாஸன கைங்கர்யங்களில்) தூண்டுகிறாரோ:

*2.* **தே$_3$வஸ்ய**—ப்ரகாசம் முதலிய குணங்களையுடைய, **ஸவிது:**—ஸூர்யனுக்குள்ளே எழுந்தருளியிருப்பவனும், **வரேண்யம்**-எல்லாராலும் வரிக்கப்படுபவனும், **ப$_4$ர்க்க$_3$:**-ஒளிமயமான திவ்யமங்கள விக்ரஹவிசிஷ்டனுமான பகவானை, **தீ$_4$மஹி**—தியானம் செய்கிறோம். (மற்றவை முன்போல்)

இனி, "ஓமாப:" என்று தொடங்கியுள்ள ப்ராணாயாமமந்திரப் பகுதி காயத்ரீசிரஸ் எனப்படும். "அப்பு, ஜ்யோதி, ரஸம், அம்ருதம், ப்$_3$ரஹ்ம, பூ$_4$:, பு$_4$வ:, ஸுவ:'' என்று சொல்லப்படுபவன் ஓங்கார வாச்யனை பகவானே'' என்று பொருள். ஆக, இம்மூன்று பகுதியும் சேர்ந்தது ப்ராணாயாம மந்திரமாகும், இதை வலதுகைப் பெருவிரலாலும் மோதிரவிரலாலும் மூக்கைப்பிடித்துக்கொண்டு (பூரககும்பக ரேசகங்களுடன்) உச்சரிப்பது ப்ராணாயாமமாகும். ஸந்த்யாவந்தனத்தின் தொடக்கத்தில் 'அபவித்ர:' என்னும் மந்திரத்தை அநுஸந்திந்து, ஒருதடவை ஆசமநமும், ஒருதடவை ப்ராணாயாமமும் செய்துவிட்டு, பின்வருமாறு ஸங்கல்பிக்கவேண்டும்*:—

---

* ஸந்த்யாவந்தனத்தின் தொடக்கத்தில் ஆசமனம் ஆனபிறகு சிலரும், ப்ராணாயாமத்திற்குப்பின் ஸங்கல்பத்தின் தொடக்கத்தில் சிலரும் அனுஸந்திக்கும் ச்லோகங்கள்:

**ஶுக்லாம்ப$_3$ரத$_4$ரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்பு$_4$ஜம் |**
**ப்ரஸந்நவத$_3$நம் த்$_4$யாயேத் ஸர்வவிக்$_4$நோபஶாந்தயே ||**
**யஸ்ய த்$_3$விரத$_3$வக்த்ராத்$_3$யா: பாரிஷத்$_3$யா: பரஶ்ஶதம் ||**
**விக்$_4$நம் நிக்$_4$நந்தி ஸததம் விஷ்வக்ஸேநம் தமாஶ்ரயே ||**

### सङ्कल्पः-ஸங்கல்பம்

ओं श्री अच्युताय नमः, ओं श्री अनन्ताय नमः, ओं श्री गोविन्दाय नमः श्रीभगवदाज्ञया भगवत्कैङ्कर्यं प्रातः सन्ध्यां उपासिष्ये (अथवा प्रातः सन्ध्यावन्दनं करिष्ये)

ஓம் ஸ்ரீஅச்யுதாய நம:, ஓம் ஸ்ரீஅநந்தாய நம:, ஓம் ஸ்ரீகோ$_3$விந்த$_3$ாய நம:, ஸ்ரீப$_4$க$_3$வத$_3$ாஜ்ஞயாப$_4$க$_3$வத்கைங்கர்யம் ப்ராத: ஸந்த்$_4$யாமுபாஸிஷ்யே. (அல்லது ப்ராத: ஸந்த்$_4$யாவந்த$_3$நம் கரிஷ்யே) என்று காலையிலும், "ப்ராத: ஸந்த்$_4$யாமுபாஸிஷ்யே" என்ற ஸ்தானத்தில், "ஸாயம் ஸந்த்$_4$யாமுபாஸிஷ்யே" (அல்லது 'ஸாயம் ஸந்த்$_4$யாவந்த$_3$நம் கரிஷ்யே') என்று மாலையிலும், "மாத்$_4$யாந்ஹிகம் கரிஷ்யே' என்று மத்யாந்ஹத்திலும் ஸங்கல்பிக்கவேண்டியது. "பகவானுடைய ஆணையினால், அவனுக்குக் கைங்கரியமாயிருக்கும் அந்தந்தக் கர்மங்களைச் செய்கிறேன்" என்று பொருள்.

### * जलाभिमन्त्रणमन्त्रः—ஜலாபி$_4$மந்த்ரண மந்த்ர:

(முக்காலத்திலும் அநுஸந்திக்கவேண்டியது)

२. आपो वा इदं सर्वं। विश्वाभूतान्यापः। प्राणा वा आपः। पशव आपः। अमृतमापः। अन्नमापः। संराडापः। विराडापः। स्वराडापः। छन्दांस्यापः। ज्योतींष्यापः। सत्यमापः। सर्वा देवता आपः। भूर्भुवस्सुवराप ओं॥

2. ஆபோ வா இத$_3$ம் ஸர்வம்। விஶ்வா பூ$_4$தாந்யாப:। ப்ராணா வா ஆப:। பஶவ ஆப:। அம்ருதமாப:। அந்நமாப:। ஸம்ராட$_3$ாப:। விராட$_3$ாப:। ஸ்வராட$_3$ாப:। ச$_2$ந்தாம்ஸ்யாப:। ஜ்யோதீம்ஷ்யாப:। ஸத்யமாப:। ஸர்வா தே$_3$வாதா ஆப:। பூ$_4$ர்பு$_4$வஸ்ஸுவராப ஓம்॥

இம்மந்திரத்தால் ஜலத்தை அபிமந்த்ரணம் செய்து மூன்று காலங்களிலும் ओं श्रीकेशवाय नमः ஓம் ஸ்ரீகேஶவாய நம: என்று நெற்றியில் அந்த ஜலத்தால் ஊர்த்வபுண்ட்ரத்தை தரிப்பது.

பதவுரை:-ஆபோ வா இத$_3$ம் ஸர்வம்-(உயிரற்ற) இவை எல்லாம் 'அப்பு' [நீர்] எனப்படும் பகவானே; விஶ்வா

* இம்மந்திரம் ஆபஸ்தம்பஸூத்ரஸ்தர்களுக்கு இல்லை.



பூ$_4$தாநி ஆப:-எல்லா உயிர்களும் அவனே; ப்ராணா: வா ஆப:-முக்கிய ப்ராணனும் அவனே; பஶவ: ஆப:-ஸம்ஸாரி சேதநரும் அவனே: அம்ருதம் ஆப:—மோக்ஷஸுகமும் அவனே; அந்நம் ஆப:—இவ்வுலக ஸுகமும் அவனே; ஸம்ராட் ஆப:-மிகவிளங்கும் பரமபதமும் அவனே; விராட் ஆப:-இவ்வுலகமும் அவனே; ஸ்வராட் ஆப:-சுதந்திரனான முக்த புருஷனும் அவனே; ச$_2$ந்த$_3$ாம்ஸி ஆப:—வேதங்களும் அவனே; ஜ்யோதீம்ஷி ஆப:—எல்லாச்சோதிகளும் அவனே; ஸத்யம் ஆப—உண்மையும் அவனே; ஸர்வா: தே$_3$வதா: ஆப:—எல்லா தேவதைகளும் அவனே; ஓம் பூ$_4$ர்பு$_4$வஸ் ஸுவராப ஓம்—மூவுலகங்களும் ஓங்காரப்பொருளான அவனே.

### कालत्रयेऽपि प्रथमतः प्रोक्षणमन्त्रः

முக்காலத்திலும் முதலில் ப்ரோக்ஷண மந்த்ரம்

[இதைச்சொல்லி நீரைத் தலையில் ப்ரோக்ஷித்துக்கொள்ள வேண்டியது.]

३. आपो हि ष्ठा मयोभुवः। ता न ऊर्जे दधातन। महे रणाय चक्षसे। यो वः शिवतमो रसः। तस्य भाजयतेह नः। उशतीरिव मातरः। तस्मा अरं गमाम वः। यस्य क्षयाय जिन्वथ। आपो जनयथा च नः॥

3. ஆபோ ஹி ஷ்ட$_2$ா மயோபு$_4$வ:। தா ந ஊர்ஜே த$_3$த$_4$ாதந। மஹே ரணாய சக்ஷஸே। யோ வ: ஶிவதமோ ரஸ:। தஸ்ய ப$_4$ாஜயதேஹ ந:। உஶதீரிவ மாதர:। தஸ்மா அரங்க$_3$மாம வ:। யஸ்ய க்ஷயாய ஜிந்வத$_2$। ஆபோ ஜநயத$_2$ா ச ந:॥

இம்மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, ஜலத்தை சிரஸ் முதலான விடங்களில் ப்ரோக்ஷித்துக்கொண்டபின் 'ஓம்பூ$_4$ர்பு$_4$வஸ்ஸுவ: என்று ஜலத்தாலே ஆத்ம ப்ரதக்ஷிணம் செய்துகொள்ள வேண்டியது.

பதவுரை:— ஆப:—ஜலங்களே, மயோபு$_4$வ: ஹி ஸ்த$_2$:—(அனைவருக்கும்) ஸுகத்தை அளிப்பவையாயன்றோ இருக்

கிறீர்கள்; தா:—அப்படிப்பட்ட நீங்கள். ந:—எங்களை, ஊர்ஜே—உறுதியானவனும், மஹே—பெரியவனும், ரணாய—அழகியவனும், சக்ஷஸே—(அனைவர்க்கும்) கண்ணாயிருப்பவனுமான பரமபுருஷனுக்கு. த3த்4ாதந—ஸமர்ப்பியுங்கள்; (சரணமாக அடைவியுங்கள்) ய: வ: ஶிவதம: ரஸ:—மிகமங்களமான உங்களுடைய ரஸம் (பக்தி) யாதொன்று உண்டோ. தஸ்ய—அந்த அன்பில் ஒரு சிறிதையாவது. இஹ—இவ்வுலகிலேயே. ந:—எங்களுக்கு. உஶதீ: மாதர: இவ—அன்பு நிரம்பிய தாய்மார்போல உள்ள நீங்கள், ப4ாஜயத—அடைவியுங்கள்; யஸ்ய—எந்த பகவானுக்கு, க்ஷயாய—இருப்பிடமாயிருந்துகொண்டு, ஜிந்வத2—ப்ரீதியை அடைகிறீர்களோ. தஸ்மை—அந்தபகவானை அடையும்பொருட்டு, வ:—உங்களை. அரம் க3மாம—மிகவும் தியானிக்கிறோம்; ஆப:—ஜலங்களே! ந:—எங்களை, ஜநயத2—உயிர்ப்பியுங்கள்.

प्रातः तीर्थप्राशनमन्त्रः—காலையில் தீர்த்தப்ராஶந மந்த்ரம்

(ஜலத்தைக் கையில் எடுத்துக்கொண்டு இம்மந்திரத்தை உச்சரித்துப் பருக வேண்டியது.)

४. सूर्यश्च मा मन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः। पापेभ्यो रक्षन्तां। यद्रात्र्या पापमकार्षम्। मनसा वाचा हस्ताभ्यां। पद्भ्यामुदरेण शिश्ना। रात्रिस्तदवलुम्पतु। यत्किञ्च दुरितं मयि। इदमहं माममृतयोनौ सूर्ये ज्योतिषि जुहोमि स्वाहा॥

4. ஸூர்யஶ்ச மா மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச மந்யுக்ருதேப்4ய:। பாபேப்4யோ ரக்ஷந்தாம்। யத்3ராத்ர்யா பாபமகார்ஷம்। மநஸா வாசா ஹஸ்தாப்4யாம்। பத்3ப்4யாமுத3ரேண ஶிஶ்நா। ராத்ரிஸ்தத3வலும்பது। யத்கிஞ்ச து3ரிதம் மயி இத3மஹம் மாமம்ருதயோநௌ ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா॥

பதவுரை—ஸூர்ய: ச—சூரியனும், மந்யு: ச—இந்திரனும், மந்யுபதய: ச—இந்திரனைத் தலைவனாகக் கொண்ட மற்ற தேவர்களும், மா—என்னை, மந்யுக்ருதேப்4ய:—கோபத்தினால் செய்யப்பட்ட, பாபேப்4ய:—பாபங்களிலிருந்து, ரக்ஷந்தாம்—காப்பாற்றட்டும்; மநஸா—மனத்தினாலும், வாசா—வாக்கினாலும், ஹஸ்தாப்4யாம்—கைகளினாலும், பத்3ப்4யாம்—கால்களினாலும், உத3ரேண—வயிற்றினாலும், ஶிஶ்நா—குறியினாலும், யத் ராத்ர்யா பாபம் அகார்ஷம்—யாதொரு பாபத்தை ராத்ரியில் நான் செய்தேனோ, யத் கிஞ்ச து3ரிதம் மயி—(அதற்கு முன்) என்னால் செய்யப்பட்ட மற்றும் யாவை சில பாபங்களுண்டோ. தத்—அந்த எல்லாப்பாபத்தையும், ராத்ரி:—ராத்ரிக்கு நிர்வாஹகனான பகவான். அவலும்பது—போக்கடிக்கட்டும். இத3ம் மாம்—இந்த என்னை. அஹம்—நான், அம்ருதயோநௌ—மோக்ஷகாரணமாய். ஸூர்யே—ஸர்வகாரணனாய், ஜ்யோதிஷி—சோதியுருவான பகவானிடம். ஜுஹோமி—ஹோமம் செய்கிறேன் (ஆத்ம ஸமர்ப்பணம் செய்கிறேன்) ஸ்வாஹா—(அதற்காக) நன்கு அழைக்கிறேன்.



मध्याह्न तीर्थप्राशनमन्त्रः—மத்யாஹ்நத்தில் தீர்த்தப்ராஶந மந்த்ரம்

५. आपः पुनन्तु पृथिवीं। पृथिवी पूता पुनातु मां। पुनन्तु ब्रह्मणस्पतिः। ब्रह्मपूता पुनातु मां। यदुच्छिष्टमभोज्यं। यद्वा दुश्चरितं मम। सर्वं पुनन्तु मामापः। असतां च प्रतिग्रहं स्वाहा॥

5. ஆப: புநந்து ப்ருதி2வீம்। ப்ருதி2வீ பூதா புநாது மாம்। புநந்து ப்3ரஹ்மணஸ்பதி:। ப்3ரஹ்மபூதா புநாது மாம்। யது3ச்சி2ஷ்டமபோ4ஜ்யம்। யத்3வா து3ஶ்சரிதம் மம। ஸர்வம் புநந்து மாமாப:। அஸதாம் ச ப்ரதிக்3ரஹம் ஸ்வாஹா॥

பதவுரை:—ஆப:—ஜலம். ப்ருதி2வீம்—(பூ4தங்களாலான) என் தேஹத்தை. புநந்து—பரிசுத்தப்படுத்தட்டும்; ப்ருதி2வீ—என் தேஹம். பூதா—பரிசுத்தமாகி. மாம்—என்னை. புநாது—பரிசுத்தப்படுத்தட்டும்; (ஆப:)—ஜலம். (மாம்)—என்னை. புநந்து—(நேரேயும்) பரிசுத்தப்படுத்தட்டும். ப்3ரஹ்மணஸ்பதி:—வேதத்திற்கு (அல்லது ப்ரஹ்மாவிற்கு) ஸ்வாமியாயிருப்பவராய். ப்3ரஹ்ம பூதா—அவ்வேதத்தை (அல்லது

ப்ரஹ்மாவை) பரிசுத்தப்படுத்துமவருமான பகவான், மாம் புநாது-என்னைப் பரிசுத்தப்படுத்தட்டும். அபே4ாஜ்யம் யத் உச்சி2ஷ்டம்—புசிக்கத்தகாத யாதொரு சேஷத்தை (நான் புசித்தேனோ). யத் வா மம து3ஶ்சரிதம்—யாதொரு கெட்ட காரியம் என்னால் செய்யப்பட்டதோ, அஸதாம் ச ப்ரதிக்3ரஹம்—தீயவர்களிடமிருந்து (அல்லது தீயபொருள்களை) நான் வாங்கியது யாதொன்றுண்டோ. ஸர்வம்-(முற்கூறிய) அனைத்தினின்றும். மாம் ஆப: புநந்து— என்னை பகவான் பரிசுத்தப்படுத்தட்டும்.

**सायन्तन तीर्थप्राशनमन्त्रः-மாலையில் தீர்த்தப்ராஶந மந்த்ரம்**

६. अग्निश्च मा मन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः। पापेभ्यो रक्षन्ताम्। यदह्ना पापमकार्षम्। मनसा वाचा हस्ताभ्याम्। पद्भ्यामुदरेण शिश्ना। अहस्तदवलुम्पतु यत्किञ्च दुरितं मयि। इदमहं माममृतयोनौ सत्ये ज्योतिषि जुहोमि स्वाहा।

6. அக்3நிஶ்ச மா மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச மந்யுக்ருதேப்4ய:। பாபேப்4யோ ரக்ஷந்தாம்। யத3ந்ஹா பாபமகார்ஷம்। மநஸா வாசா ஹஸ்தாப்4யாம்। பத்3ப்4யாமுத3ரேண ஶிஶ்நா। அஹஸ் தத3வலும்பது। யத் கிஞ்ச து3ரிதம் மயி। இத3மஹம் மாம் அம்ருதயோநௌ ஸத்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா॥

பதவுரை–காலையில் சொல்லும் மந்திரத்தைப்போலவே; 'அக்3நி:' என்றால் அக்நிக்கு அந்தர்யாமியான பகவான் என்றோ அக்3ரநயனம் செய்பவன் (நற்கதிக்கு அழைத்துச்செல்பவன்) ஆன பகவான் என்றோ கொள்வது: அஹ:–என்றது பகலுக்கு நிர்வாஹகனை பகவான் என்றபடி. 'ஸத்யே' என்றது உண்மைப்பொருளான பரமபுருஷனிடத்தில் என்றபடி. மற்றவை முன்போல.

**पुनः प्रोक्षणमन्त्रः-மறுபடியும் ப்ரோக்ஷண மந்த்ரம்(முக்காலத்திலும்)**

७. दधिक्राव्णो अकार्षं जिष्णोरश्वस्य वाजिनः। सुरभि नो मुखाकरत्। प्रण आयूंषि तारिषत्। आपो हि ष्ठा...आपो जनयथा च नः॥



7. த3தி4க்ராவ்ணோ அகார்ஷம் ஜிஷ்ணோரஶ்வஸ்ய வாஜிந:। ஸுரபி4நோ முக2ாகரத் ப்ரண ஆயூம்ஷி தாரிஷத்। ஆபோ ஹிஷ்ட2ா......ஆபோ ஜநயத2ா ச ந:॥

பதவுரை:— ததி4க்ராவ்ணண:— தயிருக்குத் தன்னைக் கொடுத்தவனாய் வாஜிந:–மிகவும் வேகமுடைய, அஶ்வஸ்ய–குதிரையுருக்கொண்ட கேசியை, ஜிஷ்ணோ:–ஜயித்தவனான கண்ணனுக்கு, அகார்ஷம்-(ஆத்மஸமர்ப்பணம்) செய்தேன்; ந:–எங்களுடைய. முக2ம்—முகங்களை, ஸுரபி4–நல்ல மணமுள்ளதாக. கரத்—(அந்த பகவான்) செய்யட்டும்; ந:—எங்களுடைய ஆயூம்ஷி–ஆயுஸ்ஸுக்களை. ப்ரதாரிஷத்—வளரச்செய்யட்டும். இதற்குப்பின் அநுஸந்திக்கும் "ஆபோஹிஷ்ட2ா" என்று தொடங்கும் மந்திரத்தின் பதவுரையை ப்ரத2மப்ரோக்ஷணமந்திரத்தில் காண்க.

**அர்க்4யப்ரதா3நம்**

"ஓம் தத் ஸவிதுர் வரேண்யம், ப4ர்க்கோ3 தே3வஸ்ய தீ4மஹி, தி4யோ யோ ந: ப்ரசோத3யாத்" என்னும் காயத்ரீமந்திரத்தைச் சொல்லிக்கொண்டு சூரியனை நோக்கிக்கொண்டு காலையிலும் மாலையிலும் மூன்று தடவையும், மத்யாந்ஹத்தில் இரண்டுதடவையும் இரண்டு கையாலும் நின்றுகொண்டு அர்க்யப்ரதாநம் செய்யவேண்டும். காலம் கடந்து இதைச்செய்தால், ஒரு ப்ராணாயாமம்செய்து, "காலாதீதப்ராயஶ்சித்தார்த்த2ம் ஏகார்க்4ய ப்ரதா3நம் கரிஷ்யே" என்றுஸங்கல்பித்துக்கொண்டு முன்போலவே காயத்ரீமந்த்ரோச்சாரணத்துடன் ஒரு அர்க்யப்ரதாநம் செய்யவேண்டும். இதற்குப்பின் தீர்த்தத்தைக் கையில் எடுத்துக்கொண்டு "ஓம் பூ4ர்பு4வஸ்ஸுவ:" என்னும் மந்திரத்தாலே ஒருதடவை ஆத்மப்ரதக்ஷிணம்செய்துகொண்டு "அஸாவாதி3த்யோ ப்3ரஹ்ம" என்று அஞ்ஜலி செய்யவேண்டும்.[இந்த ஸூர்யன் பரப்3ரஹ்மமே என்று இதன்பொருள்.] அதற்குப்பின் ஆசமநம்செய்து, பின்வரும் மந்திரங்களாலே முக்காலத்திலும் (21) ஜலதர்ப்பணங்கள் செய்யவேண்டும்.

பொருள்

आदित्यं तर्पयामि ஆதி3த்யம் தர்ப்பயாமி சூரியனை த்ருப்தி செய்விக்கிறேன்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| अङ्गारकं | ,, | அங்கா3ரகம் | ,, | செவ்வாயை | ,, |
| शुक्रं | ,, | ஶுக்ரம் | ,, | வெள்ளியை | ,, |
| सोमं | ,, | ஸோமம் | ,, | சந்திரனை | ,, |
| बुधं | ,, | பு3த4ம் | ,, | புதனை | ,, |
| बृहस्पतिं | ,, | ப்3ருஹஸ்பதிம் | ,, | வியாழனை | ,, |
| शनैश्चरं | ,, | ஶனைஶ்சரம் | ,, | சனியை | ,, |
| राहुं | ,, | ராஹும் | ,, | ராஹுவை | ,, |
| केतुं | ,, | கேதும் | ,, | கேதுவை | ,, |
| केशवं | ,, | கேசவம் | ,, | கேசவனை | ,, |
| नारायणं | ,, | நாராயணம் | ,, | நாராயணனை | ,, |
| माधवं | ,, | மாத4வம் | ,, | மாதவனை | ,, |
| गोविन्दं | ,, | கோ3விந்த3ம் | ,, | கோவிந்தனை | ,, |
| विष्णुं | ,, | விஷ்ணும் | ,, | விஷ்ணுவை | ,, |
| मधुसूदनं | ,, | மது4ஸூத3நம் | ,, | மதுஸூதனனை | ,, |
| त्रिविक्रमं | ,, | த்ரிவிக்ரமம் | ,, | திரிவிக்கிரமனை | ,, |
| वामनं | ,, | வாமநம் | ,, | வாமனனை | ,, |
| श्रीधरं | ,, | ஸ்ரீத4ரம் | ,, | ஸ்ரீதரனை | ,, |
| हृषीकेशं | ,, | ஹ்ருஷீகேஶம் | ,, | ஹ்ருஷீகேசனை | ,, |
| पद्मनाभं | ,, | பத்3மநாப4ம் | ,, | பத்மநாபனை | ,, |
| दामोदरं | ,, | தா3மோத3ரம் | ,, | தாமோதரனை | ,, |

தர்ப்பணம் செய்தபின் ஆசமநம் செய்து, "க்ருஷ்ணார்ப்பணமஸ்து" "வாஸுதே3வார்ப்பணமஸ்து" என்று தீர்த்தத்தால் பகவதர்ப்பணம் செய்யவேண்டும். இத்துடன் ஸந்த்யாவந்தனத்தில் ஜலபாகம் முடிந்தது. இனி ஜபபாகம்.

## முக்காலத்திலும் ஜபத்தின் பூர்வாங்கங்கள்

முதலில் ஒருதடவை ப்ராணாயாமம் செய்து, 'ஓம் ஸ்ரீஅச்யுதாய நம: ஓம் ஸ்ரீஅநந்தாய நம: ஓம் ஸ்ரீகோ3விந்தா3ய நம:' என்று ஶ்ரோத்ராசமனம் செய்து பின்வருமாறு ஸங்கல்பிக்கவேண்டியது.

**श्रीभगवदाज्ञया भगवत्कैङ्कर्यं प्रातःसन्ध्यागायत्रीमन्त्रजपं करिष्ये**

**"ஸ்ரீப4க3வதா3ஜ்ஞயா ப4க3வத் கைங்கர்யம் ப்ராதஸ் ஸந்த்4யா கா3யத்ரீ மந்த்ரஜபம் கரிஷ்யே"**



[மத்யாந்ஹத்தில் "மாத்4யாந்ஹிக கா3யத்ரீ மந்த்ரஜபம் கரிஷ்யே" என்றும், மாலையில் "ஸாயம் ஸந்த்4யா கா3யத்ரீ மந்த்ரஜபம் கரிஷ்யே" என்றும் மாற்றிக்கொள்ளவேண்டியது. ஸங்கல்பித்த பிறகு ப்ராணாயாம மந்திராவயவமான ப்ரணவத்திற்கும் 'பூ4:' முதல் 'ஸத்யம்' வரையிலுள்ள ஏழு வ்யாஹ்ருதிகளுக்கும் காயத்ரிக்கும், காயத்ரீ சிரஸ்ஸுக்கும் ரிஷிச்சந்தோதேவதைகளைப் பின்வருமாறு அநுஸந்திக்கவேண்டியது.

**प्रणवस्य ब्रह्मा ऋषिः देवी गायत्री छन्दः परमात्मा देवता। भूरादि सप्तव्याहृतीनां अत्रिभृगुकुत्सवसिष्ठगौतमकाश्यपाङ्गिरसर्षयः गायत्र्युष्णिक्-अनुष्टुप्बृहतीपङ्क्तित्रिष्टुप्जगत्यः छन्दांसि अग्निवाय्वर्कवागीशवरुणेन्द्रविश्वे-देवा देवताः। गायत्र्याः विश्वामित्रर्षिः देवी गायत्री छन्दः सविता देवता। गायत्रीशिरसः ब्रह्मा ऋषिः अनुष्टुप् छन्दः परमात्मा देवता॥ सर्वेषां प्राणायामे विनियोगः॥**

**ப்ரணவஸ்ய ப்3ரஹ்மா ரிஷிர். தே3வீ கா3யத்ரீ ச2ந்த3: பரமாத்மா தே3வதா। பூ4ராதி3 ஸப்த வ்யாஹ்ருதீநாம் அத்ரி ப்4ருகு3 குத்ஸ வஸிஷ்ட2 கௌ3தம காஶ்யபாங்கி3ரஸ ரிஷய: காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் ப்3ருஹதீ பங்க்தி த்ரிஷ்டுப் ஜக3த்ய: ச2ந்த3ாம்ஸி அக்3நி வாய்வர்க்க வாகீ3ஶ வருணேந்த்3ர விஶ்வேதே3வா தே3வதா:। கா3யத்ர்யா: விஶ்வாமித்ர ரிஷி: தே3வீ கா3யத்ரீ ச2ந்த3: ஸவிதா தே3வதா। கா3யத்ரீஶிரஸ: ப்3ரஹ்மா ரிஷி: அநுஷ்டுப் ச2ந்த3: பரமாத்மா தே3வதா॥ ஸர்வேஷாம் ப்ராணாயாமே விநியோக3: ॥**

[ப்ரணவத்திற்கு ரிஷி ப்ரஹ்மா: காயத்ரீ சந்தஸ்; பரமாத்மா தேவதை; பூ: புவ: முதலிய ஏழு வியாஹ்ருதிகளுக்கும் முறையே அத்ரி, ப்ருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காஶ்யபர், ஆங்கிரஸ், ஆகிய இவர்கள் ரிஷிகள்; காயத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ ஆகிய இவைகள் சந்தஸ்ஸுக்கள்; அக்நி, வாயு, ஸூர்யன், ப்ருஹஸ்பதி, வருணன், இந்திரன், விச்வேதேவர்கள் தேவதைகள், காயத்ரிக்கு விஶ்வாமித்ரர் ரிஷி; காயத்ரீ சந்தஸ்ஸு; ஸவிதா தேவதை; காயத்ரீ சிரஸ்ஸுக்கு ப்ரஹ்மா ரிஷி; அநுஷ்டுப் சந்தஸ்; பரமாத்மா தேவதை. அனைத்துக்கும் ப்ராணாயாமத்தில் விநியோகம் (உபயோகம்).]

முற்கூறியவாறு ப்ராணாயாமமந்திரத்தின் அவயவங்களின் ரிஷி, சந்தஸ்ஸு தேவதைகளை அநுஸந்தித்தபின் 10 தடவை ப்ராணாயாமம் செய்யவேண்டும். பிறகு "ஓம் ஸ்ரீஅச்யுதாய நம:, ஓம் ஸ்ரீ அநந்தாய நம: ஓம் ஸ்ரீ கோ3விந்தா3ய நம: ப4க3வதா3ஜ்ஞயா ப4க3வத் கைங்கர்யம் கா3யத்ரீ மஹாமந்த்ரஜபம் கரிஷ்யே" என்று அநுஸந்தித்து காயத்ரீ ஆஹ்வாந (காயத்ரியை அழைக்கும்) மந்திரமான "ஆயாது" என்னும் அனுவாகத்தின் ரிஷிச்சந்தோ தேவதைகளையும், அவ்வநுவாகத்தையும் பின்வருமாறு அநுஸந்திக்கவேண்டும்.

आयात्वित्यनुवाकस्य वामदेवर्षिः अनुष्टुप् छन्दः गायत्री देवता ॥

ஆயாத்வித்யநுவாகஸ்ய வாமதே3வர்ஷி:
அநுஷ்டுப் ச2ந்த3: கா3யத்ரீ தே3வதா ॥

गायत्र्यावाहनमन्त्रः-காயத்ரியை அழைக்கும் மந்திரம்

८. आयातु वरदा देव्यक्षरं ब्रह्मसंमितम्। गायत्रीं छन्दसां मातेदं ब्रह्म जुषस्व नः॥ ओजोऽसि सहोऽसि बलमसि भ्राजोऽसि देवानां धाम नामासि। विश्वमसि विश्वायुः सर्वमसि सर्वायुः अभिभूरोम् गायत्रीमावाहयामि॥ सावित्रीमावाहयामि सरस्वतीमावाहयामि॥

8. ஆயாது வரதா3 தே3வீ அக்ஷரம் ப்3ரஹ்மஸம்மிதம்। கா3யத்ரீம் ச2ந்த3ஸாம் மாதேத3ம் ப்3ரஹ்ம ஜுஷஸ்வ ந:॥ ஓஜோஸி ஸஹோஸி ப3லமஸி ப்4ராஜோஸி தே3வாநாம் தா4ம நாமாஸி। விஸ்வமஸி விஸ்வாயு: ஸர்வமஸி ஸர்வாயுரபி4பூ4ரோம் கா3யத்ரீமாவாஹயாமி॥ ஸாவித்ரீமாவாஹயாமி ஸரஸ்வதீமாவாஹயாமி॥

பதவுரை:— வரதா3-வரங்களையளிக்கும். தே3வீ-ஸ்ரீதேவியானவள். ஆயாது—(இங்கு) எழுந்தருளட்டும்; அக்ஷரம்—அழியாததும், ஸம்மிதம்—நன்கு அறியப்பட்டதுமான. ப்3ரஹ்ம—ப்ரஹ்மமும் (எழுந்தருளட்டும்.) ச2ந்த3ஸாம்—வேதங்களுக்கு, மாத:-தாயாயிருக்கும். கா3யத்ரி-காயத்ரியே. ஈம்—ஸ்ரீதேவியையும். இத3ம் ப்3ரஹ்ம—பரப்ரஹ்மமான இந்த நாராயணனையும். ந:-எங்களுக்காக. ஜுஷஸ்வ-அடை



விப்பாயாக; (ஸ்ரீமந் நாராயணனே!) ஓஜ: அஸி—தா4ரண சக்தியை உடையவனாகிறாய்; ஸஹ: அஸி—நியமனசக்தியை உடையவனாகிறாய், ப3லம் அஸி-பலத்தை உடையவனாகிறாய்; ப்4ராஜ: அஸி-ஒளியை உடையவனாகிறாய்; தே3வாநாம்-தேவர்களுக்கு. தா4ம-இருப்பிடமாகவும், நாம-பெயராகவும். அஸி-ஆகிறாய். விஸ்வம் அஸி-'விஸ்வம்'என்னும் பெயரை உடையவனாகிறாய் விஸ்வாயு: (அஸி)—எல்லாவற்றுக்கும் சேருமிடமாகிறாய்; ஸர்வமஸி—எல்லாம் ஆகிறாய்; ஸர்வாயு: (அஸி)—எல்லாவற்றுக்கும் ஜீவனம் ஆகிறாய். அபி4பூ4: (அஸி)—(விரோதிகளை)வெல்லுமவனாகிறாய். ஓம்-இப்படிப்பட்ட அகார வாச்யனுக்கே அடிமையான நான். கா3யத்ரீம்—காயத்ரியை. ஆவாஹயாமி—அழைக்கிறேன்; ஸாவித்ரீம்—ஸாவித்ரியை (ஸவிதாவை தேவதையாக உடையவளை) ஆவாஹயாமி—அழைக்கிறேன். ஸரஸ்வதீம் ஆவாஹயாமி—வாக்ரூபமாயிருக்கும் காயத்ரியை அழைக்கிறேன்.

இதற்குப்பின் முக்காலத்திலும் "கா3யத்ர்யா: விஸ்வாமித்ர ருஷி: தே3வீ கா3யத்ரீ ச2ந்த3: ஸவிதா தே3வதா" என்று ருஷிச்சந்தோதேவதைகளை அநுஸந்தித்து 108, 32, 28 என்னும் கணக்கில் இயன்றவரையில் ப்ரணவத்தோடும் மூன்று வ்யாஹ்ருதிகளோடும் (அதாவது ஓம் பூ4: பு4வ: ஸுவ: என்றதோடு) கூடிய காயத்ரீமந்திரத்தை ஜபிக்கவேண்டியது.

### உபஸ்தா2ந ஸங்கல்பம்

காயத்ரீ ஜபம் முடிந்தவுடன் ஒரு ப்ராணாயாமம் செய்து, "ஓம் ஸ்ரீஅச்யுதாய நம:, ஓம் ஸ்ரீ அநந்தாய நம: ஓம் ஸ்ரீகோ3விந்தா3ய நம:" என்று ஸ்ரோத்ராசமநம் செய்து, "ஸ்ரீப4க3வதா3ஜ்ஞயா ப4க3வத் கைங்கர்யம் ப்ராதஸ்ஸந்த்4யா கா3யத்ர்யுபஸ்தா2நம் கரிஷ்யே" என்று காலையிலும், "மாத்4யாந்ஹிக கா3யத்ர்யுபஸ்தா2நம் கரிஷ்யே" என்னும் மாறுதலுடன் மத்யாந்ஹத்திலும், "ஸாயம் ஸந்த்4யா கா3யத்ர்யுபஸ்தா2நம் கரிஷ்யே" என்னும் மாறுதலுடன் மாலையிலும் ஸங்கல்பித்து எழுந்திருக்கவேண்டியது. பிறகு கைகூப்பிக்கொண்டு பின்வரும் கா3யத்ரீ உத்3வாஸநமந்திரத்தை முக்காலத்திலும் உச்சரிக்கவேண்டியது.

९. उत्तमे शिखरे देवि! भूम्यां पर्वतमूर्धनि।
ब्राह्मणेभ्यो ह्यनुज्ञानं गच्छ देवि! यथासुखम्॥

9. உத்தமே ஶிக2ரே தே3வி பூ4ம்யாம் பர்வதமூர்த்த4நி।
ப்3ராஹ்மணேப்4யோ ஹ்யநுஜ்ஞாநம் க3ச்ச2 தே3வி
யதா2ஸுக2ம்॥

பதவுரை:— தே3வி—காயத்ரீதேவியே! ஸ்ரீ தேவியே! ப்3ராஹ்மணேப்4ய: அநுஜ்ஞாநம் (த3த்3ாஸி) ஹி—ப்ரஹ்ம ஜ்ஞானிகளுக்கு உன் அனுக்ரஹத்தால் வரும் அறிவைத் தருகிறாயன்றோ. தே3வி-ஸ்ரீதேவியே! உத்தமே-மிகவுயர்ந்த. பர்வதமூர்த்த4நி ஶிக2ரே-(சித்ரகூடம், வேங்கடாசலம் முதலான)மலைகளின் உச்சியிலுள்ள சிகரங்களிலே. யதா2ஸுக2ம்—இஷ்டப்படி விளையாடுவதற்காக. க3ச்ச2—செல்வாயாக.

இனி, சூரியனை நோக்கிக் கைகூப்பி நின்றுகொண்டு, பரம புருஷனைக் குறித்துச்சொல்லப்படும் பின்வரும் மூன்று உபஸ்தான மந்திரங்களை முறையே காலையிலும். நடுப்பகலிலும் மாலையிலும் அநுஸந்திக்கவேண்டும்.

प्रातरुपस्थानमन्त्रः-காலையில் உபஸ்தா2ந மந்த்ரம்

१०. मित्रस्य चर्षणीधृतः। श्रवो देवस्य सानसिं। सत्यं चित्रश्रवस्तमम्॥ मित्रो जनान् यातयति प्रजानन् मित्रो दाधार पृथिवीमुत द्याम्। मित्रः कृष्टीरनिमिषाऽभिचष्टे सत्याय हव्यं घृतवद्विधेम॥ प्र स मित्र मर्तो अस्तु प्रयस्वान् यस्त आदित्य शिक्षति व्रतेन। न हन्यते न जीयते त्वोतो नैनमंहो अश्नोत्यन्तितो न दूरात्।

10. மித்ரஸ்ய சர்ஷணீத்4ருத:। ஶ்ரவோ தே3வஸ்ய ஸாநஸிம்। ஸத்யம் சித்ரஶ்ரவஸ்தமம்॥ மித்ரோ ஜநாந் யாதயதி ப்ரஜாநந் மித்ரோ தா3தா4ர ப்ருதீ2வீமுத த்3யாம்। மித்ர: க்ருஷ்டீரநிமிஷாऽபி4சஷ்டே ஸத்யாய ஹவ்யம் க்4ருதவத்3 விதே4ம॥ ப்ர ஸ மித்ர மர்த்தோ அஸ்து ப்ரயஸ்வாந் யஸ் த ஆதி3த்ய ஶிக்ஷதி வ்ரதேந। ந ஹந்யதே ந ஜீயதே த்வோதோ நைநமம்ஹோ அஶ்நோத்யந்திதோ ந தூ3ராத்॥



பதவுரை—சர்ஷணீத்4ருத:-(ஸஞ்சரிக்கும்) உலகங்களை தரித்து நிற்பவனாய். மித்ரஸ்ய—அனைவரையும் காப்பாற்றுமவனான. தே3வஸ்ய—பகவானுடைய. ஸாநஸிம்—விரும்பத்தக்கதும். ஸத்யம்—நிலைநிற்பதும். சித்ரஶ்ரவஸ்தமம்—மிகவுயர்ந்த விசித்திரகீர்த்தியை உடையதுமான. ஶ்ரவ:-ஸம்ஸார ரக்ஷணத்தை (விரும்புகிறேன்); ப்ரஜாநந்-எல்லாமறிந்த மித்ர:-பகவான். ஜநாந்-ஜீவர்களை. யாதயதி—நடத்திவைக்கிறான்; மித்ர:—அளவற்றவனான பகவான், ப்ருதி2வீம் உத த்3யாம்—பூமியையும் சுவர்க்கத்தையும். தா3தா4ர—தரித்து நிற்கிறான்; மித்ர:—மூவுலகையுமளந்த பகவான். க்ருஷ்டீ:—பயிர்களால் ஜீவிக்கும் உயிர்களை. அநிமிஷா-கண்கொட்டாமல். அபி4சஷ்டே—கண்டுகொண்டிருக்கிறான்; ஸத்யாய—உண்மைப்பொருளான அவனுக்கு, க்4ருதவத்—(அன்பாகிற) நெய்யுடன்கூடிய. ஹவ்யம்—(ஆத்மாவாகிற) ஹவிஸ்ஸை. விதே4ம-ஹோமம் செய்யக்கடவோம். மித்ர-ஸர்வரக்ஷகனே! ஆதி3த்ய-அதிதியின் பிள்ளையான வாமனனே! ய: மர்த்த:-எவனொரு மனிதன். தே வ்ரதேந ஶிக்ஷதி—உன் ஶரணாக3த ரக்ஷண விரதத்தை நினைத்துத் தன்னைத் தேற்றிக்கொண்டிருக்கிறானோ, ஸ:—அவன். ப்ர—அதிகமாக. ப்ரயஸ்வாந் அஸ்து—(உன் அநுப4வமாகிற) அந்நத்தை உடையவனாகட்டும்; த்வோத:—உன்னுடைய பக்தன், ந ஹந்யதே—எவராலும் ஹிம்ஸிக்கப்படுவதில்லை; ந ஜீயதே—(எவராலும்) ஜயிக்கப்படுவதுமில்லை; ஏநம்—இவனை. அம்ஹ:—பாபம், அந்தித:—அருகிலும், ந அஶ்நோதி—அணுகாது. தூ3ராத்—வெகுதூரத்திலும், ந அஶ்நோதி—அணுகாது.

माध्याह्निकोपस्थानमन्त्रः-மாத்4யாந்ஹிகோபஸ்தா2நமந்த்ரம்

११. आ सत्येन रजसा वर्तमानो निवेशयन्नमृतं मर्त्यञ्च। हिरण्ययेन सविता रथेनादेवो याति भुवना विपश्यन्॥ उद्वयं तमसस्परि पश्यन्तो ज्योतिरुत्तरम्। देवं देवत्रा सूर्यमगन्म ज्योतिरुत्तमम्॥ उदुत्यं जातवेदसं देवं वहन्ति केतवः। दृशे विश्वाय सूर्यम्॥ चित्रं देवानामुद-

गादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः। आप्रा द्यावापृथिवी अन्तरिक्षं सूर्य आत्मा जगतस्तस्थुषश्च॥ तच्चक्षुर्देवहितं पुरस्ताच्छुक्रमुच्चरत्॥ पश्येम शरदश्शतम्। जीवेम शरदश्शतम्। नन्दाम शरदश्शतम्। मोदाम शरदश्शतम्। भवाम शरदश्शतम्। शृणवाम शरदश्शतम्। प्रब्रवाम शरदश्शतम्। अजीताःस्याम शरदश्शतम्। ज्योक्च सूर्यं दृशे॥ य उदगान्महतोऽर्णवाद्विभ्राजमानस्सरिरस्य मध्यात्। स मा वृषभो रोहिताक्षस्सूर्यो विपश्चिन्मनसा पुनातु॥

11. ஆஸத்யேந ரஜஸா வர்த்தமாநோ நிவேஶயந் அம்ருதம் மர்த்யஞ்ச ஹிரண்யயேந ஸவிதா ரதே$_2$நாதேவோ யாதி பு$_4$வநா விபஶ்யந்॥ உத்$_3$வயம் தமஸஸ்பரி பஶ்யந்தோ ஜ்யோதிருத்தரம்। தே$_3$வம் தே$_3$வத்ரா ஸூர்யமக$_3$ந்ம ஜ்யோதிருத்தமம்॥ உது$_3$த்யம் ஜாதவேத$_3$ஸம் தே$_3$வம் வஹந்தி கேதவ:। த்ருஶே விஶ்வாய ஸூர்யம்॥ சித்ரம் தே$_3$வாநாமுத$_3$கா$_3$த$_3$நீகம் சக்ஷுர் மித்ரஸ்ய வருணஸ்யாக்$_3$நே:। ஆப்ரா த்$_3$யாவா ப்ருதி$_2$வீ அந்தரிக்ஷம் ஸூர்ய ஆத்மா ஜக$_3$தஸ் தஸ்து$_2$ஷஶ்ச॥ தச்சக்ஷுர் தே$_3$வஹிதம புரஸ்தாச்சு$_2$க்ரமுச்சரத்॥ பஶ்யேம ஶரத$_3$ஶ்ஶதம் ஜீவேம ஶரத$_3$ஶ்ஶதம் நந்த$_3$ாம ஶரத$_3$ஶ்ஶதம் மோத$_3$ாம ஶரதஶ்ஶதம். பு$_4$வாம ஶரத$_3$ஶ்ஶதம். ஶ்ருணவாம ஶரத$_3$ஶ்ஶதம். ப்ரப்$_3$ரவாம ஶரத$_3$ஶ்ஶதம். அஜீதாஸ் ஸ்யாம ஶரத$_3$ஶ்ஶதம். ஜ்யோக் ச ஸூர்யம் த்$_3$ருஶே॥ ய உத$_3$க$_3$ாந் மஹதோऽர்ணவாத் விப்$_4$ராஜமாநஸ் ஸரிரஸ்ய மத்$_4$யாத்। ஸ மா வ்ருஷபே$_4$ா ரோஹிதாக்ஷஸ் ஸூர்யோ விபஶ்சிந் மநஸா புநாது॥

"பஶ்யேம" என்பது முதல், "ஸூர்யம் த்$_3$ருஶே" வரையில் வ்யோமமுத்ரையால் ஸூர்யனைப் பார்த்துக்கொண்டு உச்சரிப்பது.

பதவுரை:—ஸத்யேந ரஜஸா—அழிவற்றதான பரமபதத்தில். மர்த்யம் ச—(மரணத்தை இயற்கையாகக்கொண்ட) ஸம்ஸாரியையும். அம்ருதம் நிவேஶயந்—மோக்ஷத்தை அடைவிக்க விரும்பியவனாய். பு$_4$வநா விபஶ்யந்—உலகங்களை நன்



ருகப் பார்த்துக்கொண்டு. ஆ வர்த்தமாந:—எதிர் சூழல்புக்கவனாய். ஸவிதா தே$_3$வ:—ஸர்வலோகங்களையும் ஸ்ருஷ்டித்த பகவான், ஹிரண்யயேந ரதே$_2$ந—பொன்மயமான திருமேனியோடு (அல்லது கருடனாகிற ரதத்தில்) ஆ யாதி—எழுந்தருளுகிறான். உத்—சிறந்ததாய். தமஸ:—மூலப்ரக்ருதிக்கு. உத்தரம்—மேலான பரமபதத்தில் விளங்கும். ஜ்யோதி:—சோதியுருவனான. தே$_3$வம்—தேவனாய், தே$_3$வத்ரா—மற்ற தேவர்களனைவரையும் காப்பாற்றுமவனாய். ஸூர்யம்—(எங்களை) நன்கு நியமிப்பவனாய், உத்தமம் ஜ்யோதி:—பரஞ்சோதியான நாராயணனை. பரி பஶ்யந்த:—நேரேகாணும் நாம், அக$_3$ந்ம—ஶரணமடைந்தோம்; ஸூர்யம்—ஸூர்யனெனப் படுபவனாய், ஜாதவேத$_3$ஸம்—வேதங்களைப்பிறப்பித்தவனான த்யம் உ—அந்தகேவனையே, கேதவ:—மஹான்கள், உத்$_3$வஹந்தி—தங்கள் நெஞ்சிலே தரித்து நிற்கிறார்கள். (எதற்காகவெனில்:) விஶ்வாய த்ருஶே—உலகமெல்லாம் காண்பதற்காக. (யஸ்மாத்—எந்த பகவானிடமிருந்து) சித்ரம்—விசித்ரமான, அநீகம்—ஸேனை, தே$_3$வாநாம்—தேவர்களை ரக்ஷிப்பதற்காக, உத$_3$கா$_3$த்—உண்டாயிற்றோ. ஸ: ஸூர்ய:—அந்தப் பரமாத்மா, ஜக$_3$த: தஸ்து$_2$ஷ: ச—ஸ்தாவர ஜங்கமங்களுக்கு (அசைவனவும், அசையாதனவுமான பொருள்களுக்கு) ஆத்மா—அந்தர்யாமியாவான்; த்$_3$யாவா ப்ருதி$_2$வீ அந்தரிக்ஷம் ஆப்ரா:—தேவலோகம், பூமி, (இவற்றினிடையிலுள்ள) அந்தரிக்ஷம் ஆகிய அனைத்தையும், சுற்றிலும் வியாபித்திருப்பவன்; தத் சக்ஷு:—(அனைவர்க்கும்) கண்ணாயிருக்குமவனாய், தே$_3$வஹிதம்—தேவர்களுக்கு நன்மையளிப்பவனாய், ஶுக்ரம்—அழுக்கற்றவனான பகவான், புரஸ்தாத்—முன்னதாகவே, உச்சரத்—(அவதரித்துத்) திரிகிறான். ஶதம் ஶரத$_3$: பஶ்யேம—(உன்னை) நூறு ஆண்டுகள் காணக்கடவோம். ஶதம் ஶரத$_3$: ஜீவேம—நூறு ஆண்டுகள் வாழக்கடவோம்; ஶதம் ஶரத$_3$: நந்த$_3$ாம—நூறு ஆண்டுகள் இன்புறுவோமாக; ஶதம் ஶரத$_3$: மோத$_3$ாம—நூறு வருஷங்கள் ஆநந்திப்போமாக; ஶதம் ஶரத$_3$: பு$_4$வாம—நூறு வருடங்கள் உய்வு பெறக்

கடவோம்; ஶதம் ஶரத3: ஶ்ருணவாம—நூறு ஆண்டுகள் கேட்போமாக; ஶதம் ஶரத3: ப்ரப்3ரவாம—நூறு வருஷங்கள் பேசக்கடவோம்; ஶதம் ஶரத3: அஜீதா: ஸ்ய. ம-நூறு வருஷங்கள் வெல்லப்படாதவர்களாயிருப்போம்; ஜ்யோக் ச—வெகு நீண்ட காலம், ஸூர்யம்-பரமாத்மாவை, த்3ருஶே-அறியக்கடவோம்; ய:-எந்தப் பரமபுருஷன், மஹத: அர்ணவாத்-பெரிதான பாற்கடலினின்றும், உத3கா3த்-அவதரித்தருளினுனே, ஸரிரஸ்ய மத்4யாத் விப்4ராஜமாந:—(அவதரித்தபின்பும்) பாற்கடலின் நடுவிலும் எவன் விளங்குகிருனே, வ்ருஷப4:-மிகச்சிறந்தவனுய், ரோஹிதாக்ஷ:-செந்தாமரைக்கண்ணனுய், ஸூர்ய:-ஜகத்காரணனுய், விபஶ்சித்-எல்லாமறிந்தவனுன, ஸ:—அப்பரமன். மநஸா—தன் திருவுள்ளத்தாலே. மா—என்னை. புநாது—பரிசுத்தப்படுத்தட்டும்.

### सायमुपस्थानमन्त्रः-மாலையில் உபஸ்தா2நமந்த்ரம்

१२. इमं मे वरुण श्रुधी हवमद्या च मृडय। त्वामवस्युराचके॥
तत्त्वा यामि ब्रह्मणा वन्दमानस्तदाशास्ते यजमानो हविर्भिः। अहेडमानो
वरुणेह बोध्युरुशंस मा न आयुः प्रमोषीः॥ यच्चिद्धि ते विशो यथा प्रदेव
वरुण व्रतम्। मिनीमसि द्यविद्यवि॥ यत्किञ्चेदं वरुण दैव्ये जनेऽभि-
द्रोहं मनुष्याश्चरामसि। अचित्ती यत्तव धर्मा युयोपिम मा नस्तस्मादेनसो
देव रीरिषः॥ कितवासो यद्रिरिपुर्न दीवि यद्वाघा सत्यमुत यन्न विद्म।
सर्वा ता विष्य शिथिरेव देवाथा ते स्याम वरुण प्रियासः॥

12. இமம் மே வருண ஶ்ருதீ4 ஹவமத்3யாச ம்ருட3ய| த்வாமவஸ்யுராசகே|| தத் த்வா யாமி ப்3ரஹ்மணு வந்த3மாநஸ் தத3ாஶாஸ்தே யஜமாநோ ஹவிர்ப்பி4:| அஹேட3மாநோ வருணேஹபோ3தி4 உருஶம்ஸ மா ந ஆயு: ப்ரமோஷீ:|| யச்சித்3தி4 தே விஶோ யதா2 ப்ரதே3வ வருண வ்ரதம்| மிநீமஸி த்3யவித்3யவி|| யத் கிஞ்சேத3ம் வருண தை3வ்யே ஜநேऽபி4த்3ரோஹம் மநுஷ்யாஶ் சராமஸி| அசித்தீ யத் தவ த4ர்மா



யுயோபிம மாநஸ் தஸ்மாதே3நஸோ தே3வ ரீரிஷ:|| கிதவாஸோ யத்3 ரிரிபுர் நதீ3வி யத்3 வாக4ா ஸத்யமுத யந்ந வித்3ம| ஸர்வா தா விஷ்ய ஶிதி2ரேவ தே3வாத2ாதே ஸ்யாம வருண ப்ரியாஸ:||

பதவுரை:— வருண-வரிக்கத்தக்க பரமபுருஷனே! மே-என்னுடைய. இமம் ஹவம்-இந்தத்துதியை. ஶ்ருதி4-கேட்பாயாக; அத்3ய ச—இப்போதும். மாம்—என்னை, ம்ருட3ய—இன்புறச்செய்; த்வாம்—உன்னை. அவஸ்யு:—(உன்) ரக்ஷணத்தை விரும்பியவனுய், ஆசகே-யாசிக்கிறேன்; தத்—நீண்ட ஆயுளுக்காக, த்வா-உன்னை, ப்3ரஹ்மணு வந்த3மாந:-வேதத்தால் வணங்கியவனுய். யாமி—ஶரணமடைகிறேன்; தத்-நான் விரும்பும் அவ்வாயுளையே. யஜமாந:-யாகம் செய்யும் யஜமானனும் ஹவிர்ப்பி4:-ஹவிஸ்ஸுக்களாலே, ஆஶாஸ்தே-விரும்புகிருன்; வருண—வருணனே! அஹேட3மாந:-கோபங் கொள்ளாமல். இஹ—இவ்விஷயத்தில். போ3தி4—ஸங்கல்பிப்பாய்; உருஶம்ஸ—மிகவும் புகழப்படுபவனே! ந: ஆயு:-எங்களுடைய ஆயுளை. மா ப்ரமோஷீ:-அபஹரிக்காதே; ஹேதே3வ-தேவனே! வருண-வரிக்கத்தக்கவனே! சித் ஹி-அறிவுடைய நாங்களும். விஶ: யதா2-ஜந்துக்களைப்போலே, த்3யவித்3யவி—தினந்தோறும். யத் தே வ்ரதம் ப்ரமிநீமஸி—உன்னுடைய யாதொரு கைங்கர்யத்தை மிகவும் அழித்தோமோ. கிஞ்ச—மேலும். தை3வ்யே ஜநே—தேவனுகிற உன் அடியார்களிடம். மநுஷ்யா:—நீசமனிதராயிருக்கும் நாங்கள். யத் இத3ம் அபி4த்3ரோஹம் சராமஸி-யாதொரு பெரும் துரோகத்தை இழைத்தோமோ. அசித்தீ—அறியாமையால். தவ த4ர்மா—உன் விஷயமான தர்மங்களை. யத் யுயோபிம—அழியச்செய்தது யாதொன்று உண்டோ. தஸ்மாத் ஏநஸ:—அந்த அந்தப் பாபங்களினுல். மா ந: ரீரிஷ:-எங்களை நீ ஹிம்ஸிக்கவேண்டாம்; தீ3வி—(சொக்கட்டான் முதலிய) சூது விளையாட்டுகளில். கிதவாஸ: ந—துஷ்டர்களைப்போல. யத் அக4ா ரிரிபு:—யாதொரு பாபங்களை எங்களுக்கு ஒட்டவைத்தார்களோ. யத் வா ஸத்யம்—எந்தப்பாபம் அறிந்து செய்யப்

பட்டதோ, உத யத் ந வித்3ம—எதை நாங்கள் அறியாமல் செய்தோமோ, ஶிதி2ரா இவ-ஏற்கனவே சிதைந்து கிடக்கும், ஸர்வா: தா:-அந்த எல்லாப்பாபங்களையும், விஷ்ய—என்னை விட்டுப்பிரிந்து ஓடச்செய்வாய்; தே3வ வருண—வரிக்கத் தக்க வாஸுதேவனே! அத2-அதற்குப்பின், தே-உனக்கு, ப்ரியாஸ:-இனியவர்களாக, ஸ்யாம-நாங்கள் ஆகக்கடவோம்.

இப்படி காலையிலும், நடுப்பகலிலும், மாலையிலும் அந்தந்த மந்திரங்களைச் சொல்லி உபஸ்தாநம் செய்தபிறகு,

**"सन्ध्यायै नमः। सावित्र्यै नमः। गायत्र्यै नमः। सरस्वत्यै नमः। सर्वाभ्यो देवताभ्यो नमः। कामोकार्षीन्मन्युरकार्षीन्नमो नमः। श्रीविष्णवे नमः। भूम्यै नमः। ब्रह्मणे नमः॥"**

"ஸந்த்4யாயை நம:। ஸாவித்ர்யை நம:। கா3யத்ர்யை நம:। ஸரஸ்வத்யை நம:। ஸர்வாப்4யோ தே3வதாப்4யோ நம:। காமோகார்ஷீந் மந்யுரகார்ஷீந் நமோநம:। ஸ்ரீ விஷ்ணவே நம:। பூ4ம்யை நம:। ப்3ரஹ்மணே நம:॥

என்று கைகூப்பியவனாய் நான்கு திக்குகளையும் நோக்கி உச்சரித்துக் கொண்டு, இரண்டுதடவை ஆத்மப்ரதக்ஷிணம் செய்துகொள்வது.

இதற்குப்பின் அபி4வாத3ந மந்திரத்தைப் பின்வருமாறு "அபி4வாத3யே 1.....த்ர்யார்ஷேயப்ரவராந்வித 2.....கோ3த்ர: 3. போ3தா4யந (அல்லது ஆபஸ்தம்ப3) ஸூத்ர:. 4. யஜு: ஶாகா2த்4யாயீ 5. ....ஶர்மாநாமாஹமஸ்மி போ4:" என்று தங்களுடைய 1.ப்ரவரம் 2.கோத்ரம், 3.ஸூத்ரம், 4.ஶாகை, 5.ஶர்மந் (பெயர்) ஆகியவற்றைச் சொல்லி ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பிக்கவேண்டியது. அதற்குப்பின் ஸ்ரீக்ருஷ்ண க்ருஷ்ணாய நம: என்று பத்துத்தடவை ஜபம் செய்து,

**कायेन वाचा मनसेन्द्रियैर्वा बुद्ध्यात्मना वा प्रकृतेः स्वभावात्।**
**करोमि यद्यत्सकलं परस्मै नारायणायेति समर्पयामि॥**



காயேந வாசா மநஸேந்த்3ரியைர் வா
புத்3த்4யாத்மநா வா ப்ரக்ருதேஸ் ஸ்வபா4வாத்।
கரோமி யத்3 யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்ப்பயாமி॥

[மநோவாக்காயங்களாலும், புத்தியினாலும், ப்ரக்ருதியின் ஸ்வபாவத்தினால் எதை எதைச் செய்கிறேனோ அவையெல்லாம் பரப்ரஹ்மமான ஸ்ரீமந்நாராயணனுக்கேயென்று ஸமர்ப்பிக்கிறேன்.]

என்று அநுஸந்தித்து ஆசமநம்செய்து, "ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து" "வாஸுதே3வார்ப்பணமஸ்து" என்று இரண்டு அர்க்4யப்ரதா3நம் செய்து பின்வரும் பகவத்ஸ்தோத்ரங்களை அநுஸந்திப்பது:—

**ध्येयः सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणस्सरसिजासनसन्निविष्टः।**
**केयूरवान्मकरकुण्डलवान्किरीटी हारी हिरण्मयवपुः धृतशङ्खचक्रः॥**

த்4யேயஸ் ஸதா3 ஸவித்ருமண்ட3ல மத்4ய வர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:।
கேயூரவாந் மகரகுண்ட3லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்4ருதஶங்க2சக்ர:॥

[தோள்வளைகள், மகரகுண்டலங்கள், கிரீடம், ஹாரம் முதலிய ஆபரணங்களை அணிந்தவராய், சங்கசக்ரங்களை தரித்தவராய், பொன்போன்ற மேனியராய், பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய், ஸூர்யமண்டலத்தின் நடுவில் விளங்கும் நாராயணர் எப்போதும் தியானிக்கத்தக்கவர்.]

**शङ्खचक्रगदापाणे द्वारकानिलयाऽच्युत।**
**गोविन्द पुण्डरिकाक्ष रक्ष मां शरणागताम्॥**

ஶங்க2சக்ரக3தாபாணே த்3வாரகாநிலயாச்யுத।
கோ3விந்த3 புண்ட3ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக3தாம்॥

[சங்கசக்ரகதைகளைக் கையிலுடையவனே! த்வாரகாவாஸியான அச்யுதனே! கோவிந்தனே! புண்டரீகாக்ஷனே! ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பாயாக.]

नमो ब्रह्मण्यदेवाय गोब्राह्मणहिताय च ।
जगद्धिताय कृष्णाय गोविन्दाय नमो नमः ॥

நமோ ப்$_{3}$ரஹ்மண்யதே$_{3}$வாய கோ$_{3}$ப்$_{3}$ராஹ்மணஹிதாய ச ।
ஜக$_{3}$த்$_{3}$தி$_{4}$தாய க்ருஷ்ணாய கோ$_{3}$விந்த$_{3}$ாய நமோ நம: ॥

[அந்தணர்க்கு அருந்தெய்வமும், பசுக்கட்கும், அந்தணர்க்கும் நன்மையைச் செய்பவனும், உலகிற்கு நன்மையைச் செய்பவனும், பசுக்களைச் சென்றடைந்தவனுமான க்ருஷ்ணனுக்கு நமஸ்காரம்.]

श्रीरङ्गमङ्गलनिधिं करुणानिवासं श्रीवेङ्कटाद्रिशिखरालयकालमेघम् ।
श्रीहस्तिशैलशिखरोज्ज्वलपारिजातं श्रीशं नमामि शिरसा यदुशैलदीपम् ॥

ஸ்ரீரங்க$_{3}$மங்க$_{3}$ளநிதி$_{4}$ம் கருணாநிவாஸம்
ஸ்ரீவேங்கடாத்$_{3}$ரி ஶிக$_{2}$ராலயகாளமேக$_{4}$ம் ।
ஸ்ரீஹஸ்திஶைல ஶிக$_{2}$ரோஜ்ஜ்வல பாரிஜாதம்
ஸ்ரீஶம் நமாமி ஶிரஸா யது$_{3}$ஶைலதீ$_{3}$பம் ॥

[கருணைக்கோரிருப்பிடமான திருவரங்கத்தின் மங்களச்செல்வத்தையும், திருவேங்கடமலையுச்சியில் விளங்கும் கார்மேகத்தையும், அத்திகிரி (காஞ்சி) மேல் விளங்கும் பாரிஜாதத்தையும், யதுகிரி (திருநாராயணபுரம்) மேல் விளங்கும் விளக்கையும் தலையால் வணங்குகிறேன்.]

ஸந்த்யாவந்தநம் முற்றிற்று.

★  ★

# முன்னுரை

யஜுர்வேத ஸந்த்யாவந்தநபாஷ்யமாகிற இந்நூல், கீர்த்திமூர்த்தியாய், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் என்னும் மிகச்சிறந்த மாதப்பத்திரிகையைச் சென்ற ஸர்வஜித் வருஷம் மார்கழியில் திருவோணத்தில் தொடங்கியவராய், ஐந்து வருடங்களுக்குமேல் அதைத் தாமே ஆசிரியராயிருந்து நடத்திவந்தவராய், எந்தையாரான ஸ்ரீ உ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியால் ஸுதர்சனத்தின் தொடக்க வருடங்களில் அதிலேயே சிறிது சிறிதாக வெளியிடப்பட்டுவந்து, பிறகு தனிப்புத்தகமாகவும் வெளியிடப்பட்டதாகும். இப்போது இந்நூல் இரண்டாது பதிப்பைக் காண்கிறது.

"ஸந்த்$_{4}$யாஹீநோऽஶுசிர் நித்யம் அநர்ஹஸ் ஸர்வகர்மஸு ।
யத$_{3}$ந்யத் குருதே கர்ம ந தஸ்ய ப$_{2}$லப$_{4}$াக் ப$_{4}$வேத் ॥"

[ஸந்த்யாவந்தனம் செய்யாதவன் எப்போதும் அபரிசுத்தனவன்; எந்த வைதிககர்மத்தையும் செய்யத் தகுதியற்றவன். எக்கருமத்தைச் செய்தாலும் அதன் பலனை அடையமாட்டான்.] என்கிறபடியே மற்ற கர்மங்களை அநுஷ்ட்டிப்பதற்குத் தகுதியை விளைக்கும் பெருமை பெற்றது காலத்ரய ஸந்த்யாவந்தனம். இதை பகவதா$_{3}$ஜ்ஞா கைங்கர்யமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் அநுஷ்ட்டிக்க வேண்டும் என்பதே ஸகலபூர்வாசார்யர்களுடையவும் ஸித்தாந்தமாகும். இக்கருத்தினாலேயே ஆசார்யஶ்ரேஷ்ட்ட$_{2}$ரான ஸுத$_{3}$ர்ஶநப$_{4}$ட்டர் என்னும் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் ஸந்த்யாவந்தனத்திற்கு வடமொழியில் மிகச்சிறந்தவொரு வியாக்கியானம் அருளிச்செய்துள்ளார்.

இவ்வரிய வியாக்கியானத்தையே முற்றிலும் தழுவி, அஹோபிலமட$_{2}$ம் ஆஸ்த$_{2}$ானத்தை அலங்கரித்த ஜீயர் ஸ்வாமிகளில் ஒருவரான ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியின் பாஷ்யத்தையும் ஆங்காங்கு காட்டிச்செல்வது எந்தையாரியற்றிய இந்த ஸந்த்யாவந்தநபாஷ்யம். ஆழ்வார்களின் அருளிச்செயல்களிலிருந்தும் ஏராளமான மேற்கோள்களைக்

காட்டி உப4யவேத3ாந்தங்களையும் ஐககண்ட்2யப்படுத்தியிருப்பது இந்த பாஷ்யத்தின் சிறப்பாகும். இக்காரணத்தாலேயே இது மிகச்சிறந்ததொரு அநுப4வக்3ரந்த2மாகவும் திகழ்கின்றது.

ஸ்ரீ வைஷ்ணவாக்3ரேஸரராய், பூர்வாசார்யர்களோடு ஒத்த நிஷ்டையை உடையவராய், வைணவத்துக்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்ததுபோலே பெரியதொரு த4ர்ம நிதி4யை ஏற்படுத்தி அதன்மூலம் பூர்வாசார்ய க்ரந்தங்களும், ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்திரிகையும் ஶாஶ்வதமாக அச்சிட்டுவர ஏற்பாடு செய்திருப்பவராய், பொருளல்லாத அடியேனை ஒரு பொருளாக்கி விஶேஷகடாக்ஷம்செய்து தாம் தொடங்கிய பணிகளைத் தமக்குப் பிறகும் தொடர்ந்து நடைபெறும்படி செய்துவருபவரான எந்தையார் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனத்தின்மூலம் தொடங்கிய நூல்கள் பல. அவற்றுள் அவரே நிறைவுபெறுத்தியவை திருப்பல்லாண்டு வியாக்கியானமும், திருப்பாவை வியாக்கியானமும், இந்த ஸந்த்யாவந்தநபாஷ்யமுமாகும். அவற்றில் திருப்பாவை வியாக்கியானம் முன்னமே வெளியிடப்பட்டது. ஸந்த்யாவந்தநபாஷ்யம் இப்போது வெளியிடப்படுகிறது. திருப்பல்லாண்டு வியாக்கியானம் விரைவில் ஸுதர்சனத்திலேயே வெளியிடப்பெறும். அவரால் தொடங்கப்பெற்று, அடியேனால் பூர்த்திசெய்யப்பெற்ற பெரியாழ்வார் ப்ரபாவமும் தொடர்ந்து எழுதப்பெற்றுவரும் விஷ்ணுசித்த விஜயம் முதலானவற்றின் முதற்பகுதியும் அடியேனிடமே கிடைக்கும். அன்பர்கள் பெற்றுப் பயனடையலாம்.

ஸ்ரீவைஷ்ணவ தாஸன்,

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸௌம்ய-ஹூ
புரட்டாசித்திருவோணம்
22—9—69.



॥ श्रीः ॥
श्रीमते रामानुजाय नमः ॥

# ஸந்த்யாவந்தந பாஷ்யம்

[இரண்டாம் பதிப்பு]

[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு.]



இயற்றியவர்:—

K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்ஸ்வாமி, அட்வகேட்.



கிடைக்குமிடம்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்.
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை ரூ. [தபால் 0–75

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

# ஸந்த்யாவந்தந பாஷ்யம்

[ இரண்டாம் பதிப்பு ]

[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு.]



இயற்றியவர்:—

K. ஸ்ரீநிவாஸ அய்பங்கார்ஸ்வாமி, அட்வகேட்.



கிடைக்குமிடம்:—

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்.
3. புத்தூர் அக்ரஹாரம். திருச்சி.

விலை ரூ. [தபால் 0–75

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம். திருச்சி.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸந்த்₄யாவந்த₃நபா₄ஷ்யம்.

[ ஸ்ரீ உ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி,
ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶந ஸ்த₂ாபகர் ]

—●—

## அவதாரிகை

"நாராயணபரா வேதா₃ தே₃வா நாராயணாங்க₃ஜா: ।
நாராயணபரா லோகா நாராயணபரா மகா₂: ॥"

[வேதங்கள் நாராயணனைச் சொல்லுபவை; தேவர்கள் நாராயணனுடைய அங்கத்திலிருந்து உண்டானவர்கள்; உலகங்களும் நாராயணனையே பற்றியிருப்பவை; யாகங்களும் நாராயணனையே ஆராதிப்பவை.] என்றும்.

நாபி₄ர் நபோ₄க்₃நிர் முக₂மம்பு₃ ரேதோ
த்₃யௌ: ஶீர்ஷமாஶா: ஶ்ருதிரங்க்₄ரிருர்வீ ।
சந்த்₃ரோ மநோ யஸ்ய த்₃ருக₃ர்க்க ஆத்மா
ஹ்யஹம் ஸமுத்₃ரோ ஜட₂ரம் பு₄ஜேந்த்₃ர: ॥
ரோமாணி யஸ்யௌஷத₄யோம்பு₃வாஹா:
கேஶா விரிஞ்சோ தி₄ஷணா விஸர்க்க₃: ।
ப்ரஜாபதிர் ஹ்ருத₃யம் யஸ்ய த₄ர்ம:
ஸ வை ப₄வாந் புருஷோ லோககல்ப: ॥

[நாபியே ஆகாசம்; அக்நி முகம்; ஜலம் ரேதஸ், ஸ்வர்க்கம் தலை; திக்குகளே செவிகள்; திருவடிகள் பூமி; சந்த்ரன் மனஸ். ஸூர்யன் கண்; அஹங்காரம் சிவனாகிய நானே; சமுத்திரம் வயிறு; இந்திரன் புஜங்கள்; ஓஷதிகள் ரோமங்கள்; மேகங்கள் தலைமயிர்; பிரமனே புத்தி; பிரஜாபதியே ஆண்குறி; தர்மமே ஹ்ருதயம்; (இப்படிப்பட்ட) நீரே உலகத்தை சரீரமாகக்கொண்ட விராட்புருஷனாகிறீர்.] என்றும் ஸ்ரீபாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

''ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் பு₄வநாநி விஷ்ணு:
வநாநி விஷ்ணுர் கி₃ரயோ தி₃ஶஶ்ச।
நத்₃யஸ் ஸமுத்₃ராஶ்ச ஸ ஏவ ஸர்வம்
யத₃ஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய॥''

*[விப்ரச்ரேஷ்டரே! சந்திரன் முதலிய சோதிகளும் விஷ்ணுவே; உலகங்களும் விஷ்ணுவே; வனங்களும், மலைகளும், திசைகளும் விஷ்ணுவே. நதிகளும், சமுத்திரங்களும், விகாரமடைபவையும், விகாரமடையாதவையும் ஆகிய எல்லாம் அவனே.]* என்றும்,

''ஸர்வரத்நமயோ மேரு: ஸர்வாஶ்சர்யமயம் நப₄:।
ஸர்வதீர்த்த₂மயீ க₃ங்கா₃ ஸர்வதே₃வமயோ ஹரி:॥''

*[மேருமலை ஸர்வரத்னங்களையும் கொண்டது; ஆகாசம் எல்லா ஆச்சரியங்களையும் உடையது; கங்கை ஸர்வதீர்த்தமயமானது; ஹரி எல்லா தேவதைகளையும் சரீரமாகக் கொண்டவர்.]* என்றும் பராசரசௌநகாதி ரிஷிகள் சொல்லியிருக்கிருர்கள்.

''ஸ ஆத்மா அங்க₃ாந்யந்யா தே₃வதா:'' *[அந்தப் பரம புருஷன் (எல்லாருக்கும்) ஆத்மாவாயிருக்கிருன்; மற்ற தெய்வங்கள் அங்கங்களாகின்றனர்.]* என்று வேதமும் விளம்பிற்று. ஸ்ரீமந்நாராயணனே பரமாத்மாவென்றும், மற்றவர்களெல்லாரும் அவனுக்கு சரீரபூதர்களான ஜீவர்களே என்றும் ஸகலஶாஸ்த்ரங்களும் கோஷிக்கின்றன. இதையே ஶாரீரகமீமாம்ஸாஶாஸ்த்ரமும் உத்கோஷிக்கிறது. தேவமநுஷ்யதிர்யக்ஸ்தாவரசரீரங்களிலிருக்கும் ஆத்மாக்களையெல்லாம் தரிப்பவன் தாமோதரனே; நியமிப்பவன் நாராயணனே; ஸ்வாமியாயிருப்பவன் ஸ்ரீதரனே. இப்படி ஜீவபரர்கள் ஒருவரையொருவர் பிரித்துப் பார்க்கமுடியாதபடி ஒன்று சேர்ந்திருப்பதினுல் ஜீவாத்மாக்களைச் சொல்லும் பதங்களெல்லாம் அபர்யவஸாநவ்ருத்தியினுல் அந்தர்யாமிபகவான் வரையிலும் குறிக்கும். இவ்விஷயங்களை



''ய ஆத்மநி திஷ்ட₂ந்நாத்மநோந்தரோ யமாத்மா ந வேத₃ யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஸ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத:।'' *[எவன் ஆத்மாவிலிருந்துகொண்டு ஆத்மாவினுள்ளும் இருக்கிருனே, எவனை ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளிருந்துகொண்டு நியமிக்கிருனே, அழிவற்றவனை அவனே உனக்கும் ஆத்மாவாகவும், உள்ளிருந்து நியமிப்பவனுகவுமிருக்கிருன்.]* என்றும், ''ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:'' *[பரமபதத்திலிருக்கும் இந்த நாராயணன் ஒருவனே, தோஷமற்றவனுகவும் எல்லா ஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாகவும் விளங்குகிருன்.]* என்றும், ''யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம் ய: ப்ருதி₂வீமந்தரே ஸஞ்சரந் யம் ப்ருதி₂வீ ந வேத₃'' *[எவனுக்கு பூமி ஶரீரமோ, எவன் பூமியினுள் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிருனே, எவனை பூமியானது அறியவில்லையோ.......]* என்றும், ''அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' *[ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிருன்.]* என்றும், ''அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:'' *[நாராயணன் அவையெல்லாவற்றையும் உள்ளும், புறமும் வியாபித்து நிற்கிருன்.]* என்றும், ''ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்₃ர: ஸோऽக்ஷர: பரம: ஸவராட்'' *[அவனே பிரமனுக்கும், சிவனுக்கும், இந்திரனுக்கும், அழிவற்றவனும், கர்மவசப்படாதவனும், மேலானவனுமான முக்தாத்மாவுக்கும் அந்தர்யாமி.]* என்றும் பல பல வாக்யங்களில் வேதம் விளக்கிற்று. எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பதால் ஸ்ரீமந்நாராயணன் ஸர்வஶப்தவாச்யனுயிருக்கிருன் என்று ஆசார்யர்களும் நிர்வஹித்திருக்கிருர்கள்.

இப்படிப்பட்ட ஸ்ரீமந்நாராயணனை அடைவதற்கு பக்திரூபமான ஜ்ஞானமே ஸாதநமென்பதை ''தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி'' *[அவனை இம்மாதிரி அறிபவன் இந்த*

ஜன்மத்திலேயே மோக்ஷம் அடைகிறான்.] என்றும், "யோ வேத$_3$ நிஹிதம் கு$_3$ஹாயாம் பரமே வ்யோமந்। ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்$_3$ரஹ்மணா விபஶ்சிதேதி।" [ஹ்ருதய குஹையிலிருக்கும் பரமாத்மாவை எவன் அறிகிறானோ, அவன் பரமபதத்தில் ஸர்வஜ்ஞனான பரமாத்மாவுடன் அவனுடைய கல்யாணகுணங்கள் எல்லாவற்றையும் அநுபவிக்கிறான்.] என்றும் வேதவாக்யங்கள் விளக்குகின்றன.

ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களிலும், இந்த விஷயமே பிரஸித்தப்படுத்தப்பட்டிருக்கிறது.

"த்$_4$யாயந் நாராயணம் தே$_3$வம் ஸ்நாநாதி$_3$ஷு ச கர்மஸு।
ப்$_3$ரஹ்மலோகமவாப்நோதி ந சேஹாஜாயதே புந:॥"

[ஸ்நானம் முதலிய எல்லாக் கர்மங்களைச் செய்யும்போதும், தேவனாகிய நாராயணனை தியானிப்பவன் ப்ரஹ்மத்தின் உலகத்தை அடைகிறான்; மறுபடியும் இங்கு பிறப்பதில்லை.] என்றும்,

"அநந்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே।
தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$க்ஷேமம் வஹாம்யஹம்॥"

[மற்ற எதையும் நினையாதவர்களாய், என்னையே எந்த ஜனங்கள் உபாஸிக்கிறார்களோ, எப்போதும் என்னுடன் சேர்ந்திருக்கையை விரும்பும் அவர்களுடைய யோக க்ஷேமத்தை நான் வஹிக்கிறேன்.] என்றும்,

"விசார்ய ச புராணார்த்த$_2$ாந் ஸவேத$_3$ாநாத்மநி ஸ்தி$_2$தம்।
விஷ்ணும் ஸதா$_3$ ஹ்ருதி$_3$ த்$_4$யாயேத் ஸம்ஸாராக$_4$விமுக்தயே॥"

[வேதங்களுடன் கூடிய புராணங்களின் பொருள்களை விசாரித்து, ஆத்மாவினுள்ளிருக்கும் விஷ்ணுவை, ஸம்ஸார பாபங்கள் நீங்குவதற்காக எப்போதும் ஹ்ருதயத்தினுள் தியானிக்கவேண்டும்.] என்றும்,

"ஆலோட்$_3$ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந:।
இத$_3$மேகம் ஸுநிஷ்பந்நம் த்$_4$யேயோ நாராயணஸ்ஸதா$_3$॥"



[எல்லா சாஸ்திரங்களையும் பார்த்து, மறுபடியும் மறுபடியும் விசாரம் செய்தால் "நாராயணனே எப்போதும் தியானிக்கத்தக்கவன்" என்னுமிது ஒன்றே நன்றாகத் தேறி நிற்கும்.] என்றும்,

"யஸ்ய த்$_4$யாநபரோ மர்த்யோ ப்$_3$ரஹ்மஹத்த்யாதி$_3$தோ$_3$ஷஜம்।
நாஶயேத் பாதகம் ஸத்$_2$ய: கிம் புந: கத்$_2$யதே பரம்॥"

[எவனை தியானிப்பதில் ஈடுபட்டிருக்கும் மனிதன் ப்ரஹ்மஹத்தி முதலிய தோஷங்களாலேற்படும் பாபத்தை உடனே போக்கடிக்கிறானோ, (அவன் விஷயத்தில்) மற்ற பாபங்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?] என்றும்,

"ஹரிர் ஹரதி பாபாநி து$_3$ஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:।
அநிச்ச$_2$யாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ த$_3$ஹத்யேவ ஹி பாவக:॥"

[கெட்ட மனமுடையவர்களாலும் நினைக்கப்பட்ட ஹரி பாபங்களைப் போக்கடிக்கிறான். இஷ்டப்படாமல் தொடப்பட்டபோதிலும் நெருப்பு தஹித்தே தீருமன்றோ.] என்றும்,

"ருசோ யஜூம்ஷி ஸாமாநி யோதீ$_4$தேऽஸக்ருத$_3$ஞ்ஜஸா।
ஸக்ருந்நாராயணம் ஸ்ம்ருத்வா ப$_2$லம் தஸ்ய ஸமஶ்நுதே॥"

[எவனொருவன், ருக், யஜுஸ் ஸாமவேதங்களைப் பலதடவை நன்றாக அத்யயனம் செய்கிறானோ, அவனுடைய பலனை ஒரு தடவை நாராயணனை நினைப்பதினால் அடைகிறான்.] என்றும்,

"வ்ரஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூ$_4$தாதி$_3$மவ்யயம்।
யே ப$_4$ஜந்தி து மாம் ப$_4$க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥"

[வேறொன்றிலும் செல்லாத மனமுடையவர்களாய் என்னை பூதங்களுக்குக் காரணபூதனாகவும், அழிவற்றவனாயும் அறிந்து எவர்கள் பக்தியுடன் ஆராதிக்கிறார்களோ, அவர்கள் என்னிடத்திலிருக்கிறார்கள்; நானும் அவர்களிடத்திலிருக்கிறேன்.] என்றும் சொல்லப்பட்டதன்றோ. இந்த விதி வாக்கியங்களிலிருந்து நாராயணனையே நாம் உபாஸநம்

செய்யவேண்டுமென்றும், தியானம், மனனம், பஜனம், அநுஸ்மரணம் முதலிய பதங்களினால் சொல்லப்படும் பக்தி அவனை அடைவதற்கு உபாயமென்றும் ஏற்படுகிறது.

இப்படிப்பட்ட இந்த பக்திக்கு அங்கம் கர்மமே என்று ஸகல சாஸ்த்ரங்களிலும் ப்ரஸித்தம். மனோ வாக் காய கர்மங்களால் அந்த பகவானுக்கு ஆராதனம் செய்ய வேண்டுமென்பது

**''தஸ்மாத$_3$நந்ய ப$_4$ாவஸ்த்வம் தே$_3$வதே$_3$வம் ஜநார்த்$_3$நம் |**
**ஆராத$_4$யந் ஹ்ருஷீகேஶம் மநோவாக்காயகர்மபி$_4$: ||''**

[ஆகையால், நீ வேறொன்றிலும் நினைவில்லாதவனாய் தேவ தேவனும் இந்திரியங்களை நியமிப்பவனுமான ஜநார்த்தனனை, மனோ வாக் காய கர்மங்களால் ஆராதித்துக்கொண்டிருப்பாயாக.] என்றும்.

**''ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி தச்சித்தம் யத் தத$_3$ர்ப்பிதம்|**
**தாவேவ ச கரௌ ஶ்லாக்$_4$யௌ யௌ தத்பூஜநதத்பரௌ ||''**

[எது ஹரியைத் துதிக்கிறதோ அதுவே நாக்கு; அவனிடம் எது செலுத்தப்பட்டிருக்கிறதோ அதுவே மனம்; எக்கைகள் அந்தப் பரமாத்மாவைப் பூஜிப்பதில் ஈடுபட்டிருக்கின்றனவோ, அக்கைகளே சிறந்தவை.] என்றும்.

**''ஶ்ருதிஸ்ம்ருத்யுதி$_3$தம் ஸம்யக் நித்யமாசாரமாசரேத் |''**

[ச்ருதிஸ்ம்ருதிகளிற் சொல்லப்பட்ட ஆசாரங்களை நன்றாக எப்போதும் அநுஷ்டிக்கவேண்டியது.] என்றும்.

**''ஆசாரப்ரப$_4$வோ த$_4$ர்மோ த$_4$ர்மஸ்ய ப்ரபு$_4$ரச்யுத: |''**

[ஆசாரத்தைக் காரணமாகக்கொண்டது தர்மம்; தர்மத்திற்கு அச்யுதனே ஸ்வாமி.] என்றும் சொல்லப்பட்டது.

இப்படிப்பட்ட இந்தக்கர்மம் நித்யமென்றும், நைமித்திகமென்றும், காம்யமென்றும் மூவகைப்படும். ப்ராஹ்மண க்ஷத்ரியவைஶ்யர்களாகிற மூன்று வர்ணத்தவரும், ஶ்ருதி



ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட நித்யநைமித்திககர்மங்களை அனுஷ்டிப்பதே மேலான பகவதாராதனமென்பதும் மோக்ஷ ஹேதுவென்பதும்,

**''ஸ்வகர்மணா தமப்$_4$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ:''**

[தன்னுடைய கர்மத்தினால் பகவானை அர்ச்சனம் செய்து மநுஷ்யன் ஸித்தியை அடைகிறான்.] என்றும்.

**''கர்மணைவ ஹி ஸம்ஸித்$_3$தி$_4$மாஸ்தி$_2$தா ஜநகாத$_3$ய:''**

[கர்மத்தினாலேயே, ஜனகர் முதலியவர்கள், மேலான ஸித்தியை அடைந்தார்கள்] என்று கீதையிலும்,

**''வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந் |**
**விஷ்ணுராராத்$_4$யதே பந்தா$_2$ நாந்யஸ் தத்தோஷகாரக: ||''**

[வர்ணாச்ரமங்களுக்குத் தகுந்த ஆசாரத்தை உடையவனான புருஷனால் பரமபுருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறார். அவருக்குப் பிரியத்தைத் தரும் வழி வேறில்லை.] என்றும்.

**''வாஸுதே$_3$வே மநோ யஸ்ய ஜபஹோமார்ச்சநாதி$_3$ஷு |**
**தஸ்யாந்தராயோ மைத்ரேய! தே$_3$வேந்த்$_3$ரத்வாதி$_3$கம் ப$_2$லம் ||''**

[மைத்ரேயரே! ஜபம், ஹோமம், அர்ச்சனம் முதலிய கர்மங்களைச் செய்கையில் எவனுடைய மனம் வாஸுதேவனிடத்தில் லயித்திருக்கிறதோ, அவனுக்கு தேவேந்திரனாயிருக்கை முதலிய பலங்கள் இடையூறாகவே ஆகின்றன.] என்றும் விஷ்ணுபுராணத்திலும் பேசப்பட்டது. மேலும்,

**''ஶ்ருதிஸ்ம்ருத்யுதி$_3$தம் க்ருத்யம் மநஸாபி ச யே நரா: |**
**ஸமுல்லங்க்$_4$ய ப்ரவர்த்தந்தே ந ப$_4$க்தா மம ப$_4$ாமிநி ||''**

[ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட கர்மத்தை எந்த மனிதர்கள் மனஸ்ஸினாலும் மீறி நடக்கிறார்களோ, அவர்கள் என்னுடைய பக்தர்களல்லர்.] என்றும்,

**''ஜக$_3$த்கர்த்துர் மஹேஶஸ்ய தி$_3$வ்யாஜ்ஞாகாரிணோ வயம் |**
**இதி நித்யக்ரியா: குர்யுர் நரா யே வைஷ்ணவாஸ்து தே ||**

*["ஜகத் காரணனும், மேலான ஈச்வரனுமான பகவானுடைய திவ்யாஜ்ஞைப்படி நடப்பவர்கள் நாங்கள்" என்று கொண்டு எந்த மனிதர்கள் நித்யகர்மங்களை அநுஷ்டிக்கிறார்களோ, அவர்களே வைஷ்ணவர்கள்.]* என்றும்,

**"விஷ்ணுப4க்திஸமாயுக்தாந் ஶ்ரௌதஸ்மார்த்தப்ரவர்த்தகாந் |**
**ப்ரீதோ ப4வதி யோ த்3ருஷ்ட்வா வைஷ்ணவோऽஸௌ ப்ரகீர்த்தித: ||"**

*[ச்ருதிஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட நித்யகர்மங்களைச் செய்பவர்களும், விஷ்ணுபக்தியுடன் கூடியிருப்பவர்களுமான மனிதர்களைக்கண்டு எந்த மனிதன் ப்ரீதியடைகிறானோ, அவனே வைஷ்ணவனென்று சொல்லப்படுகிறான்.]* என்றும்,

**"ந சலதி நிஜவர்ணத4ர்மதோ ய:....தமவேஹி விஷ்ணுப4க்தம்"**

*[எவன் தன்னுடைய வர்ண தர்மத்தினின்றும் நழுவவில்லையோ, அவனையே விஷ்ணுபக்தனென்று அறிவாயாக.]* என்றும் நித்யநைமித்திகாதி கர்மங்களை அநுஷ்டிப்பது வைஷ்ணவ லக்ஷணமென்று கீர்த்திக்கப்பட்டது.

இப்படிப்பட்ட இந்த நித்யகர்மங்களில் ஸந்த்யாவந்தனம் ப்ரதானமானது. இக்கர்மத்தை அநுஷ்டிக்காதவன் ஸகலகர்மங்களையும் அநுஷ்டிக்கத் தகாதவனாகிறானென்பது

**"ஸந்த்4யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு |**
**யத3ந்யத் குருதே கர்ம ந தஸ்ய ப2லபா4க் ப4வேத் ||"**

*[ஸந்த்யாவந்தனம் செய்யாதவன் எப்போதும் அசுத்தமானவன்; ஒரு கர்மத்திற்கும் யோக்யதையற்றவன்; வேறு எந்தக் கர்மத்தைச் செய்தாலும் அதன் பலனை அடையமாட்டான்.]* என்று தக்ஷஸ்ம்ருதியிலும்,

**"நோபதிஷ்ட2தி ய: பூர்வாமுபாஸ்தே ந ச பஶ்சிமாம் |**
**ஸ ஶூத்3ரவத்3 ப3ஹிஷ்கார்யஸ் ஸர்வஸ்மாத்3 த்3விஜகர்மண: ||"**

*[எவனொருவன் காலையிலும், மாலையிலும் ஸந்த்யாவந்தனம் செய்யவில்லையோ, அவன் இருபிறப்பாளர்க்கு ஏற்பட்ட எல்லாக் கருமங்களிலிருந்தும், சூத்ரனைப்போல் நீக்கத் தக்கவன்.]* என்று மற்றொரு ஸ்ம்ருதியிலும்,



**"நியதஸ்ய து ஸந்நயாஸ: கர்மணோ நோபபத்3யதே"**

*[அவசியம் செய்யவேண்டிய கர்மத்தை விடுதல் பொருந்தாது.]* என்று கீதையிலும் சொல்லப்பட்டது.

ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இவ் விஷயத்தைப் பற்றிப் பேசியிருப்பதை இனி ஆராய்வோம்.

**"நகரமருள் புரிந்து நான்முகற்குப் பூமேல்**
**பகர மறை பயந்த பண்பன்—பெயரினையே**
**புந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும்**
**அந்தியால் ஆம்பயனங்கென்"**

என்று பொய்கையாழ்வார் அருளிச்செய்தார். "எம்பெருமானுடைய திருநாமங்களை மனத்தால் நினையாமல் ஜபிக்கப்படும் ஸந்த்யாவந்தனத்தால் என்ன பயன்" என்று அருளியதிலிருந்து, பகவத்கைங்கர்யமாக நினைத்துச் செய்யும் ஸந்த்யை மேலான பலனைத் தருவது என்றும் ஏற்படுகிறது. திருமங்கையாழ்வார்

**"சந்தி வேள்வி சடங்கு நான்மறை ஓதி யோதுவித்(து)**
**ஆதியாய் வரும் அந்தணாளரரு அணியாலி அம்மானே!"**

என்று அருளிச்செய்தார். இங்கு 'சந்தி' என்பது ஸந்த்யாவந்தனம் முதலிய நித்யகர்மங்களையும், 'வேள்வி' என்பது நைமித்திக கர்மங்களையும், 'சடங்கு' என்பது காம்ய கர்மங்களையும் குறிக்கிறது. இதிலிருந்து அக்காலத்தில் வ்யபதி3ஷ்டர்களாயிருந்த விப்ரர்கள், நித்ய நைமித்திக கர்மங்களையும், (காமரஹிதமான) காம்யகர்மங்களையும் பகவத்கைங்கர்யமாக அநுஷ்டித்தே வந்தார்களென்று ஏற்படுகிறது. நம்மாழ்வாரும்

"செந்தொழிலவர் வேத வேள்வியறுச் சிரீவரமங்கல நகர்
அந்தமில் புகழாய்"

என்று அருளிச்செய்தார். ஸூத்ரகாரரான பாதராயணரும், "அக்3நிஹோத்ராதி3 து தத்கார்யாயைவ தத்3த3ர்ஶநாத் [அக்னிஹோத்ரம் முதலியவைகள் (அநுஷ்டிக்கப்பட வேண்டியவைகளே); வித்யையாகிற காரியத்தின் பொருட்டு அவைகள் காணப்படுவதால்.] என்று உபாஸகர்களுக்கு அக்நிஹோத்ரம் முதலிய நித்ய நைமித்திக கர்மங்கள் அவசியம் அநுஷ்டிக்கத்தக்கவை என்பதை உபதேசித்தார். இங்கு ஆதி ஶப்தத்தினால் ஸந்த்யாவந்தநாதிகள் சொல்லப்படுகின்றன. ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் எம்பெருமானாரும் இவ்விஷயங்களை விரித்துரைத்தார்.

இனி, ப்ரபந்நர்கள் இந்த ஸந்த்யாவந்தநாதிகளைச் செய்யவேண்டுமா என்பதைப் பற்றிய விசாரம் செய்யப்படுகிறது. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்தில் த்வயப்ரகரணத்தில் "ஆகையால் ஸந்த்யாவந்தநாதிகளோபாதி விடவுமாம்; சிகாயஜ்ஞோபவீதாதி3களோபாதி கிடக்கவுமாம் என்கிற அநியமம் அநுஷ்டா2ந த்3வயத்திலும் ப்ரகாசிக்கிறது." என்று அருளிச்செய்தார். இதிலிருந்து ஸந்த்யாவந்தநாதிகளை ப்ரபந்நர்களில் சிறந்தவர்களான சில அதிகாரிகள் விட்டாலும், அவர்களுக்கு தோஷமில்லை என்று ஏற்படுகிறது. இவ்விஷயத்தைச் சரமஶ்லோகப்ரகரணத்திலும் பின்வருமாறு விவரித்திருக்கிறார்:—

"ஆக, ப3ஹுவசனத்தாலே மோக்ஷஸாத4நதயா ப்ரதா4நமான த4ர்மங்களை எடுக்கையாலே, த4ர்மவிஶேஷமான ஸர்வஶப்3த3ம் த்ரைவர்ணிகஸாதா4ரணமாய், 'ஸந்த்4யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு', 'தே த்4வகம் பு4ஞ்ஜதே பாபா யே பசந்த்யாத்மகாரணாத்' என்று யோக்3யதாபாத3கமான ஸந்த்யாவந்தன பஞ்சமஹாயஜ்ஞாதிகளைச் சொல்லுகிறது. ப்ரதானமான கர்மாதிகளைச் சொன்ன



போதே, இவற்றுக்கு யோக்யதாபாத3கமான அவையும், 'ஸாத்4யாபா4வே மஹாபா3ஹோ ஸாத4நை: கிம் ப்ரயோஜநம்' என்று ப்ரயோஜநாபா4வத்தாலே தன்னடையே கழியும்படியாயிருக்க, த்யாஜ்யதயா ப்ருத2ங்நிர்தே3ஶம் பண்ணுகைக்கு ஹேதுவென்னென்னில்: 'ஸர்வகர்ம ப3ஹிஷ்க்ருத:' என்று ஒரு கர்மத்துக்கும் அர்ஹனல்லன் என்கையாலே, மேல் வக்ஷ்யமாணமான ஸ்வீகாராநுஷ்டா2னத்துக்கும் யோக்3யதாபாத3கமான இவை அபேக்ஷிதமாகாதோ? என்று உதிக்கிற சங்கையை வ்யாவர்த்திக்கைக்காக ப்ருத2ங்நிர்தே3ஶம் பண்ணுகிறது. அந்த ஸ்வீகாரத்துக்குச் சைதந்ய மாத்ரமேயிறே அபேக்ஷிதம்........ஆக, அநுஷ்டிக்கப்புகுகிற ஸ்வீகாரத்துக்கு ஸந்த்4யாவந்த3னம் அநபேக்ஷிதமென்கைக்காக ப்ருத2ங் நிர்த்தேசம் பண்ணிற்று........இந்த ஸர்வஶப்தந் தன்னிலே 'லோகஸங்க்3ரஹமேவாபி ஸம்பஶ்யந்கர்த்துமர்ஹஸி' என்று லோகஸங்க்3ரஹார்த்த2மாகக் கர்த்தவ்யமான கர்மங்களும், புத்ரார்த்தமாகப் பண்ணும் பும்ஸவநாதி வ்யாபாரங்களும் த்யாஜ்யதயா அநுஸந்தே4யம்........இனி ஆந்ருஶம்ஸ்யமே இவற்றினுடைய அநுஷ்டாநத்துக்கு ஹேதுவாகக் கடவது;.... அநந்தரம் 'பரித்யஜ்ய' என்று அதினுடைய த்யாக3 ப்ரகாரத்தைச்சொல்லுகிறது த4ர்மஸ்வரூபத்யாக3த்தையோ? த4ர்ம ப2லாதி3த்யாக3த்தையோ? தர்மத்தில்உபாயத்வபு3த்3தி4 த்யாக3த்தையோ? என்னில்: இவ்வதிகாரிக்கு யாவச்சரீரபாதம் காலக்ஷேபத்துக்காக பகவத்தோஷஹேதுபூ4தமானவை அநுஷ்ட்டேயமாகையாலேத4ர்மஸ்வரூபத்யாக3மாக மாட்டாது; ப2லாதி3கள், ஸாத4கனுக்குங்கூட த்யாஜ்யமாகக் கீழே உக்தமாகையாலே, ப2லாதி3த்யாகத்தைச் சொல்லுகிறதாகவொண்ணாது. ஆக, இங்கு தர்மங்களினுடைய உபாயத்வபு3த்3தி4த்யாகத்தைச் சொல்லுகிறது. அந்த உபாயத்வபு3த்3தி4த்யாக3மாவது:— லாபஹேதுவான பகவத்ப்ரீதிக்கு ஸாதநமென்கிற ப்ரதிபத்தியைத் தவிருகை. ஆகையாலே ஸ்வரூப த்யாகத்தால் வரும் குறையும், பலாதித்யாகத்தைச் சொல்லுகிறதென்கிறத்தால் வரும் புநருக்தியுமின்றியிலே

ஒழியும்........அவன் (ஸாத₄கன்) உபாயத்வபுத்யா அநுஷ்டிக்கும்; இவன் (ப்ரபன்னன்) பே₄ாக₃பு₃த்₄யா **அநுஷ்டிக்கும்.** அவன் விதிப்ரேரிதனைய் அநுஷ்டிக்கும்; இவன் ராகப்ரேரிதனைய் **அநுஷ்டிக்கும்.** அவனுக்கு வர்ணாஶ்ரமதர்மம் நியமேந அநுஷ்டிக்கவேணும்; இவனுக்கு வர்ணுச்ரமதர்மாநுஷ்டாநமாகவுமாம்; வைஷ்ணவகிஞ்சித்காரமாகவுமாம். ப்ராதிகூல்யநிவ்ருத்தியிலே நியமம்; ஆநுகூல்யங்களில் ஏதேனுமாம். ஆகையிறே நம்மாசார்யர்கள் இவற்றை அநுஷ்டிப்பாரும் அநுஷ்டியாதாருமாய்ப் போருகிறது. அந்த நியமமில்லாமையிறே ஸாத₄கனை அக்ரூரன் ஸாத்₄யவஸ்து ஸந்நிஹிதமாயிருக்கச் செய்தேயும், தன்னுடைய க்ருத்யத்திலே அந்வயித்தது''

இந்த ஸ்ரீஸூக்திகளிலிருந்து பின்வரும் விஷயங்கள் தெளிவாகின்றன:—(1) ''ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய'' என்கிற விடத்தில் ஸர்வசப்தத்தாலே பலஸாதநமான கர்மயோகாதிகளை அநுஷ்டிப்பதற்கு யோக்₃யதையைத் தரும் (யோக்யதாऽऽபாத₃கமான) ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மங்களை விடச்சொல்லுகிறது. (2) இங்கு விடுகையாவது அவைகளை அநுஷ்டியாமலே இருப்பதன்று. அவைகள் எம்பெருமானை அடைய உபாயம் என்னும் புத்தியை விடுவதே இங்கு சொல்லப்படும் பரித்யாகம். (3) பகவத்கைங்கர்யரூபமாக இவைகளை ப்ரபன்னன் அநுஷ்டிப்பான். (4) இவைகளை அநுஷ்டிப்பதற்கு லோகஸங்க்ரஹமும் காரணமல்ல; லோகம் க்ஷேமத்தை அடையவேண்டும் என்னும் இரக்கமே (ஆந்ருஶம்ஸ்யமே) காரணம். (5) க்ஷணகாலமும் இடைவிடாமல் பகவத்பாகவதகைங்கர்யத்திலே ஈடுபட்டிருக்கும் சில அதிகாரிகள் இந்த ஸந்த்யாவந்தனுதிகளை முழுவதும் விட்டாலும் அதனுல் தோஷமில்லை. இம்மாதிரியான அதிகாரிகள் நம் ஆசாரியர்களிலும் சிலர் இருந்திருக்கிருர்கள். திருக்கண்ணமங்கையாண்டான் என்னும் மஹான் அவர்களில் ஒருவர். ப்ரபன்னன் பகவத்கைங்கர்யங்களையே செய்துவர



வேண்டும்; ஆனல் ஸந்த்யாவந்தநாதிரூபமான பகவத்கைங்கர்யத்தைத் தான் செய்யவேண்டுமென்னும் கட்டாயமில்லை. ஆகையால் பகவத்பாகவத கைங்கர்யத்திலீடுபட்டிருக்கும்போது ஸந்த்யாவந்தநாதிகாலம் வந்தால், ப்ரபன்னன் அந்த ஸந்த்யாவந்தநாதிகளை விடலாம். ஆனல் உபாஸகன் அச்சமயங்களிலும் ஸந்த்யாவந்தநாதிகளை அநுஷ்டித்தேயாகவேண்டும். திருக்கண்ணமங்கையாண்டானைப் போன்ற அதிகாரிகள் இக்காலத்தில் ஒருவரும் இலராகையால் இக்காலத்திலுள்ள ப்ரபன்னர்கள் ஸந்த்யாவந்தநாதிகளை பகவத்பாகவதகைங்கர்யத்துக்கு இடையூருக இல்லாத காலங்களில், பகவதாஜ்ஞையாகவும், பகவத்கைங்கர்யமாகவும் நினைத்து அநுஷ்டிக்கவேண்டியதே என்பதே இந்த ஸ்ரீஸூக்திகளிலிருந்து ஏற்படும்.

''பராஶரம் முநிவரம் க்ருதபௌர்வாண்ஹிகக்ரியம் |
மைத்ரேய: பரிபப்ரச்ச₂ ப்ரணிபத்யாபி₄வாத்₃ய ச ||''

[பகவானை மனனம் செய்யும் ரிஷிகளில் சிறந்தவரும், **காலையில் செய்யவேண்டிய கர்மாநுஷ்டானங்களையெல்லாம் செய்து முடித்தவரும்**, வைதிகதர்மத்துக்கு விரோதிகளான பாஹ்யகுத்₃ருஷ்டிகளை ப்ரமாண தர்க்கங்களாகிற சரங்களாலே ஜயித்ததாலும், உள்ளிருக்கும் விரோதிகளான ராகத்வேஷாதிகளை ஶமத₃மாதி₃களாலே ஜயித்ததாலும் பராசரர் என்று பெயர் பெற்றவருமான முனிவரை மைத்ரேய மஹர்ஷி தன் பெயரைச்சொல்லி அபி₄வாத₃னம் செய்து, ஸாஷ்டாங்க நமஸ்காரம்செய்து நன்ருகக் கேட்டார்.] என்பது ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் முதல் ஶ்லோகமாகப் படிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர்களான **ஸ்ரீவிஷ்ணுசித்தாசாரியர் என்ற எங்களாழ்வானும்**, ஸ்ரீமத் **க்ருஷ்ணஸூரி என்ற திருநாமத்தையுடைய பெரியவாச்சான் பிள்ளையும்** வ்யாக்யானம் செய்திருக்கிருர்கள். **''ஸ்வத₄ர்மாநுஷ்டா₂நாவிருத்₃தே₄ மந: ப்ரஸாத₃கரஸமயே புராணுதி₃ ஆக்₂யேயமிதி ஶாஸ்த்ரத₄ர்ஶநாத்''** [தனக்கேற்பட்ட

கர்மாநுஷ்டானத்திற்கு விரோதமில்லாமலும், மனஸ்ஸுக்கு ஸந்தோஷத்தை அளிப்பதாகவுமிருக்கும் காலத்தில் புராணம் முதலியவைகளைச் சொல்லவேண்டும் என்று சாஸ்த்ரத்தில் காணப்படுவதால்.] என்றும். "ப4க3வத்ஸமாராத4நாதி3நா **விஶேஷதோ விமலமாநஸம்**" [பகவானை (கர்மங்களால்) ஆராதிப்பது முதலியவைகளால் மிகவும் தூய்மையடைந்த மனஸ்ஸை உடையவரான பராசரரை.] என்றும் எங்களாழ்வான் வியாக்கியானம் செய்தருளினர். பெரியவாச்சான்பிள்ளையும் "பரமாத்மோபாஸநத்துக்கு அங்க3மாக ஶாஸ்த்ரசோதி3தமாய். ஜ்ஞாநபூர்வகமான அநுஷ்டானமும் அநுஷ்டிதமான ஸமயத்திலே." என்றும். "பரபக்ஷப்ரதிக்ஷேபம் பண்ணுகிறபோதும் அவஸரமன்று; உபாஸநகாலமும் அவஸரமன்று; தத3ங்க3மான அநுஷ்டானஸமயமும் அவஸரமன்று. ஆகையாலே க்ருதக்ருத்யனாய். தன்னுடைய ஜ்ஞானத்துக்கு வீடு தேட்டமான அவஸரத்திலே கேட்டான் என்கை" என்று அருளிச்செய்தார். இவைகளிலிருந்து நித்யகர்மானுஷ்டானமான ஸந்த்யாவந்தனத்தை அவசியம் செய்யவேண்டுமென்றும். அதன் மூலமாக பகவான் ஆராதிக்கப்படுகிறானென்றும். அப்படி ஆராதிப்பதினால் மனஸ் சுத்தி அடைகிறது என்றும். நித்யகர்மங்கள் அநுஷ்டிக்கப்படவேண்டுமென்று சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறதென்றும். கர்மாநுஷ்டானம் பரமாத்மோபாஸநத்திற்கு அங்கமென்றும் தெளிவாகிறது.

ஆசார்யாக்ரேஸரரான பிள்ளை லோகசார்யர் ஸ்ரீவசனபூஷணத்தில் "கைங்கர்யந்தானிரண்டு; அதாவது-இஷ்டஞ் செய்கையும். அநிஷ்டம் தவிருகையும்; இஷ்டாநிஷ்டங்கள் வர்ணாஶ்ரமங்களையும் ஆத்மஸ்வரூபத்தையும் அவலம்பித்திருக்கும்." என்று அருளிச்செய்தார். அவ்விடத்தில் மணவாள மாமுனிகள் அருளிய பின்வரும் வ்யாக்யான ஸ்ரீஸூக்தியும் இவ்விடத்தில் அநுஸந்திக்கவுரியது— "ஸ்வவர்ணஸ்வாஶ்ரமோசிதமான த4ர்மங்களை பரார்த்த2பு3த்3த்4யா



அநுஷ்டிக்கை இஷ்டமாய்,ஸ்வார்த்த2பு3த்3த்4யா அநுஷ்டிக்கை அநிஷ்டமாயிருக்கை. பரார்த்தபுத்யா அநுஷ்டிக்கையாவது:- லோகஸங்க்ரஹதயாவாகவும் ஶிஷ்ய புத்ரர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாகவும் ஆந்ருஶம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கை. இவ்வர்த்தத்தை 'இனி இவற்றில் நம் ஆசார்யர்கள் அநுஷ்டிக்கிறவை ஶிஷ்யபுத்ரர்களுடைய உஜ்ஜீவநார்த்த2மாக ஆந்ருஶம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கிறார்களித்தனை; இப்படி அனுஷ்டியாதபோது பகவத் விபூதிபூதரான சேதநர்க்கு நாசஹேதுவாகையாலே ஈச்வரனுக்கு அநபிமத பூ4சனுவான்; **ஆகையால் யாதோரளவாலே லோகஸங்க்3ரஹம் பிறக்கும். யாதோரளவாலே ஶிஷ்ய புத்ரர்களுக்கு உஜ்ஜீவநமுண்டாம் அவ்வளவும் அநுஷ்டே2யமென்றதாய்த்து**;ப்ரவ்ருத்தி த4ர்மந்தானே அபி4ஸந்தி4 பே4த3த்தாலே நிவ்ருத்தி தர்மமானவோபாதி இந்த நிவ்விருத்திதர்மமும் ப்ராப்யாந்தர்க்க3தமாகக்கடவது; இவ்விடத்தில் அகரணேப்ரத்யவாயம் எம்பெருமானுடைய அநபி4மதத்வமும். தன்னுடைய புருஷார்த்த2 ஹாநியுமாகக் கடவது' என்று தனிஶ்லோகத்தில் இவர் தாமே அருளிச்செய்தாரிறே. இனி ஸ்வார்த்த2பு3த்3த்4யா அநுஷ்டிக்கையாவது:-ஸ்வவர்ணஸ்வாஶ்ரமோசிதமாக விஹிதமாகையாலே நமக்கு இவையனுஷ்டியாதொழியில் க்ருத்யாகரணரூபபாபம் வருமென்று நினைத்து அநுஷ்டிக்கை....(இஷ்டாநிஷ்டங்கள்) இத்யாதிக்கு 'ஸ்வவர்ணஸ்வாஶ்ரமோசிதங்களைச் செய்கை இஷ்டம்; தத்3விருத்3த4ங்களைச் செய்கை அநிஷ்டம்' என்றும் 'ஆத்மஸ்வரூபத்துக்கு உசிதமானவற்றைச் செய்கை இஷ்டம்; தத்3விருத்3த4ங்களைச் செய்கை அநிஷ்டம்' என்றும் யோஜிக்கவுமாம். அங்ஙனுமன்றிக்கே. 'ஔபாதி4கமுமாய். அநித்யமுமான வர்ணாஶ்ரமங்களிலே **ஊற்றிருக்கை** அநிஷ்டம்; நிருபாதி4க நித்யஶேஷமான ஆத்மஸ்வரூபத்திலே ஊற்றிருக்கை இஷ்டம்' என்றும் யோஜிக்கவுமாம். இங்ஙன் ஊற்றத்தை யிட்டுச்சொல்லுகையன்றிக்கே, 'அநிஷ்டம் வர்ணாஶ்ரமத்தை **அவலம்பித்திருக்கும்**; இஷ்டம் ஆத்மஸ்வரூபத்தை அவலம்

பித்திருக்கும்'' என்று இங்ஙனே விப4ஜித்து வர்ணாஶ்ரமாசாரத்தை அநிஷ்டகோடியாகச் சொல்லப்பார்க்கில் '**ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்4ய வர்த்ததே। ஆஜ்ஞாச்சே2தீ3 மம த்3ரோஹீ மத்3ப4க்தோ஽பி ந வைஷ்ணவ: ||**' [வேதமும், ஸ்ம்ருதிகளும் என்னுடைய ஆஜ்ஞையே; எவன் அதை மீறி நடக்கிறானோ அவன் என் கட்டளையை மீறினவனாகவும் எனக்கு த்ரோஹியாகவுமிருப்பதனால் எனக்கு பக்தனாயிருந்தபோதிலும் வைஷ்ணவனல்லன்;] என்றும், '**அவிப்லவாய த4ர்மாணாம் பாலநாய குலஸ்ய ச। ஸங்க்3ரஹாய ச லோகஸ்ய மர்யாதா3ஸ்தா2பநாய ச|| ப்ரியாய மம விஷ்ணோஶ்ச தே3வதே3வஸ்ய ஶார்ங்கி3ண:। மநீஷீ வைதி3காசாரம் மநஸாபி ந லங்க4யேத்||**' [வர்ணாச்ரமதர்மங்கள் அழியாமலிருப்பதற்காகவும், குலதர்மங்களைக் காப்பாற்றுவதற்காகவும், லோகஸங்க்ரஹத்திற்காகவும், சாஸ்த்ர மர்யாதைகளை நிலைநிறுத்துவதற்காகவும், எனக்கும், தேவதேவனும், சார்ங்கமென்னும் வில்லாண்டவனுமான விஷ்ணுவுக்கும் பிரியத்தைச் செய்யும்பொருட்டும் புத்திமானானவன் வேதத்தில் சொல்லப்பட்ட ஆசாரத்தை மனத்தினாலும் மீறலாகாது.] ''**யதா2 ஹி வல்லபோ4ராஜ்ஞோ நதீ3ம் ராஜ்ஞா ப்ரவர்த்திதாம்। லோகோபயோகி3நீம் ரம்யாம் ப3ஹுஸஸ்யவிவர்த்3தி4நீம்|| லங்க4யந் ஶூலமாரோஹேத3நபேக்ஷோ஽பி தாம் ப்ரதி। ஏவம் விலங்க4யந் மர்த்யோ மர்யாதா3ம் வேத3நிர்மிதாம்|| ப்ரியோ஽பி ந ப்ரியோ஽ஸௌ மே மதா3ஜ்ஞாவ்யதிவர்த்தநாத்। உபாயத்வக்3ரஹம் தத்ர வர்ஜயேந் மநஸா ஸுதீ4:||**'' [ராஜாவினால் உண்டாக்கப்பட்டதும், உலகத்திற்கு உபயோகப்படுவதும், அழகியதும், அதிகமான பயிர்களை வளரச்செய்வதுமான நதிக்கு, அந்நதியை அபேக்ஷியாதவனும் ராஜாவுக்குப் பிரியனாயிருப்பவனுமான ஒருவன், கெடுதிகளைச் செய்தானாகில் எப்படி சூலத்தில் ஏற்றப்படுவானோ, அப்படியே வேதங்களால் சொல்லப்பட்ட தர்மங்களின் வரம்புகளை மீறுகிற மனிதன் எனக்கு இஷ்டனானாலும் என் கட்டளையை மீறினபடியாலே எனக்குப் பிரியனை



வனல்லன்; **புத்திமான் அந்தக் கர்மாநுஷ்டான விஷயத்தில் மனத்தில் உபாயத்வபுத்தியை விடக்கடவன்.**] என்றும் ஸர்வேஶ்வரனும் பிராட்டியும் அருளிச்செய்த வசனங்களோடும் பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்ட்டானங்களோடும் விரோதிக்குமிறே; ஆனபின்பு கீழ்ச்சொன்னபடியே இவ்வாக்யத்துக்குப் பொருளாகக்கடவது.''

இந்த ஸ்ரீஸூக்திகளிலிருந்து பின்வரும் விஷயங்கள் தெளிவாகின்றன:— (1) ஸந்த்யாவந்தநம் முதலிய வர்ணாஶ்ரமதர்மங்களை 'பிறருக்கு நன்மையைத் தருவது' என்னும் நினைவுடன் அநுஷ்டிக்க வேண்டும்; 'தனக்கு நன்மையைத் தருவது' என்னும் நினைவுடன் அநுஷ்டிக்கலாகாது. (2) லோகஸங்க்ரஹமும், சிஷ்யபுத்ரர்களுடைய உஜ்ஜீவனமும் இவற்றை அநுஷ்டிக்கைக்கு ஹேது. (3) இவை ப்ரபந்நனுக்கு ப்ராப்யத்தில் அடங்கி விடுகின்றன. (4) இவற்றை அநுஷ்டியாவிடில் எம்பெருமானுடைய அப்ரீதி ஏற்படுகிறபடியாலும், ஸ்வயம்ப்ரயோஜநமும், பகவத்கைங்கர்யமுமான இவற்றை இழக்கை கைங்கர்யஹானியாகையாலும் இவை அவச்யம் அநுஷ்டிக்கப்படவேண்டுமவையே. (5) வர்ணாஶ்ரமாசாரத்திலேயே ஊன்றி ஆத்மஸ்வரூபத்தை அறியாமலிருக்கை அநிஷ்டமேயொழிய, வர்ணாஶ்ரமாசாராநுஷ்டானம் அநிஷ்டமன்று. இவைகளிலிருந்து ஸந்த்யாவந்தநம் முதலிய வர்ணாஶ்ரமதர்மங்களை அநுஷ்டிக்க வேண்டுமென்பதே எல்லா ஆசார்யர்களுக்கும் உகந்த பக்ஷமென்று தெளிவாக விளங்குகிறது.

இந்த ஸந்த்யாவந்தனத்தை அநுஷ்டிக்கும்போது அர்த்தத்தை அறிந்தே அநுஷ்டிக்கவேண்டும். அர்த்தஜ்ஞாநமில்லாமல் இவற்றை அநுஷ்டிப்பது நிஷ்ப்ரயோஜனம் என்பதே. ''**அதி4க3தமப்யத்4யயநம் அநநுபா4ஷிதம் அநவக3தார்த்த2ம் க2ரஸ்ய சந்த3நபா4ர இவ கேவலம் பரிஶ்ரமகரம்**

ப$_{4}$வதி'' [வேதமானது அத்யயனம் செய்யப்பட்ட போதிலும், திரும்பப்படிக்கப்படாமலும், அர்த்தம் அறியப்படாமலுமிருந்தால், கழுதைக்குச் சந்தனக்கட்டையின் சுமையைப்போல் ஶ்ரமத்தையே தருவதாக ஆகிறது.] என்று நிருக்திகாரரால் சொல்லப்பட்டது. ''**ய ஏதேந ஹவிஷா யஜேத ய வு சைததே$_{3}$வம் வேத$_{3}$**'' [எவன் இந்த ஹவிஸ்ஸினால் யாகம் செய்கிறானோ எவன் இதை இப்படி அறிகிறானோ (அவர்களிருவரும் இந்தப் பலனை அடைகிறார்கள்.)] என்று வேதத்தில் அநுஷ்டானத்தினால் அடையும் பலனை அர்த்தத்தை அறிவதினாலேயே அடையலாமென்றும் சொல்லப்பட்டது. ஆகையால் இந்த மந்த்ரங்களின் அர்த்தத்தை அறியவேண்டியது அவசியம்.

நாம் அனுஷ்டிக்கும் மந்த்ரங்களின் அர்த்தம் தெரியாத காரணத்தினாலேயே அதன் அவசியத்தை அறியாமல் அனுஷ்டிக்காமல் இருக்கிறார்கள். எதையாவது ஒன்றைச் செய்யவேண்டியது என்று விதித்திருக்கிறது என்று சொன்னால் அக்காரணத்தை மட்டும் கொண்டு அனுஷ்டிக்கும் காலம் இதுவல்ல. அப்படி அனுஷ்டித்தால் அதை மூடநம்பிக்கை (Superstition) என்கிறார்கள். மந்த்ரத்தின் அர்த்தம் என்ன? அதை ஏன் அனுஷ்டிக்கவேண்டும்? அனுஷ்டித்தால் பலன் என்ன? அனுஷ்டிக்காவிடில் தோஷமென்ன? என்கிற கேள்விகள் ஏற்படுகின்றன. இக்கேள்விகளுக்கு பதில் சொல்லாவிடில் பலர் இக்கர்மத்தை அனுஷ்டிப்பார்கள் என்று எதிர்பார்க்கமுடியாது. இம்மாதிரி கேள்விகள் கேட்கும் தன்மை வேதத்திலும் பல இடங்களில் காணப்படுகிறது.

''மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:'' மனனம் செய்பவனைக் காப்பாற்றுவதல்லவோ மந்த்ரம். மந்த்ரத்தின் அர்த்தத்தைத் தெரியாமலும், ரிஷி, சந்தஸ், தேவதை இவைகளை அறியாமலும் செய்யும் மந்த்ரம் விபரீதபலன்களை



அல்லவோ கொடுக்கும். கிணறு வெட்டப்பூதம் புறப்பட்ட கதைபோல் ஆகிவிடும். மேலும் மந்த்ரங்களோ ஸம்ஸ்க்ருத பாஷையில் இருக்கின்றன. அதுவோ நமக்குத் தாய் பாஷையல்ல. எந்த ஸமூஹத்தினராலும் அது இப்பொழுது பேசப்படும் பாஷையாக இல்லை. இதனால் மந்த்ரங்களுக்குத் தமிழில் அர்த்தம் தெரியவேண்டியது அவசியமாயிருக்கிறது. மந்த்ரமோ ஜபிக்கவேண்டிய விஷயம். ஜபமோ மந்த்ரத்தினால் சொல்லப்படும் பரம்பொருளை தியானம் பண்ணுவது. தியானமோ அறியப்பட்ட வஸ்துவைப்பற்றித்தான் செய்ய முடியும். அர்த்தம் தெரியாவிடில் தியானிக்கப்படும் வஸ்துவை அறியமுடியாது. இதனாலேயே மந்த்ரம் அநுஷ்டே$_{2}$யார்த்ச$_{2}$ப்ரகாஶகம் என்றும், மநநஸாத$_{4}$நம் என்றும் பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. மந்த்ரங்களின் அர்த்தங்களை அறியாத புருஷனுக்கு தியானம் என்பது முடியாத காரியம். ''**யோ ஹவா அவிதி$_{3}$தார்ஷேயச்ச$_{2}$ந்தே$_{3}$ா-தை$_{3}$வத ப்$_{3}$ராஹ்மணேந மந்த்ரேண யஜதி யாஜயதி வா அத்$_{4}$யாபயதி வா ஸ்த$_{2}$ாணுர்வர்ச்ச$_{2}$தி க$_{3}$ர்த்தம் வாऽऽபத்$_{3}$யதே ப்ரவாமீயதே பாபீயாந் ப$_{4}$வதி யாதயாமந்யஸ்ய ச$_{2}$ந்த$_{3}$ாம்ஸி ப$_{4}$வந்தி**'' [எவன் ரிஷி, சந்தஸ், தேவதை, பிரயோகம் இவைகளைத் தெரிந்துகொள்ளாமல் மந்த்ரத்தைக்கொண்டு மாத்திரம் யாகம் செய்கிறானோ, யாகத்தைச் செய்விக்கிறானோ, அத்யயனம் செய்விக்கிறானோ, அவன் பட்டுப்போன மரமாகிறான்; பள்ளத்தில் விழுகிறான்; மரணத்தையாவது அடைகிறான்; பாபியாகிறான்; இவனுடைய மந்த்ரங்கள் வீர்யமற்றவைகளாக ஆகின்றன.]

**''அவிதி$_{3}$த்வா ருஷிம் ச$_{2}$ந்தே$_{3}$ா தை$_{3}$வதம் யோக$_{3}$மேவ ச।**
**யோऽத்$_{4}$யாபயேத் யாஜயேத்$_{3}$ வா (யஜேத்$_{3}$ வாऽபி) பாபீயாந்**
**ஜாயதே து ஸ:॥''**

[ருஷியையும், சந்தஸ்ஸையும், தேவதையையும், ப்ரயோகத்தையும் அறியாமல் எவன் அத்யயனம் செய்விக்கிறானோ, யாகம் செய்விக்கிறானோ (செய்கிறானோ) அவன் பாபியாக ஆகிறான்.]

**''அத$_2$ யோ மந்த்ரே மந்த்ரே வேத$_3$। ஸ ஸர்வமாயுரேதி।**
**ஸ ஶ்ரேயாந் ப$_4$வதி। அயாதயாமாந்யஸ்ய ச$_2$ந்த$_3$ாம்ஸி ப$_4$வந்தி॥''**

*[எவன் மந்திரங்கள் தோறும், (ரிஷி சந்தஸ் தேவதை ஆகிய) இவைகளை அறிகிறானோ, அவன் பூர்ணமான ஆயுளை அடைகிறான்; அவன் புகழுடன் விளங்குகிறான்; அவனுடைய மந்திரங்கள் வீர்யமுடையவையாக ஆகின்றன.]*

**''ருஷிம் ச$_2$ந்தே$_3$ா தே$_3$வதாஶ்ச த்$_4$யாயேந்மந்த்ரஸ்ய ஸர்வதா$_3$।**
**யஸ்து மந்த்ரம் ஜபேத்$_3$க$_3$ார்க்$_2$ய! ருத்$_3$த$_4$ம் தஸ்ய ப$_2$லம்**
**ப$_4$வேத் ॥''**

*[கார்க்யமுனிவரே! எவன் மந்திரத்தினுடைய ருஷி, சந்தஸ், தேவதை இவைகளை எப்போதும் தியானம் செய்கிறானோ, எவன் மந்திரத்தை ஜபிக்கிறானோ, அவனுக்குப் பலஸம்ருத்தி (நிறைவு) உண்டாகும்.]*

**''ஸ்த$_2$ாணுரயம் ப$_4$ாரவஹ: கில அதீ$_4$த்ய வேத$_3$ம் ந விஜாநாதி யோऽர்த்த$_2$ம்। யோऽர்த்த$_2$ஜ்ஞ இத் ஸகலம் ப$_4$த்$_3$ரமஶ்நுதே ஸ நாகமேதி ஜ்ஞாநவிதூ$_4$தபாப்மா ॥''**

*[வேதத்தை அத்யயனம் செய்தும், எவனொருவன் அதன் பொருளை அறியவில்லையோ, அவன் சுமைதாங்கியாகிறானன்றோ. எவன் பொருளை அறிகிறானோ அவன் ஸகலமங்களங்களையும் அடைகிறான்; ஜ்ஞானத்தால் பாபம் நீங்கப்பெற்றவனாய் அவன் ஸ்வர்க்கத்தை அடைகிறான்.]* என்று ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருப்பதால், மந்திரங்களின் அர்த்தமும், ரிஷி, சந்தஸ், தேவதை இவைகளும் அவசியம் அறியவேண்டியவைகள் என்று ஏற்படுகிறது.

ருஷி என்றால் யார்? சந்தஸ் என்றால் என்ன? தேவதை என்றால் எது? இவைகளுக்குள் என்ன ஸம்பந்தம்? எதற்காக நாம் இவைகளை அறியவேண்டும்? என்கிற கேள்விகள் ஏற்படுகின்றன.

**''யோ யஸ்ய வாக்யம் மந்த்ர: ஸ தஸ்ய ருஷி:''**



*[எந்த மந்திரம் எவருடைய வார்த்தையோ, அவர் அதற்கு ருஷி.]* என்று ஶௌநகபகவான் சொல்லியிருப்பதிலிருந்து மந்திரத்தை எவர் முதலில் அறிந்து வெளிப்படுத்தினாரோ, அவர் அந்த மந்திரத்திற்கு ருஷியெனப்படுகிறார் என்று ஏற்படுகிறது. அந்த மந்திரத்தை ஜபிப்பதற்கு முன் அவருக்கு நம்முடைய நன்றியறிவைக் காட்ட அவர் பெயரைச் சொல்லவேண்டியது கடமையே. ஆழ்வார்களின் பிரபந்த ஆரம்பத்திற்கு முன்னும், ஆசாரியர்களுடைய கிரந்தங்களின் ஆரம்பத்திலும், அவரவர் தனியன்களை அநுஸந்திப்பதும் இந்த நியாயத்தினாலேயே.

**''ச$_2$ந்தே$_3$ாபி$_4$ரேவாத்மாநம் ச$_2$ாத$_3$யித்வா உபாயாந்த:**
**ச$_2$ந்த$_3$ஸாம் ச$_2$ந்த$_3$ஸ்த்வம்''**

*[வேதவாக்கியங்கள், தங்களைச் சந்தஸ்ஸுக்களினால் மறைத்துக்கொண்டு வந்தன. (ஆகையினால்) சந்தஸ்ஸுக்களுக்கு சந்தஸ் என்று பெயர் ஏற்படுகிறது.]* என்று ஶ்ருதி சொல்லிற்று. ப்ரஸித்தமான சந்தஸ்ஸுக்கள் ஏழு. 'பூ:' முதலிய ஏழு வ்யாஹ்ருதிகளுக்கு ஏழு சந்தஸ்ஸுக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. சந்தஸ்ஸாகிற பெட்டியில் மந்திரமாகிற தனம் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. பெட்டியைத் திறந்து தனத்தை எடுப்பதுபோல் சந்தஸ்ஸின் லக்ஷணத்தையும், ஸ்வரத்தையும் அனுஸரித்து மந்திரத்தை உச்சரிக்க வேண்டும்.

**''யோऽர்த்த$_2$ உச்யதே ஸா தே$_3$வதா''**

*[மந்திரத்தினால் எந்த வஸ்து ப்ரதிபாதிக்கப்படுகிறதோ, அது தேவதை.]* என்றார் ஶௌநகர். பலவிதமான மந்திரங்களில் பல பல தேவதைகளைச்சொல்லும் சப்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் அவர்களை மட்டும் குறிக்கின்றனவா, அல்லது அவர்களுக்கு அந்தர்யாமியான நாராயணனையும் குறிக்கின்றனவா என்னும் கேள்வி ஏற்படுகிறது. சாரீரகமீமாம்ஸாசாஸ்த்ரத்தில் பகவான் பாதராயணர் எல்லா தேவதைகளும் பரமாத்மாவின் சரீரமென்றும்,

சரீரத்தைக் குறிக்கும் சப்தங்கள் சரீரியான பரமாத்மாவை யும் குறிக்கும் என்றும் நிர்ணயித்திருக்கிறார். மந்திரங்கள் இரண்டு வகைப்பட்டவை. சில நேராகவே பகவானைச் சொல்லுபவை; மற்றும் சில பரமபுருஷனுடைய விபூதி (ஐஶ்வர்யம்) ஆகிய தேவதைகளைச் சொல்லி, அவர்கள் மூல மாக அவர்களுக்கு அந்தர்யாமியான அச்சுதனையும் சொல்லு பவை. ஸந்த்யாவந்தனமந்த்ரங்களில் பெரும்பான்மை யானவை இரண்டாவது வகையைச் சேர்ந்தவையே.

ஸந்த்யாவந்தநாதிகள் அத்வைதத்திற்கு அநுகுணமா? விசிஷ்டாத்வைதத்துக்கு ஏற்றவையா? என்கிற கேள்வி ஏற்படுகிறது. அத்வைதிகள் வேதத்தை அத்யயனம் செய் கிறார்கள்; அத்யயனமும் செய்விக்கிறார்கள். வேதவாக்யங் களில் சிலவற்றிற்கு மஹாவாக்யங்களென்று மஹிமை கூறுகிறார்கள். வர்ணாஶ்ரமதர்மங்களில் சேர்ந்த ஸ்நாநம், ஸந்த்யாவந்தனம், யஜ்ஞம் முதலியவைகளை ப்ரஹ்மார்ப்ப ணம் என்று சொல்லி அநுஷ்டித்தும் வருகிறார்கள். கநபாடிகள், தீக்ஷிதர்கள் முதலிய பட்டங்களையும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க ஸந்த்யாவந்தனம் அத்வைதத்திற்கு அநுகுணமானதல்லவென்கிற ஸந்தேஹம் எப்படி ஏற்படக்கூடும்? என்று கேட்கலாம்.

"ந வர்ணா ந வர்ணாஶ்ரமாசாரத$_4$ர்மா
ந மே தா$_4$ரணா த்$_4$யாநயோகா$_3$த$_3$யோऽபி।
ந வேதா$_3$ ந யஜ்ஞா ந தீர்த்த$_2$ம் ப்$_3$ருவந்தி
ந ஶாஸ்தா ந ஶாஸ்த்ரம் ந ஶிஷ்யோ ந ஶிக்ஷா॥"

[எனக்கு வர்ணங்கள் கிடையாது; வர்ணாஶ்ரமாசாரதர்மங் களும் கிடையாது; தாரணையும், த்யானம், யோகம் முதலியவையும் இல்லை; வேதமும் இல்லை; யஜ்ஞங்களும் இல்லை; தீர்த்தங்களும் இல்லையென்றே (முன்னோர்கள்) சொல்லுகிறார்கள்; ஆஜ்ஞைசெய்பவனும் இல்லை; சாஸ்த்ர மும் இல்லை; சிஷ்யனும் இல்லை; சிக்ஷையும் இல்லை.] என்று



அத்வைதிகள் தங்கள் கிரந்தங்களில் எழுதி வைத்திருக்கிறார் கள். அத்வைதிகள் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டவுடன் சிகையையும், ஸூத்ரத்தையும் விட்டுவிடுகிறார்கள். உயி ருடனிருக்கும் வரையில் செய்யவேண்டியதான ஸந்த்யா வந்தனாதிகளையும் விட்டுவிடுகிறார்கள். இதை மனத்திற்கொண்டே

"ஸந்த்$_4$யாவந்த$_3$நவேளாயாம் ப்$_3$ரஹ்மாऽஹமிதி மந்யஸே।
க$_2$ண்ட$_3$லட்$_3$டு$_3$கவேளாயாம் த$_3$ண்ட$_3$மாதா$_3$ய தா$_4$வஸி॥"

[ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டிய வேளையில் 'நான் ப்ரஹ்மம்' என்று நினைக்கிறாய். குஞ்ஜாலாடு விநியோகம் செய்யும் வேளையில் தடியை எடுத்துக்கொண்டு தாவித்தாவி ஓடுகிறாய்.] என்று ஒரு ஹாஸ்யரஸமுள்ள ஶ்லோகம் ஏற் பட்டிருக்கிறது. வைஷ்ணவ ஸந்யாஸிகள் சிகை, ப்ரஹ்ம ஸூத்ரம், ஸந்த்யாவந்தனம் முதலியவைகளை விடுவதில்லை.

"அஸ்மிந் ஶாஸ்த்ரே....ஆத்மைகத்வவிஜ்ஞாநம்
ப்ரதிபிபாத$_3$யிஷிதம்।
அஸ்ய ஹி பே$_4$தா$_3$வலம்பி, கர்மஜ்ஞாநம் க்வோபயுஜ்யதே॥"

[இந்த ஶாஸ்த்ரத்தில் ஆத்மா ஒன்றே என்னும் அறிவே சொல்லப்படவேண்டியது. இதற்கு பேதத்தையே ஆதார மாகக் கொண்ட கர்மஜ்ஞானம் எங்கு உபயோகப்படும்?] என்றும்,

"வர்ணாஶ்ரமவிஶேஷ ஸாத்$_4$ய ஸாத$_4$ந இதிகர்த்த- வ்யதாத்$_3$யநந்தவிகல்பாஸ்பத$_3$ம் கர்ம ஸகலபே$_4$த$_3$த$_3$ர்ஶந நிவ்ருத்திரூபாऽஜ்ஞாநநிவ்ருத்தே: கத$_2$மிவ ஸாத$_4$நம் ப$_4$வேத்"

[வர்ணவிஶேஷங்கள், ஆஶ்ரமவிஶேஷங்கள், ஸாத்யம், ஸாதனம், இதிகர்த்தவ்யதை முதலிய எண்ணற்ற பேதங் களுக்கு இருப்பிடமான கர்மம் எல்லா பேத அறிவையும் போக்கடிக்கையாகிற அஜ்ஞாந நிவ்ருத்திக்கு எப்படித்தான் ஸாதனமாகும்?] என்றும் ஸ்ரீபாஷ்யம் லகு$_4$பூர்வபக்ஷத்தில்

அத்வைதிகளின் மதம் விவரிக்கப்பட்டது. "ஜ்ஞானம் ஒன்றே உண்மை; ஜ்ஞாதா, ஜ்ஞேயம் முதலியவையெல்லாம் பொய்" என்று சொல்லும் அத்வைதிகளுக்கு 'ஸந்த்யாவந்தனம் முதலியவை அநுகுணமானவையல்ல என்பது தெளிவாகும்.

**"தஸ்யைவ வேத$_3$நஸ்ய த்$_4$யாநரூபஸ்ய**
**அஹரஹரநுஷ்டீ$_2$யமாநஸ்ய**
**அப்$_4$யாஸாதே$_4$யா ऽதிஶயஸ்ய ஆப்ரயாணாத$_3$நுவர்த்தமாநஸ்ய**
**ப்$_3$ரஹ்மப்ராப்திஸாத$_4$நத்வாத் தது$_3$த்பத்தயே ஸர்வாணி**
**ஆஶ்ரமகர்மாணி யாவஜ்ஜீவம் அநுஷ்டே$_2$யாநி ||"**

[தினந்தோறும் அநுஷ்டிக்கப்படுவதும், அப்பியாஸத்தினால் விருத்தியடைவிக்கத்தக்கதும், சாகும் வரையில் தொடர்ந்து வருவதுமான த்யானரூபமான அவ்வறிவே ப்ரஹ்மத்தை அடைவதற்கு ஸாதனமாயிருக்கையால், அது உண்டாவதின் பொருட்டு எல்லா ஆஶ்ரமகர்மங்களும் அனுஷ்டிக்க வேண்டியவையே.] என்று லகு ஸித்தாந்தத்தில் சொல்லப்பட்டது. ஹாரீதஸ்ம்ருதியில் ஆருவது அத்தியாயத்தில்

**"க்ருதஸந்த்$_4$யஸ் ததோ ராத்ரிம் நயேத்தே$_3$வக்$_3$ருஹாதி$_3$ஷு....**
**த்ரித$_3$ண்ட$_3$ப்$_4$ருத் யோ ஹி ப்ருத$_2$க் ஸமாசரேத்**
**ஶநை: ஶநைர் யஸ்து ப$_3$ஹிர்முக$_2$ாக்ஷ: ।**
**ஸம்முச்ய ஸம்ஸாரஸமஸ்தப$_3$ந்த$_4$நாத்**
**ஸ யாதி விஷ்ணோரம்ருதாத்மந: பத$_3$ம் ||"**

[ஸந்யாஸியானவன், ஸாயம் ஸந்த்யையைச் செய்து, பிறகு ராத்ரி வேளையை தேவாலயம் முதலியவிடங்களில் கழிக்கக் கடவன்; த்ரிதண்டத்தை தரித்த எந்த ஸந்யாஸியானவன், இந்திரியங்களை வெளிவிஷயங்களில் செல்லாமல் அடக்கி, க்ரமமாக இம்மாதிரி நடக்கிறானே, அவன் ஸம்ஸாரத்தி லுள்ள எல்லா பந்தங்களினின்றும் விடுபட்டு அழிவற்ற ஸ்வரூபத்தையுடையவனான விஷ்ணுவின் பரமபதத்தை அடைகிறான்.] என்று ஸந்யாஸிகளுக்கும் ஸந்த்யாவந்தனம் விதிக்கப்பட்டது. அதே அத்தியாயத்தில் அவர்கள் ப்ராணா



யாமம், காயத்ரீ முதலியவைகளையும் அநுஷ்டிக்கவேண்டு மென்று சொல்லியிருக்கிறார். அடுத்த அத்தியாயத்தில்

**"யத$_2$ாந்நம் மது$_4$ஸம்யுக்தம் மது$_4$ர(ச?)ாந்நேந ஸம்யுதம் ।**
**உப$_4$ாப்$_4$யாமேவ பக்ஷாப்$_4$யாம் யத$_2$ா கே$_2$ பக்ஷிணாம் க$_3$தி: ||**
**ததை$_2$வ ஜ்ஞாநகர்மப்$_4$யாம் ப்ராப்யதே ப்$_3$ரஹ்ம ஶாஶ்வதம் ||"**

[எப்படி இனிய ரஸத்துடன் கலந்த உணவும், உணவுடன் கலந்த இனிய ரஸமும் (உண்ண போக்யமாயிருக் கின்றனவோ), எப்படி இரண்டு இறக்கைகளுடன் ஆகாயத் தில் பக்ஷிகள் பறக்கின்றனவோ, அப்படியே ஜ்ஞானத்தி னாலும், கர்மத்தினாலும் அழிவற்றதான ப்ரஹ்மம் அடையப் படுகிறது.] என்று கர்மாநுஷ்டானம் மோக்ஷஸாதனமென்று சொல்லப்பட்டது. மற்ற ஸ்ம்ருதிகளிலும் இம்மாதிரியே சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளிலிருந்து கர்மாநுஷ்டா னம் விசிஷ்டாத்வைதிகளாலும், ஸ்ம்ருதிகர்த்தாக்களாலும் ஆதரிக்கப்பட்டதென்றும், ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மாநுஷ்டானங்கள், விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்திற்கே பொருந்தியவையென்றும் விளங்குகிறது.

**"ஶ்ருதிஸ்ம்ருதீ ச விப்ராணாம் சக்ஷுஷீ தே$_3$வநிர்மிதே ।**
**காணஸ் தத்ரைகயா ஹீநோ த்$_3$வாப்$_4$யாமந்த$_4$: ப்ரகீர்த்தித: ||"**

[வேதங்களும், ஸ்ம்ருதிகளும், ப்ராஹ்மணர்களுக்கு தெய்வத் தினால் ஏற்படுத்தப்பட்ட இரண்டு கண்கள்; அதில் ஒன்றை அறியாதவன் காணன் (ஒரு கண் பொட்டையன்) என்றும் இரண்டுமறியாதவன் அந்த$_4$ன் (முழுக்குருடன்) என்றும் சொல்லப்படுகிறான்.] என்று ஹாரீதஸ்ம்ருதியில் (1-25) சொல்லப்பட்டது. இருபிறப்பாளர்க்குப் பல ஸம்ஸ்காரங்களைச் செய்யவேண்டுமென்று ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

**"ஜந்மநா ஜாயதே ஶூத்$_3$ர: கர்மணா ஜாயதே த்$_3$விஜ:"**

[பிறக்கும்போது சூத்ரனாகப் பிறக்கிறான்; ஸம்ஸ்காரங் களாலேயே த்விஜனாக ஆகிறான்.] என்று படிக்கப்பட்டது.

த்விஜர்களுக்கு முக்யமான ஸம்ஸ்காரம் உபநயனமாயிருந்த போதிலும் அதற்கு முன்னும் பல ஸம்ஸ்காரங்களை அவசியம் செய்யவேண்டியிருக்கிறது. அவைகளைச் செய்யாமல் உபநயனம் செய்யமுடியாது. ஒரு சிசு உண்டாவதற்கு முன் அவனுடைய தாய்தந்தையருக்கு ஶாஸ்த்ரப்படி விவாஹம் ஆகியிருக்கவேண்டும்; விவாஹம் த4ர்மப்ரஜோத்பத்திக்காகவே என்று ஸங்கல்பம் செய்யப்படுகிறது. பிறகு க4ர்ப்ப4ாத4ாந காலத்தில் "விஷ்ணுர்யோநிம் கல்பயது" என்னும் மந்திரத்தினால் கர்ப்பதாந ஸம்ஸ்காரம் செய்யப்படுகிறது. கர்ப்பம் தரித்தவுடன் புருஷப்ரஜையாகப் பிறக்கவேண்டுமென்பதற்காகப் பும்ஸவநம் என்னும் ஸம்ஸ்காரம் செய்யப்படுகிறது. ஆறு, அல்லது எட்டாவது மாதங்களில் விஷ்ணு பலியுடன் ஸீமந்தோந்நயநம் என்னும் ஸம்ஸ்காரம் செய்யப்படவேண்டும். ஸீமந்தத்திற்கு முன் சிசு ஜனித்துவிட்டால், புண்யாஹவாசனத்திற்குப் பிறகு ஸீமந்தம் செய்தேயாகவேண்டும். குழந்தை பிறந்தவுடன் செய்யவேண்டிய முதல் ஸம்ஸ்காரம் ஜாதகர்மமாகும். பிறந்த பதினோராவது நாள் நாமகரணம் செய்யவேண்டும். நாலாவது மாதத்தில் குழந்தை வீட்டிலிருந்து வெளியிற் செல்லுவதாகிற நிஷ்க்ரமணம் என்னும் ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும். ஆறாவது மாதத்தில் அந்நப்ராஶநம் (உணவு ஊட்டுதல்) என்னும் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். அதன் பிறகு மூன்றாவது வயது பிறந்த பிறகு சௌளம் (சிகை வைத்தல்) என்னும் ஸம்ஸ்காரம் செய்யப்படவேண்டும். அவரவர் குலாசாரப்படி பூர்வசிகையோ, மத்4யமசிகையோ, அபரசிகையோ வைக்கவேண்டும். அப்படிச் சௌளகர்மம் செய்து சிகை வைத்துக்கொள்ளாதவர்களும், வைத்துக்கொண்டு-விட்டவர்களும், மறுபடி சிகை வைத்துக்கொண்டாலொழிய அவர்களுக்கு உபநயனம் செய்யக்கூடாது. செய்தாலும் அது வ்யர்த்தமேயாகும். உபநயனம், விவாஹம் முதலியவைகள் ஆனபிறகு சிகாவிஸர்ஜநம் செய்தவர்களுக்கு மறுபடி சிகைவைத்துக்கொண்டு புநரு



பநயனம் செய்துகொள்ளவேண்டும். இல்லாவிடில் அவர்கள் பதிதர்களாகவும் கர்மங்கள் அநுஷ்டிப்பதற்கு யோக்யதையற்றவர்களாகவும் ஆகிறார்கள்; செய்யும் கர்மங்களும் நிஷ்ப்ரயோஜனமாகின்றன.

**"ஶிகா2ம் புண்ட்3ரஞ்ச ஸூத்ரஞ்ச ஸமயாசாரமேவ ச।**
**பூர்வைராசரிதம் குர்யாத3ந்யதா2 பதிதோ ப4வேத்॥"**

*[சிகையையும், புண்ட்ரத்தையும், ப்ரஹ்மஸூத்ரத்தையும், ஸமயாசாரங்களையும், முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்டபடியே செய்யவேண்டியது; இல்லாவிடில் பதிதனாகிறான்.]* என்றும்

**"ஸதோ3பவீதீ சைவ ஸ்யாத் ஸதா3 ப3த்3த4ஶிகோ2 த்3விஜ:"**

*[ப்ராஹ்மணன் எப்போதும் யஜ்ஞோபவீதத்தை தரித்தவனாயிருக்கவேண்டும்; எப்போதும் முடிந்த சிகையுடனிருக்கவேண்டும்.]* என்றும் ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டது. சிகையை விட்டவர்களின் கதி முதற்கோணல் முற்றும் கோணல் என்பதுபோலவேயாகும்.

இம்மாதிரி ஸம்ஸ்காரங்கள் பெண்களுக்கு உண்டா? இந்த ஸம்ஸ்காரங்கள் எதற்காகச் செய்யப்படுகின்றன? என்னும் கேள்விகள் எழுகின்றன. மேலே கண்ட ஸம்ஸ்காரங்கள் பெண்களுக்கு மந்த்ரமில்லாமல் செய்யப்படுகின்றன; விவாகம் மட்டும் அவர்களுக்கும் மந்த்ரத்துடன் செய்யப்படுகிறது. இந்த ஸம்ஸ்காரங்களைச் செய்வதற்கு இரண்டு காரணங்கள் உள:— (1) ஸ்த்ரீ புருஷர்களின் சுக்ல சோணிதங்களின் சேர்க்கையினால் மநுஷ்ய சரீரம் ஏற்படுகிறது. இக்காரணத்தினால் அது அசுத்தியையும் பாபத்தையும் உடையது என்பது சொல்லாமலே விளங்கும். அவை போகாவிடில் ப்ரஹ்மோபதேசத்திற்கு யோக்யதை கிடையாது. மேற் சொன்ன ஸம்ஸ்காரங்கள் இந்த அசுத்தியையும், பாபத்தையும் போக்கடிக்கின்றன என்று ஸ்ம்ருதிகளில் கோஷிக்கப்படுகிறது.

''க3ர்ப்ப4ாத4ாநம் ருதௌ பும்ஸ: ஸவநம் ஸ்பந்த3நாத் புரா |
ஷஷ்டே2ऽஷ்டமே வா ஸீமந்த: ப்ரஸவே ஜாதகர்ம ச ||
அஹந்யேகாத3ஶே நாம சதுர்த்தே2 மாஸி நிஷ்க்ரம: |
ஷஷ்டே2ऽந்நப்ராஶநம் மாஸி சூட3ா கார்யா யத2ாகுலம் ||
ஏவமேந: ஶமம் யாதி பீ3ஜக3ர்ப்ப4 ஸமுத்3ப4வம் |
தூஷ்ணீமேதா: க்ரியா: ஸ்த்ரீணாம் விவாஹஸ்து ஸமந்த்ரக: ||''

[ருதுகாலத்தில் கர்ப்பாதானத்தையும், கர்ப்பம் அசைவதற்கு முன் பும்ஸவனத்தையும், ஆறு அல்லது எட்டாவது மாதத்தில் ஸீமந்தமும், குழந்தை பிறந்தவுடன் ஜாதகர்மமும், பிறந்தபின் பதினோராவது நாள் நாமகரணமும், நாலாவது மாதம் நிஷ்க்ரமணமும், ஆறுவது மாதத்தில் அந்நப்ராஶனமும், குலாசாரப்படி சௌளமும் செய்யப்படவேண்டியது. இம்மாதிரி செய்வதனுல், சுக்லசோணிதங்களினுல் உண்டாகும் பாபமானது சாந்தியடைகிறது. ஸ்த்ரீகளுக்கு இந்தக் கர்மங்கள் மந்த்ரமில்லாமல் செய்யப்படுகின்றன; விவாஹம் மட்டும் மந்த்ரத்துடன் செய்யப்படுகிறது.] என்று யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியில் (1-11. 12, 13) சொல்லப்பட்டது. (2) ஸம்ஸ்காரங்கள் செய்யப்படுவதற்கு, ஸூக்ஷ்மமும், ரஹஸ்யமுமான மற்றொரு காரணமும் உண்டு. ப்ரஹ்மோபதேசமானது, பரமாத்மாவைப் பற்றிய உபதேசம் என்பது எல்லாரும் ஒப்புக்கொண்டது.

''நாராயணபரம் ப்3ரஹ்ம தத்வம் நாராயண: பர: |
நாராயணபரோ ஜ்யோதி: ஆத்மா நாராயண: பர: ||''

என்று வேதம் நாராயணனையே பரப்ரஹ்மமாகவும், பரதத்வமாகவும், பரஞ்சோதியாகவும், பரமாத்மாவாகவும் ஸந்தேஹத்திற்கிடமில்லாமல் நிர்ணயித்தது. ப்ரஹ்மமாகிற நாராயணனைப் பற்றிய உபதேசத்தைப் பெறுவதற்குத் தகுந்த யோக்யதையையும் இந்த ஸம்ஸ்காரங்கள் உண்டாக்குகின்றன. பா3ஹ்ய (வெளி) சுத்தியை மட்டுமல்லாமல், மநோவாக்காயங்களாகிய த்ரிகரணங்களின் சுத்தியையும் இந்த ஸம்ஸ்காரங்கள் கொடுக்கின்றன. மேலும், அவைகள்



படிப்படியாக ஜீவாத்மாவை நாராயணனுக்கு தாஸனுகை ஆக்குகின்றன. ''லூநபக்ஷ இவாண்ட3ஜ:'' என்கிறபடி சிறகொடிந்த பக்ஷிபோல் சரீரமில்லாமல் திண்டாடித் திரியும் ஜீவனுக்கு சரீரத்தைக் கொடுப்பது க3ர்ப்ப4ாத4ாநத்தின் நோக்கமாகும். ''ஶரீரமாத்3யம் க2லு த4ர்மஸாத4நம்'' [சரீரமன்றோ முதலாவதான தர்மஸாதனம்.] என்கிறபடியே சரீரமில்லாமல் மோக்ஷோபாயங்களை அநுஷ்டிக்கமுடியாது. வைஷ்ணவ ஸந்தாநம் உண்டாகவேண்டுமென்று பகவான் விஷ்ணுவிடம் விஜ்ஞாபனம் செய்வதே கர்ப்பதாந மந்த்ரங்களிலிருந்து தேறி நிற்கும் பொருளாகும்.

அப்படி உண்டான கர்ப்பம் புருஷ ப்ரஜையாகவேண்டுமென்பதற்காக, புருஷஸூக்த உத்தராநுவாகத்தின் முதல் ருக்கும், ''ஸுபர்ணோऽஸி க3ருத்மாந்'' என்று தொடங்கும் வேதமந்திரங்களும் பும்ஸவநத்தின்போது அநுஸந்திக்கப்படுகின்றன. வேத ஸ்வரூப விஹங்கராஜனுன கருடனையும், கருட (வேத) வாஹனனுன நாராயணனையும் வேதாந்தவித்தான வைஷ்ணவ புருஷப்ரஜை உண்டாகவேண்டுமென்று ப்ரார்த்திப்பதே இதன் ரஹஸ்யார்த்தம், விஷ்ணுபலியாகிற பாயஸப்ரதானத்தினுலும், ஸீமந்த மந்த்ரங்களாலும், கர்ப்பத்தைக் கடாக்ஷித்துக் காப்பாற்றவேண்டுமென்று எம்பெருமானும், புருஷகாரபூ4தையான ஸ்ரீதேவியும் ப்ரார்த்திக்கப்படுகிறுர்கள். இந்த ஸமயத்திலிருந்து ஜனனம் வரையில் ஸாத்விகனுன வைஷ்ணவப்ரஜைக்கு எம்பெருமான் ஸேவை ஸாதிப்பதை

''கருக் கோட்டியுள் கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருக்கோட்டியெந்தை திறம்''

என்று பூதத்தாழ்வார் பாடினுர்.

''ஜாயமாநந்து புருஷம் யம் பஶ்யேந் மது4ஸூத3ந: |
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த2சிந்தக: ||''

[பிறக்கும்போது எந்த ஜீவனை மதுஸூதனன் கடாக்ஷிக் கிறானோ அவன் ஸத்வ குணத்தையுடையவனென்று அறியத் தக்கவன். மோக்ஷத்தை அடையவேண்டுமென்ற சிந்தனை யுடையவன் அவனே.] என்றும் சொல்லப்பட்டது. குழந்தை பிறந்தவுடன்

**"விஸ்வஸ்ய கேதுர் பு$_4$வநஸ்ய க$_3$ர்ப்பே$_4$ா**
**ஆரோத$_3$ஸீ ஆப்ருணாத் ஜாயமாந:"**

முதலிய மந்திரங்களாலும்.

**"ஓம் ஸத$_3$ஸஸ்பதிமத்$_3$பு$_4$தம் ப்ரியமிந்த்$_3$ரஸ்ய காம்யம்**
**ஸநிம் மேத$_4$ாமயாஸிஷம் ஸ்வாஹா"**

என்னும் மந்திரத்தாலும் ஞானமயனும், ஜ்யோதிஸ்ஸ்வ ரூபனுமான ஜீவாத்மா உலகத்திற்குக் கொடிபோன்றவனா கவும், மால் சமயத்திற்கோர் மலையிட்ட தீபமாகவுமாகி, பரம புருஷனுடைய அன்புக்குப் பாத்ரமாகி நித்யஸூரிகளின் கோஷ்டியில் சேரக்கடவனென்று பிரார்த்திக்கப்படுகிறது. ரூபமற்றவனாயிருந்து, சரீரத்தைப் பெற்று ரூபமடைந்த ஜீவனை அடையாளம் கண்டு பிடிப்பதற்காக நாமகரணம் செய்யப்படுகிறது.

**"ஏகாந்தீ வ்யபதே$_3$ஷ்டவ்யோ நைவ க்$_3$ராமகுலாதி$_4$பி$_4$: ।**
**விஷ்ணுநா வ்யபதே$_3$ஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம் ஸ ஏவஹி ॥"**

[பரமைகாந்தியானவன், க்ராமம், குலம் முதலியவைகளால் பெயரிடத்தக்கவனல்லன்; விஷ்ணுவின் பெயரினாலேயே சொல்லத்தக்கவன்; அவனுக்கு (உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை முதலிய) எல்லாம் அப்பெருமானே யன்றோ.] என்று பகவானுடைய பெயர்களை வைஷ்ணவ னுக்கு வைக்கவேண்டுமென்று சாஸ்திரம் சொல்லிற்று. இப்படிப் பெயர் வைப்பது பாபம் போவதற்கும், வைஷ்ணவத்வஸித்திக்குமேயாகும். **"நாம மே தே$_3$ஹி பாப்மநோ அபஹத்யை"** [(எம்பெருமானுடைய) பெயர்களை



என்னுடைய பாபங்கள் போவதற்காகக் கொடுப்பீராக.] என்று ருத்ரன் பிரமனைக் கேட்டதாகவும், அவன் நாராயணனுடைய எட்டு பெயர்களைக் கொடுத்ததாகவும் வேதத்தில் உத்கோஷிக்கப்பட்டது. இப்படி நாமகரணம் செய்வது தானும் தன்னை அழைக்கும் மாதாபிதாக்களும், மற்றவர்களும் உஜ்ஜீவிக்க ஹேதுவாகிறது. நாராயண நாமஸ்மரணம், உச்சாரணம், லேக$_2$நம் முதலியவையும் உய்வதற்கு உபாயமாகின்றனவன்றோ. மாதவன் மாதா மறவி உலகம் புகாள்; நாரணன் தமப்பன் நரகம் புகான். நாமகரணத்தின் மற்ற விசேஷங்கள் **பெரியாழ்வார்** ப்ரபாவத்தில் விஸ்தாரமாகக் காணலாம். "அந்நம் ப்$_3$ரஹ்மேதி வ்யஜாநாத்" எனப்பட்ட அந்நத்தை ஊட்டுவதாகிற அந்ந ப்ராசனமும் பகவானை அடைவதற்கு ஒரு படியாகும். சௌளம் எனப்படும் ஸம்ஸ்காரம் மூன்றாவது வருஷத்தில் செய்யப்படுகிறது; ப்ரஹ்மம் ப்ரவேசிப்பதும், ஜீவன் முக்தியடையும் காலத்தில் சிரஸ்ஸை பேதித்துக்கொண்டு போவதுமான இடம் ப்$_4$ரஹ்மரந்த்$_4$ரமெனப்படுகிறது. ஊர்த்$_3$வக$_3$திக்கு அடையாளமான ஊர்த்$_4$வ புண்ட்$_3$ரத்தைப் போன்ற ஊர்த்$_4$வசிகை ப்$_3$ரஹ்மரந்த்$_4$ரத்தில் வைக்கப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற சிகை களுக்கும் ஸ்த$_2$ாநங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

இனி உபநயனமென்னும் ஸம்ஸ்காரத்தைப்பற்றி விசாரிப்போம். உபநயனமென்னும் பதத்திற்கு 'உப- ஸமீபத்தில், **நயனம்**-(சிஷ்யனை) அழைத்துச் செல்லுதல்' என்று பொருள். யாருக்கு ஸமீபத்தில்? என்கிற வினா ஏற்படுகிறது. ஸ்ம்ருத்யர்த்த$_2$ஸாரத்தில், "ஆசார்ய ஸமீப நயனம் வா" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசாரியனை அண்டி, ஸாவித்ரியுபதேசம் பெற்று, ப்ரஹ்மத்தின் அருகில் செல்வதற்கு உபநயனமென்று பெயர். இதனாலேயே அதற்கு ப்ரஹ்மோபதேசம் என்று பெயரேற்பட்டது. அதற்குப் பிறகு ப்ரஹ்மசாரி என்னும் பெயரும்

சிஷ்யனுக்கு ஏற்படுகிறது. அவன் தரிக்கும் பூணூலுக்கு ப்ரஹ்மஸூத்ரம் என்ற பெயர் வழங்கி வருகிறது. உபநயனத்திற்குப் பிறகே வேதாத்4யனம் ஆரம்பிக்க வேண்டும். அதனால் 'வேத3ஸமீபநயநம்' (வேதத்திற்கு அருகில் அழைத்துச் செல்லல்) என்றும் உபநயனத்திற்குப் பொருள் கொள்ளலாம். வேதவேதாந்தங்களில் உத்கோஷிக்கப்படும் உண்மைப் பொருள்கள் (தத்துவங்கள்) யாவை? அவைகளில் உயர்ந்த உண்மை (பரதத்துவம்) எது? என்பதே ப்ரஹ்மோபதேசத்தில் விளக்கப்படுகின்றது. உபநயனத்திற்கு யஜ்ஞோபவீத தாரணம் ஒரு அவசியமான அங்கமாகும். யஜ்ஞோபவீத தாரணத்திற்கு மந்த்ரம் பின்வருமாறு:—

यज्ञोपवीतं परमं पवित्रं प्रजापतेर्यत्सहजं पुरस्तात्।
आयुष्यमग्र्यं प्रतिमुञ्च शुभ्रं यज्ञोपवीतं बलमस्तु तेजः॥

யஜ்ஞோபவீதம் பரமம் பவித்ரம்
ப்ரஜாபதேர் யத் ஸஹஜம் புரஸ்தாத்।
ஆயுஷ்யமக்3ர்யம் ப்ரதிமுஞ்ச ஶுப்4ரம்
யஜ்ஞோபவீதம் ப3லமஸ்து தேஜ:॥

[உயர்ந்ததும், பரிசுத்தமானதும், ப்ரஜாபதியாகிய பிரமனுடன் முதலில் பிறந்ததும், தீர்க்காயுஸ்ஸைக் கொடுப்பதும், மிகவும் அழகாயிருப்பதுமான யஜ்ஞோபவீதத்தை தரிப்பாயாக; இந்த யஞ்ஞோபவீதம் (உனக்கு) பலத்தையும், தேஜஸ்ஸையும் கொடுக்கட்டும்.]

யஜ்ஞோபவீதமென்றால் அர்த்தமென்ன? "யஜ்ஞோவை விஷ்ணு" என்றும், "யஜ்ஞோ யஜ்ஞபதிர்" என்றும் சொல்லுகிறபடியே பகவான் விஷ்ணுவுக்கு 'யஜ்ஞ:' என்பது ஒரு திருநாமம். அவனைக் குறித்தே கர்மங்கள் செய்யப்படுகிறபடியால் கர்மங்களும் யஜ்ஞமெனப்படுகின்றன. 'உபவீதம்' என்றால் சுற்றியிருக்கும் வஸ்து. யஜ்ஞமாகிய விஷ்ணுவைச்சுற்றியிருப்பதினால் யஜ்ஞோபவீத



மென்ற பெயர் பொருந்தும். இதிலிருந்து உள்ளே அந்தர்யாமியான நாராயணன் இருக்கிறானென்றும், அவனைச் சுற்றியிருப்பதே 'யஜ்ஞோபவீதம் என்றும் ஏற்படுகிறது. "யஜ்ஞார்த்த2ம் உபவீதம்" என்கிறபடியே யஜ்ஞம் செய்வதற்கு அவஶ்யாபேக்ஷிதமான உபவீதம் என்றும் பொருள் கொள்ளலாம். இதிலிருந்து இந்த யஜ்ஞோபவீதமில்லாமல் எக்கருமத்தையும் அநுஷ்டிக்கமுடியாது என்று ஏற்படுகிறது. இதற்கு ப்ரஹ்மஸூத்ரமென்றும் மற்றொரு பெயருண்டு. "ஸூசநாத் ஸூத்ரமித்யாஹு:" என்று சொல்லப்பட்டபடியே ப்ரஹ்மத்தை ஸூசிப்பது (உணர்த்துவது) ப்ரஹ்மஸூத்ரமாகும். இது எப்படி ப்ரஹ்மத்தைக் காட்டுகிறது? எனில்: ப்ரஹ்மஸூத்ரம் முப்புரியூட்டினதாகவும் ப்ரஹ்ம முடிச்சுடன் கூடினதாகவும் இருக்கிறது. இந்த மூன்று நூல்களும் சித், அசித், ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களும் ஒன்றாகச் சேர்ந்திருக்கின்றன என்பதைக் காட்டுகிறது. சாரீரகமீமாம்ஸாசாஸ்த்ரத்தின் தாத்பர்யம் முழுவதும் இதில் அடங்கியிருக்கின்றது. யஜ்ஞோபவீதத்தை தரித்து, ப்ரஹ்மோபதேசம் செய்யப் பெற்ற பின்பே ஸந்த்யாவந்தனத்தைச் செய்வதற்கு யோக்யதை உண்டாகிறது. ப்ரஹ்மசாரிக்கு ஒரு பூணூலும், க்3ருஹஸ்த2ர்களுக்கு இரண்டு பூணூலும், உத்தரீயார்த்தம் மூன்றாவது பூணூலும் தரிக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஊர்த்வகதிக்குக் கொண்டுபோதற்கு அறிகுறியாக யஜ்ஞோபவீதத்தின் ப்ரஹ்மமுடிச்சு மேல் நோக்கியும், அந்தர்யாமியான அச்யுதன் அமர்ந்திருக்கும் இருதய கமலத்திற்கு நேராகவும் இருக்கவேண்டும்.

நாபே4ரூர்த்4வமநாயுஷ்யமதோ4 நாபே4ஸ் தபோக்ஷய:।
தஸ்மாந்நாபி4ஸமம் குர்யாது3பவீதம் விசக்ஷண:॥

[யஜ்ஞோபவீதம் நாபிக்கு மேலிருந்ததாகில் ஆயுள் குறைவு; நாபிக்குக் கீழே தொங்கிற்றாகில் தபோநாசம் ஏற்படும்;

ஆகையால் அறிவாளியாயிருப்பவன் யஜ்ஞோபவீதத்தை நாபி வரையில் தொங்கும்படியாகச் செய்யக்கடவன்.] என்றும், "அதிக பருமனுடையதாயிருந்தால், கீர்த்தியை அபஹரிக்கிறது; மிகவும் மெல்லியதாயிருந்தால் தனத்தை அபஹரிக்கிறது." என்றும், யஜ்ஞோபவீதத்தின் அளவு சொல்லப்பட்டது. காத்யாயன ஸ்ம்ருதியிலும்(1-3)

**ப்ருஷ்ட2லம்ஶே ச நாப்4யாஞ்ச த்4ருதம் யத்3 விந்த3தே கடிம்।**
**தத்3 த4ார்யமுபவீதம் ஸ்யாந் நாதே4ா லம்ப3ம் ந சோச்ச்2ரிதம்॥**

[(பின்புறம்) முதுகெலும்பிலும், (முன்புறம்) நாபிவரையிலும் பொருந்தும்படியாகவும், இடுப்பை அடைவதாகவும் உபவீதம் தரிக்கப்படவேண்டும்; இதைக்காட்டிலும் கீழே தொங்கவும் கூடாது; மேலே இருக்கவும் கூடாது.] என்று சொல்லப்பட்டது.

**"அஷ்டவர்ஷம் ப்3ராஹ்மணமுபநயேத்। க3ர்ப்ப4ாஷ்டமே வா॥**
**ஏகாத3ஶவர்ஷம் ராஜந்யம்। த்3வாத3ஶவர்ஷம் வைஶ்யம்॥"**

[கர்ப்பம் தரித்த பிறகாவது, பிறந்த பின்பாவது, எட்டு வயதான ப்ராஹ்மணனுக்கும், பதினொன்று வயதான க்ஷத்ரியனுக்கும், பன்னிரண்டு வயதான வைஶ்யனுக்கும் உபநயனம் செய்யவேண்டியது.] என்று உபநயன காலம் விளக்கப்பட்டது. பதினாறு வயதிற்குள் உபநயனம் செய்யப்படாதவன் வ்ராத்யனாகிறான், மாசி மாதத்திலிருந்து ஆனி மாதம் வரையில் உபநயனத்துக்குத் தகுந்த காலமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உபநயனகாலத்தில் அந்தந்த ஶாக2ாதி4பதிகள் அஸ்தமனமாயிருக்கக்கூடாது. யஜுர்வேதத்திற்கு சுக்ரன் சாகாதிபதி; ருக்வேதத்திற்கு குரு சாகாதிபதி; ப்ராஹ்மணர்களுக்கு தேவகுரு, அஸுரகுருவாகிய குரு சுக்ரர்கள் பலமாயிருக்கவேண்டும். க்ஷத்ரியர்களுக்கு ஸேநாதிபதியான செவ்வாயும், வைச்யர்களுக்கு தாந்யவ்ருத்தி செய்யும் அம்ருதகிரணனான சந்த்ரனும் சாகாதிபதிகள். திதி வார நக்ஷத்ரம் முதலியவையெல்லாம் பஞ்சாங்கத்தைப் பார்த்து நிர்ணயித்துக்கொள்ளவேண்டும்.



பிதா, பிதாமஹன், மூத்த சகோதரன், ஆசாரியன் ஆகிய இவர்கள் க்ரமமாக உபநயனம் செய்ய அதிகாரிகள். உபநயனமானவன் மறு பிறவி பிறந்தவனாகக் கருதப்படுகிறான். 'த்3விஜ:', என்னும் பெயரே இருபிறப்பாளன் என்னும் பொருளையுடையது. இந்த இரண்டாவது பிறப்பிற்குப் பிதா ஆசார்யன்; மாதா ஸாவித்ரீ.

**"த்3வயமிஹ வை புருஷஸ்ய ரேதோ ப்3ராஹ்மணஸ்ய ஊர்த்4வம் நாபே4ர்வாசீநம் மந்யத। தத்3 யதூ3ர்த்4வம் நாபே4ஸ் தேநாஸ்ய ஔரஸீ ப்ரஜா ஜாயதே யது3பநயதி யத் ஸாது4 கரோதி। அத2 யத3ர்வாசீநம் நாபே4ஸ் தேநாஸ்யௌரஸீ ப்ரஜா ஜாயதே। ஜநந்யாம் ஜநயதி। தஸ்மாத் ஶ்ரோத்ரியம் அநூசாநம் அபுத்ரோऽஸீதி ந வத3ந்தி॥"**

[வேதவித்தான புருஷனுக்கு, நாபிக்கு மேற்பட்டதும், கீழ்ப்பட்டதுமான இருவகை வீர்யங்களிருக்கின்றன; ஒருவனுக்கு உபநயனம் செய்து அவனைப் பரிசுத்தமானவனாகச் செய்யும்போது, இந்த ப்ராஹ்மணனுடைய நாபிக்கு மேற்பட்ட வீர்யத்திலிருந்து ஞானபுத்திரன் பிறக்கிறான். நாபிக்குக் கீழ்ப்பட்ட வீர்யத்தினால் தாயாரிடத்தில் இவனுக்கு ஔரஸபுத்திரன் பிறக்கிறான். ஆகையால், வேத வேதாங்கங்களை அறிந்து, அத்யயனம் செய்விப்பவனை 'நீ பிள்ளையற்றவன்' என்று பெரியோர்கள் சொல்ல மாட்டார்கள்.] என்று வஸிஷ்டஸம்ஹிதையில் இரண்டாவது அத்தியாயம் ஆரம்பத்தில் சொல்லப்பட்டது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இனி ஸந்தியாவந்தனம் என்னும் சப்தத்தின் அர்த்தம் விசாரிக்கப்படுகிறது. ஸந்த்4யை என்பது ஒரு தேவதையின் பெயர்; அதற்கு வந்தனமே ஸந்த்யாவந்தனம் என்று மேலெழுந்தவாரியான பொருள் தோன்றும். ஸூர்யனுடைய உதயாஸ்தமன வேளைகளில் ஸந்த்யாகாலம் ஏற்பட்டிருப்பதால் ஸூர்யனைக் குறித்து நமஸ்காரமே ஸந்த்யா வந்தனம் என்று சிலர் பொருள் கொள்ளுகிறார்கள்.

"பீ$_4$ஷாऽஸ்மாத்$_3$ வாத: பவதே பீ$_4$ஷோதே$_3$தி ஸூர்ய:"

*[இப்பரமபுருஷனிடம் பயத்தினால் காற்று வீசுகிறது; ஸூர்யனும் இவனிடம் பயத்தினால் உதிக்கிறான்.]* என்று வேதத்தில் சொல்லப்பட்டது. புருஷோத்தமனுடைய ஆஜ்ஞாசக்ரத்திற்கு பயந்து, தினம் தவறாமல், அலுப்பில்லாமல், சலிப்பில்லாமல் ஸூர்யன் உதிப்பதாகவும், அஸ்தமிப்பதாகவும் உபனிஷத்துகள் உத்கோஷிக்கிறபடியால், மறந்தும் புறந்தொழாமாந்தர்களாகிய முமுக்ஷுக்களாலும் அவசியமனுஷ்டிக்கப்படவேண்டிய கர்மமாகிய ஸந்த்யாவந்தனம் ஸூர்யனைக் குறித்த உபாஸனமாக இருக்க முடியாது. ஸந்த்யாகாலமும், காலத்துக்கு அதிதேவதையும் காலாதீதனான கண்ணனுக்குக் கட்டுப்பட்டவையேயாகையால், மேற்சொன்ன ந்யாயம் இங்கும் பொருந்தும். ஸந்த்யாவந்தனத்தில் படிக்கப்படும் மந்திரங்கள் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனான உலகளந்த உத்தமனையே குறிக்கின்றன என்பதை ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களைக் கொண்டு பின்னால் விவரிப்போம். ஆழ்வாரும்

"நகரம் அருள் புரிந்து நான்முகற்குப் பூமேல்
பகர மறை பயந்த பண்பன்—பெயரினையே
புந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும்
அந்தியால் ஆம்பயனங்(கு) என்?"

என்று அருளிச்செய்தார். இவைகளிலிருந்து ஸந்த்யாகாலத்தில் பரமாத்மாவான நாராயணனை நமஸ்கரிப்பதே ஸந்த்யாவந்தனத்தின் ஸாரார்த்தமென்று விளங்குகிறது. ஸந்த்யோபாஸநம் என்னும் பதத்திற்கு மற்றொரு விதமாகவும் பொருள் கொள்ளலாம்: ஜீவனும், பரமாத்மாவும் சரீரசரீரியாகச் சேர்ந்திருப்பது ஸந்த்யை. இந்தச் சேர்க்கையை தியானம்செய்வது ஸந்த்யோபாஸனம் என்றும் சொல்லலாம்.

தியானயோகத்தில் அமர்ந்து நூற்றுக் கணக்கான வருஷங்கள் தவம் செய்த ரிஷிகள் அக்காலங்களில் பரம



புருஷனும், மற்றவையும் ஒன்றுசேர்ந்திருக்கையை தியானிப்பதாகிற ஸந்த்யோபாஸனத்தையே செய்து வந்தார்கள். நாம் செய்வதுபோல், ஜலபாகமும், ஜபபாகமும் கூடிய ஸந்த்யாவந்தனத்தை அக்காலங்களில் அவர்கள் செய்யவுமில்லை: செய்திருக்கவும் முடியாது.

"ஹ்ருதா$_3$காஶே சிதா$_3$தி$_3$த்யஸ் ஸதா$_3$ பா$_4$தி நிரந்தரம்।
நாஸ்தமேதி ந சோதே$_3$தி கத$_2$ம் ஸந்த்$_4$யாமுபாஸ்மஹே॥"

*[ஹ்ருதயாகாசத்தில், ஞானஸ்வரூபியான பகவானாகிய ஸூர்யன் இடைவிடாமல் எப்போதும் பிரகாசிக்கிறான்; அஸ்தமிப்பதுமில்லை; உதிப்பதுமில்லை; (அப்படியிருக்கும்போது) எப்படி ஸந்த்யையை உபாஸிப்போம்.]* என்ற ப்ரமாணவசனமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இதே ந்யாயத்தினாலேயே பகவத்கைங்கர்யம் செய்பவர்கள், ஸந்த்யாகாலம் நேர்ந்தாலும், அதை விடவேண்டுமேயொழிய பகவத் கைங்கர்யத்தை விடலாகாது என்று சொல்லப்பட்டது. இவர்கள் அநுஷ்டியாத ஸந்த்யாநுஷ்டானங்களை, எண்ணிறந்த வாலகில்யர்கள், இவர்களுக்கு பதிலாக அநுஷ்டிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

வேதாத்யயனம் செய்வதற்குச் சில திதிகள் விலக்காக இருக்கின்றன; வ்ருத்தி க்ஷயங்களினால் ஏற்படும் தீட்டு காலங்களில் வேதாத்யயனம் செய்யக்கூடாது. ஸந்த்யாவந்தனம், வேதமந்திரங்கள் நிரம்பியதாயிருந்தபோதிலும், அதை அநுஷ்டிப்பதற்கு முற்கூறிய விலக்குகள் கிடையாது. தினந்தோறும் அவசியம் அநுஷ்டிக்கவேண்டுமாகையால் அதற்கு நித்யகர்மம் எனப்பெயர்.

இந்த ஸந்த்யாவந்தனம் செய்வதினால் பலன் என்ன? செய்யாவிடில் தோஷம் (அகரணே ப்ரத்யவாயம்) என்ன? இதற்குத் தனித்து ஒரு பலனும் கிடையாது. மநுஸ்ம்ருதியில் இதனால் நீண்ட ஆயுளை முனிவர்கள் பெற்றார்கள்

என்று இதன் மஹிமை கூறப்பட்டிருக்கிறது. இதை அநுஷ்டிப்பவர்கள், நோயற்ற வாழ்வையும், குறைவற்ற செல்வத்தையும், ப்ரஹ்மதேஜஸ்ஸையும் அடைகிறார்களென்று அநேக ஸ்ம்ருதிகள் அறைகின்றன. 'பகவானுடைய ஆஜ்ஞையை அநுவர்த்தித்தோம்; கைங்கர்யத்தைச் செய்தோம்' என்னும் மநஸ்ஸந்துஷ்டியே பரமப்ரயோஜனம். பகவதாஜ்ஞையை மீறுவதும், கைங்கர்யஹாநியும் செய்யாவிடில் வரும் தோஷங்கள். "தேறு ஞானத்தர் வேத வேள்வியறாச் சிரீவர மங்கலநகர்" என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் வியாக்கியானத்தில் "இது அநுஷ்டிக்கிறதென்? என்னில்: ஈஶ்வராஜ்ஞாநுவர்த்தனம் பண்ணினுகிறுன்; இனித்தான் நிஷித்தாசரணம் ரஜஸ்தமஸ்ஸுக்களை வர்த்தி₄ப்பிக்குமாப்போலே, இதுவும் ஸத்வவ்ருத்தியையும் பண்ணிக்கொடுக்கக்கடவதாயிருக்குமிறே. இனித்தான் சேதநனுகையாலே ஒரு ப்ரவ்ருத்தி பண்ணியன்றி நில்லானே. "ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" என்று ஜ்ஞாநத்துக்கும் அடியாயிருக்குமிறே. ஆகையாலே அநுஷ்டேயமாகக் கடவது" என்று நம்பிள்ளை அருளியது இங்கு நினைக்கத்தக்கது.

இந்த ஸந்த்யாவந்தனத்திற்கு பாஷ்யம் செய்தவர்கள் இருவர். ச்ருதப்ரகாசிகாசாரியர் என்று கீர்த்திபெற்ற ஸுதர்சன பட்டரும், அஹோபிலமடம் இரண்டாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமந்நாராயணயதீந்த்ரரும் இதற்கு ஸம்ஸ்க்ருதத்தில் வியாக்யானம் செய்திருக்கிறார்கள். அவர்களுடைய வியாக்கியானங்களை அநுஸரித்து இங்கு தமிழில் வியாக்கியானம் செய்யப்படுகிறது.

அவதாரிகை முற்றிற்று.



# ஸந்த்யாவந்தந பாஷ்யம்

## பூர்வாந்ஹிகங்கள்

ஸந்த்யாவந்தனம் செய்வதற்குமுன் செய்யவேண்டிய காரியங்கள் பல உள. அவைகளைச் செய்யாமல் ஸந்த்யாவந்தனம் செய்யமுடியாதானபடியால் அவைகளை இங்கு விசாரிப்பது அவசியமாகிறது. ஆந்ஹிகமாவது:— 'அஹஸ்' எனப்படும் ஒருதினத்தில் செய்யவேண்டிய காரியங்கள். ஸாதாரணமாக 'அஹஸ்' என்பது பகல் காலத்தைப் பற்றியே பிரயோகப்படுத்தப்பட்டாலும், ஸூர்யோதயத்திலிருந்து மறுநாள் ஸூர்யோதயம் வரையிலுள்ள தினத்தையும் குறிக்கும்.

முதன்முதல் செய்யவேண்டிய கர்மம் தூக்கத்திலிருந்து எழுந்திருப்பது. இது ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் செய்யவேண்டிய காரியம். ப்ராஹ்ம முஹூர்த்தம் என்பது இரவின் நாலாவது யாமத்தினுடைய பிற்பாதி. அதாவது, ஸூர்யோதயத்திற்குமுன் ஒன்றரை மணி காலம். உஷ: காலம் என்பது ஸூர்யோதயத்திற்குமுன் 5 நாழிகை (2 மணி) காலம். இந்த விடியற்காலையில் எழுந்திருந்து ப₄ார்யையுடன்கூட விஷ்ணுவை தியானம் செய்து த₄ர்மார்த்த₂ங்களைச் சிந்திக்கவேண்டும் என்பது

"பத்ந்யா ஸஹ ஹரிம் த்₄யாத்வா த₄ர்மமார்த்த₂ம் ச சிந்தயேத்"

என்று ஒருஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது. ஸ்ம்ருதிரத்னத்தில்

"மஹாப₄ாரதமாக்₂யாநம் க்ஷிதிம் கா₃ம் ச ஸரஸ்வதீம் |
ப்₃ராஹ்மணாந் கேஶவஞ்சைவ ப்ராதருத்தா₂ய கீர்த்தயேத் ||

[மஹாபாரதத்தையும், பூமியையும், பசுவையும், ஸரஸ்வதீ தேவியையும், ப்ராஹ்மணர்களையும் விஷ்ணுவையும் விடியற்காலையில் எழுந்திருந்து கீர்த்தனம் செய்யவேண்டியது.] என்று உரைக்கப்பட்டது.

"உச்சை: ஸ்வரேண ய: ப்ராத: ஸ்தோதுமிச்சே2த்3நந்யதீ4: |
வாஸுதே3வாதி3தே3வாநாம் நாமஸங்கீர்த்தநம் சரேத் ||"

*[எவனொருவன் மற்றொன்றிலும் மனம் செலுத்தாமல் காலை வேளையில் உரத்த குரலில் பாட விரும்புகிறானோ, அவன் வாஸுதேவன் முதலிய தேவர்களுடைய திருநாம ஸங்கீர்த்தனத்தைச் செய்யக்கடவன்.] என்று ஶாண்டில்ய ஸ்ம்ருதியிலும் சொல்லப்பட்டது.*

"ப்ராதர் தே3வேதி க்ருஷ்ணேதி கோ3விந்தே3தி ச ஜல்பதாம் |
மத்4யாந்ஹே சாபராண்ஹே ச யோ஽வஸாத3:ஸ உச்யதாம் ||"

*["தேவனே! கிருஷ்ணா! கோவிந்தா!" என்று காலை வேளையிலும் மத்யாந்ஹத்திலும் பிற்பகலிலும் பிதற்றுமவர்களுக்கு என்ன துக்கம் ஏற்படும் என்று சொல்லுங்கள்.] என்று விஷ்ணு தர்மத்தில் உத்கோஷிக்கப்பட்டது.*

"ப்3ராஹ்மே முஹூர்த்த உத்த2ாய சிந்தயேத3ாத்மனோ ஹிதம் |
கு3ரும் விஷ்ணும் நமஸ்க்ருத்ய மாதாபித்ரோஸ் ததை2வ ச ||"

*[ப்ராஹ்ம முகூர்த்தத்தில் எழுந்திருந்து ப்ரதமாசார்யரான விஷ்ணுவையும், தாய் தந்தையரையும் நமஸ்கரித்துத் தனக்கு நன்மையை எண்ணக்கடவன்.] என்று சௌநகபகவான் அருளிச் செய்தார்.*

"வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ளவெழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்" —என்று

*ஆண்டாளும் இவ்விஷயத்தையே திருப்பாவையில் அருளிச் செய்தாளன்றோ. இவ்விடத்தில் வியாக்கியானம் செய்த பெரியவாச்சான் பிள்ளையும்*

"ஹரிர் ஹரதி பாபாநி து3ஷ்டசித்தைரபி ஸ்ம்ருத: |"

*[துஷ்டசித்தர்களால் நினைக்கப்பட்டபோதிலும் ஹரியானவன் பாபங்களைப் போக்கடிக்கிறான்.]என்ற ப்ரமாணத்தைக் காட்டியருளினர்.*



"ப்3ராஹ்மே முஹூர்த்தே தே3வாநாம் பித்ரூணும் ச ஸமாக3ம:
ஜாக3ரஸ்தத்ர கர்த்தவ்ய: பித்ருஸம்மாநநம் ஹி தத் ||"

*[ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் சேர்க்கை ஏற்படுகிறது. (ஆகையால்) அப்பொழுது விழித்துக்கொண்டிருக்கவேண்டும். அதுவே பித்ருக்களை கௌரவப்படுத்துவதாகும்.] என்றும்*

"ப்3ராஹ்மே முஹூர்த்தே ஸேவேதாம் ஶயநம் யத்ர த3ம்பதீ |
ஶ்மஶாநதுல்யம் தத்3 வேஶ்ம பித்ருபி4: பரிவர்ஜ்யதே ||"

*[ப்ராஹ்ம முஹூர்த்தத்தில், எந்த வீட்டில் தம்பதிகள் சயனத்திலிருக்கிறார்களோ, அந்த வீடு சுடுகாட்டிற்குச் சமானமானது. பித்ருகளால் விலக்கப்படுகிறது.] என்றும் ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் யாவரும் அவசியம் விழித்திருக்கவேண்டும் என்று ஏற்படுகிறது.*

"சத்வாரீமாநி கர்மாணி ஸந்த்4யாயாம் பரிவர்ஜயேத் |
ஆஹாரம் மைது2நம் நித்3ராம் ஸ்வாத்4யாயம் ச ததை2வ ச ||
ஆஹாராத் ஜாயதே வ்யாதி4: க3ர்ப்ப4வேத4ஶ்ச மைது2நாத் |
நித்3ராதோ ஜாயதே஽லக்ஷ்மீ: ஸ்வாத்4யாயாத3ாயுஷ: க்ஷயம் ||"

*[ஆஹாரம், மைதுநம், தூக்கம், படித்தல் என்னும் நான்கு கர்மங்களையும் ஸந்த்யாகாலத்தில் விடவேண்டும். ஆஹாரத்தினால் வியாதியும், மைதுனத்தினால் கர்ப்பநாசமும், நித்ரையினால் மூதேவியும், படித்தலால் ஆயுட்குறைவும் உண்டாகிறது.] என்று ப்ருஹந்மனுவால் சொல்லப்பட்டது.*

*இவைகளிலிருந்து நாம்ப்ராஹ்மமுஹூர்த்தத்தில் எழுந்திருந்து பரப்ரஹ்மமாகிய ஸ்ரீமந்நாராயணனை தியானிக்க வேண்டுமென்று தெளிவாகிறது. வைகறையில் துயிலெழுதல் தேஹாரோக்யத்திற்கும் நீண்ட ஆயுளை அடைவதற்கும் அநுகுணமானது என்பது எல்லாரும் அறிந்ததே. தீர்க்க*

தர்சிகளான நம் முன்னோர்கள் ஏற்படுத்திய நியமங்களும், ஆசார அநுஷ்டானங்களும் இஹபரஸாத4கங்கள் என்பதை ஆக்ஷேபமில்லாமல் ஒப்புக்கொள்ளலாம்.

அடுத்தபடியாகச் செய்யவேண்டியது 'ப3ஹிர்விஹார:' என்று சொல்லப்பட்ட வெளி ஸஞ்சாரம். தேஹசுத்தியின் பொருட்டு வீட்டுக்குத் தென் திசையில் ஒரு அம்புபோய் விழும்தூரத்திற்கப்பால் மலஜலவிஸர்ஜநம் செய்யவேண்டும். இதைப்பற்றியும் ஸ்ம்ருதிகளில் அநேக விதிகள் சொல்லப் பட்டிருக்கின்றன. பூணூலை மாலையாக வலது செவியில் தரித்து, மௌனமாக சுத்தமான இடத்தில் விஸர்ஜனம் செய்யவேண்டும். வலது செவியில் பூணூலை தரிப்பது, பூணூல் கீழே தொங்கி அசுத்தப்படாமலிருப்பதற்காகவும், சுத்தமாயிருப்பதற்காகவுமாகும். விஸர்ஜனம் செய்தபிறகு, ஜலம், மண் இவைகளால் ஶௌசம் (சுத்தி) செய்துகொள்ள வேண்டும்.

அடுத்தபடியாகச் செய்யவேண்டியது 'க3ண்டூ3ஷம்' எனப்படும் வாய் கொப்பளித்தல்; ப்ராஹ்மணனுடைய வலது புறத்தில் எப்போதும் தேவதைகள் வஸிக்கிறபடியால், எப்போதும் இடதுபுறத்திலேயே கொப்பளிக்கவேண்டும் என்று சாஸ்திரம் விதிக்கிறது.

அடுத்தபடியாகச் செய்யவேண்டியது 'த3ந்ததா4வநம்' எனப்படும் பல்துலக்கல்.

**''ஆயுர் ப3லம் யஶோ வர்ச்ச: ப்ரஜா பஶூவஸூநி ச।**
**ப்3ரஹ்மப்ரஜ்ஞாம் ச மேதா4ம் ச த்வம் நோ தே3ஹி**
**வநஸ்பதே ॥''**

[ஓ வ்ருக்ஷராஜனே! ஆயுள், பலம், கீர்த்தி, காந்தி, ஸந்ததி, பசுக்கள், தனங்கள், ப்ரஹ்மஜ்ஞானம், மறதியில்லாமை ஆகிய இவைகளை எங்களுக்குக் கொடுப்பாயாக.] என்னும் இந்த மந்திரத்தைச் சொல்லி மரத்தைத் தொட்டு



அதிலிருந்து குச்சியை க்ரஹிக்கவேண்டும். ஆலமரம், வேல மரம் முதலிய துவர்ப்பு, புளிப்பு வாஸனை, பாலுள்ளவை களான மரங்களின் குச்சியை உபயோகப்படுத்தவேண்டும் என்று மார்க்கண்டேயர் விதித்தார்.

அடுத்தபடியாகச் செய்யவேண்டியது ஸ்நானம். ஒரு நாளில் காலை, மத்யாந்ஹம், மாலை ஆகிய மூன்று காலங்களி லும் ஸந்த்யாவந்தனத்திற்கு முன் ஸ்நானம் செய்யவேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளில் ப்ராத: ஸ்நாநம் மிகவும் முக்கியமானது.

**க்ஷுப்4யந்தி ஹி ஸுஷுப்தஸ்ய இந்த்3ரியாணி ஸ்ரவந்தி ச।**
**அங்கா3நி ஸமதாம் யாந்தி ஹ்யுத்தமாந்யத4மைஸ் ஸஹ ॥**
**அத்யந்தமலிந: காய: நவச்சி2த்3ரஸமந்வித:।**
**ஸ்ரவத்யேவ தி3வாராத்ரம் ப்ராத:ஸ்நாநம் விஶோத4நம் ॥**
**ப்ராத:ஸ்நாநம் ப்ரஶம்ஸந்தி த்3ருஷ்டாத்3ருஷ்டகரம் ஹி தத்।**
**அஸ்நாத்வா நாசரேத் கர்ம ஜபஹோமாதி3 கிஞ்சந ॥**
**ஸர்வமர்ஹதி ஶுத்3த4ாத்மா ப்ராத:ஸ்நாயீ ஜபாதி3கம்।**
**ப்ராதருத்தா2ய யோ விப்ர: ஸந்த்4யாஸ்நாநம் ஸமாசரேத் ॥**
**ஸப்தஜந்மக்ருதம் பாபம் த்ரிபி4ர் வர்ஷைர் வ்யபோஹதி ॥**
**கு3ணா த3ஶ ஸ்நாநபரஸ்ய ஸாத்4யா:**
**ரூபம் ச தேஜஶ்ச ப3லம் ச ஶௌசம்।**
**ஆயுஷ்யமாரோக்3யமலோலுபத்வம்**
**து3:ஸ்வப்நநாஶஶ்ச த்4ருதிஶ்ச மேதா4 ॥**

[மனிதன் தூங்கும்போது அவனுடைய இந்திரியங்கள் கலக்கத்தை அடைகின்றன; தாழ்ந்த இந்திரியங்களும், உயர்ந்த இந்திரியங்களும் ஒரே நிலைமையை அடைகின்றன; ஒன்பது துவாரங்களுடைய உடம்பு மிகவும் அசுத்தியை அடைகின்றது. பகலிலும் இரவிலும் மிகவும் தளர்ச்சியை உடைத்தாகின்றது. காலையில் குளித்தல் மிகவும் பரிசுத்தி யைத் தருவது. காலையில் குளித்தலைப் பெரியோர்கள் மிகவும் புகழ்கிறார்கள். இஹபரஸுகங்களை அது ஸாதித்துத் தருகின்றதல்லவா. ஜபம், ஹோமம் முதலிய எதையும்

ஸ்நானம் செய்யாமல் அநுஷ்டிக்கக்கூடாது. சுத்தமான தேஹத்தை உடையவனாயிருப்பதினால், காலையில் குளிப்பவன் ஜபம் முதலிய எல்லாவற்றையும் செய்யத்தகுந்தவன். எந்த ப்ராஹ்மணன் காலையில் எழுந்து 'தினந்தோறும் ப்ராத:ஸ்நானத்தைச் செய்கிறானோ, அவன் ஏழு ஜன்மங்களில் செய்த பாவத்தை மூன்று வருஷத்தில் போக்கடிக்கிறான். 'ரூபம், காந்தி, பலம், சுத்தி, நீண்டஆயுள், ஆரோக்கியம், க்ஷுத்ரவிஷயங்களில் ஆசையின்மை, து:ஸ்வப்நநாசம், தைரியம், அறிவு, என்னும் பத்து குணங்களும் ஸ்நானம் செய்பவனுக்கு எளிதில் கிட்டும்.] என்று தக்ஷஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது.

ஸ்நானம் பலவிதமாகச் சொல்லப்படுகிறது. அவைகளில் முக்கியமானது வாருணஸ்நானம். ஜலத்தில் தலை முழுகும் படி அமிழ்ந்து தீர்த்தமாடுவது வாருணஸ்நானம் எனப்படு கிறது. **'ம்ருத்திகே ஹந மே பாபம்'** [பூமியே! என்னுடைய பாபத்தைப் போக்கடிப்பாயாக] என்று ஆரம்பிக்கும் மந்திரங்களைச் சொல்லி சரீரம் முழுவதும் சுத்தமான மண்ணைப் பூசிக்கொள்வது பார்த்திவ (ப்ருதிவீ ஸம்பந்த மான) ஸ்நானம் எனப்படுகிறது. அக்நிஹோத்ரச் சாம்பலை உடம்பில் பூசிக்கொள்வது ஆக்நேயஸ்நானம் என்று உரைக்கப்படுகிறது. பசுக்களின் குளம்புத்தூள்களை கோஸாவித்ரீ மந்திரத்தால் உடம்பில் படியவைத்துக் கொள்வது வாயவீயஸ்நாநம் எனப்படும். வெயிலுடன் கூடி மழை பெய்யும்போது அதில் நனைவது தி3வ்யஸ்நானம் அல்லது ஆகாசஸ்நாநம் என்று சொல்லப்படுகிறது. இப்படி பஞ்சபூ4தஸ்நானங்களைத் தவிர **''ஆபோஹிஷ்டா2''** என்னும் மந்திரத்தின் ஒவ்வொரு பாதத்தையும் உச்சரித்துக்கொண்டு முறையே தலை, மார்பு, கால் ஆகிய அங்கங்களில் ப்ரோக்ஷித் துக்கொள்வது மந்த்ரஸ்நானம் எனப்படுகிறது. ஸூர்ய மண்டல மத்யத்தில் தங்கவர்ணத் திருமேனியுடையவனாய், ஶங்க2சக்ரத4ரனாய், கேயூரமகரகுண்டலங்களை தரித்தவனாய்



எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடித் தாமரையிலிருந்து ப்ரவஹிக்கும் கங்கை ப்ரஹ்மரந்த்4ரத்தின் வழியாக தேகத்தினுள் புகுந்து ஸகல மலங்களையும் போக்கடிப்பதாக மனஸ்ஸினாலே தியானம் செய்வதே மாநஸ ஸ்நானமாகும். இரண்டு கால், இரண்டு கை, முகம் ஆகிய ஐந்து அங்கங்களையும் ஜலத்தினால் அலம்புவது பஞ்சாங்க3 ஸ்நானமாகும். ஈர வஸ்த்ரத்தினால் உடம்பு முழுவதும் துடைத்துக் கொள்வது காபில ஸ்நானம் எனப்படும். ஊர்த்4வபுண்ட்ரத்தை தரித்து ஓங்காரத்தை ஜபிப்பது ஒரு விதமான ஸ்நானம். ஸ்நானம் செய்யும்போது ஸ்ரீமந்நாரா யணனையே ஸ்மரிக்கவேண்டும்.

**''ஆபோ நாரா இதி ப்ரோக்தாஸ் தா யத3ஸ்யாயநம் புந: ।**
**தஸ்மாந் நாராயணம் தே3வம் ஸ்நாநகாலே ஸ்மரேத்3 பு3த4: ॥''**

[நரனாகிய பகவானுக்கு இருப்பிடமாயிருத்தலால் ஜலம் 'நாரம்' எனப்படுகிறது. ஆகையால் ஞானியானவன் நாரா யணனாகிற தேவனை ஸ்நானகாலத்தில் நினைக்கக்கடவன்.] என்று வியாஸர் விதித்தார்.

**''த்4யாயேந்நாராயணம் தே3வம் ஸ்நாநாதி3ஷு ச கர்மஸு ।**
**ப்ராயஶ்சித்தேஷு ஸர்வேஷு முச்யதே து3ஷ்க்ருதாத் புமாந் ॥''**

[ஸ்நானம் முதலிய கர்மங்களின்போதும், எவ்விதமான ப்ராயஶ்சித்தங்கள் செய்யும்போதும் ஸ்ரீமந்நாராயணனை தியானம் செய்யும் மனிதன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறான்.] என்று சௌனகர் ஸ்தாபித்தார்.

**''த்4யாயேந் நாராயணம் தே3வம் ஸ்நாநாதி3ஷு ச கர்மஸு ।**
**ப்3ரஹ்மலோகமவாப்நோதி ந சேஹ ஜாயதே புந: ॥''**

[ஸ்நானம் முதலிய கர்மங்களின்போது ஸ்ரீமந்நாராயணனை தியானம் செய்யவேண்டியது. அப்படிச் செய்பவன் ப்ரஹ்ம லோகத்தை அடைகிறான். இங்கு மறுபடியும் பிறப்பதில்லை.] என்று தக்ஷர் தெரிவித்தார்.

**"ஸோऽந்தர்ஜலமாவிஶ்ய வாக்3யதோ நியமேந ஹரி।**
**ஹரிம் ஸம்ஸ்ம்ருத்ய மநஸா மஜ்ஜயேச் சோரவஜ்ஜலே॥"**

*[அவன், ஜலத்தில் முழுகி, வாக்கை அடக்கினவனுய், ஹரியை நினைத்துக்கொண்டு, திருடன்போல் ஜலத்தில் மறைந்திருக்க வேண்டும்.] என்று ஹாரீதர் விதித்தார்.*

**"ஸங்கல்ப: ஸூக்தபட2நம் மார்ஜநம் சாக4மர்ஷணம்।**
**தே3வதாதர்ப்பணம் சைவ ஸ்நாநம் பஞ்சாங்க3முச்யதே॥"**

*[ஸங்கல்பம், புருஷஸூக்தாதிகளைப் படிப்பது, உடம்பு தேய்த்துக்கொள்ளுதல், அக4மர்ஷணஸூக்தஜபம், தேவதைகளுக்குத்தர்ப்பணம் செய்தல் என்ற ஐந்து அங்கங்களை உடையதாக ஸ்நானம் சொல்லப்படுகிறது.]என்று ஸ்நானத்திற்கு ஐந்து அங்கங்கள் ஸ்ம்ருதியில் விதிக்கப்பட்டன.*

*அடுத்தபடியாகச் செய்யவேண்டியது வஸ்த்ரத4ாரணம். காஷாயவஸ்த்ரம், கறுப்புவஸ்த்ரம், அழுக்குத்துணி, தலைப்பில்லாத துணி, இரண்டு வஸ்த்ரங்களைச் சேர்த்துத் தைக்கப்பட்டது, சிவப்பு, மஞ்சள், புகை நிறமுள்ள வஸ்த்ரங்கள் முதலியவை கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறது.*

**"ஸப்தவாதாஹதம் வஸ்த்ரம் ஶுஷ்கவத் ப்ரதிபாதி3தம்।**
**ஆர்த்3ரம் வாऽபி த்3விஜாதீநாம் ஆத்3ருதம் கௌ3தமாதி3பி4:॥**
**ஜப்யே ஹோமே தத2ா ஸ்நாநே தை3வே பித்ர்யே ச கர்மணி।**
**ப3த்4நீயாந் நாஸுரீம் கக்ஷ்யாம் ஶேஷகாலே யதே2ச்ச2யா॥"**

*[ஏழுதடவை காற்றில் உதறப்பட்டதாகில், அந்த வஸ்த்ரம் ஈரமேயாயினும் உலர்ந்ததுபோலவே கௌதமாதி மஹர்ஷிகளால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஜபம், ஹோமம், ஸ்நானம், தேவபித்ருகார்யங்கள் ஆகிய இவைகளில் ஆஸுரமான (அஸுரஸம்பந்தியான) கச்சங்களை தரிக்கக்கூடாது. மற்ற காலங்களில் இஷ்டப்படி வஸ்த்ரத்தை தரித்துக் கொள்ளலாம்.] என்று ஸ்ம்ருதி ரத்நாவளியில் சொல்லப்பட்டது. ப்ரஹ்மசாரிகள் கீழ்வஸ்த்ரம் ஒன்றை மட்டும்*



*கச்சமில்லாமல் தரிக்கவேண்டும். க்ருஹஸ்தர்கள் இடுப்பில் ஒரு வஸ்த்ரமும், மேல் ஒரு உத்தரீயமும் தரிக்கவேண்டும். உத்தரீயமில்லாவிடில் மூன்ருவது பூணூல் தரித்தால் உத்தரீயத்திற்கு பதிலாக ஆகிறது. வானப்ரஸ்தர்களும் க்ருஹஸ்தர்கள் போலவே வஸ்த்ரத்தை தரிக்கவேண்டும். ஸந்யாஸிகள் காஷாய வஸ்த்ரத்தை ப்ரஹ்மசாரிகளைப் போலவே தரிக்கவேண்டும். வஸ்த்ரம் தரிக்கும் விதங்களைப் பற்றி ஸ்ம்ருதிகளில் விரிவாக வர்ணிக்கப்படவில்லை.*

*அடுத்தபடியாகச் செய்யவேண்டியது ஊர்த்4வபுண்ட்3ர த4ாரணம். இதை தரிக்காமல் செய்யும் நித்யநைமித்திக கர்மங்களும், தேவபித்ரு கார்யங்களும், திருவாராத4னமும் நிஷ்ப2லமாகும். இதர மதஸ்தர்கள் அவரவர் மதத்திற்கு அநுகுணமான புண்ட்ரங்களை தரித்துக் கர்மங்களைச் செய்யவேண்டும்.*

*இனி ஸந்த்யாவந்தநத்தின் ஆரம்பத்திலும், இடையில் பலவிடங்களிலும், மற்ற பல கர்மங்களிலும் செய்ய வேண்டியதான ஆசமநம் விவரிக்கப்படுகிறது. ஸந்த்4யா வந்தனம் ஜலபாகமென்றும், ஜபபாகமென்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதில் ஜலபாகத்தின் முதலில் செய்யப்படுவது ஆசமனம். ஆசமனத்தை அநுஷ்டிக்க வேண்டிய முறை பின் வருமாறு: வலது கையை கோகர்ணம் (பசுவின் காது) போல் மடித்துக்கொண்டு உள்ளங்கையிலிருக்கும் மாஷமென்னும் ஒரு ரேகை முழுகுவதற்கு மட்டும் வேண்டிய ஜலத்தை எடுத்துக்கொண்டு '**அச்யுதாய நம:**' என்னும் மந்திரத்தை உச்சரித்துத் தீர்த்தத்தை உட்கொண்டு, தீர்த்தம் மார்புத் தலத்தைத் அடைந்த பிறகு, மறுபடியும் அம்மாதிரியே தீர்த்தத்தை எடுத்து '**அநந்தாய நம:**' என்று சொல்லி உட்கொண்டு, மறுபடியும் அம்மாதிரியே ஜலத்தை எடுத்து '**கோ3விந்த3ாய நம:**' என்று உட்கொள்ளவேண்டும். பிறகு இரண்டு தடவை உதடுகளைத் துடைக்கவேண்டியது.*

''அங்கு3ஷ்ட2மூலேந ததோ முக2ம் வை ஸமுபஸ்ப்ருஶேத் ।
அங்கு3ஷ்ட3ாநாமிகாப்4யாம் து ஸ்ப்ருஶேந்நேத்ரத்3வயம் தத:॥
தர்ஜந்யங்கு3ஷ்ட2யோகே3ந ஸ்ப்ருஶேந்நாஸாபுடத்3வயம் ।
கநிஷ்ட2ாங்கு3ஷ்ட2யோகே3ந ஶ்ரவணே ஸமுபஸ்ப்ருஶேத் ॥
ஸர்வாஸாமேவ யோகே3ந ஹ்ருத3யந்து தலேந வா ।
ஸம்ஸ்ப்ருஶேத்3 வை ஶிரஸ்தத்3வத் அங்கு3ஷ்டே2நாத2வா
த்3வயம் ॥''

[அதன் பிறகு அங்குஷ்டமூலத்தினுல் முகத்தையும், கட்டைவிரல், பவித்ரவிரல் இவைகளைக் கூட்டி இருகண்களையும், ஆள்காட்டிவிரல், கட்டைவிரல் இவைகளைக் கூட்டி மூக்கின் இரு பக்கங்களையும், சிறு விரல், கட்டைவிரல் இவைகளைக் கூட்டி இரு காதுகளையும், எல்லா விரல்களையும் சேர்த்தாவது அல்லது உள்ளங்கையாலாவது ஹ்ருதயத்தையும், அம்மாதிரியேயாவது, கட்டை விரலாலாவது தலையையும் தொடவேண்டியது.] என்று வ்யாஸஸ்ம்ருதியில் ஆசமந ப்ரகாரம் சொல்லப்பட்டது. 'கேசவாய நம:' என்று உச்சரித்துக்கொண்டு வலது கன்னத்தையும், 'நாராயணுய நம:' என்று இடது கன்னத்தையும், வலதுகைப் பெருவிரலாலும், 'மாத4வாய நம:' என்று வலது கண்ணையும் 'கோ3விந்த3ாய நம:' என்று இடது கண்ணையும் வலது கை பவித்ர விரலாலும், 'விஷ்ணவே நம:' என்று வலது மூக்கையும், 'மது4ஸூத3நாய நம:' என்று இடது மூக்கையும் வலதுகை ஆள்காட்டிவிரலாலும், 'த்ரிவிக்ரமாய நம:' என்று வலது காதையும், 'வாமநாய நம:' என்று இடது காதையும் வலதுகை சிறுவிரலாலும், 'ஶ்ரீத4ராய நம:' என்று வலது தோளையும், 'ஹ்ருஷீகேஶாய நம:' என்று இடது தோளையும் வலது கை நடு விரலாலும், 'பத்3மநாப4ாய நம:' என்று ஐந்து விரல்களாலும் ஹ்ருதயத்தையும், 'தா3மோத3ராய நம:' என்று ஐந்து விரல்களாலும் தலையில் ப்ரஹ்மரந்த்4ரப்ரதே3சத்தையும் ஆசமநத்தின் போது ஸ்பர்ஶிப்பது அநாதி3 ஶிஷ்டாசாரஸித்3த4மாய் இருந்து வருகிறது.



''அங்கு3ஷ்டே2ந து தே3ஶிந்யா நாபி4ம் ச ஸமுபஸ்ப்ருஶேத்''

[வலது கை பெருவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்து நாபியைத் தொடவேண்டும்] என்று ஹாரீதர் விதித்ததிலிருந்து 'பத்3மநாப4ாய நம:' என்று நாபியையும் தொடலாம் என்று ஏற்படுகிறது. இம்மாதிரியே வைஷ்ணவஸ்மார்த்த விப4ாக3மற ப்3ராஹ்மண ஸமூஹத்தினர் முழுவதும் அச்யுத கேசவாதிநாமங்களை உச்சரித்துக்கொண்டே ஆசமநத்தை அநுஷ்டிக்கிறுர்கள். சிற்சிலர் சிவனுடைய நாமங்களை உச்சரித்துக்கொண்டு ஆசமநத்தைச் செய்வதாகத் தெரிகிறது. ஸ்ம்ருதிகளில் நாமோச்சாரணத்தைப் பற்றி விதிகள் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனுல், ''த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேத3ாஶ்ச'' [தர்மத்தை அறிந்தவர்களுடைய ஆசாரமே முக்ய ப்ரமாணம். வேதங்களும் ப்ரமாணமாகின்றன.] என்று தர்மஸூத்ரத்தில் சொல்லியபடியே மஹான்களுடைய அநுஷ்டானம் வேதத்தைக் காட்டிலும் ப்ரபல ப்ரமாணமாகையால் நமக்கு இவைகளெல்லாம் அவசியம் அநுஷ்டிக்கவேண்டியவையே. ஶ்ருதியும் ''த்ரிராசாமேத் । த்3வி: பரிம்ருஜ்ய । ஸக்ருது3பஸ்ப்ருஶ்ய'' [மூன்று தடவை தண்ணீரைப் பருகவேண்டும். இரண்டு தடவை (உதடுகளைத்) துடைக்கவேண்டும். ஒரு தடவை (அங்கங்களை) ஸ்பர்சிக்கவேண்டும்.] என்று ஆசமனத்தை விதித்தது.

''அங்கு3ஷ்டே2ாऽக்3நிரிதி க்2யாத: ப்ரோக்தா வாயு: ப்ரதே3ஶிநீ ।
அநாமிகா தத2ா ஸூர்ய: கநிஷ்ட2ா மக4வா ஸ்ம்ருதா ॥
ப்ரஜாபதிர் மத்4யமா து ஜ்ஞேயா ஶூத்3தி4மபீ4ப்ஸதா ॥''

[பெருவிரல் அக்நியை தேவதையாக உடையது; ஆள்காட்டி விரல் வாயுவை தேவதையாக உடையதாகச் சொல்லப்பட்டது. பவித்திரவிரல் ஸூர்யனை தேவதையாகவுடையது. சிறு விரல் இந்திரனை தேவதையாக'உடையது. நடுவிரல் பிரஜாபதியை தேவதையாக உடையது. இவைகளை சுத்தியை

விரும்புமவன் அறியவேண்டியது.] என்று ஹாரீதஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது. "முகா2தி3ந்த்3ரஸ்ச அக்3நிஸ்ச" என்கிறபடியே அக்னி முகத்திலிருந்து உண்டானவனுகையாலும், முகத்துக்கு அதி4தேவதையாகையாலும், அக்நியை தேவதையாகக் கொண்ட பெருவிரலால் முகத்தைத் தொடவேண்டும். "சக்ஷோஸ் ஸூர்யோ அஜாயத" என்கிறபடியே கண்ணிலிருந்து ஸூர்யன் பிறக்கையாலும், கண்ணுக்கு தேவதையாகையாலும், ஸூர்யனை தேவதையாகக்கொண்ட பவித்திரவிரலால் கண்ணைத்தொடுவது பொருத்தமுள்ளது. ஶ்வாஸத்திற்கு உபயோகப்படும் இந்திரியமான மூக்கை, ஶ்வாஸிக்கப்படும் வாயுவை தேவதையாகக்கொண்ட ஆள்காட்டிவிரலால் தொடுவது நியாயமே. அசனிக்கு (இடிக்கு) அதிபதியான இந்திரனை தேவதையாகக் கொண்ட சிறு விரலால் சப்தத்தை கிரஹிக்கும் இந்திரியமான காதை ஸ்பர்சிப்பதும் பொருத்தமுடையது. இப்படிப் பல அங்கங்களைத் தொடுவதால் அந்தந்த அங்கங்களுக்கு சுத்தி ஏற்படுகிறது என்றும் தெளிவாகிறது.

**"ய: க்ரியாம் குருதே மோஹாத் அநாசம்யைவ நாஸ்திக:।**
**ப4வந்தி ஹி வ்ருதா2 தஸ்ய க்ரியா: ஸர்வா ந ஸம்ஶய:॥"**

[நாஸ்திகனுன எவனொருவன், மயக்கத்தினுல் ஆசமனம் செய்யாமல் கருமங்களைச் செய்கிருனே, அவனுடைய கருமங்களெல்லாம் வீணுகின்றன. இதில் ஸந்தேஹமில்லை.] என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டதிலிருந்து ஆசமனம் செய்யவேண்டியதின் அவசியம் அறியப்படுகிறது.

**"பாதௌ3 ஹஸ்தௌ ச ப்ரக்ஷாள்ய, பாதௌ3 பூ4மௌ ப்ரதிஷ்டா2ப்ய ப3த்3த4கச்ச2ஶிக2: புண்ட3ரீகாக்ஷமிஷ்டதை3வதம் ஸ்ம்ருத்வாசாமேத்"**

[பாதங்களையும், கைகளையும் அலம்பி, பாதங்களை பூமியில் ஊன்றி, கக்சத்தையும், சிகையையும் முடிந்தவனுய், இஷ்ட



தெய்வமான புண்டரீகாக்ஷனை நினைத்து ஆசமனம் செய்யவேண்டும்.] என்று ஸ்ம்ருத்யர்த்த2ஸாரத்தில் சொல்லப்பட்டது.

**"அம்ஸௌ ஸ்ப்ருஷ்ட்வா கராக்3ரேண தோயம் ஸ்ப்ருஷ்ட்வா ஸமாஹித:।**
**ஸம்ஸ்ம்ருத்ய பத்3மநாப4ம் ச விப்ர: ஸம்யக்3 விஶுத்3த்4யதி॥"**

[கை நுனியால் தோள்களை ஸ்பர்சித்து, தண்ணீரையும் ஸ்பர்சித்து, பத்மநாபனை நினைப்பதினுல் ப்ராஹ்மணன் நன்கு பரிசுத்தமடைகிருன்.] என்று வ்யாக்ரபாதரால் சொல்லப்பட்டது. "**ஓங்காரேண ஸஹ யஜ்ஞபுருஷம் மநஸா ஸ்மரேத்**" [ஓங்காரத்தை உச்சரித்துக்கொண்டு யஜ்ஞபுருஷனை விஷ்ணுவை மனஸ்ஸினுல் நினைக்கவேண்டியது.] என்று நாராயணீயமென்னும் வியாக்கியானத்தில் சொல்லப்பட்டது. இவைகளிலிருந்து பகவத்ஸ்மரணமும், நாமோச்சாரணமும் ஆசமனத்தின் போது செய்யவேண்டுமென்பது ஸ்ம்ருதிகளிலிருந்தும் ஏற்படுகிறது.

**"த்ரி: ப்ராஶ்நீயாத3போ யத்து ப்ரீதாஸ்தேநாஹ தே3வதா:॥**
**ப்3ரஹ்மா விஷ்ணுஶ்ச ருத்3ரஶ்ச ப4வந்தீத்யநுஶுஶ்ரும:।**
**க3ங்கா3 ச யமுநா சைவ ப்ரீயேதே பரிமார்ஜநாத்।**
**ஸம்ஸ்ப்ருஷ்டயோர் லோசநயோ: ப்ரீயேதாம் ஶஶிப4ாஸ்கரௌ।**
**நாஸத்யஸம்ஜ்ஞௌ ப்ரீயேதே ஸ்ப்ருஷ்டே நாஸாபுட3வயே।**
**கர்ணயோ: ஸ்ப்ருஷ்டயோஸ் தத்3வத் ப்ரீயேதே சாநலாநிலௌ॥**
**ஸம்ஸ்ப்ருஷ்டே ஹ்ருத3யே சாஸ்ய ப்ரீயந்தே ஸர்வதே3வதா:।**
**மூர்த்4நி ஸம்ஸ்பர்ஶநாத்3 தே3வ: ப்ரீதஸ்து புருஷோ ப4வேத்॥**
**ய ஏவம் ப்3ராஹ்மணோ நித்யமுபஸ்பர்ஶநமாசரேத்।**
**ப்3ரஹ்மாதி3 ஸ்தம்ப3பர்யந்தம் ஜக3த் ஸ பரிதர்ப்பயேத்॥"**

[மூன்று தடவை தீர்த்தத்தை உட்கொண்டானுகில், அதனுல் எல்லா தேவர்களும், முக்கியமாக ப்ரஹ்மவிஷ்ணுருத்ரர்

களும் திருப்தியடைகிறார்கள் என்று மஹான்களிடமிருந்து கேள்விப்படுகிறோம். உதடுகளைத் துடைப்பதினால் கங்கையும், யமுனையும் ப்ரீதியடைகிறார்கள். இரு கண்களையும் ஸ்பர்சிப்பதால் சந்த்ரஸூர்யர்கள் ஸந்தோஷிக்கிறார்கள். இரு மூக்குப் பக்கங்களையும் தொடுவதால் அஶ்விநீதேவதைகள் ஆநந்தத்தை அடைகிறார்கள். இரு காதுகளையும் ஸ்பர்சிப்பதால் அக்நியும், வாயுவும் திருப்தியடைகின்றனர். இவனுடைய ஹ்ருதயம் தொடப்பட்டவுடன் எல்லா தேவதைகளும் ஸந்தோஷிக்கிறார்கள். தலையில் தொடுவதால் பரமபுருஷனான நாராயணன் ப்ரீதியடைகிறான். எந்தப்ராஹ்மணன் இம்மாதிரி தினந்தோறும் உபஸ்பர்ஶனத்தை அநுஷ்டிக்கிறானோ, அவன் பிரமன் முதலாகப் புல் வரையிலுள்ள எல்லா உலகையும் திருப்தி செய்விக்கிறான்.] என்று வ்யாஸஸ்ம்ருதியில் ஆசமனத்தின் பெருமை பேசப்பட்டது.

**"யத் ப்ரத$_2$மம் ஆசாமதி தேந ருக்$_3$வேத$_3$ம் ப்ரீணாதி யத்$_3$ த்$_3$விதீயம் தேந யஜுர்வேத$_3$ம் ப்ரீணாதி யத் த்ருதீயம் தேந ஸாமவேத$_3$ம்। யத் ப்ரத$_2$மம் பரிமார்ஷ்டி தேநாத$_2$ர்வவேத$_3$ம் யத்$_3$ த்$_3$விதீயம் தேந இதிஹாஸபுராணம்। யத் ஸவ்யம் பாணிம் ப்ரோக்ஷதி பாதௌ$_3$ ஶிரோ ஹ்ருத$_3$யம் நாஸிகே சக்ஷுஷீ ஶ்ரோத்ரே நாபி$_4$ம் சோபஸ்ப்ருஶேத் தேநௌஷதி$_4$ வநஸ்பதய: ஸர்வாஶ்ச தே$_3$வதா: ப்ரீணாத்யாப்நோதி। ஆசமநாதே$_3$வ ஸர்வஸ்மாத் பாபாத் ப்ரமுச்யதே"**

[முதல் தடவை ஆசமனம் செய்வதினால் ருக்வேதத்தை த்ருப்தி செய்விக்கிறான். இரண்டாவது ஆசமனத்தினால் யஜுர்வேதத்தையும், மூன்றாவது ஆசமனத்தினால் ஸாமவேதத்தையும் திருப்தி செய்விக்கிறான். முதல் தடவை துடைப்பதினால் அதர்வணவேதத்தையும், இரண்டாவது தடவை துடைப்பதால் இதிஹாஸ புராணங்களையும் த்ருப்தி செய்விக்கிறான். இடதுகை, இருபாதங்கள், தலை, ஹ்ருதயம், நாசிதுவாரங்கள், காதுகள், நாபி இவைகளை ஸ்பர்சிப்பதால் ஓஷதிகளையும், வனஸ்பதிகளையும், எல்லா தேவதைகளையும்



ப்ரீதியடைவிக்கிறான். அவர்களை அடைகிறான். ஆசமனத்தினால் எல்லாப்பாபங்களினின்றும் விடுபடுகிறான்.] என்று போதாயனரால் சொல்லப்பட்டது.

இனி அச்யுதன், அநந்தன் முதலிய திருநாமங்களின் சப்தத்தின் சீர்மையும், அர்த்தத்தின் பெருமையும் விவரிக்கப்படுகின்றன.

**"அச்யுதாநந்தகோ$_3$விந்த$_3$ நாமோச்சாரணபே$_4$ஷஜாத்।**
**நஶ்யந்தி ஸகலா ரோகா$_3$: ஸத்யம் ஸத்யம் வதா$_3$ம்யஹம்॥"**

[அச்சுதன், அநந்தன், கோவிந்தன் என்னும் திருநாமங்களை உச்சரிப்பதாகிற மருந்தினால், எல்லா வியாதிகளும் நாசமடைகின்றன. 'உண்மை உண்மை' என்று இருகால் ஸத்யம் செய்து சொல்லுகிறேன் நான்.] என்று அச்யுதன், அனந்தன், கோவிந்தன் என்னும் திருநாமங்களின் பெருமை விஷ்ணுதர்மத்தில் உத்கோஷிக்கப்பட்டது.

**"ஆர்த்தா விஷண்ணா: ஶிதி$_2$லாஶ்ச பீ$_4$தா:**
**கோ$_4$ரேஷு ச வ்யாதி$_4$ஷு வர்த்தமாநா:।**
**ஸங்கீர்த்ய நாராயணஶப்$_3$த$_3$மாத்ரம்**
**விமுக்தது$_3$:க்கா$_2$: ஸுகி$_2$நோ ப$_4$வந்தி॥"**

[ஆத்$_4$யாத்மிகம், ஆதி$_4$பௌ$_4$திகம், ஆதி$_4$தை$_3$விகம் என்னும் தாபங்களினால் தவிக்குமவர்களும், பயந்தவர்களும், கோரமான வியாதிகளினால் துன்பமடைபவர்களும் நாராயணன் என்னும் சப்தத்தை மட்டும் கீர்த்தனம் செய்வதாலேயே எல்லா துக்கங்களும் நீங்கப்பெற்று, மோக்ஷ ஸுகத்தையும் அடைகிறார்கள்.] என்று பாரதத்தில் பேசப்பட்டது.

**"நாராயணேதி ஶப்$_3$தோ$_3$ऽஸ்தி வாக$_3$ஸ்தி வஶவர்த்திநீ।**
**ததா$_2$பி நரகே கோ$_4$ரே பதந்தீதி கிமத்$_3$பு$_4$தம்॥"**

[நாராயணன் என்னும் சப்தமிருக்கிறது; வாயும் வசத்திலிருக்கிறது. அப்படியும் கோரமான நரகத்தில் பலர்

விழுகின்றனர் என்பது என்ன ஆச்சரியம்!] என்று புராணங்களில் பேசப்பட்டது. பொய்கையாழ்வாரும் இதையே

"நாவாயிலுண்டே நமோ நாரணவென்று
ஓவாதுரைக்கும் உரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும்திறம்." —என்று அருளிச்செய்தார்.

"அவஶேநாபி யந்நாம்நி கீர்த்திதே ஸர்வபாதகை: ।
புமாந் விமுச்யதே ஸத்$_3$ய: ஸிம்ஹத்ரஸ்தைர் ம்ருகை$_3$ரிவ ॥
யந்நாம கீர்த்தநம் ப$_4$க்த்யா விலாயநமநுத்தமம் ।
மைத்ரேயாஶேஷபாபாநாம் தா$_4$தூநாமிவ பாவக: ॥"
[வி. பு. (6-8)]

[அந்த பகவானுடைய திருநாமம் யத்$_3$ருச்சை$_2$யாகக் கீர்த்திக்கப்பட்டபோதிலும், ஒரு மனிதனுடைய பாபங்கள் ஸிம்ஹத்தினால் பயமுறுத்தப்பட்ட ம்ருகங்கள் விலகிப் போவதுபோல், விட்டோடிப்போகின்றன. மைத்ரேயரே! ஸுவர்ணம் முதலிய தாதுக்களுடைய அழுக்கை நெருப்பு போக்குவதுபோல், பக்தியுடன் அப்பெருமானுடைய திருநாமஸங்கீர்த்தனம் செய்தல் எல்லாப்பாபங்களையும் போக்கடிக்கும் ஒப்பற்ற ஸாதனமாகும்.] என்றும்.

"த்$_4$யாயாந் க்ருதே யஜந் யஜ்ஞை: த்ரேதாயாம்
த்$_3$வாபரேऽர்ச்சயந் ।
யதா$_3$ப்நோதி ததா$_3$ப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேஶவம் ॥"
[வி. பு. (6-2-17)]

[பகவானை தியானிப்பதால் க்ருதயுகத்திலும், யஜ்ஞங்களைக் கொண்டு ஆராதிப்பதால் த்ரேதாயுகத்திலும், அர்ச்சனை செய்வதால் த்வாபரயுகத்திலும் எதை அடைகிறானோ அதைக் கலியுகத்தில் கேசவனை ஸங்கீர்த்தனம் செய்வதாலேயே அடையலாம்.] என்றும்



"கிம் சித்ரம் தத$_3$க$_4$ம் ப்ரயாதி விலயம்
தத்ராச்யுதே கீர்த்திதே"

[அச்யுதனுடைய நாமம் கீர்த்திக்கப்பட்டவுடன் அவ்விடத்திலேயே பாபங்கள் நாசமடைகின்றன என்னுமிவ் விஷயத்தில் ஆச்சரியம் என்ன?] என்றும் விஷ்ணுபுராணத்தில் உரைக்கப்பட்டது.

"அஜ்ஞாநதோ ஜ்ஞாநதோ வா வாஸுதே$_3$வஸ்ய கீர்த்தநாத் ।
தத்ஸர்வம் விலயம் யாதி தோயஸ்த$_2$ம் லவணம் யதா$_2$ ॥"

[அறிந்தோ, அறியாமலோ வாஸுதேவனுடைய திருநாமத்தைச் சொன்னாலும் அவனுடைய பாபமெல்லாம் தண்ணீரினுள்ளிருக்கும் உப்பைப்போல் கரைந்து விடுகின்றன.] என்றும்.

"ஶமாயாலம் ஜலம் வந்ஹேஸ் தமஸோ பா$_4$ஸ்கரோத$_3$ய: ।
ஶாந்தி: கலேரகௌ$_4$க$_4$ஸ்ய நாமஸங்கீர்த்தநம் ஹரே: ॥"

[நெருப்பை அணைப்பதற்கு நீரும், இருட்டைப் போக்கடிக்க ஸூர்யோதயமும் போதுமானவை. (அது போலவே) கலிகோலாஹலத்தினாலுண்டாகும் பாபவெள்ளத்தைப் போக்கடிப்பது ஹரியின் நாமஸங்கீர்த்தனமே.] என்றும். "யந்நாம ஸங்கீர்த்தநதோ விமுச்யதே" [எவனுடைய திருநாமஸங்கீர்த்தனத்தினால் மோக்ஷமடைகிறானோ....] என்றும். "யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாப$_4$யாத்$_3$ விமோக்ஷமாப்நோதி ந ஸம்ஶயம் நர:" [எவனுடைய திருநாமஸங்கீர்த்தனத்தால் மனிதன் பேராபத்தினின்றும் ஸந்தேஹமில்லாமல் விடுதலையடைகிறானோ........] என்றும்.

"ஸக்ருது$_3$ச்சரிதம் யேந ஹரிரித்யக்ஷரத்$_3$வயம் ।
ப$_3$த்$_3$த$_4$ பரிகரஸ்தேந மோக்ஷாய க$_3$மநம் ப்ரதி ॥"

[ஹரி என்னுமிவ்விரண்டெழுத்தும் எவனால் ஒருதடவை உச்சரிக்கப்பட்டதோ, அவன் மோக்ஷத்துக்குப் போவதற்காகச் செய்யவேண்டியவைகளைச் செய்துவிட்டான்] என்றும்,

''யஸ்ய நாம்நி ஸ்ம்ருதே மர்த்யஸ் ஸமுத்க்ராந்தேரநந்தரம் !
ப்ராப்னோதி வைஷ்ணவம் ஸ்த$_2$ாநம் புநராவ்ருத்திவர்ஜிதம் ||''

*[எவனுடைய திருநாமத்தை நினைத்த மனிதன் இறந்த பின்பு, திரும்பிவருகையற்றதான விஷ்ணுவினுடைய பரம பதத்தை அடைகிறானோ........]* என்றும் விஷ்ணுதர்மத்தில் பலவிடங்களில் பேசப்பட்டதன்றோ. மற்றோரிடத்தில்

''ஸர்வாந் காமாந் ப்ராப்நுவந்தே விஶாலாந்
த்ரைலோக்யேऽஸ்மிந் க்ருஷ்ணநாமாபி$_4$த$_4$ாநாத் ''

*[இம்மூவுலகிலுமுள்ள மிகப்பெரிய இஷ்டவஸ்துக்களெல்லாவற்றையும் கிருஷ்ணனென்னும் திருநாமத்தைச் சொல்லுவதன் மூலமாகவே அடைகிறார்கள்]* என்று கோஷிக்கப்பட்டது. வேறோரிடத்தில்

''ஸங்கீர்த்தயேஜ்ஜக$_3$ந்நாத$_2$ம் வேத$_3$ம் வாऽபி ஸமீரயேத்''

*[ஜகந்நாதனான பெருமானை ஸங்கீர்த்தனம் செய்யக்கடவன்; அல்லது வேதத்தையாவது ஓதக்கடவன்.]* என்று நாராயண நாம ஸங்கீர்த்தனம் வேதாத்யனத்தைக்காட்டிலும் மேலானதென்று உணர்த்தப்பட்டது. இவையெல்லாவற்றிற்கும் மூலமான வேதத்திலும் ''த்$_4$ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ:'' *[இவனைக் கீர்த்திக்கும் ஜனங்கள் நிலையான மோக்ஷஸ்த$_2$ானத்தை அடைகிறார்கள்.]* என்று உத்கோஷிக்கப்பட்டது.

''கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்

என்று நம்மாழ்வார் அருளினார்.

''காவலிற் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து
நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின் நாமங்கற்ற
ஆவலிப்புடைமை கண்டாய அரங்கமாநகருளானே!''
என்றும்,



''பச்சைமாமலைபோல் மேனிப்பவளவாய்க் கமலச்செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே!''
—என்றும்,

''மொய்த்த வல் வினையுள் நின்று மூன்றெழுத்துடைய பேரால்
கத்திரபந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்''என்றும்,

''நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி''

என்றும் தொண்டரடிப்பொடியாழ்வார் திருநாமஸங்கீர்த்தனப்ரப$_4$ாவத்தைப் பலகால் அருளிச்செய்தருளினார். திருமங்கையாழ்வாரும் முதல் திருமொழியில் நாராயண நாமப்ரபாவத்தைப் பலபடியாகப் பேசியருளினார்.

'' இத்திருநாமந்தான் ப்ரயோஜநாந்தரபரர்க்கு ப்ரயோஜனத்தைக் கொடுக்கும்; உபாயாந்தரநிஷ்ட$_2$ர்க்குப் பாவநமாயிருக்கும்; ப்ரபந்நர்க்கு தே$_3$ஹயாத்ராஶேஷமாயிருக்கும்; முத்துப்படும் துறையில் முழுகுவார் முத்தைக் கொடுத்துப் பழங்கொள்ளுவர்கள்; செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று மாறுவர்களிறே. விலையறியும் செட்டிகள் பக்கல் புகுந்தவாறே பெருவிலையனாம். செருக்கரானார் இத்தைப்பூண்டு அநுபவிப்பார்கள்; அப்படியே ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உறுப்பாய், ஸாத$_4$நாந்தரநிஷ்ட$_2$ர்க்கும் உறுப்பாய்,ப்ரபந்நர்க்கு ஸ்வயம்ப்ரயோஜநமுமாயாய்த்து இத்திருநாமமிருப்பது'' என்றும், '' இப்படிச் சேதனன் தான் மூலையடியே திரிந்தாலும், அவன் தோஷங்களைப் போக்கி, மேல் சொல்லுகிற நன்மைகளைக் கொடுக்கும்படியாய்த்து திருநாமத்தினுடைய ப்ரபாவமிருப்பது'' என்றும், ''பக்தியினுடைய துஷ்கரதையோபாதி ப்ரபத்திநிஷ்டாஹேதுவான மஹாவிஶ்வாஸமும் சிலர்க்குக் கிட்டுகை

அரிதாகையாலே இதில் இழியக் கூசினவர்களுக்கு ஸர்வாதி4காரமான யாத்3ருச்சி2க பகவந்நாம ஸங்கீர்த்தனமே சேதநருடைய பாபத்தைப் போக்கி ஸுக்ருதானுகூலமாகக் கர்மயோகாதிகளிலே மூட்டுதல். ப்ரபத்தியிலே மூட்டுதல், விரோதியைப் போக்கி ப்ராப்யத்தைக் கொடுக்கைக்குத் தானே நிர்வாஹகமாதலாம்படியான வைபவத்தை உடைத்தாயத்து திருநாமத்தினுடைய வைபவமிருப்பது" என்றும் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தார். இவையெல்லாவற்றையும் வேதாந்தாசார்யரான பட்டரும் ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே பரபக்ஷப்ரதிக்ஷேப பூர்வகமாகப் பரக்க அருளிச்செய்தார். அபி4யுக்தாக்3ரேஸரரான பிள்ளைலோகாசார்யரும். "வாச்யப்ரபா4வம் போலன்று வாசகப்ரபா4வம். அவன் தூ3ரஸ்த2னானாலும் இது கிட்டி நின்று உதவும். த்3ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே. சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது. இதுதான் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும். ஐஶ்வர்யகைவல்யப4க3வல்லாப4ங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும். கர்மஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி. அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும். ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்" என்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்தார். இனி. அமுதிலும் இனியவையான அச்யுதாதி நாமங்களின் அரும்பொருள்கள் அறிவிக்கப்படுகின்றன.

**(அச்யுதன்) "யஸ்மாத் ப்ராப்தா ந ச்யவந்தே"** என்கிறபடியே அடியவர்களை நழுவவிடாதவன்; எல்லாரையும் எல்லா அவஸ்தைகளிலும் ரக்ஷிக்குமவன்.

**"யஸ்மாந்ந ச்யுதபூர்வோऽஹமச்யுதஸ்தேந கர்மணா"**



[அடியவர்களிடமிருந்து நழுவாமலிருக்கிறேனாகையால் நான் அச்சுதனெனப்படுகிறேன்.] என்று சாஸ்திரம் சொல்லிற்று. **(அச்யுதன்)** ப்ரளயகாலத்தில் இவர்கள் படும் நோவு பொறுக்கமாட்டாமல். தன் வயிற்றிலேவைத்து ரக்ஷிக்குமவன்; ஸ்ருஷ்டி காலத்தில் அசித்ஸமராய்க் கிடக்குமிவர்களைக் கண்டு இரங்கிக் கரணகளேபரங்களைக் (சரீரேந்திரியங்களைக்) கொடுக்குமவன். "ஆதுமில் காலத்தெந்தை **அச்சுதன்**" என்று இவ்வர்த்தத்தை ஆழ்வார் அருளிச்செய்தார். (அச்யுதன்) தமர்கள் நெருப்பிலே விழுந்தாலும். அவர்களைத் தீங்கு வாராதபடி காப்பாற்றுமவன். "அறியும் செந்தீயைத் தழுவி **அச்சுதன்** என்னும் மெய் வேவாள்" என்றார் ஆழ்வார். (அச்யுதன்) தன்னடியார்களை நமன்தமர் கையிலே காட்டிக் கொடாமல் காப்பாற்றுமவன்;

**"அயர வாங்கும் நமன் தமர்க்கு அருநஞ்சினை அச்சுதன் தன்னை"** என்றார் ஆழ்வார். (அச்யுதன்) சேதனர்களைத் தங்கள் கையில் காட்டிக்கொடாமல் ரக்ஷிப்பதற்காக அவர்களோடொருவனாகத் தோன்றுமவன். "தேவகி தன் வயிற்றில் அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய **அச்சுதன்**" என்று பெரியாழ்வாரும்,

**"அச்யுதபா4நுநா தே3வகீபூர்வஸந்த்4யாயாமாவிர்ப்பூ4தம்"**

[**அச்சுதனாகிற** ஸூர்யன் தேவகியாகிற ப்ராதஃஸந்த்4யா காலத்தில் தோன்றினான்.] என்று பராஶரமஹர்ஷியும் அருளிச்செய்தனர். (அச்யுதன்) தன்னிடம் அன்புள்ளவரைக் கைநழுவவிடாதவன். "அரிமுகன் **அச்சுதன்** கைமேல் என் கைவைத்து" என்று ஆண்டாள் அருளிச்செய்தாள். (அச்யுதன்)

**"ஶங்க2சக்ரக3தா3பாணே! த்3வாரகாநிலயாச்யுத!"**

[சங்கசக்ர கதைகளைக் கையில் கொண்டவனே! த்வாரகா வாஸியே! அடியாரை நழுவவிடாத அச்சுதனே!] என்றழைத்த த்ரௌபதிக்குத்துகிலளித்ததும் இத்திருநாமமேயன்றோ. (அச்யுதன்)

''மித்ரபா$_4$வேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத$_2$ஞ்சந''

[நண்பனென்ற வேஷத்துடன் என்னை அடைந்தவனையும் நான் ஒருபோதும் விடமாட்டேன்.] என்றும்,

''ஆநயைநம் ஹரிஸ்ரேஷ்ட$_2$ த$_3$த்தமஸ்யாப$_4$யம் மயா।
விபீ$_4$ஷணோ வ ஸுக்$_3$ரீவ யதி$_3$ வா ராவண: ஸ்வயம்॥''

[வாநரத்தலைவனான ஸுக்ரீவனே! இவன் விபீஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும் இவனுக்கு நான் அபயமளித்துவிட்டேன். நீ இவனை அழைத்துவா] என்றும்,

''ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$தா$_3$ம்யேதத்$_3$ வ்ரதம் மம॥''

[ஒருதடவை சரணமடைந்தவனுக்கும் 'உன்னடியேன் நான்' என்று யாசிப்பவனுக்கும் எல்லா பூதங்களினின்றும் அபயமளிக்கிறேன். இதுவே என்னுடைய விரதம்.] என்றும் அடைந்தவர்களை அளிப்பதையே விரதமாகக்கொண்ட சக்கரவர்த்தித்திருமகனாய் அவதரித்தவன். ''**அச்சுதன் தன்னைத் தயரதற்கு மகன் தன்னையன்றி** மற்றிலேன் தஞ்சமாகவே'' என்று சடகோபன் அருளினரல்லவா. (அச்யுதன்) ''அச்யுதபா$_4$நுநா ஆவிர்ப்பூ$_4$தம்'' ''தேவகி தன் வயிற்றில் தோன்றிய அச்சுதன்'' என்கிறபடியே சேதனர்களை நழுவ விடவொண்ணாமையாலே கிருஷ்ணனாய் அவதரித்து.

''ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:॥''

[எல்லா மோக்ஷஸாதனங்களையும் வாஸனையுடன் விட்டு என்னையே சரணமடை. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; வருந்தாதே.] என்று அருளிச்செய்தவன். (அச்யுதன்) ஸ்வாஶ்ரிதர்களை அஜ்ஞாந அந்யதா$_2$ஜ்ஞாந விபரீத ஜ்ஞாநங்களின் கையில் காட்டிக் கொடாமல் காப்பாற்றுமவன்.



''நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்$_3$தா$_4$ த்வத்ப்ரஸாதா$_3$ந் மயாऽச்யுத''

[அச்சுதனே! (விபரீதஜ்ஞானமாகிய) மோஹம் நசித்தது; உன்னருளால் உண்மை அறிவு என்னால் அடையப்பட்டது] என்பதல்லவோ அர்ஜுனன் வார்த்தை. (அச்யுதன்) இவ்வுலகிலிருந்து மோக்ஷமடைந்த முக்தரையும், நித்யஸூரிகளையும் ''புணைக்கொடுக்கிலும் போகவொட்டார்'' என்கிறபடியே அங்கிருந்து நழுவவிடாதவன். ''அச்சுதனை....... அநந்தன் தன்மேல் நண்ணிநன்குறைகின்றானை'' என்று நம்மாழ்வாரும், ''**அச்சம் நோயோடல்லல் பல் பிறப்பவாய மூப்பிவை வைத்த சிந்தை வைத்தவாக்கைமாற்றி வானிலேற்றுவான் அச்சுதன் அநந்தகீர்த்தி ஆதியந்தமில்லவன் நச்சராவணைக் கிடந்த நாதன்**'' என்று திருமழிசையாழ்வாரும் ''அச்சுதா அமரரேறே'' என்று தொண்டரடிப்பொடிகளும் இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தருளினார்கள். (அச்யுதன்) இத்தால் அடைந்தவர்களுக்கு அல்லல் வந்தபோது அவர்களை விட்டகலும் ருத்ராதிகளைக் காட்டிலும் வ்யாவ்ருத்தி (வேறுபாடு) சொல்லப்படுகிறது. இதனாலேயேயன்றோ ''ஶிவம்'' என்று சொன்ன நாராயணாநுவாகமும், இது ருத்ரனைக் குறிக்கும் பதமல்ல என்று தெளிவிப்பதற்காக ''அச்யுதம்'' என்று படித்தது.

''பரிவின்றி வாணனைக் காத்துமென்றன்று படையொடும் வந்தெதிர்ந்த
திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும் போர்தொலைய
பொருசிறைப் புள்ளைக்கடாவிய மாயனை ஆயனைப் பொற்சக்கரத்
தரியினை அச்சுதனைப் பற்றி யான் இறையேனும் இடரிலனே.''

என்று வேதம் தமிழ் செய்த மாறனும் இவ்விஷயத்தை உணர்த்தினார். (அச்யுதன்) 'அடியவர்களை நழுவவிடாதவன்' என்னுமிந்த மஹாகுணத்தைத் தெரிவிக்கும் திருநாம

மாகையாலே, இதை வேதமும், வைதிகர்களும், பக்தர்களும் மிகவும் ஆதரிப்பர்கள். ஆழ்வார்கள் இத்திருநாமத்தை ஆதரித்த ப்ரகாரத்தை மேலே விவரித்தோம்.

**"யந்நாயம் ப4க3வாந் ப்3ரஹ்மா ஜாநாதி பரமம் பத3ம் ।**
**தந்நதா: ஸ்ம ஜக3த்3தா4ம தவ ஸர்வக3தாச்யுத ॥"**

[அச்சுதனே! ஸர்வவ்யாபியே! மேலான ப்ராப்யமான எதை பகவானான பிரமனும் அறியானோ, உலகிற்கெல்லாம் இருப்பிடமான அந்த உன்னுடைய ஸ்வரூபத்தை வணங்குகிறோம்.] என்று ப்ரயோஜனாந்தரபரரான தேவர்களும்,

**" ஸர்வேஶ ஸர்வபூ4தாத்மந் ஸர்வ ஸர்வாஶ்ரயாச்யுத "** என்று அவர்களுக்குத் தலைவனான பிரமனும்,

**"அவலோகநத3ாநேந பூ4யோ மாம் பாலயாச்யுத"** என்று அநந்யப்ரயோஜனனான ப்ரஹ்லாதாழ்வானும், **" த்3வாரகாநிலயாச்யுத"** என்று க்ருஷ்ணையும், **"த்வத்ப்ரஸாதா3ந்மயாச்யுத"** என்று நரனாகிய அர்ஜுனனும்,

**" ஹதவீர்யோ ஹதவிஷோ த3மிதோऽஹம் த்வயாச்யுத "** என்று காளியனும் இத்திருநாமத்தை அநுஸந்தித்தார்களன்றோ.

இதுவரையில் அச்யுதசப்தத்துக்கு 'அடியவர்களை நழுவவிடாதவன்' என்னும் பொருள் விவரிக்கப்பட்டது. இனி நழுவாத ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையவன் என்னும் அர்த்தம் விளக்கப்படுகிறது. (அச்யுதன்) **'ந ச்யவதே இத்யச்யுத:'** என்கிறபடியே, ப்ரஹ்மருத்ராதிகளைப் போலின்றியே ஒருபடியாலும் அழிவில்லாதவனாயிருப்பவன்.

**"ச்யவநோத்பத்தியுக்தேஷு ப்3ரஹ்மேந்த்3ரவருணாதி3ஷு ।**
**யஸ்மாந்ந ச்யவஸே ஸ்தா2நாத் தஸ்மாத்**
**ஸங்கீர்த்யஸேऽச்யுத: ॥"**



[நழுவுதலென்னும் மரணம், பிறப்பு ஆகிய இவற்றுடன் கூடிய பிரமன், இந்திரன், வருணன் முதலிய தேவர்களுள், தன்னுடைய ஸ்தானத்திலிருந்து நழுவாதவனாகையால் நீ அச்யுதனெனப்படுகிறாய்.] என்று ஶாஸ்த்ரம் சொல்லிற்று. **"ஜாயதேऽஸ்தி வர்த்3த4தே பரிணமதே அபக்ஷீயதே விநஶ்யதி இதி ஷட்3பா4வவிகாரரஹிதத்வாத3ச்யுத:"** [பிறக்கிறான், உயிர்வாழ்கிறான், வளருகிறான், பரிணமமடைகிறான், குறைவடைகிறான், நாசமடைகிறான் என்னும் ஆறு விகாரங்களுமற்றவனாகையாலே அச்யுதனெனப்படுகிறான்,] என்று சங்கரர் பாஷ்யம் செய்தபடியே இங்கு விநாசத்தைச் சொன்னது ஷட்3பா4வவிகாரங்களுக்கும் உபலக்ஷணம். ஆழ்வார்களும் இவ்வர்த்தத்தைப் பலவிடங்களில் அநுஸந்தித்தருளினார்கள். "பச்சை மாமலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண் அச்சுதா" என்று தொண்டரடிப்பொடியாழ்வார் அழியாத திவ்யமங்கள விக்ரஹத்தை உடையவனென்பதை உணர்த்தினார். **" அச்சுதன்** அநந்தகீர்த்தி" என்று திருமழிசையாழ்வாரும், " ஆர்ந்த புகழச்சுதன் " என்று நம்மாழ்வாரும் அழியாத புகழுடையவன் என்று அச்யுதசப்தத்துக்கு வியாக்கியானம் செய்தார்கள். **'ஶங்க2சக்ரக3தா3பாணே த்3வாரகாநிலயாச்யுத"** என்ற த்ரௌபதியும் ஸர்வேஶ்வரன் நித்யவிபூ4தியோடும் லீலாவிபூ4தியோடும் எழுந்தருளியிருக்கும் இருப்புக்கு என்றும் அழிவில்லை என்று உணர்த்தினாள். (அச்யுதன்) ஸகலசேதநாசேதனங்களையும் விடாமல் வியாபித்தும் தரித்தும் நிற்பவன் என்றும் பொருள்கொள்ளலாம். இத்தால் ஸர்வவ்யாபகத்வமும், ஸர்வதா4ரகத்வமும் சொல்லப்பட்டதாகிறது. 'அடியவர்களை நழுவவிடாதவன்' என்னும் பொருளைத் தெரிவிக்கையாலும், மற்றும் பல அரும்பொருள்களையும் உடைத்தாயிருக்கையாலும், வேதத்தாலும், இதிஹாஸபுராணாதிகளாலும், ஆழ்வார்களாலும் மிகவும் ஆதரிக்கப்படுகையாலும் இத்திருநாமம் ஆசமனத்தின் ஆரம்பத்தில் அநுஸந்திக்கப்படுகிறது.

நிற்க; ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலிய மஹாசார்யர்களால் விவரிக்கப்படாத சில அர்த்தங்கள் இங்கு கொள்ளப்பட்டிருக்கின்றனவே; அவை எப்படிப் பொருந்தும் என்று சிலர் சங்கிக்கக்கூடும். அவர்களுக்குச் சொல்லுகிறோம்: ஆழ்வார்களின் ஆழ்கடல்போன்ற அருளிச்செயல்களின் ப$_4$ாவங்களாகிய ரத்னங்களையெல்லாம் க்$_3$ரந்த$_2$ஸ்த$_2$மாக்குவது முடியாதகாரியமாகையாலே, நம்மாசார்யர்கள் அவைகளின் ஸாரமான பொருளை ஏடுபடுத்தியருளினார்கள். ஆகையால் அவ்வாழ்வாராசாரியர்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்கு அவிருத்தமாயும், ப்ரகரணத்திற்குப் பொருந்தியவையாயுமுள்ள பொருள்களையும் கொள்வதில் தவறில்லை. ஆழ்வார்களின் அமுதினுமினிய அருளிச்செயல்களின் ஆழ்பொருள்களையெல்லாம் ஆரே அளவிட்டு அறியவல்லார்?

இனி ‘அநந்தன்’ என்னும் நாமத்தின் அரும்பொருள் அறிவிக்கப்படுகிறது. இத்திருநாமமும் அச்யுதநாமத்தைப் போல் அருமறையால் ஆதரிக்கப்பட்டது. “**அச்சுதன் அநந்தகீர்த்தி**” என்று அச்யுதநாமத்திற்கு அர்த்தமருளிய திருமழிசையாழ்வார் “**ஆதியந்தமில்லவன்**” என்று அநந்தநாமத்தை அடுத்தபடியாக விவரித்தருளினார். நம்மாழ்வாரும் “**அண்ணலை அச்சுதனை அநந்தனை**” என்று இத்திருநாமங்களைச் சேர்த்துப் படித்தார். ‘அச்யுதன்’ என்னும் திருநாமம் ‘அடியவர்களை நழுவவிடாதவன்’ என்று உரைக்கிறது. தமர்களைக் கைவிடாமைக்காக அநேக அவதாரங்களை எடுத்தும், அளவற்ற குணங்களை வெளிப்படுத்தியும் எல்லாவற்றையும் வியாபித்தும் விளங்குமவன் என்பதை அநந்தநாமம் அறிவிக்கின்றது.

**“க$_3$ந்த$_4$ர்வாப்ஸரஸஸ் ஶித்$_3$த$_4$ா: கிந்நரோரக$_3$சாரணா:।**
**நாந்தம் கு$_2$ணாநாம் க$_3$ச்ச$_2$ந்தி தேநாநந்தோऽயமவ்யய: ||”**

*(2-5-24)*



[கந்தர்வர்கள், அப்ஸரஸ்ஸுகள், ஸித்தர்கள், கின்னரர்கள், நாகர்கள், சாரணர்கள் ஆகிய எல்லாரும் இவனுடைய குணங்களை முடிவு காண்பதில்லை. ஆகையால் இவன் அநந்தனெனப்படுகிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் அநந்த ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் சொல்லப்பட்டது. இத்தால் குணங்களாலும் சரீரங்களாலும், ஐஶ்வர்யத்தாலும் அளவற்றவன் அநந்தன் எனப்பட்டதாகிறது.

**“நமோऽஸ்த்வநந்தாய ஸஹஸ்ரமூர்த்தயே**
**ஸஹஸ்ரபாத$_3$ாக்ஷி ஶிரோருபா$_3$ஹவே।**
**ஸஹஸ்ரநாம்நே புருஷாய ஶாஶ்வதே**
**ஸஹஸ்ர கோடியுக$_3$த$_4$ாரிணே நம: ||”**

[கணக்கற்ற சரீரங்களை உடையவனும், அளவற்ற பாதங்களையும், கண்களையும், தலைகளையும், தொடைகளையும், கைகளையும் உடையவனும், கணக்கற்றதிருநாமங்களை உடையவனும் நித்ய புருஷனும், அளவுகடந்த யுகங்களை தரிப்பவனுமான **அநந்தனுக்கு** நமஸ்காரம்.] என்று பிரமனால் அநந்தனென்னும் திருநாமத்தின் அர்த்தம் அநுஸந்திக்கப்பட்டது. (அநந்தன்) காலத்தாலும், தேசத்தாலும், வஸ்துவாலும் அளவுபட்டிராத ஸ்வரூபத்தை உடையவன். “**ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்$_3$ரஹ்ம**” [ப்ரஹ்மம் விகாரமற்றதாகவும், ஞானஸ்வரூபமாகவும், மூன்று விதமான அளவுமற்றதாகவும் உள்ளது.] “**அதை$_2$தஸ்யைவாந்தோ நாஸ்தி யத்$_3$ ப்$_3$ரஹ்ம**” [ப்ரஹ்மமென்று யாதொன்றுள்ளதோ அதற்கு முடிவில்லை.] “**அநந்தம்....ஸமுத்$_3$ரேந்தம்**” [பாற்கடலில் துயிலும் அநந்தன்], என்று வேதங்களிலும், “**நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே**” [என்னுடைய ஐஶ்வர்யத்துக்கு அளவில்லை.] என்று கீதையிலும், “**ஆதியந்த மில்லவன்**” “**அச்சுதனை அநந்தனை**” என்று ஆழ்வார்களாலும் சொல்லப்பட்டவை இவ்விஷயத்தில் ப்ரமாணங்கள்.

அடுத்தபடியாக கோவிந்தசப்தார்த்தம் விவரிக்கப்படுகிறது. 'அநந்தன்' என்று புருஷோத்தமனுடைய பரத்வம் பேசப்பட்டது. 'அப்படிப்பட்ட பெருமையை உடையவனை அதிநிஹீனரான நம்மால் அணுகமுடியுமோ என்று அடியவர் அஞ்சாமைக்காக, 'இடக்கையும் வலக்கையுமறியாத ஆயர்களோடும், பகுத்தறிவற்ற பசுக்களோடும் ஒரு நீராகக்கலந்து பரிமாறுமவன்' என்னும் பொருளையுடைய கோவிந்தநாமம் கோஷிக்கப்படுகிறது. "அச்சுதா! அமரரேறே!" என்று அச்யுத அநந்த ஶப்தார்த்தங்களை அநுஸந்தித்த தொண்டரடிப்பொடியாழ்வாரும், "ஆயர்தம் கொழுந்தே!" என்று அடுத்தபடியாக கோவிந்த சப்தார்த்தத்தை அருளிச்செய்தாரன்றோ. (**கோவிந்தன்**) "**கா₃வ: விந்த₃தி**" [பசுக்களை அடைகிறான்] என்கிற வ்யுத்பத்தியின்படியே, நித்யஸூரிகளின் நாதனாயிருக்குமிருப்பில் பொருந்தாமல் அறிவற்றவைகளான பசுக்களை அடைவதற்காக கிருஷ்ணனாய் வந்து திருவவதரித்தவன்.

**''அஹம் கிலேந்த்₃ரோ தே₃வாநாம் த்வம் க₃வாமிந்த்₃ரதாம் க₃த:|**
**கோவிந்த₃ இதி லோகாஸ்த்வாம் ஸ்தோஷ்யந்தி பு₄வி ஶாஶ்வதம்||''**

[நான் தேவர்களுக்கெல்லாம் இந்திரனாயிருக்கிறேன். நீ பசுக்களுக்கு இந்திரனாயிருக்கும் தன்மையைத் தானாகவே அடைந்தாய். ஆகையால் இவ்வுலகில் **கோவிந்தன்** என்று எல்லாரும் எப்போதும் உன்னைத் துதிப்பார்கள்.] என்று ஹரிவம்சத்தில் கோவர்த்தனதாரியான கோபாலனைக் குறித்து தேவேந்திரன் துதித்தானன்றோ. "**கா₃வ: விந்த₃ந்த்யேநம்**" என்கிறபடியே பசுக்களுக்குப் புகலிடம் என்றும் பொருள் கொள்ளலாம்.

"சட்டித்தயிரும் தடாவினில் **வெண்ணெயுமுண்பட்டிக்கன்றே!**" என்றும் "**பட்டிமேய்ந்தோர் காரேறு** பலதேவற்கோர் **கீழ்க்கன்றாய்**" என்றும் **அருளிச்செய்யும்**படி



யன்றோ இவன் பசுக்களுடன் புரையறக்கலக்கும்படி. இந்த மஹாகுணத்தை நினைத்து ஆழ்வார்கள் அடிக்கடி வாய்வெருவுவர்கள். "**கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே**" என்று ஆண்டாள் இக்குணத்தையே தனக்கு ப்ராணதா₄ரகமாகக் கொண்டிருந்தாள்.

"கற்றினம் மேய்க்கிலும் மேய்க்கப்பெற்றான்
காடுவாழ் சாதியும் ஆகப்பெற்றான்
பற்றி யுரலிடை ஆப்புமுண்டான்
பாவிகாள்! உங்களுக்கேச்சுக்கொலோ"-என்றும்,

"கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கு ஓர்குற்றேவல்
இம்மைப்பிறவி செய்யாதே இனிப் போய்ச்செய்யும்
தவந்தானென்" —என்றும்,

"கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்
கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா" —என்றும்.

சொல்லும்படியன்றோ கோதைக்குக் கோவிந்தனிடமுள்ள காதல்.

"**கூட்டிலிருந்து கிளியெப்போதும் கோவிந்தா! கோவிந்தா! என்றழைக்கும்**" என்று இவளுடைய கிளியும் இத்திருநாமத்தையன்றோ வாய்புலூத்துவது. **நம்மாழ்வாரும்** "**கோவிந்தன் குடக்கூத்தன் கோவலன் என்றென்றே குனித்து**" என்று தமக்கு இத்திருநாமத்திலுள்ள ஈடுபாட்டை வெளிப்படுத்தினர்.

"**கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்த₃த் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம்|**
**ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந்நாபஸர்ப்பதி||**"

[வெகுதூரத்திலிருந்த என்னை "**கோவிந்தா!**" என்று த்ரௌபதி கூப்பிட்டதானது விருத்தியடைந்த கடன் போல் என் மனஸ்ஸிலிருந்து அகலுகிறதில்லை.] என்று, அச்யுதாதிநாமங்களையும் அவள் உச்சரித்திருந்தபோதிலும் பகவானுடைய

திருவுள்ளத்தைப் புண்படுத்திற்று இத்திருநாமமேயன்றோ. இத்திருநாமத்தின் பெருமையைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். (கோவிந்தன்) கோ$_3$ஶப்$_3$த$_3$ம் பூமியையும் குறிக்குமாகையால் ‘கா$_3$ம் விந்த$_3$தி’ என்று பூமியை ஜலத்தில் நின்றும் குத்தியெடுத்த வராஹமூர்த்தியைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். ‘‘மஹாவராஹோ கோ$_3$விந்த$_3$:’’ என்று ஸ்ரீஸஹஸ்ரநாமத்திலும் இவ்வர்த்தம் ஆதரிக்கப்பட்டது.

‘‘நஷ்டாம் வை த$_4$ரணீம் பூர்வமவிந்த$_3$ம் வை கு$_3$ஹாக$_3$தாம் ।
கோ$_3$விந்த$_3$ இதி தேநாஹம் தே$_3$வைர் வாக்$_3$பி$_4$ரபி$_4$ஷ்டுத: ॥’’

[பாதாளத்தில் ஒளித்துவைக்கப்பட்டிருந்த பூமியை முன்னொரு காலத்தில் நான் தேடியடைந்தேனுகையால், தேவர்களால் கோவிந்தனென்று ஸ்தோத்ரம் செய்யப்பெற்றேன்.] என்று பாரதத்தில் மோக்ஷதர்மத்தில் பகவானுலேயே சொல்லப்பட்டது. இத்தால் ஆபத்துக்காலத்தில் ரக்ஷ்ய வஸ்துவின் அபேக்ஷையை எதிர்பாராமலே மேல்விழுந்து, தன் பெருமைக்குப்பொருந்தாத உருவத்தையும் கொண்டு ரக்ஷிக்கும் பெருங்குணம் பேசப்படுகிறது.

‘‘உத்$_3$த்$_4$ருதாऽஸி வராஹேண க்ருஷ்ணேந ஶதபா$_3$ஹுநா’’

[பூமிப்பிராட்டியே! நூறுகைகளை உடையவனும், ஆநந்த ஸ்வரூபியுமான வராஹ மூர்த்தியால் எடுக்கப்பட்டவளாய் இருக்கிறாய்.] என்று பண்டை மறையிலும்,

‘‘ஈனச் சொல்லாயினுமாக எறிதிரை வையம் முற்றும்
ஏனத்துருவாய் இடந்தபிரான் இருங்கற்பகம் சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லால் இல்லை நான்கண்ட நல்லதுவே’’
என்றும்,

‘‘நீல வரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்ததொப்பக்
கோலவராகமொன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட
எந்தாய்!’’ —என்றும்.



‘பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே’’ —என்றும்

தமிழ் மறைகளிலும் இப்பெருமானின் பெருமைகள் பேசப்பட்டனவன்றோ.

‘‘கௌ$_3$ரேஷா தத$_2$ா வாணீ தாம் ச யத்$_3$ விந்த$_3$தே ப$_4$வாந் ।
கோ$_3$விந்த$_3$ஸ்து ததோ தே$_3$வ முநிபி$_4$: கத்$_2$யதே ப$_4$வாந் ॥’’

[சப்தமானது ‘கௌ$_3$:’ என்று சொல்லப்படுகிறது. வார்த்தைகளையெல்லாம் நீரே அடைவதால் நீர் கோவிந்தனென்று முனிவர்களால் சொல்லப்படுகிறீர்.] என்கிற நிர்வசனத்தின்படியே ஸர்வஶப்$_3$த$_3$வாச்யன் என்றும் இத்திருநாமத்துக்குப் பொருள்கொள்ளலாம். ‘‘சொல்லினால் தொடர்ச்சி நீ சொலப்படும் பொருளும் நீ’’ என்று திருமழிசையாழ்வார் இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தார். (கோவிந்தன்) கோ$_3$சப்தம் வேத வாக்கியங்களைக் குறிப்பதாகக்கொண்டு வேதத்தினால் சொல்லப்படுமவன் என்றும் பொருள்கொள்ளலாம். ‘‘அச்சம்... ஏற்றுவான் அச்சுதன் அநந்தகீர்த்தி ஆதியந்தமில்லவன் நச்சராவணைக் கிடந்த நாதன்’’ என்று அச்சுதன், அநந்தன் என்னும் திருநாமங்களுக்கு அர்த்தம் செய்த திருமழிசையாழ்வார் ‘‘வேதகீதனே’’ என்று கோவிந்தசப்தார்த்தத்தை அருளிச்செய்தார். (கோவிந்தன்) எந்த தேவதையைக் குறித்து ஸ்தோத்ரம் செய்தாலும் அவை இவனையே அடைவதால் கோவிந்தன் எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

‘‘நும்இன் கவிகொண்டு நும்நும் இட்டாதெய்வமேத்தினால்
செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே’’ என்றார்

நம்மாழ்வார். (கோவிந்தன்) கோசப்தம் ஒளியைக்குறிப்பதால் பரஞ்சோதியாயிருப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். நம்மாழ்வாரும்

"பரஞ்சோதி நீ பரமாய் நின்னிகழ்ந்து பின்மற்றோர்
பரஞ்சோதியின்மையின் படியோவி நிகழ்கின்ற
பரஞ்சோதி நின்னுள்ளே படருலகம் படைத்த எம்
பரஞ்சோதி கோவிந்தா! பண்புரைக்கமாட்டேனே"

என்று இப்பொருளை அநுஸந்தித்தருளினர். "**நாராயணபரோ ஜ்யோதி:**" என்றும், "**பரம் ஜ்யோதிருபஸம்பத்$_3$ய**" என்றும், "**ஆதி$_3$த்யவர்ணம்**" என்றும்,

**"ந தத்ர ஸூர்யோ ப$_4$ாதி ந சந்த்$_3$ரதாரகம்**
**நேமா வித்$_3$யுதோ ப$_4$ாந்தி குதோऽயமக்$_3$நி: |**
**தமேவ ப$_4$ாந்தமநுப$_4$ாதி ஸர்வம்**
**தஸ்ய ப$_4$ாஸா ஸர்வமித$_3$ம் விப$_4$ாதி ||"**

*[அப்பரமபுருஷனுக்கு முன் ஸூர்யனும் பிரகாசிப்பதில்லை; சந்திரனும், நக்ஷத்திரங்களும், இந்த மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை. அக்னியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஒளிவிடும் அவனை அநுஸரித்தே எல்லாம் ஒளிவிடுகின்றன. அவனுடைய ஒளியாலேயே இவையெல்லாம் பிரகாசிக்கின்றன.]* என்றும் வேதங்களிலும்

**"தி$_3$வி ஸூர்யஸஹஸ்ரஸ்ய ப$_4$வேத்$_3$ யுக$_3$பது$_3$த்தி$_2$தா |**
**யதி$_3$ ப$_4$ா: ஸத்$_3$ருஶீ ஸா ஸ்யாத்$_3$ ப$_4$ாஸஸ் தஸ்ய மஹாத்மந: ||"**

*[ஆகாயத்தில், ஒரே ஸமயத்தில் ஆயிரம் ஸூர்யர்களுடைய ஒளி தோன்றிற்றாகில், அவ்வொளி அந்த மஹாபுருஷனுடைய ஒளிக்கு ஒப்பாகலாம்.]* என்று கீதையிலும் கீர்த்திக்கப் பட்டதன்றோ.

இனி கேசவன் முதலிய பன்னிருநாமங்களின் பரமார்த்தங்களைப் பன்னியுரைப்போம். இப்பன்னிரு நாமங்களையும் ஆழ்வார்கள் மிகவுகந்து அநுஸந்தித்துக்கொண்டு போருவர்கள். "**பாரார்தொல் புகழான் புதுவை மன்னன் பன்னிரு நாமத்தால் சொன்ன ஆராத அந்தாதி**" என்றும், "**பண்ணிற் பன்னிரு நாமப்பாட்டு அண்ணல் தாள் அணைவிக்குமே**"



என்றும் பெரியாழ்வாரும் நம்மாழ்வாரும் இப்பன்னிருநாமங்களையும் தொடர்ந்து அநுஸந்திக்கும் பாட்டுக்களைப் பாடியுள்ளார்கள். த்$_3$வாத$_3$ஶோர்த்$_4$வபுண்ட்$_3$ரங்களுக்கும் இப்பன்னிரண்டு திருநாமங்களே அநுஸந்திக்கப்படுகின்றன. புருஷோத்தமனுடைய அம்ஶத்தைப் பெற்ற த்வாதச ஆதித்யர்களுக்கும் இப்பன்னிரு நாமங்களே சூட்டப் பெற்றிருக்கின்றன. எம்பெருமானுக்குப் பரம், வியூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்று ஐந்து அவஸ்தைகள் உள்ளனவென்பது ஸகலஶ்ருதீதிஹாஸ புராண பாஞ்சராத்ர ஶாஸ்த்ரங்களில் கோஷிக்கப்படுகின்றது. இவ்வைந்து அவஸ்தைகளும் இப்பன்னிருநாமங்களிலும் அநுஸந்திக்கப் படுகின்றன. "**மாலரி கேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்தன்**" என்று **நம்மாழ்வார்** அருளிச்செய்கையாலே "கேசவன் நாராயணன், மாதவன் கோவிந்தன்" என்னுமிந்த நான்கு திருநாமங்களும் ஸ்ரீவைகுண்டநாதனையெழுந்தருளியிருக்கும் பராவஸ்தையைக் குறிக்கின்றனவென்பது விளங்குகிறது, "விஷ்ணு" என்னும் அடுத்த திருநாமம் அநிருத்தநாராயணனாகிய வியூஹத்தைக்குறிப்பதன் மூலம் மற்ற வியூஹங்களையும் உணர்த்துகிறது. **'மது$_4$ஸூத$_3$னன்'** என்பதும் அந்த வியூஹமூர்த்தியின் சேஷ்டிதத்தைச் சொல்லுகிறது. **'திரிவிக்கிரமன், வாமனன், தா$_3$மோத$_3$ரன்'** என்னும் திருநாமங்கள் விபவாவதாரங்களைச் சொல்லுகின்றன. **'ஸ்ரீத$_4$ரன்'** என்னும் திருநாமம் அவ்விபவாவதாரங்களிலும் பகவான் பிராட்டியுடனேயே அவதரிக்கிறானென்று காட்டுகிறது. **'ஹ்ருஷீகேசன்'** என்னும் திருநாமம் அந்தர்யாமியாய் நின்று இந்திரியங்களை நியமிக்கும் இருப்பை உரைக்கிறது. **'ஸ்ரீத$_4$ரன்'** முதலிய எல்லாத் திருநாமங்களும் திருமலை முதலிய திவ்யக்ஷேத்ரங்களில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாஸன் முதலிய அர்ச்சாமூர்த்திகளையும் உணர்த்துகின்றன. **'பத்$_3$மநாப$_4$ன்'** என்று இவ்வவதாரங்களுக்கெல்லாம் மூலாவதாரமான க்ஷீராப்திநாதனைப் பேசுகிறது. ஆக, இப்படி ஐந்து அவஸ்தைகளும் இந்நாமங்களில்

அநுபவிக்கப்படுகின்றன. இனி இத்திருநாமங்களின் அர்த்தங்களைச் சிந்திப்போம். (கேசவன்) ககாரத்தினால் சொல்லப்படும் பிரமனையும், 'ஈசன்' என்று பெயர் பெற்ற சிவனையும் உண்டாக்கினவன்.

**"க இதி ப்$_3$ரஹ்மணோ நாம ஈஶோ$\mathsf{S}$ஹம் ஸர்வதே$_3$ஹிநாம்।**
**ஆவாம் தவாங்கே$_3$ ஸம்பூ$_4$தௌ தஸ்மாத் கேஶவநாமவாந்॥"**

*['க:' என்று ப்ரஹ்மாவுக்குப்பெயர்; தேஹத்தில் அபி$_4$மானமுள்ள எல்லாருக்கும் நான் ஈசன்; ப்ரஹ்மருத்ரர்களாகிய நாங்கள் இருவரும் உன்னுடைய சரீரத்தினின்றும் பிறந்தோம்; ஆகையால் நீ கேசவன் என்னும் திருநாமத்தை உடையவனாயிருக்கிறாய்.]* என்று ஹரிவம்சத்தில் பேசநின்ற சிவனாலும் பேசப்பட்டது. **"நாராயணாத்$_3$ ப்$_3$ரஹ்மா ஜாயதே। நாராயணாத்$_3$ ருத்$_3$ரோ ஜாயதே।"** *[நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்: நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்.]* என்பது முதலான வேதவாக்கியங்களையும். மற்றப்ரமாணங்களையும். **"தெய்வநான்முகக்கொழுமுளை ஈன்று முக்கணீசனொடு தேவு பல நுதலி"** முதலிய ஆழ்வார் அருளிச்செயல்களையும் இவ்விடத்தில் அநுஸந்திப்பது. (கேசவன்) பிரமனையும் சிவனையும் தன்வசத்தில் வைத்திருப்பவன் என்றும் பொருள்கொள்ளலாம். **"நாராயணாத் ப்ரஜாயந்தே। நாராயணாத் ப்ரவர்த்தந்தே। நாராயணே ப்ரலீயந்தே।"** *[பிரமன் முதலிய எல்லாரும் நாராயணனிடமிருந்து உண்டாகிறார்கள்: நாராயணனால் வாழ்கிறார்கள்: நாராயணனிடமே லயமடைகிறார்கள்.]* என்று சொல்லிற்று சுடர்மிகு சுருதியும்,

**"கள்வா! எம்மையும் ஏழுலகும் நின்**
**உள்ளே தோற்றிய இறைவ! என்று**
**வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்**
**புள்ளூர்தி கழல் பணிந்(து) ஏத்துவரே."** —என்றும்,



**"நெற்றியுள் நின்றென்னையாளும் நிறைமலர்ப்பாதங்கள் சூடி**
**கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார்**
**ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனும் இந்திரனும்"**

என்றும் **ஆழ்வார்** அருளிச்செய்தார். **"விண்ணோர்தலைவா கேசவா"** என்று **நம்மாழ்வார்** இத்திருநாமத்துக்குப் பொருளுரைத்தார், **"கேசவா புருடோத்தமா"** என்றார் **பெரியாழ்வாரும்.** உத்க்ருஷ்டபுருஷர்களான ப்ரஹ்மருத்ரர்களைக் காட்டிலும் மேலானவன் என்றபடி. (கேசவன்) சோதிமயமான ஸூர்யன் முதலியவைகளின் கிரணங்கள் கேசஶப்தத்தினால் சொல்லப்படுகின்றன. அவைகளைத் தன் வசத்தில் கொண்டிருக்கையால் கேசவன் எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

**"அம்ஶவோ யே ப்ரகாஶந்தே மம தே கேஶஸம்ஜ்ஞிதா:।**
**ஸர்வஜ்ஞா: கேஶவம் தஸ்மாந் மாமாஹுர்த்$_3$விஜஸத்தமா:॥"**

*[உலகில் பிரகாசிக்கும் என்னுடைய கிரணங்கள் கேசமெனப்படுகின்றன. ஆகையால் எல்லாமறிந்த ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்கள் என்னைக் கேசவனென்று சொல்லுகிறார்கள்.]* என்று மஹாபாரதத்தில் சொல்லப்பட்டது. கோவிந்தநாம வியாக்கியானத்தில் எடுக்கப்பட்டவையான **"ந தத்ர ஸூர்யோ பா$_4$தி"** முதலிய ப்ரமாணங்களை இங்கும் அநுஸந்திப்பது. **"திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரை"** என்று **ஆழ்வார்** இவ்வர்த்தத்தை உணர்த்தினார். (கேசவன்) **"கேஶாத்$_3$வோ$\mathsf{S}$ந்யதரஸ்யாம்" "பூ$_4$மநிந்தா$_3$ ப்ரஶம்ஸாஸு.... ப$_4$வந்தி மதுப$_3$ாத$_3$ய:"** என்கிற வியாகரண விதிகளின்படி கேஶஶப்தத்தின்மேல் **'வ:'** என்னும் ப்ரத்யயம் வந்து **'ப்ரஶஸ்தகேஶன்'** (புகழ்ப்பெற்ற கேசங்களை உடையவன்) என்னும் பொருளைத்தருகிறது. அதாவது: **"ய ஏஷோ$\mathsf{S}$ந்தராதி$_3$த்யே ஹிரண்மய: புருஷோ த்$_3$ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ருர் ஹிரண்யகேஶ;"** *[ஸூர்யனுக்கு நடுவில் யாவனொரு ஸுவர்ண*

மயனுன புருஷன் விளங்குகிருனே, அவன் ஸுவர்ணம் போன்று அழகானமீசையையும்,கேசங்களையும் உடையவன்.] என்று வேதத்தாலும் புகழப்பெற்ற மயிர்முடிகளை உடையவன் என்று பொருள்.

''கொள்கின்ற கோளிருளேச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின்
உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல்? அன்று மாயன்குழல்
விள்கின்ற பூந்தண்துழாய் விரைநாற வந்தென்னுயிரைக்
கள்கின்றவாறறியீர் அன்னைமீர் கழறுநிற்றிரே.'' —என்றும்.

''முன்னமுகத்தணியார் மொய்குழல்கள்'' என்றும், ''சுருண்டிருண்ட குழல் தாழ்ந்த முகத்தான்'' என்றும் ''மைவண்ண நறுங்குஞ்சி குழல்பின்தாழ'' என்றும், ''குழலழகர்'' என்றும் ஆழ்வார்கள் இக்கேசஸௌந்தர்யத்தை அநுபவித்தார்கள். (கேசவன்) இத்தால் சிக்குத்தலையரான இதரதெய்வங்களிற் காட்டிலும் வ்யாவ்ருத்தி சொல்லப்படுகிறது.' 'பிங்க3ள ஜடோ தே3வ:' என்றும், 'ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ' என்றும் சொல்லுகிற ப்ரஹ்மருத்ரர்கள் மயிர்போலே குராலாயமேறி ஓடியிருக்கையன்றிக்கே, 'நீலகுஞ்சித மூர்த்த4ஜம்', 'குழலிருண்டு சுருண்டு' என்கிறபடியே கண்டவர்கள் கண்களிலே அஞ்ஜனமெழுதினுற்போலே ச்யாமளமாயிருக்கை''என்று மைவண்ண நறுங்குஞ்சி வியாக்கியானத்தில் கலித்4வம்ஸநாசார்யர் அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

''நரகே பச்யமாநஸ்து யமேந பரிப4ாஷித: |
கிம் த்வயா நார்ச்சிதோ தே3வ: கேஶவ: க்லேஶநாஶந: ||''

[நரகத்தில் வேதனையை அனுபவிக்கும் ஒரு மனிதன் ''அடே! உன்னுல் கிலேசங்களையெல்லாம் போக்கும் கேசவன் ஏன் அர்ச்சிக்கப்படவில்லை?'' என்று யமனுல் கேட்கப்பட்டான்.] என்று புராணம் சொல்லிற்று. 'கேஶவ: க்லேஶநாஶந:' என்றதின் தாத்பர்யத்தை. ''தாபத்ரயாதுரரோடு விரஹதாபாதுரரோடு வாசியற ஸர்வருக்கும் ஶ்ரமஹரமாம்படிகாண்



திருக்குழலின் பரிமளம் மிகுந்தபடி; 'கேஶவ: க்லேஶநாசஶ:'' என்னக்கடவதிறே; த்3ருஷ்டிப்ரியமாயிருக்கையன்றிக்கே நெஞ்சில் ஶ்ரமமெல்லாம் போம்படிகாண் திருக்குழலின் பரிமளம் மிகுந்தபடி'' என்று பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை மைவண்ண நறுங்குஞ்சி வியாக்கியானத்தில் அருளிச்செய்தார். (கேசவன்) கேசி என்னும் அஸுரனைக் கொன்ற க்ருஷ்ணன் என்றும் பொருள்கொள்ளலாம்.

''யஸ்மாத் த்வயைவ து3ஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்த்த3ந |
தஸ்மாத் கேஶவநாமா த்வம் லோகே க்2யாதிம் க3மிஷ்யஸி ||''
[5-16-23]

[ஜனார்த்தனனே! (உன்னைக் கொல்லவேணுமென்னும்) கெட்ட எண்ணத்துடன் வந்த கேசி உன்னுலேயே கொல்லப்பட்டானுகையால் நீ உலகில் கேசவன் என்னும் திருநாமத்தால் கீர்த்திபெறுவாய்.] என்று நாரதரால் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் இப்பொருள் பேசப்பட்டது. ''கேஶவம் கேஶிஹந்தாரம்'' என்றும் மற்ருேரிடத்தில் இவ்வர்த்தம் சொல்லப்பட்டது. ''கேஶவ: கேஶிஹா'' என்று இப்பொருள் ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்திலும் ஆதரிக்கப்பட்டது. ''கண்ணன் கேசவன்'' என்றும், ''நாராயணன் மூர்த்தி கேசவன்'' என்றும் ஆழ்வார்களாலும் இவ்வர்த்தம் அநுஸந்திக்கப்பட்டது. இப்படிப் பொருள்கொள்ளும்போது எம்பெருமானுடைய விரோதி4 நிரஸன ஶீலத்வம் தோற்றுகிறது. ''கண்ணன் கேசவன் நம்பி'' 'கேசவநம்பீ உன்னைக் காதுகுத்த'' ''கேசவநம்பியைக் கால்பிடிப்பாள் என்னுமிப்பேறெனக்கு அருள்கண்டாய்'' என்று இத்திருநாமத்தின் குணபூர்த்தியை அநுஸந்தித்தார்கள்.

''கேஶவ: க்லேஶஹா லோகே த்3வைரூப்யேண க்ஷிதௌ
ஸ்தி2த: |
மது4ராக்2யே மஹாக்ஷேத்ரே வாராணஸ்யாமபி த்3விஜ ||''

[விப்ரரே! கிலேசங்களைப்போக்கடிக்கும் குழலழகையுடைய பெருமான், மதுரை என்னும் மஹாக்ஷேத்திரத்திலும் வாராணஸி எனப்படும் காசியிலும் பூமியில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிறான்.] என்னும் ப்ரமாணத்தைக்காட்டி, பட்டர் இத்திருநாமத்தை அர்ச்சாவதாரபரமாக வியாக்கியானம் செய்தருளினர். இப்படிப் பரவிப4வார்ச்சாவதாரங்களைக்குறிக்கக் கூடியதேயாகிலும் "**கேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்தன்**" என்று **நம்மாழ்வார்** அருளிச்செய்கையால், இத்திருநாமத்துக்குப் பராவஸ்தையைக்குறிக்கும் பொருளே இங்கு முக்கியார்த்தமாகக் கடவது.

கேசவன் என்னும் திருநாமத்தினால் பிரமருத்திரர்களுக்கும் உத்பாதகன் என்று உரைக்கப்பட்டது. இப்படிப் பட்டவன் யார் என்னும் கேள்வி எழ, '**நாராயணன்**' என்று வேதா3ந்தஸித்3த4மான அஸாத4ாரணமான திருநாமத்தைப் படிக்கிறது. இத்திருநாமத்தை வேதங்களும், இதிஹாஸ புராணங்களும் ஆழ்வார்களும் மிகவும் ஆதரித்துப்போந்தார்களென்பது ஸுப்ரஸித்தம். இதிலுள்ள ணகாரமானது வேறெந்த தெய்வத்திற்கும் இத்திருநாமம் பொருந்தாதென்பதைக் காட்டுகிறது. இத்திருநாமத்தின் அர்த்தங்களோ ஆயிரம் நாவுடைத்த ஆதிசேஷனாலும் அளவிட்டுச் சொல்லமுடியாதவை. நாராயணனுடைய பெருமையை அறிந்தாலும் அறியலாம்; நாராயண நாமத்தினுடைய அர்த்த2 வைப4வத்தை எவராலும் அறியமுடியாது. பரம காருணிகர்களும் ஸர்வஜ்ஞஸார்வபௌமர்களுமான நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இத்திருநாமத்தின் பொருளைப் பலவிடங்களில் பேசியிருக்கிறார்கள். அந்த ஸ்ரீஸூக்திகளைத் துணையாகக்கொண்டு நாமும் இத்திருநாமத்தின் பொருட்பெருமையை இயன்றவரையில் அநுபவிக்க முற்படுவோம்.

"**ரிங்-க்ஷயே**" என்று தாதுவாகையாலே, 'ர' என்னும் எழுத்து க்ஷயித்துப்போகும் பதா3ர்த்த2ங்களைக் குறிக்கிறது.



'**ந**' என்னும் எழுந்து அதை நிஷேதி4க்கிறது. ஆக, '**நர:**' என்று நித்யமாய் விளங்கும் வஸ்துவைக் குறிக்கிறது. '**நராணாம் ஸமூஹ: நார:**' என்கிறபடியே 'நார:' என்னும் பதம் இப்படிப்பட்ட நித்யவஸ்துக்களின் ஸமூஹத்தைக் குறிக்கிறது. '**நாரா:**' என்னும் பன்மையால் அப்படிப்பட்ட நித்யவஸ்துக்களின் ஸமூஹங்கள் பல உள என்று உணர்த்தப் படுகிறது. இப்படிப்பட்ட இந்த நித்யவஸ்துக்களின் ஸமூஹங்கள் எவை என்பதைப் பரமகாருணிகரான **பெரிய வாச்சான்பிள்ளை** "அவையாவன:— ஜ்ஞாநஶக்த்யாதி3 திவ்3யாத்மகுணங்களும், குணப்ரகாஶகமான திவ்யமங்கள விக்ரஹங்களும், விக்ரஹகுணமான ஸௌந்தர்யாதிகளும், அந்த ஸௌந்தர்யாதிகளோபாதி பூத்தாப்போலே சாத்தின கிரீடமகுடாதி திவ்யாபரணங்களும், அவ்வாபரணங்களோடு விகல்பிக்கலாம்படியான ஶங்க2சக்ராதி திவ்யாயுதங்களும், இத்தனையும் காட்டிலெரித்த நிலாவாகாதபடி அருகேயிருந்து அநுபவிக்கிற லக்ஷ்மீ ப்ரப்4ருதி மஹிஷீவர்க்கங்களும், அச்சேர்த்தியிலே அடிமை செய்கிற அநந்தகருடவிஷ்வக்ஸேந ப்ரமுகரான ஸூரிஸங்க4மும், அவர்களோபாதிபோய் அடிமை செய்கிற முக்தரும், அவர்களுக்கு அடிமை செய்கைக்குப் பரிகரமான ச2த்ரசாமராதி3பரிச்ச2த3ங்களும், அவ்வடிமைக்கு வர்த்த4கமாய் பஞ்சோபநிஷந்மயமான பரமபத3மும், குணத்ரயாத்மிகையான மூலப்ரக்ருதியும், புருஷஸமஷ்டியும், அஹோராத்ராதி3விபா4க3யுக்தமான காலதத்வமும், ப்ரவாஹ ரூபேண நித்யமான மஹதாதிகளும், தத்கார்யமான அண்டங்களும், அண்டாந்தர்வர்த்திகளான சதுர்வித4பூ4தங்களும், பஞ்சோபநிஷந்மயமாகையாலே பரமபதமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்; குணத்ரயாத்மிகையாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்; அஹோராத்ராதி3விபா4க3ங்கள் அநேகமாகையாலே காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்று பரந்த ரஹஸ்யத்தில் பரக்க அருளிச்செய்தார்.

அடுத்தபடியாகவுள்ள அயநஶப்தம் பல பொருள்களை உடையது. அவைகளில் '**இருப்பிடம்**' என்பதும் ஒன்று. "**நாரா: அயநம் யஸ்ய ஸ:—நாராயண:**" [நித்யபதா3ர்த்த2 ஸமூஹங்களாகிற நாரங்கள் எவனுக்கு இருப்பிடமோ அவன் நாராயணன்] என்று நாராயண சப்தத்துக்கு ஒரு பொருள் ஏற்படுகிறது. இத்தால் இவன் எல்லாப் பதார்த்தங்களையும் '**உடல் மிசை உயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன்**' என்று சொல்லப்பட்டதாகிறது.

"**சேதநாசேதநம் ஸர்வம் விஷ்ணோர் யத்3 வ்யதிரிச்யதே।**
**நாரம் தத்3யநஞ்சேத3ம் யஸ்ய நாராயணஸ்து ஸ:॥**"

[விஷ்ணுவைக்காட்டிலும் வேறுபட்டதான எல்லாச் சேதநாசேதனங்களும் நாரசப்தத்தால் சொல்லப்படுகின்றன. அது எவனுக்கு இருப்பிடமாயுள்ளதோ அப்பரமாத்மா நாராயணனெனப்படுகிறான்.] என்று இவ்வர்த்தத்தை சாஸ்திரம் சொல்லிற்று. இந்த ப3ஹுவ்ரீஹிஸமாஸப் பொருளில் அந்தர்வ்யாப்தியும், அடுத்தபடியாகச் சொல்லப்படும் தத்புருஷஸமாஸப் பொருளில் ப3ஹிர்வ்யாப்தியும் உணர்த்தப்படுகின்றன என்று ஆசார்யர்கள் அருளிச்செய்வர்.

"**யச்ச கிஞ்சித் ஜக3த்யஸ்மிந் த்3ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா।**
**அந்தர் ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த:॥**"

[இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமான எல்லா வஸ்துக்களிலும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான்.] என்று பண்டை மறையிலும்,

"**ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்ல புறத்தினுள்ளும்**
**நீக்கமின்றி எங்கும் நின்றாய்!**" என்று தமிழ் வேதத்திலும்

இவ்வர்த்தம் சொல்லப்பட்டது. இப்பொருளில் எம்பெருமானுடைய ஸர்வவ்யாபகத்வம் சொல்லப்படுகிறது. "**நாராணாம் அயநம் ய: ஸ:**" [நித்யபதா3ர்த்த2 ஸமூஹங்களாகிற நாரங்களுக்கு எவனொருவன் இருப்பிடமாயிருக்கிறானோ அவன் நாராயணன்] என்ற தத்புருஷஸமாஸத்தின் படியும் பொருள் கொள்ளலாம். இத்தால் எல்லா வஸ்துக்களையும் நாராயணன் தரிக்கிறான் என்று சொல்லப்படுகிறது.



"**நாராணாமயநத்வாச்ச நாராயண இதி ஸ்ம்ருத:**" [63-62] [நாரசப்தத்தினால் சொல்லப்படும் நித்யவஸ்துஸமூஹங்களுக்கு இருப்பிடமாயிருப்பதால் நாராயணனெனப்படுகிறான்.] என்று இவ்வர்த்தம் பாரதம் உத்யோகபர்வத்தில் உரைக்கப்பட்டது. நாரசப்தத்துக்கு மற்றொரு வகையாகவும் பொருளுரைப்பதுண்டு. '**நர:**' என்று ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் சிறிதும் விநாஶமற்றவனான பரமபுருஷன் சொல்லப்படுகிறான். '**நராத் ஜாதாநி**' என்கிறபடியே நரனென்கிற புருஷோத்தமனிடமிருந்து உண்டானவை நாரங்களெனப்படுகின்றன. அவைகளை இருப்பிடமாக உடைத்தாயிருக்கையாலும், அவைகளுக்கு இருப்பிடமாயிருக்கையாலும் நாராயணனெனப்படுகிறான் என்று முன்போலவே இருவகையாகவும் பொருள்.

"**நராஜ்ஜாதாநி தத்த்வாநி நாராணீதி ததோ விது3:।**
**தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத:॥**"

[நரனென்கிற எம்பெருமானிடமிருந்து உண்டானவைகளை நாரங்களென்று அறிகின்றார்கள். அவைகளையே இருப்பிடமாயுடையவனாயிருப்பதால் அவன் நாராயணனெனப்படுகிறான்.] என்று இவ்வர்த்தம் ஹரிவம்சத்திலும் சொல்லப்பட்டது. இவ்வர்த்தத்தை "**யாவையும் யாவரும் தானாம் அமைவுடை நாரணன்**" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தார். '**நார**' ஶப்தத்தில் சொல்லப்பட்ட அநந்தமான வஸ்த்துக்களில் சிலவற்றைச் சிற்சிலவிடங்களிலேயெடுத்து ஆழ்வார்கள் நாராயணசப்தத்துக்கு வியாக்கியானம் செய்தருளியிருக்கிறார்கள். நாரசப்தத்துக்கு அநந்தகல்யாணகுணங்களையும் பொருளாகக்கொண்டு "**ஈறில வண் புகழ் நாரணன்**" என்றும் "**வாழ்புகழ் நாரணன்**" என்றும் நம்மாழ்வாரும், "**நலமுடை நாரணன்**" என்று பெரியாழ்வாரும், '**நலந்திகழ்**

நாரணன்'' என்று குலசேகராழ்வாரும் வியாக்கியானம் செய்தருளினர்கள். நாரசப்தத்துக்கு திவ்யமங்களவிக்ரஹத்தையும் அதன் குணங்களையும் பொருளாகக் கொண்டு. ''காராயின காளநன் மேனியினன் நாராயணன்'' என்று நம்மாழ்வாரும். ''கார்மேனிச் செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான் நாராயணனே'' என்றும். ''நாற்றத்துழாய் முடி நாராயணன்'' என்றும் ஆண்டாளும் அருளிச்செய்தனர். திவ்யாபரணங்களை நாரசப்தத்துக்குப் பொருளாகக்கொண்டு

''உடையார்ந்தவாடையன் கண்டிகையன் உடைநாணினன்
புடையார் பொன்னூலினன் பொன்முடியன் மற்றும் பல்கலன்
நடையாவுடைத் திருநாரணன்'' என்று நம்மாழ்வார்

அருளினர். ''லக்ஷ்மீப்ரப்₄ருதி மஹிஷீவர்க்க₃ங்களும்'' என்று ஆச்சான்பிள்ளையால் அருளிச்செய்யப்பட்ட பிராட்டிமார்களை நாரசப்தத்துக்குப் பொருளாகக்கொண்டு ''செல்வ நாரணன்'' என்று நம்மாழ்வார் அருளிச்செய்தார். ''விண்ணோர் நாயகன் நாராயணன்'' என்று வேதம் தமிழ்ச்செய்த மாறன் நாரசப்தத்துக்கு நித்யமுக்தர்களைப் பொருளாக அருளிச்செய்தார். நாரசப்தத்துக்குச் சேதனர்களைப் பொருளாகக் கொண்டு ''எண்பெருக்கந்நலத்தொண்பொருள் ஈறில வண்புகழ் நாரணன்'' என்றும். ''எம்பிரான் எம்மான் நாராயணன்'' என்றும் சடகோபனும். ''நம்மையுடையவன் நாராயணன்'' என்றும். ''என்னை நலங்கொண்ட நாரணற்கு'' என்றும் ஆண்டாளும் ''நாராயணன் என்னையாளி'' என்று திருமழிசைப்பிரானும் அருளிச்செய்தனர். நாரசப்தத்துக்கு உப₄யவிபூ₄தியையும் பொருளாகக்கொண்டு ''நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்'' என்று நம்மாழ்வாரும். ''நாயகன் நாரணன்'' என்று பெரியாழ்வாரும் அருளிச்செய்தனர். (நாராயணன்) நரனுகிற பெருமானுல் படைக்கப்பட்ட ஜலத்தை நாரசப்தத்திற்குப் பொருளாகக் கொண்டு அதை இருப்பிடமாகக் கொண்டவன் என்றும் பொருள் கொள்ளலாம்.



''ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:।
தா யத₃ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:॥''

[நரனுகிற ஸர்வேஶ்வரனுல் படைக்கப்பட்ட ஜலம் 'நாரம்' எனப்படுகிறது. அது ஆதிகாலத்தில் இவனுக்கு இருப்பிடமாயிருக்கையால் இவன்நாராயணனெனப்படுகிறுன்.] என்று மநுஸ்ம்ருதியிலும், விஷ்ணுபுராணத்திலும் உரைக்கப்பட்டது. இவ்வர்த்தம்

''நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே!'' என்று ஆழ்வாராலும்,

''ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:''

[இவனே பாற்கடலில் பள்ளிகொண்ட ஸ்ரீமந்நாராயணன்] என்று புராணத்திலும் பேசப்பட்டது.

''ஸ்ருஷ்ட்வா நாரம் தோயமந்த:ஸ்தி₂தோऽஹம்
யேந ஸ்யாந்மே நாம நாராயணேதி''

[நாரசப்தத்தினுல் சொல்லப்படும் ஜலத்தை ஸ்ருஷ்டி செய்து அதனுள் நான் வசித்தபடியால் எனக்கு நாராயணனென்னும் நாமம் ஏற்பட்டது.] என்று ஸ்ரீவராஹபுராணத்தில் பகவானுலும் இவ்வர்த்தம் ஆதரிக்கப்பட்டது. (நாராயணன்) நாரசப்தத்திற்கு இப்ரக்ருதி மண்டலத்திலுள்ள சேதனசேதனங்களைப் பொருளாகக் கொண்டு, ப்ரளய காலத்தில் அவைகளுக்குச் சேருமிடமாயுள்ளவன் என்றும் பொருள்கொள்ளலாம். ''ஞாலமுற்றுமுண்டாலிலைத் துயில் நாராயணனுக்கு'' என்று பெரியாழ்வாரும், ''ஞாலமுற்றும் உண்டுமிழ்ந்த நாராயணனே!'' என்றும். ''ஞாலமுண்டாய்! ஞானமூர்த்தி! நாராயணு!'' என்றும் நம்மாழ்வாரும் இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தருளினர்கள். இத்தால் ஸர்வ ஸம்ஹர்த்ருத்வமும் சொல்லப்பட்டதாயிற்று. (நாராயணன்) 'நர' சப்தத்தினுல் அழிவற்ற ஸ்வரூபத்தையுடைய ஆத்மா சொல்லப்படுகிறது; நாரசப்தம் ஆத்மஸமூஹத்தைச்

சொல்லுகிறது. அயநசப்தம் ‘இண் க$_{3}$தௌ’ ‘அய-க$_{3}$தௌ’ என்னும் தாதுக்கள் ஒன்றிலிருந்து உண்டானதாகையாலே போய்ச்சேருமிடமாகிற ப்ராப்யத்தையும், போய்ச்சேரும் வழியான உபாயத்தையும் குறிக்கும். ஆக ‘நாராயணன்’ என்று சேதனவர்க்கத்திற்கு மோக்ஷப்ராப்யமாகவும், மோக்ஷோபாயமாகவும் இருப்பவன் என்று பொருள் படுகிறது. இவ்வர்த்தம்

**“நாரஸ்த்விதி ஸர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகீர்த்தித: ।**
**க$_{3}$திராலம்ப$_{3}$நம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ॥”**

*[நாரமென்று எல்லாச்சேதனர்களுடைய ஸமூஹம் சொல்லப்படுகிறது. அச்சேதனஸமூஹத்திற்கு உபாயமாகவும், உபேயமாகவுமிருப்பதால் நாராயணனென்று சொல்லப்படுகிறான்.]* என்றும்,

**“நாரோ நராணாம் ஸங்க$_{4}$ாதஸ் தஸ்யாஹமயநம் க$_{3}$தி: ।**
**தேநாஸ்மி முநிபி$_{4}$ர் நித்யம் நாராயண இதீரித: ॥”**

*[நரர்களின் கூட்டம் நாரமெனப்படுகிறது. அதற்கு நான் ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் இருக்கிறேனாகையால் முனிவர்களால் எப்போதும் நான் நாராயணன் என்று சொல்லப்படுகிறேன்.]* என்றும்

**“நாரசப்தே$_{3}$ந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே பு$_{3}$தை$_{4}$: ।**
**தேஷாமயநபூ$_{4}$தத்வாந் நாராயண இஹோச்யதே ॥**
**தஸ்மாந்நாராயணம் ப$_{3}$ந்து$_{4}$ம் மாதரம் பிதரம் கு$_{3}$ரும் ।**
**நிவாஸம் சரணம் சாஹுர் வேத$_{3}$வேதா$_{3}$ந்தபாரகா$_{3}$: ॥”**

*[நாரசப்தத்தினால் ஜீவஸமூஹம் பெரியோர்களால் சொல்லப்படுகிறது. அவர்களுக்கு ப்ராப்யப்ராபகங்களாகிற அயனமாயிருப்பதால் நாராயணன் என இங்கு சொல்லப்படுகிறான். ஆகையால் நாராயணனை ப$_{3}$ந்து$_{4}$வாகவும், தாயாகவும், தந்தையாகவும், ஆசாரியனாகவும், இருப்பிடமாகவும், உபாயமாகவும், வேதவேதாந்தங்களைக் கரைகண்டவர்கள் சொல்லு*



*கிறார்கள்.]* என்றும் சாஸ்திரங்களில் இவ்வர்த்தம் வெகு விரிவாக உபதேசிக்கப்பட்டது. **“நாராயணனே நமக்கே பறை தருவான்”** என்று ஆண்டாளும், **“வீடாக்கும் மெய்ப்பொருள்தான்......நாராயணன்”** என்றும், **“நாராயணன் என்னையாளி நரகத்தில் சேராமல் காக்கும் திருமால் தன்”** என்றும் திருமழிசைப் பிரானும் இவ்வர்த்தத்தை நாராயண சப்தத்திற்குப் பொருளாக அநுஸந்தித்தார்கள். **“சரணம் க$_{3}$திர் நாராயண:”** *[நாராயணனே மோக்ஷத்தில் அடையப்படுமவனும், அடைவதற்கு வழியுமாவான்.]* என்று வேதமும் இவ்வர்த்தத்தை உத்கோஷித்தது.

(நாராயணன்) ‘நர:’ என்று அழிவற்றவனான எம்பெருமானையும் குறிக்கும் என்று முன்னரே சொல்லப்பட்டது. **“ஜந்ஹுர் நாராயணோ நர:”** என்று அவனுடைய நாமமாகவும் படிக்கப்பட்டது. **“நரஸ்யே இமே—நாரா:”** *[நரனைச் சேர்ந்தவர்கள் நாரங்கள்]* என்கிற வ்யுத்பத்தியின்படி நாரசப்தம் **“ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்”** *[ஞானி எனக்கும் ஆத்மாவாயிருப்பவனென்று என் ஸித்தாந்தம்]* என்று எம்பெருமானாலேயே அபிமானிக்கப்பட்ட அவனடியார்களைச் சொல்லுகிறது. **“நாரா அயநம் யஸ்ய ஸ:”** என்று தன்னடியார்களையே தனக்குப் பரமப்ராப்யமாகக் கொண்டிருக்குமவன் என்று பொருள் படுகிறது. **“நச்சுவார் முன் நிற்கும் நாராயணன்”** என்றும், **“நண்ணித்தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா!”** என்றும் பெரியாழ்வாரும், **“அற்புதன் நாராயணன்...நிற்பது மேவி இருப்பதென் நெஞ்சகம்”** என்று நம்மாழ்வாரும் இவ்வர்த்தத்தை ஆதரித்தார்கள். **“நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே!”** என்று மோக்ஷோபாயத்வம், ஸர்வவ்யாபகத்வம், ஸர்வதா$_{4}$ரகத்வம் முதலிய குணங்களை நாராயண சப்தார்த்தமாக அநுஸந்தித்தருளிய திருமழிசையாழ்வார், **“நீ என்னையன்றி இலை”** என்று ப$_{4}$க்தைகதா$_{4}$ரகத்வமாகிற இவ்வர்த்தத்தை அருளிச்செய்தார். **“நண்ணித் தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா”** என்னு

மிடத்துக்கு வியாக்கியானம் செய்தருளிய பரமரஸிகரான திருவாய்மொழிப்பிள்ளை "இவருடைய நாராயண ஶப்தார்த்தம் இப்படிப்போலே காணும் இருப்பது" என்று அருளிச் செய்தார்.

(நாராயணன்) நரர்கள் என்று ஒருவிதமான குறைவு மற்றவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைச் சொல்லுகிறது. நாரம் என்று நரர்களாகிற அந்த ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வாஸஸ்தானத்தைச் சொல்லுகிறது. ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வாஸஸ்தானத்தையே தனக்கு இருப்பிடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கையாலே 'நாராயணன்' எனப்படுவதாகவும் கொள்ளலாம். "திருக்கோட்டியூர் மன்னு நாரணன்" என்றும், "தென்திரை சூழ் திருப்போ்க் கிடந்த திருநாரணு!" என்றும் பெரியாழ்வார் இவ்வர்த்தத்தை உணர்த்தினர்.

"நரஸம்ப₃ந்தி₄நோ நாரா நர: ஸ புருஷோத்தம:।
நயத்யகி₂லவிஜ்ஞாநம் நாஶயத்யகி₂லம் தம:॥
ந ரிஷ்யதி ச ஸர்வத்ர நரஸ்தஸ்மாத் ஸநாதந:।
நரஸம்ப₃ந்தி₄ந: ஸர்வே சேதநாऽசேதநாத்மகா:॥
ஈஶிதவ்யதயா நாரா த₄ார்யபோஷ்யதயா தத₂ா।
நியாம்யத்வேந ஸ்ருஜ்யத்வ ப்ரவேஶப₄ரணைஸ் தத₂ா॥
அயதே நிகி₂லாந் நாராந் வ்யாப்நோதி க்ரியயா தத₂ா।
நாராஶ்சாப்யாயநம் தஸ்ய தைஸ்தத்₃ப₄ாவநிரூபணாத்॥
நாராணமயநம் வாஸஸ் தே ச தஸ்யாயநம் ஸதா₂।
பரமா ச க₃திஸ்தேஷாம் நாராணமாத்மநாம் ஸதா₂॥
ஆபோ நாரா இதி ப்ரோக்தாஸ்தா அப்யயநமஸ்ய ச।
அதோ நாராயணோ நாம ஹேதுபி₄ர் த₃ர்ஶித: பர:॥"

[நரனுடன் ஸம்பந்தம்பெற்றவைகள் நாரங்கள். புருஷோத்தமனே நரனெனப்படுகிறுன். தன்னைப்பற்றிய எல்லா அறிவையும் அடைவிக்கிறுனுகையாலும், எல்லா இருளையும் போக்கடிக்கிறுனுகையாலும், எங்கும் விகாரமற்றவனுயிருப்பதாலும், ஸநாதனனுன அப்பரமபுருஷன் நரனெனப்படுகிறுன்.



நரனுகிய அப்பெருமானுடன் ஸம்பந்தம் பெற்றிருக்கும் எல்லாச் சேதநாசேதநங்களும், அவனுல் ஆளப்படுகையாலும், தரிக்கப்படுகையாலும், போஷிக்கப்படுகையாலும், நியமிக்கப்படுகையாலும், ஸ்ருஷ்டிக்கப்படுவதாலும், வியாபிக்கப்படுவதாலும், தாங்கப்படுகையாலும் நாரங்களாகின்றன. எல்லா நாரங்களையும் (ஸ்வரூபத்தால்) அடைவதாலும், முற்கூறிய செய்கைகளால் வியாபிப்பதாலும், அவைகளையிட்டே அவனை நிரூபிக்கவேண்டியிருக்கையாலும் நாரங்கள் அப்புருஷோத்தமனுக்கு அயநமாகின்றன. இவன் நாரங்களுக்கு இருப்பிடமாயிருக்கிறுன்; அவைகளும் எப்போதும் இவனுக்கு இருப்பிடமாயுள்ளன. நரஸமூஹங்களான ஆத்மாக்களுக்கு மேலான ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும், இவன் விளங்குகிறுன். ஜலமும் நாரசப்தத்தால் சொல்லப்படுகிறது. அதுவும் இவனுக்கு இருப்பிடமாயிருக்கிறது. ஆகையால், இக்காரணங்களால் நாராயணன் என்னும் திருநாமம் மேலானதென்று காட்டப்பட்டது.] என்று அஹிர்புத்ந்யஸம்ஹிதையில், (52—50....55) நரன், நாரம், நாராயணன் என்னும் பதங்கள் வெகு விரிவாக விவரிக்கப்பட்டதும் இவ்விடத்தில் அநுஸந்திக்கத்தக்கது.

'நாராயணன்' என்று ஸர்வேஶ்வரன் உப₄யவிபூ₄தி நிர்வாகனுய் ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் இருப்பைச் சொல்லிற்று. அப்படியிருக்குமவன் ப்ரஹ்மசாரி நாராயணனல்ல, ஸ்ரீமந்நாராயணனே என்னுமத்தைச் சொல்லுகிறது,— 'மாதவன்' என்னும் திருநாமம். சிவ புராணத்திலும்,

"வைகுண்டே₂ து பரே லோகே ஶ்ரியா ஸார்த்த₄ம் ஜக₃த்பதி:।
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப₄க்தைர் ப₄ாக₃வதை: ஸஹ॥"

[வைகுண்டமென்னும் மேலான உலகத்தில், உலகிற்கெல்லாம் ஸ்வாமியும், எண்ணமுடியாத ஸ்வரூபத்தையுடையவனுமான பகவான் விஷ்ணு, ஸ்ரீதேவியுடன் கூடியவனுய்,

கு$_3$ணநிஷ்ட$_2$ர்களான பக்தர்களுடனும், கைங்கர்யநிஷ்டர்களான பாகவதர்களுடனும் எழுந்தருளியிருக்கிறான்.] என்று சொல்லப்பட்டதன்றோ. (மாதவன்) 'மா' என்னும் பதம் ஸ்ரீதே$_3$வியைச் சொல்லுகிறது. **த$_4$வ:** 'என்னும்சொல் **'நாதன்'** என்னும் பொருளையுடையது. **'மாயா: த$_4$வ:—மாத$_4$வ:'** என்கிறபடியே. மாதவன் என்னும் திருநாமம் லக்ஷ்மீ நாதன் என்னும் அர்த்தத்தை உடையது. **''மானேய் நோக்கி மடவாளை மார்பில் கொண்டாய் மாதவா!''** என்று நம்மாழ்வார் இப்பொருளை மாத$_4$வஶப்த$_3$ார்த்த$_2$மாக அருளிச்செய்தார். இத்திருநாமம் பகவான் பரமபதத்தில் பெரியபிராட்டியாருடன் எழுந்தருளியிருப்பதைக் குறிக்கிறதென்பதை. **''வானுடை மாதவா''** என்று **பெரியாழ்வாரும், ''மாமாயன் மாதவன் வைகுந்தன்''** என்றும், **''மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே''** என்றும் **ஆண்டாளும், ''கேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்தன்''** என்றும். **''வடிவுடை மாதவன் வைகுந்தம்''** என்றும் **நம்மாழ்வாரும்** அருளிச்செய்தனர். பெரியபிராட்டியார் எல்லா தசைகளிலும் எம்பெருமானை விட்டுப்பிரியாமலிருப்பவராகையாலே. எம்பெருமானையும் இப்பிராட்டியையிட்டு நிரூபிக்க வேண்டுமென்று இத்திருநாமம் உணர்த்துகிறது. **''ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ''** என்று **வேதமும்** பரமபுருஷனைப் பிராட்டியையிட்டு நிரூபித்தது.

**''ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாத$_4$வ: |**
**க$_3$ச்ச$_2$த்$_4$வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷப$_4$ா: ||''**

[புருஷஶ்ரேஷ்டர்களே! எல்லாவுலகுக்கும் லக்ஷ்மீநாதனே தாயாகவும், தந்தையாகவும் விளங்குகிறான்; (**ஆகையால்**) இந்த **மாதவனை** சரணமடையுங்கள்.] என்று புருஷகாரபூ$_4$தையான பிராட்டியுடன் கூடிய நாராயணனே நமக்கு உபாயமாகவும், ஸ்வாமியாகவும் **ஆகிறான்** என்று பாரதத்தில் பேசப்பட்டது.



**''கடிவார் தீய வினைகள்**
**நொடியாருமளவைக்கண்**
**கொடியா அடுபுள் உயர்த்த**
**வடிவார் மாதவனாரே''** என்று

**ஆழ்வாரும் மாதவனே** உபாயமாகிறானென்று உணர்த்தினார். **''மாதவன் பூதங்கள்''** என்றும், **''மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே''** என்றும் மாதவனே ஸர்வஶேஷியாகவும், மோக்ஷ ப்ராப்யனாகவும் ஆகிறானென்று அருளிச்செய்தார்கள். ஸர்வேஶ்வரன் ஜகத்காரணமாம்போதும், பிராட்டிக்கு ப்ரேரகத்வரூபமான அந்வயம் உண்டென்பதை **ஆளவந்தார், ஆழ்வான்.** பட்டர் முதலானோர் தம் ஸ்தோத்ரங்களில் அருளிச்செய்தனர். **பெரியவாச்சான்பிள்ளையும்,** அவருடைய திருக்குமாரரான **நாயனாராச்சான்பிள்ளையும்** அருளிச்செய்த சது:ச்லோகீ **வியாக்கியானங்களிலும்** இவ்விஷயம் விவரிக்கப்பட்டது.எம்பெருமான் சேதனர்களுடையஹ்ருதயகமலத்தில் பிராட்டியுடன் கூடியவனாகவே எழுந்தருளியிருக்கிறானென்பது. **''ஸர்வபூ$_4$தஹ்ருத$_3$ப்ஜஸ்த$_2$ா''** என்று ப்ராஹ்மபுராணத்திலும், **''மார்வ மென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி''** என்று பெரியாழ்வாராலும் பேசப்பட்டது. வ்யூஹவிபவார்ச்சாவதாரங்களிலும் இவளுடன் கூடியவனாகவே எம்பெருமான் விளங்குகிறானென்பது ஸகல ப்ரமாணஸித்தம். (மாதவன்) **'மா'** என்று புருஷோத்தமனை அடைவதற்கு ஸாதனமான பரவித்யை சொல்லப்படுவதாகவும் அந்த வித்யைக்கு ப்ரவர்த்தகனாகையால் இவன் மாதவனெனப் படுகிறானென்றும் கொள்ளலாம்.

**''மா வித்$_3$யா ச ஹரே: ப்ரோக்தா தஸ்யா ஈஶோ யதோ ப$_4$வாந் |**
**தஸ்மாந்மாத$_4$வநாமாஸி த$_4$வ: ஸ்வாமீதி ஶப்$_3$தி$_3$த: ||''**

[''மா'' என்று ஹரியை ப்ரதிபாதி$_3$க்கும் வித்யை சொல்லப்படுகிறது. அதற்கு ஸ்வாமியாயிருப்பதால் நீர் மாதவனென்று சொல்லப்படுகிறீர். **'த$_4$வன்'** என்றும் ஶப்$_3$த$_3$ம்

ஸ்வாமியென்னும் பொருளையுடையது.] என்று இவ்வர்த்தம் ஹரிவம்ஶத்தில் ஆதரிக்கப்பட்டது.

**“மௌநாத் த்4யாநாச்ச யோகா3ச்ச வித்3தி4 பா4ரத மாத4வம்”**

[பரதகுலத்துதித்தவனே! மௌநத்தினாலும், தியானத்தினாலும், யோகத்தினாலும் மாதவனென்று அறிவாயாக.] என்று வியாஸர் சொல்லியபடியும் மாதவநாமத்திற்குப் பொருள் கொள்ளலாம். **“மது4வித்3யாऽவபோ3த்4யத்வாத்3வா”** [மதுவித்யையினால் அறியப்படுமவனாகையாலே மாதவனெனப்படுகிறான்.] என்றும் சங்கரர் பொருளுரைத்தார். **“மது4குலே ஜாதத்வாந் மாத4வ:”** [மதுகுலத்தில் பிறந்தவனாகையாலே மாதவனாகிறான்] என்றும் பொருள்கொண்டனர். **“மா லக்ஷ்மீ: தீ4: ஸரஸ்வதீ தே அவதீதி மாத4வ:”** [‘மா’ என்று லக்ஷ்மியும், ‘தீ4:’ என்று ஸரஸ்வதியும் சொல்லப்படுகின்றனர். அவர்களை ரக்ஷிக்கிறானாகையால் மாதவனாகிறான்.] என்றும் சங்கரர் பொருள் கொண்டார். இப்படிப் பல பொருள்களை உடையதாயிருந்தபோதிலும், எல்லா ஆழ்வார்களாலும் ஆதரிக்கப்பட்டதான லக்ஷ்மீநாதன் என்னும் பொருளே இவ்விடத்திற்குப் பொருளாகக்கடவது.

இப்படி அச்யுதனாகவும், கோவிந்தனாகவும், கேசவனாகவும், நாராயணனென்னும் அஸாதா4ரணமான திருநாமத்தை உடையவனாகவும், பிராட்டியுடன் கூடியவனாகவும் எழுந்தருளியிருக்கிறான் ஸர்வேஶ்வரன் என்று இதுவரையில் கூறப்பட்டது. இப்படிப்பட்ட பெருமைகளையுடையவனாக இவன் எழுந்தருளியிருக்கிறான் என்னுமிடத்துக்கு ப்ரமாணமென்ன? என்ற ப்ரஶ்னம் பிறக்க, வேதவாக்கியங்களே இவ்விஷயத்தில் ப்ரமாணம் என்று சொல்லுகிறது கோவிந்தன் என்னும் திருநாமம். கோ3ஶப்3த3த்தினால் வேதவாக்கியங்களைச் சொல்லுகிறதாகையால் வேதத்தால் ப்ரதிபாதிக்கப்படுமவன் என்று கோவிந்தநாமத்திற்குப் பொருளேற்படுகிறது. இவன் அடியவர்களை நழுவவிடாத அச்யுதனா



என்னுமதுக்கு ப்ரமாணம் **“ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் நாராயணம்”** என்னும் நாராயணானுவாகம். த்ரிவித4பரிச்சே2த3 மற்றவனாகவும், அளவற்ற ரூபகுணவிபங்களையுடையவனாகவுமுள்ள அநந்தன் என்பதற்கு **“ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம”** **“யதே3கமவ்யக்தமநந்தரூபம்”** **“அநந்தமவ்யயம் கவிம் ஸமுத்3ரேந்தம்”** முதலான தைத்திரீயோபநிஷத் வாக்யங்களும், **“அநந்தஶ்சாத்மா விஶ்வரூபோ ஹ்யகர்த்தா”** என்னும் ஶ்வேதாஶ்வதரவாக்கியமும் ப்ரமாணமாகின்றன. இப்பரமபுருஷனே பல அவதாரங்களெடுத்து, தாழ்ந்தோருடன் ஒரு நீராகக் கலந்து பரிமாறும் கோவிந்தனாகிறான் என்பதற்கு ப்ரமாணம் **“அஜாயமானோ ப3ஹுதா4 விஜாயதே। தஸ்ய தீ4ரா: பரிஜாநந்தி யோநிம்”** [பிறப்பில்லாத புருஷோத்தமன் பலபடியாகப் பிறக்கிறான். புத்திமான்களில் சிறந்தவர்களே அவனுடைய பிறப்பின் ரஹஸ்யத்தை அறிகிறார்கள்.] **“யுவா ஸுவாஸா: பரிவீத ஆகா3த்। ஸ உ ஶ்ரேயாந் ப4வதி ஜாயமாந:। தம் தீ4ராஸ: கவய உந்நயந்தி।”** [யௌவனத்தை உடையவனாகவும், அழகிய பீதாம்பரத்தை தரித்தவனாகவும், (நித்யஸூரிகளால்) சூழப்பட்டவனாகவும் அப்பரமபுருஷன் தோன்றினான். அவன் பிறந்த பின்பே மேன்மையை அடைகிறான். அவனை ஞானிகளான கவிகள் அறிகிறார்கள்.], **“பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாऽவேத3விந்மநுதே தம் ப்3ருஹந்தம்”** [ஸர்வலோக பிதாவான புருஷோத்தமன், ஒவ்வொரு அவதாரத்திலும் தன்னால் பிறப்பிக்கப்பட்ட ஒருவனைப் பிதாவாகக்கொண்டு பிறக்கிறான். வேதத்தை அறியாதவன் அவனுடைய பெருமையை அறியமாட்டான்.] முதலியவை. ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் உத்பாதகனாய், புகழப்பட்ட கேசத்தை உடையவனாயுள்ள கேசவன் இவனே என்பதை **“நாராயணாத் ப்3ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்3ரோ ஜாயதே”** [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்

கிறான். நாராயணனிடமிருந்து ருத்திரன் உண்டாகிறான்.] "ஹிரண்யகேஶ:" [ஸுவர்ணம் போன்ற அழகிய திருக்குழல் கற்றைகளை உடையவன்] முதலிய **வேதவாக்கியங்கள்** உத்கோஷித்தன. இவன் நாராயணனாயெழுந்தருளியிருக்கும் இருப்பும், **"விஶ்வம் நாராயணம்"** என்று தொடங்கி **"நாராயணபரம் ப்$_3$ரஹ்ம தத்வம் நாராயண: பர:। நாராயண பரோ ஜ்யோதிரர்த்மா நாராயண: பர:। யச்ச கிஞ்சிஜ்ஜக$_3$த் யஸ்மிந் த்$_3$ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா। அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:॥"** என்று நாராயணானுவாகத்திலும், **"ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்"** முதலிய வாக்கியங்களால் மஹோபநிஷத்திலும், **"சக்ஷுஶ்ச த்$_3$ரஷ்டவ்யஞ்ச நாராயண:। ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோதவ்யஞ்ச நாராயண:"** என்று தொடங்கி, **"திஶஶ்ச ப்ரதி$_3$ஶஶ்ச ஸர்வம் நாராயண:"** என்று ஸுபாலோபநிஷத்திலும், **"ஏஷ ஸர்வபூ$_4$தாந்தராத்மா......ஏகோ நாராயண:"** என்று அந்தர்யாமி ப்$_3$ராஹ்மணத்திலும், மற்றுமுள்ள நாராயணோபநிஷத் முதலியவைகளிலும் கோஷிக்கப்பட்டன.

இப்படிப்பட்ட பெருமையையுடைய இப்பெருமான் பிராட்டியுடன் கூடவே எழுந்தருளியிருக்கிறான் என்பது, **"ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ"** [உனக்கு ஸ்ரீ பூமிதேவிகள் பத்னிகள்.] **"அஸ்யேஶாநா ஜக$_3$தோ விஷ்ணுபத்நீ"** [இப்பிராட்டி இந்த ஜகத்துக்கு ஈஶ்வரியாகவும், விஷ்ணுவுக்குப் பத்தினியாகவும் இருக்கிறாள்.], **"ஶ்ரத்$_3$த$_4$யா தே$_3$வோ தே$_3$வத்வமஶ்நுதே"** [ஶ்ரத்$_3$தா$_4$ ஶப்தத்தினால் சொல்லப்படும் பிராட்டியினாலேயே ஈச்வரன் ஈச்வரத்தன்மையை அடைகிறான்.] **"ஆநீத$_3$வாதம் ஸ்வத$_4$யா ததே$_3$கம்"** [ஒன்றுமில்லாத ப்ரளயகாலத்தில் ஸ்வதா$_4$ சப்தத்தினால் சொல்லப்படும் பிராட்டியுடன் கூடிய பகவான் ஒருவனே இருந்தான்] முதலிய ஶ்ருதி வாக்கியங்களில் ஸமுத்கோஷிக்கப்பட்டது.

ஆக, இப்படி அச்யுதாதி$_3$ நாமங்களையும் அவைகளில் சொல்லப்பட்ட பெருமைகளையுமுடையவன் ஸர்வேஶ்வரன்



என்பதற்கு ப்ரமாணம் வேதம் என்று கோவிந்த நாமத்தால் கோஷிக்கப்படுகிறது. இந்த கோவிந்த நாமத்திற்குள்ள மற்ற பொருள்கள் அநந்த நாமத்திற்கடுத்த கோவிந்த நாமத்திற்கு அர்த்தமெழுதுகையில் காட்டப்பட்டன. அந்த கோவிந்தநாமத்தால் ஸௌலப்$_4$யகு$_3$ணப்ரகாஶகமான கிருஷ்ணாவதாரம் அநுபவிக்கப்பட்டது. இங்கு வேத$_3$ ப்ரதிபாத்$_3$யத்வமாகிற பரத்வம் பேசப்படுகிறது. ஆகையால் புநருக்தியில்லை.

ஆக, கேசவன் முதலான நான்கு திருநாமங்களால் பரத்வம் பேசப்பட்டது. இனி விஷ்ணு என்னும் திருநாமத்தினால் நான்காவது வியூஹமான அநிருத்தமூர்த்தி சொல்லப்படுகிறார். இவ்விடத்தில் "வ்யூஹமாவது:—ஸ்ருஷ்டி ஸ்தி$_2$தி ஸம்ஹாரார்த்த$_2$மாகவும், ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்த$_2$மாகவும், உபாஸகாநுக்$_3$ரஹார்த்த$_2$மாகவும், ஸங்கர்ஷண ப்ரத்$_4$யும்நாநிருத்$_4$த$_4$ரூபேண நிற்கும் நிலை. பரத்வத்தில் ஜ்ஞாநாதி$_3$களாறும் பூர்ணமாயிருக்கும். வ்யூஹத்தில் இவ்விரண்டு குணம் ப்ரகடமாயிருக்கும். அதில் ஸங்கர்ஷணர் ஜ்ஞாநபலங்கள் இரண்டோடும் கூடி ஜீவதத்வத்தை அதி$_4$ஷ்டி$_2$த்து, அத்தை ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து, ப்ரத்$_3$யும்நாவஸ்தை$_2$யையும் ப$_4$ஜித்து, ஶாஸ்த்ரப்ரவர்த்தனத்தையும் ஜக$_3$த்ஸம்ஹாரத்தையும் பண்ணக்கடவராயிருப்பர். ப்ரத்யும்நர் ஐஶ்வர்யவீர்யங்களோடும்கூடி மநஸ்தத்வத்தை அதி$_4$ஷ்டி$_2$த்து, த$_4$ர்மோபதே$_3$ஶத்தையும், மநுசதுஷ்டயம் தொடக்கமான ஶுத்$_3$த$_4$வர்க்க$_3$ ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பர். அநிருத்தர் ஶக்திதேஜஸ்ஸுக்கள் இரண்டோடும்கூடி ரக்ஷணத்துக்கும், தத்வஜ்ஞாநப்ரதா$_3$னத்துக்கும் காலஸ்ருஷ்டிக்கும், மிஶ்ர ஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்." என்று **பிள்ளைலோகாசார்யர்** தத்வத்ரயத்தில் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் அநுஸந்திக்கத்தக்கவை. விஷ்ணுசப்தத்தால் சொல்லப்படுகிறவர் அநிருத்தரே என்று நிர்ணயிப்பது எப்படியெனில்:

'த்ரிபாதூ$_{3}$ர்த்$_{4}$வ உதை$_{3}$த் புருஷ: பாதே$_{3}$ாऽஸ்யேஹாப$_{4}$வாத் புந:|
தேதோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாऽநஶநே அபி$_{4}$ ||"

*[பரமபதத்திலுள்ள பரமபுருஷன் மூன்று உருவங்களை உடையவராகி ஸங்கல்பித்தார். பரம்பதநாதனுடைய ஒரு அவதாரமான அநிருத்தர் மறுபடியும் இங்கு அவதரித்தார். அதன்பிறகு ஸர்வவித$_{4}$மான சேதனர்களையும் ரக்ஷிப்பதற்காக* **இவ்வுலகையெல்லாம் (அவதாரம் செய்தவன் மூலம்) வியாபித்தார்.]** *என்று புருஷஸூக்தத்தில் அநிருத்தரைக் குறித்து விஷ்ணுசப்தார்த்தம் அநுஸந்திக்கப்பட்டது. மேலும், அநிருத்தரே ப்ரஹ்மருத்ரர்களுக்கு இடையில் பத்மநாபராகிய விஷ்ணுவாக அவதரித்தார் என்று சாஸ்த்ரங்கள் சொல்லுகையாலும். கார்யவாசிரூப்தம் காரணத்தைச் சொல்லுமாகையாலும், 'பத்$_{3}$மநாப$_{4}$ர்' என்று ப்ரத$_{2}$மாவதாரமான விஷ்ணுவைத் தனியே இங்கு எடுக்கையாலும் இங்கு விஷ்ணுசப்தம் அநிருத்த நாராயணனைச் சொல்லக்கடவது. மற்ற வியூஹங்களுமிருக்க இங்கு அநிருத்தரை எடுத்ததுக்குக் கருத்தென்னெனில்:*

**"பத்$_{3}$மநாப$_{4}$ாதி$_{3}$கா: ஸர்வே வைப$_{4}$வீயாஸ் ததை$_{2}$வ ச |**
**ஷட்த்ரிம்ஶத்ஸங்க்$_{2}$யாஸங்க்$_{2}$யாதா: ப்ராத$_{4}$ாந்யேந**
**க$_{3}$ணேஶ்வர ||**
**ஷட்த்ரிம்ஶத்$_{3}$பே$_{4}$த$_{3}$பி$_{4}$ந்நாஸ்தே பத்$_{3}$மநாப$_{4}$ாதி$_{3}$கா: ஸுரா: |**
**அநிருத்$_{3}$த$_{4}$ாத் ஸமுத்பந்நா தீ$_{3}$பாத்$_{3}$ தீ$_{3}$பா இவேஶ்வரா: ||"**

*[விஷ்வக்ஸேநரே! பத்மநாபன் முதலிய முக்கியமான விபவாவதாரங்கள் முப்பத்தாறாகும். இப்படி பத்மநாபன் முதலிய முப்பத்தாறு விபவமூர்த்திகளும், விளக்கிலிருந்து உண்டான விளக்குகள்போல் அநிருத்த மூர்த்தியிடமிருந்து அவதரித்தார்கள்.] என்று விஷ்வக்ஸேநஸம்ஹிதையில் சொல்லியபடியே, பின்சொல்லப்போகும் பத்மநாபன், திரிவிக்கிரமன், வாமனன், தாமோதரன் என்னும் மூர்த்திகளுக்கு மூலமூர்த்தி அநிருத்தரேயாகையால் அவரை இங்கு எடுக்கிறது. நிற்க; விஷ்ணுரூப்தத்தின் பொருளை இனி விவரிப்போம்.*



*"ததோ விஷ்வங் வ்யக்ராமத்" என்று அவதாரத்தினால் வியாபித்திருப்பது விஷ்ணுரூப்தார்த்தமாகப் புருஷஸூக்தத்தில் பேசப்பட்டது.*

**"வ்யாப்ய ஸர்வாநிமாந் லோகாந் ஸ்தி$_{2}$த: ஸர்வத்ர கேஶவ: |**
**ததஶ்ச விஷ்ணுநாமாஸி விஶேர் த$_{4}$ாதோ: ப்ரவேஶநாத் ||"**

*[கேசவனாகிற தேவரீர் இந்த எல்லா உலகங்களையும் எங்கும் வியாபித்து நிற்கிறீர்; ஆகையால் விஷ்ணுவென்னும் திருநாமத்தையுடையவராய் விளங்குகிறீர் 'விஶ' என்னும் தாது ப்ரவேசித்தல் என்னும் பொருளையுடைத்தாயிருப்பதால்.] என்று ஸ்ரீவராஹபுராணத்தில் சொல்லப்பட்டபடியே எங்கும் தன் ஸ்வரூபத்தால் வியாபித்து நிற்பவன் விஷ்ணுவென்றும் பொருள்கொள்ளலாம்.*

**"யஸ்மாத்$_{3}$ விஷ்டமித$_{3}$ம் விஶ்வம் தஸ்ய ஶக்த்யா மஹாத்மந: |**
**தஸ்மாத் ஸ ப்ரோச்யதே விஷ்ணுர் விஶேர் த$_{4}$ாதோ:**
**ப்ரவேஶநாத் ||"**

*[மஹாத்மாவான அப்பரமபுருஷனுடைய* **சக்தியினால்** *இவ்வுலகமெல்லாம்* **வியாபிக்கப்பட்டிருப்பதால்** *அவன் விஷ்ணுவெனப்படுகிறான்; '*விஶ*' என்னும் தாது வியாபித்தலைச் சொல்லுவதால்.] என்று விஷ்ணுபுராணத்திலும், ஆதித்யபுராணத்திலும் சொல்லியபடியே சக்தியினால் எல்லா வஸ்துக்களையும் வியாபித்திருப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.*

**"வ்யாப்ய மே ரோத$_{3}$ஸீ பார்த்த$_{2}$ காந்திரப்$_{4}$யதி$_{4}$கா ஸ்தி$_{2}$தா |**
**ஸம்ஸாரவேஶநாத் பார்த்த$_{2}$! விஷ்ணுரித்யபி$_{4}$ஸம்ஜ்ஞித: ||**

*[பார்த்தனே! என்னுடைய மிகவதிகமான ஒளியானது ஆகாயம் முழுவதும் வியாபித்து நிற்கிறது. இப்படி இவ்வுலகம் முழுவதும் வியாபித்து நிற்பதால் நான் விஷ்ணு வென்று சொல்லப்படுகிறேன்.] என்று மஹாபாரதத்தில் சொல்லியபடியே ஸர்வவ்யாபினியான விக்$_{3}$ரஹகாந்தியை*

உடையவன் என்றும் விஷ்ணுசப்தத்துக்குப் பொருள் கொள்ளலாம். "யதா$_2$ ஸர்வக$_3$தோ விஷ்ணு:" [விஷ்ணுவானவர் எப்படி ஸர்வ வியாபியாயிருக்கிறாரோ....] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லியபடியே விக்ரஹத்தாலே எங்கும் வியாபித்து நிற்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வர்த்தங்களெல்லாம் "விஷ்ணுர் விக்ரமணாத் தே$_3$வ:" என்று பாரதம் உத்யோகபர்வத்தில் உணர்த்தப் பட்டது. இப்படி இவன் எல்லாவற்றையும் வியாபித்து விளங்குவதால் எல்லாம் இவனே என்று சொல்லலாம்படி யிருக்கிறானென்பதை

"ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் பு$_4$வநாநி விஷ்ணுர்
வநாநி விஷ்ணுர் கி$_3$ரயோ தி$_3$ஶஶ்ச।
நத்$_3$ய: ஸமுத்$_3$ராஶ்ச ஸ ஏவ ஸர்வம்
யத$_3$ஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய॥"

[விப்ரஶ்ரேஷ்டரே! ஜ்யோதிஸ்ஸுக்களும் விஷ்ணுவே; புவனங்களும் விஷ்ணுவே; வனங்களும் விஷ்ணுவே: மலைகளும், திக்குகளும், நதிகளும், ஸமுத்ரங்களும், 'இருக்கிறது' என்றே எப்போதும் சொல்லப்படும் ஜீவதத்வமும், 'இல்லை' என்னும் வ்யவஹாரத்துக்கு விஷயமான அசித்தத்வமும் ஆகிய எல்லாம் அந்த பகவான் விஷ்ணுவே.] என்று விஷ்ணுபுராணம் உத்கோஷித்தது.

"ஆஸ்ய ஜாநந்தோ நாம சித்$_3$விவக்தந மஹஸ்தே விஷ்ணோ ஸுமதிம் ப$_4$ஜாமஹே" [விஷ்ணுவே! உன்னுடைய திருநாமத்தை அறியும் நாங்கள், உன்னுடையது போன்ற தேஜஸ்ஸையும் தெளிவான ஞானத்தையும் அடைகிறோம்.] என்று ருக்வேதத்திலும், "தத்$_3$ விஷ்ணோ: பரமம் பத$_3$ம்" என்றும், "விஷ்ணோர் யத் பரமம் பத$_3$ம்" என்றும், "ஶம் நோ விஷ்ணுருருக்ரம:" என்றும், "விஷ்ணுக்ராந்தே வஸுந்த$_4$ரே" என்றும் "விஷ்ணோ: பதே$_3$ பரமே மத்$_4$வ உத்ஸ:" [விஷ்ணுவினுடைய மேலான திருவடியிலிருந்து அம்ருத



தா$_4$ரைகள் பொழிகின்றன.] என்றும், மற்றும் பலபல வேத வாக்கியங்களிலும் இத்திருநாமம் மிகவும் ஆதரிக்கப்பட்டது.

"தஸ்மாத்$_3$ விராட்$_3$ஜாயத" [அந்த அநிருத்தநாராயணனிடமிருந்து பிரமன் உண்டானான்.] என்று புருஷஸூக்தத்திலும்,

"துரீயோऽயம் ஜக$_3$ந்நாதே$_2$ா ப்$_3$ரஹ்மாணமஸ்ருஜத் புந:।"

[நான்காவது மூர்த்தியான இவ்வநிருத்தர் பிரமனை ஸ்ருஷ்டித்தார்.] என்று விஷ்வக்ஸேனஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டபடியே பிரமனைப் பிறப்பித்தவரான அநிருத்தமூர்த்தி விஷ்ணுசப்தத்தால் சொல்லப்பட்டார். அடுத்தபடியாக, அப்பிரமனைப் பிறப்பிக்குமளவேயன்று, அவனுக்குத் துன்பம் வந்தபோது அதைப்போக்கடிப்பவனும் இவனே என்று உணர்த்துகிறது 'மது$_4$ஸூத$_3$நன்' என்னும் திருநாமம். கேசவன் என்று தொடங்கி கோவிந்தன் என்பது வரை பரத்வம் பேசப்பட்டது. விஷ்ணுவென்று வியூஹம் உணர்த்தப்பட்டது. மதுஸூதனன் என்னும் இத்திருநாமம் தொடங்கி விப$_4$வாவதாரம் விவரிக்கப்படுகிறது. "யோ ப்$_3$ரஹ்மாணம் வித$_3$தா$_4$தி பூர்வம் யோ வை வேதா$_3$ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" [எவனொருவன் பிரமனை முதலில் பிறப்பித்து, அவனுக்கு வேதங்களை உபதேசிக்கிறானோ] என்று வேதத்தில் சொல்லியபடியே ஸர்வேஶ்வரன் வேதங்களை ப்ரஹ்மாவுக்கு உபதேசித்தருளினான். நான்கு சிசுரூபமாயிருந்த அந்த நான்கு வேதங்களையும், மது, கைடபன் என்னும் இரு அஸுரர்கள் பிரமனிடமிருந்து பறித்துக்கொண்டுபோய், ரஸாதலத்தில் ஒளித்து வைத்தனர். வேதங்களை இழந்த அப்பிரமனும், 'கண்ணிழந்தேன், தனமிழந்தேன்' என்று கேசவனை நோக்கிக் கதறினான். இக்கூக்குரலைக்கேட்ட கருணை வள்ளலான அப்பெருமானும் ஹயக்ரீவாவதாரம் செய்து மது கைடபர்களை ஸம்ஹரித்துப் பிரமனுக்கு வேதங்களை மீட்டுக்கொடுத்தான். இப்படி ப்ரத$_2$மஜனை (முதலில் பிறந்தவனை) பிரமனுக்குச் செய்த

உபகாரமாகையாலே இது அவதாரங்களுள் முதலில் அநு ஸந்திக்கப்படுகிறது. (மது₄ஸூத₃னன்) மதுவென்னும் அஸுரனைக் கொன்றவன்.

''கர்ணமிஸ்ரோத்₃ப₄வம் சாபி மது₄நாம மஹாஸுரம்।
ப்₃ரஹ்மணோபசிதிம் குர்வந் ஜக₄ாந புருஷோத்தம:॥
தஸ்ய தாத வதா₄த்₃தே₃வ தே₃வத₃ாநவமாநவா:
மது₄ஸூத₃ந இத்யாஹு: ருஷயஸ்ச ஜநார்த₃நம்॥''

[பகவானுடைய காதிலிருந்து உண்டான மதுவென்னும் பெரிய அஸுரனை பிரமனுக்கு நன்மை செய்வதற்காகப் புருஷோத்தமன் கொன்ருன். குழந்காய்! அவனைக் கொன்ற தாலேயே, தேவர்கள், அஸுரர்கள், மனிதர்கள், ரிஷிகள் ஆகிய யாவரும் ஜநார்தனனை மதுஸூதனனென்று சொல்லு கிருர்கள்.] என்று மஹாபாரதத்தில் இந்த நாமத்தின் பொருள் உரைக்கப்பட்டது.

''த₃த்₃ருஶாதேऽரவிந்த₃ஸ்த₂ம் ப்₃ரஹ்மாணமமிதப்ரப₄ம்।
ஸ்ருஜந்தம் ப்ரத₂மம் வேத₃ாம்ஸ்சதுரஸ்சாருவிக்ரமௌ॥
ததோ விக்₃ரஹிணஸ்தாம்ஸ்து த்₃ருஷ்ட்வா
தாவஸுரோத்தமௌ।
வேத₃ாஞ்ஜக்₃ருஹது ராஜந் ப்₃ரஹ்மண: பஸ்யதஸ் தத₃ா॥
அத₂ தௌ த₃ாநவஸ்ரேஷ்டௌ₂ ஃ₂ருஹீத்வா தாந்
ஸநாதநாந்।
ரஸாம் விவிஶதுஸ் தூர்ணமுத₃பூர்ணே மஹோத₃தௌ₄॥
ததோ ஹ்ருதேஷு வேதே₃ஷு ப்₃ரஹ்மா கஸ்மலமாவிஶத்।
ததோ வசநமீஶாநம் ப்ராஹ வேதைர் விநாக்ருத:॥
ப்₃ரஹ்மா:–வேத₃ா மே பரமம் சக்ஷுர் வேத₃ா மே பரமம் த₄நம்।
வேத₃ா மே பரமம் த₄ாம வேத₃ா மே ப்₃ரஹ்ம சோத்தமம்॥
மம வேத₃ா ஹ்ருதா: ஸர்வே த₂ாநவாப்₄யாம் ப₃லாதி₃த:।
அந்த₄காரா இமே லோகா ஜாதா வேதைர் விவர்ஜிதா:॥
வேதே₃ ஹ்ருதேऽஹம் கிம் குர்யாம் லோகாந் வை
ஸ்ரஷ்டுமுத்₃யத:।
அஹோ ப₃த மஹத்₃ து₃:க்க₂ம் வேத₃நாஶநஜம் மம॥



ப்ராப்தம் து₃நோதி ஹ்ருத₃யம் தீவ்ரஶோகாமயஸ்த்வயம்।
கோ ஹி ஶோகார்ணவே மக்₃நம் மாமிஹாத்₃ய ஸமுத்₃த₄ரேத்॥
இத்யேவம் ப₄ாஷமாணஸ்ய ப்₃ரஹ்மணோ ந்ருபஸத்தம।
ஹரிஸ்தோத்ரார்த்த₂முத்₃பூ₄தா புத்₃தி₄ர் புத்₃தி₄மதாம் வர॥
ததோ ஜகௌ₃ பரம் ஜப்யம் ப்ராஞ்ஜலி: ப்ரக்₃ரஹம் ப்ரபு₄:॥...
ஏதஸ்மிந்நந்தரே ராஜந் தே₃வோ ஹயஶிரோத₄ர:।
ஜக்₃ராஹ வேத₃ாநகி₂லாந் ரஸாதலக₃தாந் ஹரி:॥
ப்ராத₃ாச்ச ப்₃ரஹ்மணே ராஜந் தத: ஸ்வாம் ப்ரக்ருதிம்
யயௌ॥

ததஸ்தயோர் வதே₄நாஶு வேத₃ாபஹரணேந ச।
ஶோகாபநயநம் சக்ரே ப்₃ரஹ்மண: புருஷோத்தம:॥''

[மது, கைடபன் என்னும் அஸுரர்கள் அளவற்ற ஒளியை யுடையவனும், தாமரைமலரில் வீற்றிருப்பவனும், அழகிய உருவையுடைய நான்கு வேதங்களேயும் முதன்முதலில் ஸ்ருஷ்டிப்பவனுமான பிரமனைப் பார்த்தனர். சரீரத்துடன் கூடிய அவ்வேதங்களைக்கண்ட அந்த அஸுரர்கள் பிரமன் கண்டுகொண்டிருக்கும்போதே அவைகளை எடுத்துக் கொண்டனர். பிறகு அவ்வஸுரஸ்ரேஷ்டர்கள் பழமை யான அவ்வேதங்களை எடுத்துக்கொண்டு, நீர்நிறைந்த கடலினுள்ளிருக்கும் ரஸாதலத்தினுள் விரைவில் நுழைந் தனர். இப்படி வேதங்கள் கவரப்பட்டபின் பிரமனைத் துக்கம் பீடித்தது. அதன்பின் வேதங்களை இழந்த நான்முகன் ஈச்வரனைக் குறித்துப் பின்வருமாறு உரைத்தனன்:— ''வேதங்களே எனக்கு மேலான கண்; வேதங்களே எனக்கு மேலான தனம். வேதங்களே எனக்கு மேலான ஒளி. எனக்குப் பெருமையைக் கொடுப்பவைகளில் வேதங்களே சிறந்தவை. அஸுரர்களுடைய பலத்தினுல் என்னுடைய வேதங்களெல்லாம் இங்கிருந்து பறிக்கப்பட்டன. வேத மற்றவையான இவ்வுலகங்கள் இருள் சூழ்ந்தவையாயின. லோகங்களை ஸ்ருஷ்டிக்க முற்பட்ட யான் வேதமில்லாமல்

என்ன செய்வேன்? வேதங்கள் நசித்ததினுல் எனக்குப் பெருந்துன்பம் வந்தடைந்துவிட்டது. தீவ்ரசோகமான இந்த வியாதி என் மனத்தைத் துன்புறுத்துகிறது. இத் துன்பக்கடலில் முழுகும் என்னை யார்தான் கரையேற்ற முடியும்?'' என்று இம்மாதிரியாக ப்ரஹ்மா பேசிக்கொண்டிருக்கும்போது 'ஹரியை ஸ்தோத்ரம் செய்யவேண்டுமென்னும் புத்தி அவருக்கு உண்டாயிற்று. அதன்பிறகு படைக்கும் கடவுளான அவர் கைகூப்பி நின்று. மிகச்சிறந்த இந்த ஸ்தோத்ரத்தைப் பாடினுர்........இதற்கிடையில் பகவான் ஹரி குதிரைபோன்ற முகத்தையுடைய ஹயக்ரீவராய் அவதரித்து, ரஸாதலத்திலிருந்த எல்லா வேதங்களையும் எடுத்துக்கொணர்ந்து பிரமனிடம் கொடுத்தருளினுர். அதன்பின் பிரமன் தன் இயற்கை நிலையை அடைந்தனன். இப்படி அந்த அஸுரர்களைக் கொன்றும், வேதங்களை மீட்டுக்கொணர்ந்தும் ப்ரஹ்மாவினுடைய சோகத்தைப் புருஷோத்தமன் போக்கடித்தான்.] என்று மஹாபாரதத்தில் இந்த விருத்தாந்தம் விவரிக்கப்பட்டது.

**''மத$_3$மிவ மது$_4$கைடப$_4$ஸ்ய ரம்ப$_4$ா–**
**கரப$_4$ கரீந்த்$_3$ரகராபி$_4$ரூப்யத$_3$ர்ப்பம் |**
**ஸ்புடமிவ பரிபூ$_4$ய க$_3$ர்வகு$_3$ர்வோ:**
**கிமுபமிமீமஹி ரங்க$_3$குஞ்ஜரோர்வோ: ||''**

[மது கைடபர்களுடைய கொழுப்பைக் குலைத்ததுபோல், வாழைத்தண்டு, கையின் வெளிப்புறமான கரப$_4$ப்ரதேசம், யானைத் துதிக்கை ஆகிய இவைகளின் அழகுச்செருக்கையும் அடக்கி, அந்த கர்வத்தினுல் பருத்து விளங்குகிற ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளுக்கு எப்பொருளை உபமானமாகச் சொல்லுவோம்?] என்று பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலும், **''பிஷ்'-து$_3$ஷ்டமது$_4$கைடப$_4$கௌ''** [மது கைடபர்களாகிய துஷ்டப்புழுக்களைப் பிசைந்து கொன்றவைகளான திருத்துடைகள்] என்று **ஆழ்வான்** ஸுந்தரபாஹுஸ்தவத்திலும் அருளிச்செய்தபடியே மது கைடபர்



கள் பகவானுல் துடையினுல் இறுக்கிக் கொல்லப்பட்டனர் என்பது பிரஸித்தம்.

**''காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிகள்**
**ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப—வாய்ந்த**
**மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்**
**அதுகேடவர்க்கிறுதியாங்கு''** [மூன் திருவ 65] —என்று

எம்பெருமானுடைய ஶ்வாஸத்தாலேயே மதுகைடபர்கள் மாண்டனர் என்று **பேயாழ்வார்** அருளிச்செய்தார். கல்பாந்தரத்தில் இப்படியுள்ளதாகவும் கொள்ளலாம். அன்றிக்கே, எம்பெருமான் ஆயாஸம் சிறிதுமின்றி அவர்களை முடித்தபடியைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். இந்த மது கைடபர்கள் பிரமனுடைய கர்மாநுபவத்தின் பொருட்டு எம்பெருமானுலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்டனர். ரஜஸ்தமோகுணங்களே வடிவெடுத்தவர்கள் இவர்களென்று பாஞ்சராத்ர சாஸ்திரத்தில் சொல்லப்பட்டது. பிறக்கும்போதே **''எங்களை நீ கொல்லுவாயாக''** என்று யாரைக் குறித்துத் தாங்கள் சொல்லுகிறுர்களோ அவர்களாலேயே சாவு நேரவேண்டுமென்ற வரத்தைப் பெற்றனர். வேதங்களுடன் கூடிய ப்ரஹ்மாவைக்கண்டு வேதங்களைக் கவர்ந்து ரஸாதலத்தில் ஒளித்தனர். பிரமனுல் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட பகவான் ஹயக்ரீவாவதாரம் செய்து ஓர் இனிய இசையைப் பாட, அவ்வொலியைக்கேட்ட அவ்வஸுரர்கள் வேதத்தை வைத்துவிட்டு ஒலி வரும் வழியில் சென்றனர். பகவான் மற்றொரு வழியாகச்சென்று வேதங்களை மீட்டுப் பிரமனிடம் கொடுத்தருளினுன். வேதங்களைக் காணுத அவ்வஸுரர்கள் பாற்கடலில் பையத்துயின்ற பரமனைக்கண்டு அவனுடன் நெடுங்காலம் போர்செய்தனர். பல பலகாலம் போர்செய்தும் சோர்வடையாத திருமாலைக்கண்டு மனமுவந்து **''நீ வேண்டும் வரத்தைக் கேள்''** என்றுர்கள் அவ்வஸுரர்கள். **''உங்களை நான் கொல்லவேணும்''** என்னும் வரத்தை மாயாவியான அம்மாதவன் தன்னுல் படைக்கப்

பட்டவர்களான அவர்களிடம் வேண்டினான். அவர்களும் அதற்கு இசைந்தவளவில், **'உங்களுக்கு வேண்டிய ஒரு வரத்தைக் கொள்ளுங்கள்'** என்று பரமபுருஷன் உரைத்தான். **'ஒருவரும் சாகாத இடத்தில் நாங்கள் சாகவேண்டும்'** என்று அவர்கள் வரம் வேண்டினார்கள், புருஷோத்தமனும் திருத்துடைகளால் அவர்களை இறுக்கிக்கொன்றான் என்று இம்மாதிரியாக சாஸ்திரங்கள் இவ்விருத்தாந்தை விவரிக்கின்றன. **'மது4ஸூத3னன்'** என்னுமித்திருநாமத்தில் மதுவைச் சொன்னது கைடபனுக்கும் உபலக்ஷணம். **'கைடப4ாரி'** என்றும் எம்பெருமானுக்கு ஒரு திருநாமம் வழங்கிவருகிறது. இனி, மதுஸூதனன் என்னுமித்திருநாமத்திற்குள்ள மற்றும் சில பொருள்களை விவரிப்பே4ாம். (மது4ஸூத3னன்) **'மது4'** என்று **'பிப்பலம் ஸ்வாது3'** என்கிறபடியே இனிமையான போக்3யப் பொருள்களான அசேதனதத்வத்தையும், ஆநந்த3ஸ்வரூபியும், பகவானுக்கு ஸ்ரீகௌஸ்துபம்போல் இனியவனுமான சேதனதத்வத்தையும் சொல்லுகிறது. **'ஸூத3னன்'** என்னும் பதம் தன் வசத்திற்கு அழைத்துச் செல்பவன் என்னும் பொருளை உடையது. ஆக, ஸர்வதத்வங்களையும் அழைத்துச் செல்பவன் மதுஸூதனன் என்றதாயிற்று.

**"ஸர்வதத்வநயநாச்சைவ மது4ஹா மது4ஸூத3ந:"**

[எல்லாத் தத்துவங்களையும் அழைத்துச் செல்வதாலும் பகவான் மதுஸூதனனாகிறான்.] என்று சாஸ்திரம் இப்பொருளை ஆதரித்தது, **'மது4 ஸூத3னன்'** என்பது ஸகலதத்வங்களாகிற குதிரைகளைத் தூண்டுபவன் என்றும் பொருள்படும்.

**"மது4ரிந்த்3ரியநாமா ஸ ததோ மது4நிஷூத3ந:"**

['**மது4**' என்று இனியவைகளான இந்திரியங்கள் சொல்லப்படுகின்றன. அவைகளை அடக்குமவனாகையாலே இப்பெருமான் மதுஸூதனனாகிறான்.] என்றும் மதுஸூதநசப்தார்த்தம் விவரிக்கப்பட்டது. ஆக, இப்பொருள்களால் விரோதிநிரஸன ஶீலன் மதுஸூதனன் என்றதாயிற்று. **"கொடு**



**யேனிடர் முற்றவும் மாய்த்தவம்மான் மதுசூதவம்மான்"** என்று இவ்வர்த்தத்தை **ஆழ்வார்** அருளிச்செய்தார். இந்த விரோதி4 நிரஸனஶீலத்வமாகிற பெருங்குணத்துக்குத்தோற்று **"மதுசூதனென்னம்மான் தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே"** என்றும், **"வள்ளலே! மதுசூதனா!"** என்றும், **"மதுசூதனையன்றி மற்றிலேன்"** என்றும், **"வைத்தமாநிதியாம் மதுசூதனையே அலற்றி"** என்றும், **நம்மாழ்வார்** தம்மை எழுதிக்கொடுத்தார்.

மதுஸூதனன் என்று, பிரமனுக்குச் செய்த உபகாரத்தைப் பேசிற்று. அடுத்தபடியாக, திரிவிக்கிரமன் என்று இவ்வுலகுக்கெல்லாம் அபேக்ஷா நிரபேக்ஷமாகத் தன்னைக் கொடுத்தபடியைப் பேசுகிறது. மஹாபலி என்பானோர் அஸுரன் தன்னுடைய பராக்ரமத்தாலே இந்திரனையுள்ளிட்ட மூவுலகையும் ஜயித்துத் தன் வசப்படுத்திக்கொண்டான். இந்திரன் முதலிய தேவர்கள் எம்பெருமானிடம் சென்று முறையிட, அப்பெருமானும் கஶ்யபருக்கும் அதிதிக்கும் புத்திரனாக வாமனனாய்ப் பிறந்து மஹாபலி யாகம் செய்கையில் அவனிடம் மூவடி மண்ணை யாசித்துப்பெற்று, திரிவிக்கிரமனாக வளர்ந்து, ஈரடியால் உலகங்களையெல்லாம் அளந்து, மூன்றாவதடியை மாவலியின் தலையில் வைத்து, பாதாளலோகத்தில் அவனுக்கும் ஶாஶ்வதமான பெருமையை உண்டாக்கிவைத்தான் என்னும் விருத்தாந்தம் ஸர்வலோக ப்ரஸித்தமானது. இப்படி, ப்ரயோஜநாந்தரபரனான இந்திரனோடு, அவனுக்கு விரோதியான மஹாபலியோடு வாசியற ஸர்வரையும் ரக்ஷித்த அவதாரமாகையாலும், உறங்குகிற ப்ரஜையைத் தடவிக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே, உலகங்களையெல்லாம் தன் திருவடிகளாலே அபேக்ஷாநிரபேக்ஷமாகத் தடவிக்கொடுத்த பெருமையை உடையதாகையாலும், பரத்வமும், ஸௌலப்4யமும் ஒருங்கே ஒளிவிடுகின்ற மேன்மையை உடைத்தாயிருக்கையாலும்,

*அடியார்க்காகத் தன்னை அழியமாறியும் அளிக்கும் அருங் குணத்தை அறிவிப்பதாகையாலும். வேதங்களோடு. இதிஹாஸபுராணங்களோடு. ஆழ்வார்களோடு வாசியற எல்லாரும் இவ்வவதாரத்திலே ஈடுபடாநிற்பர்கள்.* **"இத$_3$ம் விஷ்ணுர் விசக்ரமே" "த்ரீணி பத$_3$ா விசக்ரமே" "விசக்ரமே ப்ருதி$_2$வீமேஷ ஏதாம் க்ஷேத்ராய விஷ்ணு:"** *[(மூவடி) மண்ணைப்பெறுவதற்காக இந்த உலகையெல்லாம் அளந்தான் விஷ்ணு.].* **"த்ரிர் தே$_3$வ: ப்ருதி$_2$வீமிதி ப்ரவிஷ்ணு:" "ஶம் நோ விஷ்ணுருருக்ரம:"** *[பெரிய அடிவைப்புகளையுடைய விஷ்ணுவானவன்நமக்கு மங்களத்தைத்தருவானாக.[* **"விஷ்ணுக்ராந்தே வஸுந்த$_4$ரே"** *[விஷ்ணுவினால் அளக்கப்பட்ட பூதேவியே!]* என்று பல பல விடங்களில் பண்டை *மறை வாய் வெருவிற்று.*

**"கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்றோர்**
**எண்தானுமின்றியே வந்தியலுமாறு**
**உண்டான் உலகேழும் ஓர் மூவடி**
**கொண்டானைக் கண்டு கொண்டனை நீயுமே"** *என்றும்.*

**"அடியைமூன்றையிரந்தவாறும் அங்கே நின்றாழ்கடலும் மண்ணும்விண்ணும்**
**முடிய ஈரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும்**
**நொடியுமாறவை கேட்குந்தோறுமென் நெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்**
**கொடிய வல்வினையேனுன்னை என்றுகொல் கூடுவதே?"** *என்றும்.*

**"பாயோரடி வைத்ததன் கீழ்ப் பரவை நிலமெல்லாம்**
**தாயோரடியால் எல்லாவுலகும் தடவந்த**
**மாயோன் உன்னைக் காண்பான் வருந்தி எனைநாளும்**
**தீயோடுடன் சேர் மெழுகாயுலகில் திரிவேனோ?"** *என்றும்.*

**"உலகமெல்லாம் தாவியவம்மானை எங்கினித் தலைப்பெய்வனே?"** *என்றும்.* **"தாவிவையம் கொண்ட எந்தாய்!"**



*என்றும்,* **"பாமருமூவுலகுமளந்த பற்ப பாதாவோ!"** **என்றும் நம்மாழ்வார்** *பிராட்டிமார் தொட்டாலும் சிவக்கும் திருவடிகளைக்கொண்டு காடுமோடெல்லாமளந்த இந்நீர்மையிலே உருகாநிற்பர்.* **"என்னிது மாயம் என்னப்பனறிந்திலன் முன்னைய வண்ணமே கொண்டளவாய் என்ற மன்னுநமுசியை வானிற்சுழற்றிய மின்னுமுடியனே!"** *என்றும்.* **"ஒருப்படுத்திடுமின் இவளை உலகளந்தானிடைக்கே"** *என்றும்.* **பெரியாழ்வாரும், "ஓங்கி உலகளந்த உத்தமன்"** *என்றும்.* **"தேசமுன்னளந்தவன் திரிவிக்கிரமன் திருக்கைகளால் என்னைத் தீண்டும் வண்ணம்"** *என்றும்,* **"பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று எல்லாவுலகும் அளந்துகொண்ட எம்பெருமான்"** *என்றும்.* **"மாணியுருவாயுலகளந்த மாயனைக் காணில் தலைமறியும்"** *என்றும் ஆழ்வார் திருமகளாரும் இவ்வவதாரத்திலே ஈடுபட்டனர்.*

**"ஏக: ப்ராஸீஸரத் பாத$_3$மேக: ப்ராசிக்ஷளந்முத$_3$ா ।**
**அபரோப்யத$_4$ரந்மூர்த்$_4$நா கோதி$_4$கஸ்தேஷு க$_3$ண்யதாம் ॥"**

*[ஒருவன் திருவடியை நீட்டினான்; (பிரமனாகிய) மற்றொருவன் மிகவுகந்து அத்திருவடியை விளக்கினான். (சிவனாகிய) வேறொருவனும் களிப்புடன்அந்நீரைத் தலையிலே தரித்தான். இவர்களில் எவன் பெரியவன் என்பதை நினைத்துப்பாருங்கள்.]* என்கிறபடியே *பரம்பொருள் யாரென்பதை நிலைநாட்டித்தருவதன்றோ இவ்வவதாரம். (த்ரிவிக்ரமன்)* **"த்ரயோ விக்ரமாஸ் த்ரிஷு லோகேஷு க்ராந்தா: யஸ்ய ஸ:"** *[மூவுலகங்களையும் அளந்த மூன்று அடிவைப்புகளை உடையவன்] என்றும்.* **"த்ரயோ லோகா: க்ராந்தா யேந"** *[மூன்று உலகங்களும் எவனால் கடக்கப்பட்டனவோ அவன்]* என்றும் *பொருள் கொள்ளலாம்.* **"த்ரீணி பத$_3$ா விசக்ரமே"** என்றது *வேதம்.*

**"த்ரிரித்யேவம் த்ரயோ லோகா: கீர்த்திதா முநிஸத்தமை: ।**
**க்ரமஸே தாம்ஸ்த்ரித$_4$ா ஸர்வாந் த்ரிக்ரமோऽஸி ஜநார்த்த$_3$ந ॥"**

['த்ரி' என்று மூவுலகங்களும் முனிவர்களால் சொல்லப் படுகின்றன. ஜநார்த்தனனே! அவையெல்லாவற்றையும் மூன்றடிகளால் தாவியபடியால் நீ திரிவிக்கிரமனுகிறுய்.] என்று ஹரிவம்ஶத்தில் சொல்லப்பட்டது.

"பாதே₃னைகேந விக்ராந்தா ஸர்வேயம் பூ₄ர் நரேஸ்வர।
அந்தரிக்ஷம் த்₃விதீயேந த்₃யௌஸ் த்ருதீயேந ஸத்தம ||"

[இவ்வுலகம் ஒரு அடிவைப்பினுல் அளக்கப்பட்டது. இரண்டாவது அடிவைப்பினுல் அந்தரிக்ஷமும் மூன்ருவதடியால் தேவலோகங்களும் அளக்கப்பட்டன.] என்று நாரஸிம்ஹ புராணத்திலும் சொல்லப்பட்டது. முதலடியினுல் கீழுலகங்களெல்லாவற்றையும், இரண்டாவதடியினுல் மேலுலகங்களெல்லாவற்றையும், மூன்ருவதடியினுல் மஹாபலியின் ஶிரஸ்ஸையும் அளந்தவன் என்றும் கொள்ளலாம்.

"த்ரிரித்யேவம் த்ரயோ வேதா₃: கீர்த்திதா முநிஸத்தமை:।
க்ரமஸே தாம்ஸ்தத₂ா ஸர்வாந் த்ரிவிக்ரம இதி ஸ்ம்ருத: ||"

['த்ரி' என்னும் பதத்தினுல் மூன்று வேதங்களும் முனிவர்களால் சொல்லப்படுகின்றன. அவையெல்லாவற்றையும் வியாபித்திருப்பதால் திரிவிக்கிரமனெனப்படுகிறுய்.] என்று சொல்லப்பட்டபடியும் பொருள் கொள்ளலாம்.

வேதங்களால் மிகவும் ஆதரிக்கப்பட்டதாகையாலும், பரத்வத்தையும், ஸௌலப்யத்தையும் ஒருங்கே காட்டுவதாகையாலும், எல்லார் தலையிலும் ஒக்கத் திருவடியை வைத்த பெருங்குணத்தைப் பேசுவதாகையாலும் திரிவிக்கிரமாவதாரம் முதலில் அநுபவிக்கப்பட்டது. அடுத்தபடியாக இத்திரிவிக்கிரம மூர்த்திக்கும் காரணபூ₄தமான வாமனமூர்த்தியின் பெருமை பேசப்படுகிறது. "த்₃ரஷ்ட்ரூந் ஸ்வகாந்த்யா வாமாநி ஸுகா₂நி நயதி" [காண்பவர்களைத் தன் ஒளியால் ஸுகமுள்ளவர்களாகச் செய்கிறுன்] என்று வாமனசப்தத்துக்குப் பொருள். "ஸர்வாணி வாமாநி நயதி" [எல்லாரையும் ஸுகமுடையவர்களாகச் செய்கிறுன்.]



என்று சாந்தோக்யோபனிஷத் இவ்வர்த்தத்தை ஆதரித்தது. "கொள்ளமாளா இன்பவெள்ளம் கோதில தந்திடும் என் வள்ளலேயோ! வையங்கொண்ட வாமனுவோ!" என்று வேதம் தமிழ் செய்த மாறனும் வாமன சப்தார்த்தத்தை அருளிச்செய்தார். "வாமஸ் ஸுந்த₃ரமூட₄யோ:" என்கிறபடியே மிகுந்த வடிவழகையுடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்விரண்டு பொருள்களாலும் அவன் அகிலலோகாகர்ஷகமான வடிவழகையுடையவன் என்றதாயிற்று. கடலைக் குளப்படியிலே அடக்கினுப்போலே, உலகளந்த திரிவிக்கிரமமூர்த்தியின் ஸௌந்தர்யமெல்லாம் இச்சிறிய உருவில் வெள்ளமிடுமாகையாலே இப்பெருமானின் அழகு பேசவொண்ணுததாயிருக்கும். அவாங்மநஸகோ₃சரமான இவ்வழகிலே வேதமும், புராணங்களும், ஆழ்வார்களும் ஆழங்காற்படுவர்கள். "ஸர்வாணி வாமாநி நயதி" என்றது வேதம். "ஸ வாமநோ தி₃வ்யஶரீரத்₄ருக்" [திவ்யமான சரீரத்தையுடையவன் வாமனன்.] என்று புராணம் பேசிற்று.

"மாயக்கூத்தா! வாமனு! வினையேன் கண்ணு! கண் கைகால்
தூயசெய்ய மலர்களா சோதிச்செவ்வாய் முகிழதா
சாயல் சாமத்திருமேனி தண்பாசடையா தாமரைநீள்
வாசத்தடம்போல் வருவானே! ஒருநாள் காண வாராயே"

என்றும், "ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்த அக்கருமாணிக்கம்" என்றும், "வாமனன் என் மரதகவண்ணன் தாமரைக் கண்ணினன் காமனைப்பயந்தாய்!" என்றும் "மாண்குறள் கோல வடிவுகாட்டி" என்றும், "குரைகழல்கள் நீட்டி மண்கொண்ட கோல வாமனு" என்றும் நம்மாழ்வாரும்,

"சத்திரமேந்தித் தனியொரு மாணியாய்
உத்தரவேதியில் நின்ற ஒருவனை
கத்திரியர்காணக் காணி முற்றும் கொண்ட
பத்திராகாரன்"

என்றும், "காமர் தாதை கருதலர் சிங்கம் காணவினிய கருங்குழல் குட்டன் வாமனன் என் மரதகவண்ணன்" என்றும் பெரியாழ்வாரும், "கொண்ட கோலக் குறளுரு" என்று ஆண்டாளும் வேதம் புகழ்ந்த இவ்வடிவழகிலே மயங்கினார்கள். (வாமனன்) இப்படி வடிவழகாலே பிறரை உகப்பிப்பதோடன்றியில் குணங்களாலும் பிறரை ஆநந்திப்பிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

"மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில்
தக்கதிதன்றென்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக்கையனே!"
—என்றும்,

"மதியினால் குறள்மாணாய் உலகிரந்த கள்வற்கு" என்றும், "வாட்டமில் புகழ் வாமனனை" என்றும், "வன்மாவையமளந்த எம் வாமனா!" என்றும், "ஞாலங்கொள்வான் குறளாகிய வஞ்சனே!" என்றும், "கொள்வன் நான் மாவலி மூவடி தா என்ற கள்வனே!" என்றும் அந்ய ப்ரயோஜனர்களுக்காகவும் தன்னை அழியமாறி அளிக்கும் அருங்குணத்தில் ஆழ்வார்கள் ஆழங்காற்பட்டார்கள். (வாமன்ன்) "வடிவழகைச்சொல்லுகிறதென்னுதல்; நன்மைகளைத் தருமவனென்னுதல்" என்று நம்பிள்ளை ஈட்டில் (2-7-8) அருளிச்செய்தபடியே, வாமசப்தத்தாலே ஸுக$_2$ப்ரத$_3$மான வஸ்துக்களைச்சொல்லி, 'வாமனன்' என்று அவைகளைத் தருமவன் என்றும் பொருள் கொள்ளலாம். "மருவித் தொழும் மனமே தந்தாய் வல்லைகாண் என் வாமனனே!" என்று ஆழ்வார் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தார். (வாமனன்) ஆதி$_4$பத்யத்தை இழந்த இந்திரனுக்கு அதை அளித்தும், மஹாபலிக்குப் பாதாளத்திலே நிலையான ஸாம்ராஜ்யத்தைக் கொடுத்தும், உலகிலுள்ள எல்லாச்சேதனர்கள் தலையிலும் தன் திருவடிகளை வைத்தும், இப்படி எல்லாருக்கும் ஸுகத்தைத் தந்தவன் என்றும் பொருள்



கொள்ளலாம். 'வாமனன்' என்னும் திருநாமத்துக்குச் சிறிய உருவை உடையவன் என்றும் பொருளுண்டு என்பது பிரஸித்தம். இதையே எல்லா ஆழ்வார்களும் 'குறளுரு' என்று அருளிச்செய்தனர். (வாமனன்) "மத்$_4$யே வாமநமாஸீநம் விஸ்வேதே$_3$வா உபாஸதே' [ஸர்வ சேதனர்களின் ஹ்ருதயத்திலும் வீற்றிருக்கும் வாமனனை எல்லா தேவர்களும் உபாஸிக்கிறார்கள்.] என்று வேதத்தில் சொல்லியபடியே ஹ்ருதயகமலத்தில் அங்குஷ்டமாத்ரனாயெழுந்தருளியிருக்கும் பெருமான் வாமனசப்தத்தால் சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். "வாமனன் நிற்பது மேவியிருப்பதென் நெஞ்சகம்" என்று ஆழ்வார் இவ்வர்த்தத்தை உணர்த்தினார்.

ஆக, இப்படி வாமனாவதாரத்தைச் சொன்னபின் இப்படி ப்ரஹ்மசாரியாய் அவதரித்த அவதாரத்திலும் பிராட்டியைவிட்டுப் பிரியாமல் மார்பிலே தரித்திருப்பவன் என்று உரைக்கிறது 'ஸ்ரீதரன்' என்னும் திருநாமம். "வாமனனே மாதவா" என்று ஆழ்வாரும் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தார். "க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் வக்ஷ:ஸ்த$_2$லாலயாம்" [திருமார்பிலே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் பிராட்டியை க்ருஷ்ணாஜினத்தினால் மறைத்துக் கொண்டுவந்தான்.] என்கிறபடியே, மஹாபலியின் யாகசாலைக்கு எழுந்தருளியபோதும், திருமார்பிலிருந்த பிராட்டியை மான் தோலினால் மறைத்துக்கொண்டு வந்தான் வாமனன் என்று ப்ரஸித்தமிறே.

"ஏவம் யதா$_3$ ஜக$_3$த்ஸ்வாமீ தே$_3$வதே$_3$வோ ஜநார்த$_3$ந: |
அவதாரம் கரோத்யேஷா தத$_3$ ஸ்ரீஸ்தத்ஸஹாயிநீ ||
ராக$_4$வத்வேऽப$_4$வத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி |
அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாऽநபாயிநீ ||
தே$_3$வத்வே தே$_3$வதே$_3$ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ |
விஷ்ணோர் தே$_3$ஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும் ||"

[தேவதேவனுகிய பகவான் அவதாரம் செய்யும்போது, இந்த ஸ்ரீதேவியும் அவனுக்குத் துணையாகத் தோன்றுகிருள். எம்பெருமான் ராகவனுய் அவதரித்தபோது இவள் ஸீதையானுள். அவன் கிருஷ்ணனுய்ப் பிறந்தபோது இவள் ருக்மிணியானுள். மற்ற அவதாரங்களிலும் இவள் விஷ்ணுவை விட்டுப் பிரியாதவளாயிருக்கிருள். அவன் தேவனுகும்போது தேவதேஹத்தைக் கொண்டவளாயும், மனிதனுகப்பிறக்கும் போது மனிதவுருவம் கொண்டவளாயும், இப்படி விஷ்ணுவினுடைய தேஹத்திற்குப் பொருந்தியதாகத் தன்னுடைய திவ்யமங்களவிக்ரஹத்தைச் செய்துகொள்ளுகிருள் பிராட்டி.] என்று விஷ்ணுபுராணத்தில் உரைக்கப்பட்டது இங்கு உணரத்தக்கது. "**தாம் ரத்நமிவ அர்ச்சிஷம் புஷ்பமிவ ஸௌரபி$_4$ம் இந்து$_3$ரிவ சந்த்$_3$ரிகாம் அம்ருதமிவ ஸ்வாது$_3$தாம் ஔத்பத்திகேந ஸம்ப$_3$ந்தே$_4$ந த$_4$ரதீதி ஸ்ரீத$_4$ர:। 'நஹி ஹாதுமியம் ஶக்யா கீர்த்திராத்மவதோ யத$_2$ா இதி॥**" [ரத்னம் ஒளியை தரிப்பதுபோலவும், பூ மணத்தை தரிப்பதுபோலவும் சந்திரன் தன் ஒளியை தரிப்பதுபோலவும், அம்ருதம் இனிமையை தரிப்பதுபோலவும், அந்த ஸ்ரீதேவியை இயற்கையான ஸம்பந்தத்தினுல் தரிக்கிருனுகையால் ஸ்ரீதரனுகிருன். "மனத்தை ஜயித்தவர்களைக் கீர்த்தி விட்டுப் பிரியவொண்ணுமல் விளங்குவதுபோல் இப்பிராட்டியும் இப்பெருமானை விட்டுப் பிரியவல்லளல்லள்" என்று சொல்லப்பட்டது.] என்று **ஆசார்யாக்$_3$ரேஸரரான பராசர பட்டர்** வியாக்கியானம் செய்தருளினுர். (ஸ்ரீத$_4$ரன்) 'ஸ்ரீ' என்று பெரியபிராட்டியார் சொல்லப்படுகிருர். அவரை தரிப்பவனுகையால் புருஷோத்தமனும் ஸ்ரீதரன் எனப்படுகிருன். பகவானுக்கு நாராயண நாமம் அஸாதாரணமாய் விளங்குவதுபோல் பிராட்டிக்கும் 'ஸ்ரீ:' என்னும் இத்திருநாமம் அஸாத$_4$ாரணமாயிருக்கிறது. "**ஸ்ரீரித்யேவ ச நாம தே ப$_4$க$_3$வதி ப்$_3$ரூம: கத$_2$ம் த்வாம் வயம்**" [பெரியபிராட்டியே! உமக்கு 'ஸ்ரீ:' என்பது திருநாமம். உம் பெருமையை நாங்கள் எப்படிச் சொல்லுவோம்?] என்ருரன்ரே **ஆளவந்தார்**. நாராயண நாமத்தைப்போல் இத்திருநாமமும் பல பொருள்களை உடையது. அவைகளை இனி விவரிப்போம்.



"**ஶ்ரிங்-ஸேவாயாம்**" என்கிற தாதுவிலிருந்து இந்த ஸ்ரீஶப்தம் உண்டானதாகக்கொண்டால், "(**அகில சேதனர்களாலும்) ஆஶ்ரயிக்கப்படுகிருள்**" என்றும் "(எம்பெருமானை) **ஆஶ்ரயித்திருக்கிருள்**" என்றும் இரு பொருள்கள் ஏற்படும். "**ஶ்ரு-விஸ்தாரே**" என்னும் தாதுவிலிருந்து ஸ்ரீஶப்தம் தோன்றியதாகக் கொண்டால், "(அடியார்களுடைய குணங்களை) வ்ருத்தியடையச்செய்கிருள்" என்றும், "(தன் குணங்களாலும் விக்$_3$ரஹங்களாலும் உலகையெல்லாம்) வியாபித்திருக்கிருள்" என்றும் பொருள்படும்; "**ஶ்ரு-ஹிம்ஸாயாம்**" என்கிற தாதுவிலே ஸ்ரீஶப்தம் நிஷ்பந்நமாகிறதென்றுகொண்டால், "(அடியார்களுடைய தோஷங்களையெல்லாம்) போக்கடிப்பவள்" என்று ஸ்ரீசப்தத்துக்குப் பொருளாகும். "**ஶ்ரு-ஶ்ரவணே**" என்கிற தாதுவிலிருந்து ஸ்ரீசப்தம் உண்டாகிறதென்று கொண்டால் "(அடியார்களுடைய முறையீடுகளைக்) கேட்பவள்" என்றும், "அவைகளை எம்பெருமானைக் கேட்பிப்பவள்" என்றும் பொருள்படும். இப்பொருள்களெல்லாம்

**"ஶ்ருணுதி நிகி$_2$லாந் தோ$_3$ஷாந் ஶ்ருணுதி ச கு$_3$ணைர் ஜக$_3$த் ।**
**ஸ்ரீயதே சாகி$_2$லைர் நித்யம் ஶ்ரயதே ச பரம் பத$_3$ம் ॥**
**ஶ்ரயந்தீம் ஸ்ரீயமாணுஞ்ச ஶ்ருண்வதீம் ஶ்ருணதீமபி ॥"**

[சேதனர்களுடைய எல்லாப் பாவங்களையும் போக்கடிக்கிருள்; உலகம் முழுவதையும் குணங்களால் வியாபிக்கிருள்; எல்லாச் சேதனர்களாலும் எப்போதும் **ஆஶ்ர**யிக்கப்படுகிருள்; பரமப்ராப்யமான பரமபுருஷனை ஸர்வகாலமும் **ஆஶ்ர**யித்திருக்கிருள்; (எம்பெருமானை) **ஆஶ்ர**யித்திருப்பவளாகவும், (மற்றவர்களால்) **ஆஶ்ர**யிக்கப்படுபவளாகவும், (சேதனர்களின் குறைகளைக்) கேட்பவளாகவும், எம்பெருமானை அக்குறைகளைக் கேட்பிப்பவளாகவும் (இவளை அறிகிருர்கள்.)]

என்று பாஞ்சராத்ரசாஸ்த்ரத்தில் பேசப்பட்டன. "அகில சேதனர்க்கும் ஆஶ்ரயணீயையாய் தான் அவனை ஆஶ்ரயித்து லப்3த4ஸ்வரூபையாய், ஆஶ்ரிததோ3ஷங்களை ஹிம்ஸித்து, அத்3வேஷாதி3கு3ணங்களை விஸ்தரிப்பித்து, ஆஶ்ரிததைந்3 யோக்திகளை ஶ்ரவித்து, இவர்களை அங்கீகரிக்கைக்கனு கு3ணமான வசனங்களை அவனை ஶ்ரவிப்பிக்கை முதலான ஆகாரங்கள் புருஷகாரபூ4தையான பிராட்டிக்கு அவஶ்யாபேக்ஷிதங்களாகையாலே, இந்நிருக்திகளெல்லாத்தையும், ஶ்ரீஶப்தத்துக்கு அர்த்த2மாக ஆசார்யர்கள் அநுஸந்திப்பர்கள்" என்று (அழகியமணவாளப்பெருமாள்) நாயனாராச்சான் பிள்ளை சது:ஶ்லோகீவியாக்கியானத்திலே அருளிச்செய்தார். இவருடைய திருத்தமப்பனாரான பெரியவாச்சான் பிள்ளை. பிராட்டி இச்சேதனனுடைய குறைகளைக் கேட்கும் ப்ரகாரத்தையும், எம்பெருமானைக் கேட்பிக்கும் ப்ரகாரத்தையும், பரந்தரஹஸ்யத்திலே அத்யத்3பு4தமாக அருளிச்செய்தார். ஸ்ரீஸூக்திகள் பின்வருமாறு:—

" '**ஶ்ருணோதி**' என்று கேட்குமென்கையாலே சேதநரோடுண்டான ப3ந்த4கார்யத்தைச் சொல்லுகிறது. '**ஶ்ராவயதி**' என்று கேட்பியாநிற்கும் என்கையாலே ஈச்வரனோடுண்டான பந்தகார்யத்தைச் சொல்லுகிறது. அதாவது:- ........'புறம்பு பொருத்தமடைய அற்று, ஈச்வரனுக்கு ஆளாகாதபடி பூர்வாபராதத்துக்கு அஞ்சின எனக்கு நிருபாதிக ஜனனியான தேவரீர் திருவடிகளொழியப் புகலில்லை; இனி நான் ஈச்வரனுடைய இரக்கத்துக்கு இரையாய் ரக்ஷித்தனுதல், அவனுக்கு ஸ்வாதந்தர்யபாத்ரமாய் நாசத்தோடே தலைக்கட்டுதலொழிய இளைப்பாறுகைக்கு இடமில்லாதபடி அநந்யக3தி; இனி அடியேனுக்கு ஹிதமின்னதென்று அறிந்து ரக்ஷித்தருளுகை தேவரீருக்கே ப4ரம்' என்று இவன் சொன்ன வார்த்தையைக் கேட்கையும்; அதுக்கு மேலே வெந்நீருக்குக் குளிர்நீர்போலே, நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யத்தாலே '**அபி4த: பாவகோபமம்**" என்கிறபடியே அநபி4ப4வநீயனான ஈச்வரனைத் தன்னுடைய பே4ாக்3யதாதிஶயத்தாலே பதமாக்கி '**நாயன்தே! இச்சேதனனை அங்கீகரித்தருளீர்**' என்னும்; 'ஆவதென்? '**ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா**' என்று நம்முடைய ஆஜ்ஞா ரூபமான ஶாஸ்த்ரமர்யாதையை அதிலங்கி4த்து நம் நெஞ்சு புண்படும்படி தீரக்கழிய அபராதம் பண்ணிப்போந்தவனல்லனோ? இவனையங்கீகரிக்கையாவதென்?' என்னும் ஈச்வரன்; 'அவனுடைய பூர்வாபராத4ங்களை உம்முடைய பொறைக்கு இலக்காக்கி ரக்ஷித்தருளீர்' என்னும் பிராட்டி; 'பொறையை நோக்குகைக்காக ஶாஸ்த்ரமர்யாதையைக் குடநீர்வழியவோ?' என்னும் ஈச்வரன்; 'சாஸ்த்ரமர்யாதையை நோக்குகைக்காக உம்முடைய ஸ்வாப4ாவிகமான க்ஷமாதத்வத்தைக் குடநீர் வழியவோ?' என்னும் பிராட்டி; 'க்ஷமையை நோக்கில், சாஸ்த்ரமர்யாதை குலையும்; சாஸ்த்ரமர்யாதையை நோக்கினால் க்ஷமாதத்வம் குலையும்; இரண்டும் குலையாதொழிய வேண்டும்; செய்யவடுப்பதென்?' என்னும் ஈச்வரன்; 'இங்கர்த்தவ்யதாகுலனாயிருந்தால் அத்தனையே; அவை இரண்டும் குலையாதபடி வழி சொல்லுகிறேன்: அப்படியே செய்தருளீர்' என்னும் பிராட்டி; 'இரண்டும் குலையாமல் இச்சேதனனை நோக்க வழியுண்டாமாகில் நமக்குப் பொல்லாதோ? சொல்லிக்காண்!' என்னும் ஈச்வரன்; 'ஆனால், சாஸ்த்ரமர்யாதையை விமுக2ர் விஷயமாக்குவது: உம்முடைய க்ஷமையை அபி4முக2விஷயமாக்குவது; இரண்டும் ஜீவித்ததாயறும்' என்னும் விஷயவிப4ாக3ம் பண்ணிக்கொடுக்கும் பிராட்டி; அத்தைக் கேட்டு '**அழகிய விப4ாக3ம்!**' என்று இச்சேதனனை அங்கீகரித்தருளும் ஈச்வரன்; ஆக, இப்படி ஸாபராத4ஜந்துவை ஈச்வரன் அங்கீகரித்தருளும்படியான வார்த்தைகளைக் கேட்பித்தருளுகையும்."

இப்படிப் பிராட்டியால் புருஷகாரம் செய்யப்பெற்ற சேதனனையே ஸர்வேச்வரன் அங்கீகரிக்கிறான் என்பதை "**என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேன்? என் ஸ்ரீதரனே!**" என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார்.

'மாதவன்' என்று எம்பெருமான் வைகுண்டத்தில் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கும் இருப்பைச் சொல் லிற்று. 'ஸ்ரீத₄ரன்' என்று அவதாரம் செய்யும்போதும் அவளை தரித்திருக்கிறுனென்கிறது. ஆகையால் புநருக்தியில்லை.

இப்படிப் பராவஸ்தையையும், வ்யூஹவிப₄வாவதாரங் களையும் அநுபவித்தபிறகு, 'ஹ்ருஷீகேஶன்' என்று ஸர்வேச்வரன் மனுஷ்யர்களுடைய ஹ்ருதயத்தில் அந்தர் யாமியாய் நின்று இந்திரியங்களை நியமித்துக்கொண்டு வீற்றிருக்கும் இருப்பு அநுபவிக்கப்படுகிறது. ஸ்ரீதரன் என்ற திருநாமத்திற்குப்பின் படிக்கையாலே இந்த அந்தர் யாம்யவஸ்தையிலும் எம்பெருமான் பிராட்டியுடன் கூடிய வனுகவே எழுந்தருளியிருக்கிறுனென்பது தோற்றுகிறது.

"ஹ்ருஷீகாணீந்த்₃ரியாண்யாஹுஸ் தேஷாமீஶோ யதோ ப₄வாந் |
ஹ்ருஷீகேஶஸ் ததோ விஷ்ணு: க்₂யாதோ தே₃வேஷு கேஶவ: ||"

[ஹ்ருஷீகங்களென்று இந்திரியங்களைச் சொல்லுகிறுர்கள்; அவ்விந்திரியங்களை நியமிப்பவராயிருப்பதால், விஷ்ணு கேசவன் என்னும் திருநாமங்களையுடைய நீர் தேவர்களுள் 'ஹ்ருஷீகேசன்' எனப்படுகிறீர்.] என்று ஹரிவம்சத்தில் ஹ்ருஷீகேசஶப்தார்த்தம் சொல்லப்பட்டது. (ஹ்ருஷீகேசன்) ஹ்ருஷீகசப்தத்தினுல் பத்து இந்திரியங்களாகிய தலைகளைக் கொண்ட மனஸ்ஸாகிற ராவணன் சொல்லப்படுகிறது. அந்த ராவணனை தன்னைப்பற்றின அறிவாகிய அம்பை ஏவிக் கொல்லுமவனுகையாலே இப்பெருமான் ஹ்ருஷீகேச னெனப்படுகிறுன்.

"த₃ஶேந்த்₃ரியாநநம் கோ₄ரம் யோ மநோரஜநீசரம் |
விவேகஶரஜாலேந ஶமம் நயதி யோகி₃நாம் ||"

[யோகிகளுடைய பத்து இந்திரியங்களாகிய தலைகளையுடைய மனஸ்ஸாகிற பயங்கரராக்ஷஸனை, தன்னைப்பற்றிய அறிவாகிய அம்புக்கூட்டங்களால் அடக்குகிறுன்.] என்று சொல்லப்பட்டதன்றே.



"இருடீகேசன் எம்பிரான் இலங்கையரக்கர்குலம்
முருடுதீர்த்த பிரான் எம்மான்" —என்று

நம்மாழ்வார் இவ்வர்த்தத்தை உணர்த்தினுர்.

"அண்டக்குலத்துக்கதிபதியாகி அகரரிராக்கதரை இண டக்குலத்தை எடுத்துக் களைந்த இருடீகேசன்தனக்கு' என்று பெரியாழ்வாரும் இதைப் பாசுரமிட்டருளினுர். 'இருடீகேசன்' என்னும் இத்திருநாமத்தினுலும் விரோதிநிரஸநஶீலத்வம் சொல்லப்படுகிறது. "ஏர்விடை செற்றிளங்கன்றெறிந்திட்ட இருடீகேசா" என்று பெரியாழ்வார் இக்குணத்தைப் பேசினுர். (ஹ்ருஷீகேசன்) தன்னைக் கண்டவர்களுடைய இந்திரியங் களை வசப்படுத்துமவன். "ரூபௌதா₃ர்யகு₃ணை: பும்ஸாம் த்₃ருஷ்டிசித்தாபஹாரிணம்" [தன்னுடைய ரூபம், வண்மை, குணங்கள் முதலியவற்றுல் ஆண்பிள்ளைகளுடைய கண்ணை யும், மனத்தையும் அபஹரிக்குமவன்.] என்று சொல்லப் பட்டதன்றே. "முடியானே" என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வார் "நெடியானே! என்று கிடக்கும் என் நெஞ்சமே" என்றும், "வஞ்சனே! என்னுமெப்போதுமென் வாசகமே" என்றும், "தாயவனே! என்று தடவும் என் கைகளே" என்றும், "உன்னை மெய்கொள்ளக் காண விரும்புமென் கண்களே" என்றும், "பண்கொண்டபுள்ளின் சிறகொலி பாவித்துத் திண்கொள்ள ஓர்க்கும் கிடந்தென் செவிகளே" என்றும் தம்முடைய இந்திரியங்கள் ஒவ்வொன்றும் எல்லா இந்திரியங்களின் அநுபவத்தையும் ஆசைப்பட்டு எம்பெரு மானை அநுபவிக்க மேல்விழுந்தன என்று அருளிச்செய்தா ரன்றே. "நாக்கு நின்னையல்லாலறியாது", "கண்டு நானுன்னை உகக்க" "வேறொருவரோடென் மனம் பற்றுது" "என்னப்பா என்னிருடீகேசா" என்று தம்முடைய இந்திரி

யங்களெல்லாம் எம்பெருமான் பக்கல் ஈடுபட்டபடியைப் பெரியாழ்வாரும் பேசியருளினர். தன்னுடைய அவயவ சோபையாலும், ஆப$_4$ரணஶோபை$_4$யாலும் பிறருடைய இந்திரியங்களை வசப்படுத்துகிறனென்பதைப் பெரியாழ்வாரும்

"மின்னுக்கொடியும் ஓர்வெண்திங்களும் சூழ் பரிவேடமுமாய்
பின்னல் துலங்குமரசிலையும் பீதகச்சிற்றுடையொடும்
மின்னில் பொலிந்ததோர் கார்முகில்போலக் கழுத்தினில்
காறையொடும்
தன்னில் பொலிந்த இருடீகேசன் தளர்நடை நடவானோ"

என்று அருளிச்செய்தார். "இருடீகேசன் வலிசெய்ய முத்தன்ன வெண்முறுவல் செய்ய வாயும் முலையும் அழகழிந்தேன் யான்" என்று ஆண்டாளும் தன்னுடைய இந்திரியங்களெல்லாம் இருடீகேசனிட்ட வழக்காயிருக்கின்றன என்று அருளிச்செய்தாள்.

இப்படி எம்பெருமான் ஹ்ருதயகமலத்திலே திவ்ய மங்கள விக்ரஹத்துடன் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கிறன் என்னுமிடத்தை

"வெள்ளைச் சுரிசங்கொடாழியேந்தித்
தாமரைக்கண்ணனென் நெஞ்சினூடே
புள்ளைக்கடாகின்றவாற்றைக் காணீர்
என்சொல்லிச்சொல்லுகேன் அன்னைமீர்காள்?"என்றும்

"கல்லும் கனைகடலும் வைகுந்தவானுடும்
புல்லென்றொழிந்தனகொல் ஏ பாவம்!—வெல்ல
நெடியான் நிறம் கரியான் உள்புகுந்துநீங்கான்
அடியேனதுள்ளத்தகம்" —என்றும் நம்மாழ்வாரும்,

"நிற்பதும் ஓர் வெற்பகத்(து) இருப்பும்விண் கிடப்பதும்
நற்பெரும் திரைக்கடலுள் நானிலாத முன்னெலாம்
அற்புதன் அநந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே"
—என்று திருமழிசைப்பிரானும்,



"வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும்
இடவகைகள் இகழ்ந்திட்டென்பால் இடவகை
கொண்டனையே" —என்றும்,

"அநந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாக வைத்தென்
மனந்தன்னுள்ளே வந்து வைகி வாழச்செய்தாய் எம்பிரான்!"

என்றும் பெரியாழ்வாரும் அருளிச்செய்தனர். வேதமும் "நீலதோயத$_3$மத்$_4$யஸ்த$_2$ா வித்$_3$யுல்லேகே$_2$வ ப$_4$ாஸ்வரா" முதலான விடங்களில் இவ்விஷயத்தைச் சொல்லிற்று.

"லாப$_4$ஸ்தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராப$_4$வ:।
யேஷாமிந்தீ$_3$வரஶ்யாமோ ஹ்ருத$_3$யே ஸுப்ரதிஷ்டி$_2$த:॥"

[எவர்களுடைய ஹ்ருதயத்தில் காயாம்பூவண்ணனான பெருமான் நன்கு பொருந்தியிருக்கிறனோ, அவர்களுக்கே லாபமும், ஜயமும் உண்டாம்; அவர்களை அவமானம் அணுகுமோ?] என்று ருஷிகளும் இவ்விஷயத்தைச் சொன்னார்கள். "நஞ்சீயர் கோயிலுக்கு எழுந்தருளாநிற்க, வழியிலே பிள்ளானைக்கண்டு, 'ஈச்வரனுக்கு ஸ்வரூபவ்யாப்தியேயோ, விக்ரஹ வ்யாப்தியும் உண்டோ?' என்று பிள்ளானைக் கேட்க, 'பாஷ்யகாரர் தோற்ற அருளிச்செய்துகொண்டு போந்தது ஸ்வரூபவ்யாப்தியாயிருக்கும்; ஆகிலும், எம்பார் ஒருநாள் 'உபாஸகாநுக்$_3$ரஹார்த்த$_2$மாக ஆஶ்ரிதருடைய நெஞ்சிலே விக்ரஹத்தோடே வ்யாபித்திருக்கும்' என்று அருளிச்செய்யக்கேட்டேன்' என்று பணித்தான்" என்று ஈட்டில் எடுக்கப்பட்ட ஐதிஹ்யமும் இவ்விடத்தில் அநுஸந்திக்கத்தக்கது. பிள்ளைலோகாசார்யரும் "அந்தர்யாமித்வமாவது:—அந்த:ப்ரவிஶ்ய நியந்தாவாயிருக்கை. ஸ்வர்க்க$_3$நரகப்ரவேஶாதி$_3$ ஸர்வாவஸ்தை$_3$களிலும், ஸகலசேதநர்க்கும் துணையாய், அவர்களை விடாதே நிற்கிற நிலைக்கு மேலே ஶுப$_4$ாஶ்ரயமான திருமேனியோடே கூடிக்கொண்டு அவர்களுக்கு த்$_4$யேயனாகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும் ப$_3$ந்து$_4$ பூ$_4$தனாய்க்கொண்டு ஹ்ருதயகமலத்திலே எழுந்தருளி

யிருக்கும் இருப்பு.'' என்று தத்வத்ரயத்தில் அருளிச் செய்தார்.

(ஹ்ருஷீகேசன்) 'ஹ்ருஷ்' என்னும் தாது ஆனந்தத்தைக்குறிக்கும். 'க' என்னும் பதம் 'ஸுகம்' என்னும் பொருளையுடையது. 'கம் ப்₃ரஹ்ம' என்ற வேதவாக்யம் காண்க. 'ஈஶ' என்னும் பதம் ஐச்வர்யத்தை உடையவன் என்று பொருள்படுகிறது. ஆக, 'ஹ்ருஷீகேசன்' என்னும் திருநாமத்தால், ஹர்ஷத்தையும், ஸௌக்யத்தையும், ஐச்வர்யத்தையும் உடையவன் என்று சொல்லப்பட்டதாகிறது.

'' ஹர்ஷாத் ஸௌக்₂யாத் ஸுகை₂ஶ்வர்யாத்
ஹ்ருஷீகேஶத்வமஶ்நுதே ''

[ஹர்ஷத்தையும், ஸௌக்யத்தையும், ஸுகமான ஐச்வர்யத்தையும் உடைத்தாயிருக்கையால் ஹ்ருஷீகேசனுயிருக்கும் தன்மையை அடைகிறுய்.] என்று இவ்வர்த்தம் புராணங்களில் பேசப்பட்டது.

''ஸூர்யாசந்த்₃ரமஸோ: ஶஶ்வத₃ம்ஶுபி₄: கேஶஸம்ஜ்ஞிதை:|
போ₃த₄யந் ஸ்வாபயம்ஶ்சைவ ஜக₃து₃த்திஷ்ட₂தே ப்ருத₂க்||
போ₃த₄நாத் ஸ்வாபநாச்சைவ ஜக₃தோ ஹர்ஷணம் ப₄வேத்|
அக்₃நீஷோமக்ருதைரேவம் கர்மபி₄: பாண்டு₃நந்த₃ந||
ஹ்ருஷீகேஶோऽஹமீஶாநோ வரதோ₃ லோகப₄ாவந:|| ''

[கேசங்கள் எனப்படும் ஸூர்யசந்திரகிரணங்களால் நான் உலகிலுள்ளவர்களையெல்லாம் எழுப்பிக்கொண்டும் தூங்கச்செய்துகொண்டும் விளங்குகிறேன். இப்படி எழுப்புவதிலும், தூங்கச்செய்வதாலும் உலகிற்கு ஹர்ஷம் உண்டாகும். பாண்டவ! ஸூர்யசந்திரர்களைக்கொண்டு செய்யப்படும் இக்கருமங்களால், ஈச்வரனும், வரமளிப்பவனும், லோகப₄ாவனனுமான நான் ஹ்ருஷீகேசன் எனப்படுகிறேன்.] என்று மோக்ஷதர்மத்தில் ஹ்ருஷீகேசஶப்தத்தின் மற்றொரு பொருள் விவரிக்கப்பட்டது. '' ஸூர்யரஶ்மிர் ஹரிகேஶ: புரஸ்தாத் '' [ஸூர்யகிரணமானது பகவான் ஹரியின் கேசமெனப்படுகிறது] என்று வேதமும் இவ்வர்த்தத்தை உணர்த்திற்று. 'கேஶ' ஶப்தத்தினுல் எம்பெருமானுடைய திருக்குழல்கற்றையே சொல்லப்படுவதாகக்கொண்டு, 'ஹிரண்யகேஶ:' என்கிறபடியே கண்டவர்களுக்கு ஹர்ஷத்தைக்கொடுக்கும் மயிர்முடியை உடையவன் என்றும் ஹ்ருஷீகேசஶப்தத்திற்குப் பொருள் கொள்ளலாம். கேசவன் என்னும் திருநாமத்திற்கும், இப்படி ஒரு பொருள் உரைக்கப்பட்டது. அங்கு அநுஸந்திக்கப்பட்ட ப்ரமாணங்களை இங்கும் படிப்பது. இப்படிப் பலபொருள்களை உடையதேயாகுலும், 'அந்தர்யாமியாய் இந்திரியங்களை நியமித்துக்கொண்டு எழுந்தருளியிருக்குமவன்' என்னும் பொருளே இங்கு முக்யமாகக்கடவது.



இம்மாதிரியாக விபவமூர்த்திகளையும், அந்தர்யாம்யவதாரத்தையும் அநுபவித்தபிறகு, இம்மூர்த்திகளுக்கெல்லாம் மூலாவதாரமாய் விளங்குபவனும், பத்மநாபன் என்னும் திருநாமத்தை உடையவனுமான க்ஷீராப்திநாதனை அநுஸந்திக்கிறது பத்மநாபன் என்னும் திருநாமம். இங்கு சில விஷயங்களை அறியவேண்டும். அநிருத்த நாராயணனே பிரமனைப் பிறப்பித்தவனென்றும், எல்லா அவதாரங்களுக்கும் மூலமூர்த்தியென்றும் சொல்லும் ப்ரமாணங்கள் முன்பே காட்டப்பட்டன. 'பத்மநாபன் என்னும் பெயரிலிருந்து ப்ரஹ்மருத்ரர்களுக்கு நடுவில் படிக்கப்படும் இவ்விஷ்ணுமூர்த்தியே பிரமனைப் படைத்தவரென்று தோற்றுகிறது. ''ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:|
நாக₃பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக₃தோ மது₂ராம் புரீம்||''
என்று திருப்பாற்கடலில் துயிலும் பெருமானே கிருஷ்ணன் முதலிய அவதாரமூர்த்திகளுக்கு மூலபூகர் என்றும் சொல்லப்படுகிறது. இவை எப்படிப் பொருந்தும் எனில்: அநிருத்தனிடமிருந்து க்ஷீராப்திநாதன் தோன்றுகிறுரென்றும் அவரிடமிருந்து மற்ற அவதாரங்கள் ஏற்படுகின்றன என்றும் கொண்டால் அவதாரமூர்த்தி

களுக்கு அநிருத்தரையும். திருப்பாற்கடல் நாதனையும் மூலமூர்த்தியாகச் சொல்லலாம். "பத்$_3$மநாப$_4$ாதி$_3$கா: ஸர்வே....அநிருத்$_3$த$_4$ாத் ஸமுத்பந்நா தீ$_3$பாத்$_3$ தீ$_3$பா இவேஶ்வரா:" என்று முன் எடுக்கப்பட்ட ப்ரமாணத்தோடும் இது பொருந்தும். மஹாப்ரளயத்தில் அநிருத்தரும். நைமித்திக ப்ரளயத்தில் க்ஷீராப்தி நாதனும் பிரமனைப் பிறப்பிப்பதாகக் கொள்ளலாம். அன்றிக்கே த$_4$ர்ம்யைக்யத்தாலே இருவரையும் ப்$_3$ரஹ்மோத்பாதகர்களாகக் கூறுவதாகவும் கூறலாம். புருஷஸூக்தத்திலும், 'பாதே$_3$ாऽஸ்ய' என்று அநிருத்தரை எடுத்து. 'இஹாப$_4$வாத்புந:' [இங்கு மறுபடியும் அவதரித்தார்] என்று அவருடைய அவதாரபூ$_4$தரான க்ஷீராப்திநாதனைச் சொல்லுவதாகவும். 'ததோ விஷ்வங் வ்யக்ராமத்' என்று அவருடைய அவதாரவ்யாப்தியைச் சொல்லுவதாகவும். 'தஸ்மாத் விராட$_3$ஜாயத' என்று அந்த க்ஷீராப்திநாதனிடமிருந்தே பிரமன் பிறந்தான் என்று சொல்லுவதாகவும் பொருள் கொள்ளலாம். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் 'பத்$_3$மநாபே$_4$ாऽமரப்ரபு$_4$:' என்று வ்யூஹத்தில் நான்காவதான அநிருத்தரைக்குறித்தும். 'பத்$_3$மநாப$_4$: ப்ரஜாபதி:' என்று முதல் அவதாரமான விஷ்ணுவைக்குறித்தும் பத்மநாபசப்தம் ப்ரயோகிக்கப் பட்டிருப்பதையும். 'பத்$_3$மநாப$_4$: ப்ரஜாபதி:' என்றவிடத்து பாஷ்யத்தில் "நைமித்திகஸ்ருஷ்டிப்ரளயவிஷயம் சைதத் த்$_3$ரஷ்டவ்யம்" [இந்த ப்ரஹ்மஸ்ருஷ்டி நைமித்திக ஸ்ருஷ்டிப்ரளய விஷயமானதென்று கருதப்படவேண்டும்] என்று பட்டர் அருளிச்செய்ததையும் இங்கு அநுஸந்திப்பது. இனி இப்பத்மநாபசப்தார்த்தை விவரிப்போம்.

(பத்மநாபன்) "ஸர்வஜக$_3$த்காரணம் பத்$_3$மம் நாபெ$_4$ள யஸ்ய ஸ:"

[எல்லா ஜகத்துக்கும் காரணமான பத்மத்தை நாபியில் உடையவன் எவனோ அவன்.] என்று சங்கரபாஷ்யத்தில்



பொருளுரைக்கப்பட்டது. "பாமரு மூவுலகும் படைத்த பற்பநாபாவோ!" என்று ஆழ்வாரும். "ஊழிமுதல்வன்........ பாழியந்தோளுடைப் பற்பநாபன்" என்று ஆண்டாளும் பத்மநாபசப்தத்திற்கு அர்த்தம் பண்ணினார்கள். "த$_4$ாதோத் த$_2$ாந: ஸம்விஶதி பஞ்சவர்ஷஶதாநி து" [(பத்மஸம்பவனை) பிரமன் (தாமரைக்கொடியில்) மேல் நோக்கிப்புவனாய் ஐநூறு வருஷங்கள் நுழைந்தான்.] என்றும் "தர்த்துர் நாப்$_4$யாம் புஷ்கரம் ப்ராதுர்ப$_4$வதி" [ஸர்வலோகத்தை தரிப்பவனான நாராயணனுடைய நாபியில் தாமரை உண்டாயிற்று.] என்றும், "அஜஸ்ய நாப$_4$ாவத்$_4$யேகமர்ப்பிதம்" [பிறப்பிலியான பெருமானின் நாபியில் ஒரு (தாமரை) தோற்றுவிக்கப்பட்டது.] என்றும், "யந்நாபி$_4$பத்$_3$மாத$_3$ப$_4$வந்மஹாத்மா ப்ரஜாதிபர் விஶ்வஸ்ருட்$_3$ விஶ்வரூப:" [உலகை உருவமாகக் கொண்டவனும், உலகை ஸ்ருஷ்டிப்பவனுமான பிரமன் எவருடைய நாபீகமலத்திலிருந்து தோன்றினரோ....] என்று மஹோபநிஷத்திலும், "ப்$_3$ரஹ்ம வை ப்$_3$ரஹ்மாணம் புஷ்கரேऽஸ்ருஜத்" [ப்ரஹ்மம் பிரமனைத் தாமரையில் தோற்றுவித்தது] என்று அதர்வண வேதத்திலும், "ஸ ப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமப$_4$வத்" [அந்தப் பிரமன் ஒருவனே (எம்பெருமானுடைய திருநாபீ) கமலத்தில் தோன்றினன்.] என்றும் பல வாக்கியங்களால் வேதத்திலும்

"யத் தத் பத்$_3$மமபூ$_4$த் பூர்வம் தத்ர ப்$_3$ரஹ்மா வ்யஜாயத ।
ப்$_3$ரஹ்மணஶ்சாபி ஸம்பூ$_4$த: ஶிவ இத்யவத$_4$ார்யதாம் ॥
ஶிவாத் ஸ்கந்த$_3$ஸ் ஸம்ப$_3$பூ$_4$வ ஏதத் ஸ்ருஷ்டிசதுஷ்டயம் ॥

[(பகவானுடைய உந்தியிலிருந்து) யாதொரு தாமரை முன் உண்டாயிற்றோ அதில் பிரமன் பிறந்தான். பிரமனிடமிருந்தே சிவன் பிறந்தானென்று அறியத்தக்கது. சிவனிடமிருந்து ஸ்கந்தன் உண்டானான். இது (முதலில் ஏற்பட்ட) நாலு ஸ்ருஷ்டி.] என்று மஹாபாரதத்திலும்

"கதா3சித் தஸ்ய ஸுப்தஸ்ய நாப்2யாம் காமாத3ஜாயத।
திவ்யமஷ்டத3ளம் பூ4ரி பங்கஜம் பார்த்தி2வம் மஹத்॥
யஸ்ய ஹேமமயீ தி3வ்யா கர்ணிகா மேருருச்யதே॥"

*[அப்பெருமான் ஒரு ஸமயம் யோகநித்திரை செய்துகொண்டிருக்கும்போது, அவனுடைய ஸங்கல்பத்தினால் அவனுடைய திருநாபியில், எட்டு தளத்தையுடையதும், ப்ருதிவிஸம்பந்தமுள்ளதும், மிகப்பெரியதும் அழகியதுமான தாமரை உண்டாயிற்று. அதனுடைய ஸுவர்ணமயமான அழகிய கர்ணிகை மேருமலையாயிற்று என்று சொல்லப்படுகிறது.]* என்று பாத்மபுராணத்திலும் சொல்லப்பட்டது. "நாவியுள் நற்கமல நான்முகனுக்கொருகால் தம்மனையானவனே!" என்று பெரியாழ்வாரும். "நாட்டைப்படையென்றயன் முதலாத் தந்த நளிர் மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன் தன்னைக்கண்டீரே" என்று ஆண்டாளும் "தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே!" என்று குலசேகராழ்வாரும்,

"போது தங்கு நான்முகன் மகன் அவன் மகன் சொலில்
மாது தங்கு கூறன் ஏறதூர்தி என்று வேதநூல்
ஓதுகின்றதுண்மை அல்லதில்லை மற்றுரைக்கிலே" —என்று

திருமழிசைப்பிரானும். "அயனைப் படைத்ததோர் எழில் உந்தி" என்று திருப்பாணாழ்வாரும். "அங்கமலத்தயன்" என்றும். "ஒருவனை உந்திபூமேல் ஓங்குவித்து" என்றும், திருமங்கைமன்னனும். "செய்ய மறையான் நின் உந்தியான்" என்றும், "நான்முகற்குப் பூமேல் பகரமறை பயந்த பண்பன்" என்றும் பொய்கைப்பிரானும், "இருந்தண் கமலத் திருமலரினுள்ளே திருந்து திசைமுகனைத் தந்தாய்" என்று பூதத்தாழ்வாரும், "அலரெடுத்த உந்தியான்" என்று பேயாழ்வாரும், "ஒரு தானாகித் தெய்வ நான்முகக் கொழுமுளை ஈன்று முக்கணீசனொடு தேவு பல நுதலி மூவுலகம் விளைத்த உந்தி மாயக்கடவுள் மாமுதலடியே" என்று நம்மாழ்வாரும் எம்பெருமான் ஸர்வஜகத்காரணமான பத்மத்தை நாபியிலே



கொண்டு விளங்குவதை அநுபவித்தார்கள். "அஜநிஷ்ட ச கஸ்ய நாபே4:" *[எவனுடைய உந்தியிலிருந்து இவ்வுலகம் உண்டாயிற்று?]* என்றார் ஆளவந்தாரும்.

"த்ரயோ தே3வாஸ் துல்யாஸ் த்ரிதயமித3மத்3வைதமதி4கம்
த்ரிகாத3ஸ்மாத் தத்த்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்।
விபே4ார் நாபீ4பத்3மோ விதி4ஶிவநித3ாநம் ப4க3வத:
தத3ந்யத்3 ப்4ரூப4ங்கீ3பரவதி3தி ஸித்3த4ாந்தயதி ந:॥"

[மும்மூர்த்திகளும் ஸமர்' 'மூவரும் ஒன்றே' 'மூன்றைக் காட்டிலும் வேறுபட்டது பரதத்வம்' என்னும் *விதண்டாவாதங்களைப் போக்கடிப்பதாய், பிரமருத்திரர்களுக்கு முதற்கிழங்காயிருப்பதான பெரியபெருமானுடைய திருநாபிக்கமலமானது அவனையொழிந்த மற்றவையெல்லாம் அவனுடைய புருவநெரிப்புக்கு வசப்பட்டவை என்று நமக்கு முடிவுகட்டித் தருகின்றது.]* என்று பட்டர் அருளிச்செய்தபடியே பரதத்வநிர்த்தாரணம் செய்துதரும் திருநாமமன்றோ இது. (பத்மநாபன்) "பத்3மமிவ நாபி4: யஸ்ய ஸ:" *[தாமரைபோன்ற உந்தியை உடையவன்]* என்றும் பொருள்கொள்ளலாம். "ஹ்ருத்பத்3மஸ்ய நாபௌ4ள மத்4யே ப்ரகாஶமாநத்வாத் வா பத்3மநாப4:" *[ஹ்ருதய கமலத்தின் நடுவில் பிரகாசிப்பதால் பத்மநாபனாகிறான்.]* என்றும் சங்கரர் பொருள்கொண்டார்.

இப்படி ஸகலாவதாரமூலமூர்த்தியான பத்மநாபாவதாரம் அநுபவிக்கப்பட்டது. அடுத்தபடியாக அப்பெருமானுடைய முக்கியாவதாரமாகிய க்ருஷ்ணாவதாரம் தா3மோத3ரநாமத்தில் அநுபவிக்கப்படுகிறது. பத்மநாபன் என்னும் திருநாமத்தினால் அவதாரத்திலும் பரத்வம் பொலிய நிற்பவனென்று காட்டப்பட்டது. 'தாமோதரன்' என்று ஓரிடைச்சிக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி நின்ற ஸௌலப்4யத்தின் எல்லை நிலத்திலே ஈடுபடுகிறது. 'தா3ம' என்று

கயிற்றுக்குப் பெயராகையால் கயிற்றை வயிற்றிலுடையவன் என்று தாமோதர நாமத்திற்குப் பொருளாகிறது.

**"தயோர் மத்$_4$யக$_3$தம் பத்$_3$த$_4$ம் த$_4$ாம்நா க$_3$ாட$_4$ம் தயோத$_3$ரே।**
**ததஸ்ச த$_3$ாமோத$_3$ரதாம் ஸ யயௌ த்$_3$ாமப$_3$ந்த$_4$நாத்॥"**

[அந்த யசோதையால் வயிற்றில் கயிற்றினாலே கட்டப் பட்டவனாய் அம்மரங்களினிடையில் சென்றான். கயிற்றால் கட்டப்பட்டதால் தாமோதரனாயிருக்கும் தன்மையை அடைந்தான்.] என்று சாஸ்த்ரம் சொல்லிற்று.

**"த$_3$ாம்நா சைவோத$_3$ரே பத்$_3$த்$_4$வா ப்ரத்யப$_3$த்$_4$நாது$_3$லூக$_2$லே"** [கயிற்றால் வயிற்றில் கட்டி உரலில் பிடித்துக் கட்டினாள்.] என்று விஷ்ணு புராணத்திலும் இத்திருநாமம் விவரிக்கப் பட்டது. ஸர்வஸ்மாத்பரன் ஓரிடைச்சியின் கையிலே கட்டுண்டு கிடந்ததைக்கண்டு **"எத்திறம்! உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே"** என்று **நம்மாழ்வார்** ஆறு மாதம் மோஹித்துக் கிடந்தார். **"கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்"** என்று மதுரகவிகளும், **"கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ"** என்று **திருமங்கையாழ்வாரும்** இந்நீர்மையிலே ஈடுபட்டனர்.

**"த$_3$ாமாநி லோகநாமாநி ப$_4$ாந்தி யஸ்யோத$_3$ராந்தரே।**
**தேந த$_3$ாமோத$_3$ரோ தே$_3$வ: ஸ்ரீத$_4$ரஸ்து ஸமாஸ்ரித:॥**

[தாமசப்தத்தினால் சொல்லப்படும் லோகத்திலுள்ள நாம ரூபங்களெல்லாம் (பிரளயகாலத்தில்) அவனுடைய வயிற்றினுள் விளங்குகிறபடியால் ஸ்ரீதரன் தாமோதரனாகிறான்.] என்று புராணத்தில் சொல்லியபடியும் பொருள் கொள்ளலாம். **"தாமோதரனைத் தனி முதல்வனை ஞாலமுண்டவனை"** என்று **நம்மாழ்வார்** இவ்வர்த்தத்தை உணர்த்தினார். **"த$_3$மாதி$_3$ ஸாத$_4$நேந உத$_3$ாரா உத்க்ருஷ்டா மதிர்யா தயா க$_3$ம்யத இதி த$_3$ாமோத$_3$ர:"** [தமம் முதலிய ஸாதனங்களால் உதாரமாய் (உயர்ந்ததாய்) விளங்கும் புத்தி **'த$_3$மோத$_3$ாரா'** எனப்படும். அந்த புத்தியால் அறியப்படு



மவன் தாமோதரன்.] என்றும் **சங்கரர்** பொருளுரைத்தார். **'த$_3$மாத்$_3$ த$_3$ாமோத$_3$ரம் வித$_3$:'** [தாமோதரனை தமத்தினால் அறிகிறார்கள்] என்ற பகவத்வசனம் இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணம். **"தே$_3$வாநாம் ஸுக$_2$ஸம்ஸித்வாத் த$_3$ாமாத்$_3$ த$_3$ாமோத$_3$ரம் வித$_3$:"** [தேவர்களுக்கு ஸுகமானவற்றை உபதேசிப்பதாலும், கயிற்றினால் கட்டுப்பட்டதாலும் தாமோதரனென்று அறிகிறார்கள்.] என்ற ப்ரமாணத்தின் படியும் பொருள் சொள்ளலாம்.

ஆக, இப்பன்னிரு நாமங்களின் பொருளும் விவரிக்கப் பட்டதாயிற்று. வாஸுதேவன் முதலான நான்கு வியூஹ மூர்த்திகளினின்றும் மூன்று மூன்று மூர்த்திகளாகத் தோன்றிய கேசவாதி மூர்த்யந்தரங்களுள்ளதாகவும், இவர்கள் நெற்றி முதலிய அவயவங்களில் நின்றுகொண்டு சரீரத்தை ரக்ஷிக்கிறார்களென்றும், தியானிப்பவர்களுடைய தாபங்களைப் போக்கடிக்கிறார்களென்றும் பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் ப்ரதிபாதிக்கப்பட்டது. இக்கேசவாதிநாமங்கள் அவர்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

## ப்ராணாயாமம்

ஆசமநத்திற்கு அடுத்தபடியாக, ஸந்தியாவந்தனத்தில் அடிக்கடி விதிக்கப்படும் ப்ராணாயாமம் விவரிக்கப்படுகிறது. ப்ராணாயாமத்தின்போது உச்சரிக்கவேண்டிய மந்திரம் பின் வருமாறு:—

ओं भूः। ओं भुवः। ओं सुवः। ओं महः। ओं जनः। ओं तपः। ओं सत्यं।
ओं तत्सवितुर्वरेण्यम्। भर्गो देवस्य धीमहि। धियो यो नः प्रचोदयात्।
ओं आपः ज्योती रसः अमृतं ब्रह्म भूर्भुवस्सुवरों।

ஓம் பூ$_4$:। ஓம் பு$_4$வ:। ஓம் ஸுவ:। ஓம் மஹ:।
ஓம் ஜந:। ஓம் தப:। ஓம் ஸத்யம்।
ஓம் தத் ஸவிதுர் வரேண்யம்। ப$_4$ர்கே$_3$ா தே$_3$வஸ்ய தீ$_4$மஹி।
தி$_4$யோ யோ ந: ப்ரசோத$_3$யாத்।
ஓம் ஆப: ஜ்யோதீ ரஸ: அம்ருதம் ப்$_3$ரஹ்ம
பூ$_4$ர்பு$_4$வஸ்ஸுவரோம்.

இம்மந்திரங்களை. வலது கைப் பெருவிரலாலும், மோதிர விரலாலும் மூக்கைப் பிடித்துக்கொண்டு உச்சரிக்க வேண்டும். உச்சரிக்கும்போதே காற்றை இடது நாசியால் உள்ளே இழுத்து. சிறிதுநேரம் நிறுத்தி, வலது நாசியால் வெளிவிடவேண்டும். இம்மாதிரி மூன்று தடவை இம் மந்திரங்களை உச்சரிப்பது ஒரு ப்ராணாயாமமாகிறது. பூ₄: பு₄வ:......ஸத்யம் என்னும் ஏழும். ஏழு வ்யாஹ்ருதிகள் எனப்படுகின்றன. அதற்குமேல் 'ப்ரசோத₃யாத்' என்பது வரை காயத்ரீ என்று பிரஸித்திபெற்ற மந்த்ரமாகும். அதற்கு மேல் 'ஓம் ஆப:' என்று தொடங்கி 'பூ₄ர்பு₄வஸ்ஸுவரோம்' என்றுள்ள பாகம் 'காயத்ரீசிரஸ்' எனப்படுகிறது.

"ஸவ்யாஹ்ருதிம் ஸப்ரணவாம் கா₃யத்ரீம் ஶிரஸா ஸஹ।
த்ரி: படே₂த்₄ஆயதப்ராண: ப்ராணாயாமஸ் ஸ உச்யதே ॥"

[ஸப்தவ்யாஹ்ருதிகளோடும், ப்ரணவத்தோடும். சிரஸ் ஸுடனும் கூடிய காயத்ரியை மூச்சை அடக்கிக்கொண்டு மூன்று தடவை படிப்பது ப்ராணாயாமம் எனப்படுகிறது.] என்று ப்ராணாயாமலக்ஷணம் சொல்லப்பட்டது. இந்த ப்ராணாயாமத்தின் பெருமை

"ய ஏதா வ்யாஹ்ருதீஸ் ஸப்த ஸம்ஸ்மரேத் ப்ராணஸம்யம:।
உபாஸிதம் ப₄வேத் தேந விஸ்வம் பு₄வநஸப்தகம் ॥
ஸர்வேஷு சைவ லோகேஷு க்ரமாசாரஸ்ச ஜாயதே ॥
ஷோட₃ஶாக்ஷரகம் ப்₃ரஹ்ம கா₃யத்ர்யாஸ்து ஶிர: ஸ்ம்ருதம்।
ஸக்ருதா₃வர்த்தயந் மர்த்ய: ஸம்ஸாராத₃பி முச்யதே ॥"

[ப்ராணனை அடக்கி இந்த ஏழு வ்யாஹ்ருதிகளையும் எவர்கள் நினைக்கிறார்களோ. அவர்களால் ஏழு உலகங்களும் உபாஸிக் கப்பட்டதாகிறது; எல்லா உலகிலும் ஸஞ்சரிக்கக்கூடிய சக்தியும் உண்டாகிறது. பதினாறு அக்ஷரங்கொண்ட காயத்ரியின் சிரஸ்ஸானது வேதத்தையே தன்னுட்கொண்ட தாகச் சொல்லப்படுகிறது. அதை ஒரு தடவை சொன்ன போதிலும் ப்ராஹ்மணன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுகிறான்.] என்று யாஜ்ஞவல்க்யராலும்,



"விதி₄நா ஶாஸ்த்ரத்₃ருஷ்டேந ப்ராணாயாமாந் ஸமாசரேத் ॥
யது₃பஸ்த₂க்ருதம் பாபம் பத்₃ப்₄யாம் வா யத் க்ருதம் ப₄வேத்।
பா₃ஹுப்₄யாம் மநஸா வாசா ஶ்ரோத்ர த்வக்₃ க்₄ராண சக்ஷுஷா ॥"

[சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விதிப்படி ப்ராணாயாமங் களைச் செய்யவேண்டியது; உபஸ்தத்தினாலும், கால்களாலும் கைகளாலும். மனஸ், வாக்கு. காது. தோல். மூக்கு. கண் இவற்றாலும் செய்யப்பட்ட பாபம் (ப்ராணாயாமத்தினால். அழிகிறது.)] என்று போதாயனராலும்.

"த₃ஶப்ரணவஸம்யுக்தை: ப்ராணாயாமைஶ் சதுர்த₃ஶை:।
முச்யதே ப்ரஹ்மஹத்யாயா: மாஸாச்சைவோபபாதகை: ॥
ஸவ்யாஹ்ருதிம் ஸப்ரணவாம் கா₃யத்ரீம் ஶிரஸா ஸஹ।
யே ஜபந்தி ஸதா₃ தேஷாம் ந ப₄யம் வித்₃யதே க்வசித் ॥"

[பத்து ப்ரணவங்களுடன் கூடியதான ப்ராணாயாமங்கள் பதினான்கை ஒரு மாதம் அநுஷ்டித்தானாகில் ப்ரஹ்மஹத்தி தோஷத்தினின்றும்.உபபாதகங்களிலிருந்தும் விடுபடுகிறான். வ்யாஹ்ருதிகள், ப்ரணவம், சிரஸ். ஆகிய இவற்றுடன் கூடிய காயத்ரியை எவர்கள் எப்போதும் ஜபிக்கிறார்களோ அவர்களுக்கு எங்கும் பயமில்லை.] என்று யமஸ்ம்ருதியிலும்,

"ப்ராணாயாமாந் தா₄ரயேத் த்ரீந் யதா₂விதி₄ ஸமாஹித:।
அஹோராத்ரக்ருதம் பாபம் தத்க்ஷணாதே₃வ நஶ்யதி ॥"

[மனச்சாந்தியுடன் கூடியவனாய் மூன்று ப்ராணாயாமங்களைச் செய்யக்கடவன்; (அப்படிச் செய்வதால்) இரவிலும் பகலிலும் செய்த பாபங்கள் அந்த க்ஷணமே நசிக்கிறது.] என்று சௌனகராலும்,

"ப்ராணாயாமா ப்₃ராஹ்மணஸ்ய த்ரயோऽபி விதி₄வத் க்ருதா:।
வ்யாஹ்ருதிப்ரணவைர் யுக்தா விஜ்ஞேயம் பரமம் தப: ॥
த₃ஹ்யந்தே த்₄மாயமாநாநாம் தா₄தூநாம் ஹி யதா₂ மலா:।
ததே₂ந்த்₃ரியாணாம் த₃ஹ்யந்தே தோ₃ஷா: ப்ராணஸ்ய நிக்₃ரஹாத் ॥ [6]

**ஸவ்யாஹ்ருதிப்ரணவகா: ப்ராணாயாமாஸ்து ஷோட$_3$ஶ।**
**அபி ப்$_4$ரூணஹநம் மாஸாத் புநந்த்யஹரஹ: க்ருதா:॥ [12]**

*[வ்யாஹ்ருதிப்ரணவங்களுடன் கூடிய மூன்று ப்ராணாயாமங்களும், விதிப்படி அநுஷ்டிக்கப்பட்டனவாகில் அவையே ப்ராஹ்மணர்களுக்கு மேலான தபஸ் என்று அறியப்பட வேண்டும். நெருப்பிலிட்டுதிச் சுடப்பட்டவளவில், தங்கம், வெள்ளி முதலிய தாதுக்களின் அழுக்குகள் எப்படி எரிக்கப்படுகின்றனவோ, அப்படியே ப்ராணாயாமம் செய்வதால் இந்திரியங்களுடைய தோஷங்களெல்லாம் எரிக்கப்படுகின்றன. வ்யாஹ்ருதிப்ரணவங்களுடன் கூடியவையும், தினந்தோறும் செய்யப்படுமவையுமான பதினறு ப்ராணாயாமங்கள், கர்ப்பத்தைச் சிதைத்தவனையும் ஒரு மாதத்தில் பரிசுத்தப்படுத்துகின்றன.]* என்று மனுவினாலும்,

**"ப்ராணாயாமத்ரயம் க்ருத்வா ஸூர்யஸ்யோத$_3$யநம் ப்ரதி।**
**நிர்மலா: ஸ்வர்க்க$_3$மாயாந்தி ஸந்த: ஸுக்ருதிநோ யத$_2$ா॥"**

*[ஸூர்யனுதிக்கும்போது மூன்று ப்ராணாயாமங்களைச் செய்வதினால், நற்காரியங்கள் பல செய்த பெரியோர்களைப் போலே தோஷமற்றவர்களாய் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர்.]* என்று யோகயாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியிலும் விரிவாக உபதேசிக்கப்பட்டது.

**"நாஸிகோத்க்ருஷ்ட உச்ச்$_2$வாஸோ த்$_4$மாத: பூரக உச்யதே।**
**கும்ப$_4$கோ நிஶ்சலஶ்வாஸோ முச்யமாநஸ்து ரேசக:॥"**

*[மூக்கின் மேல் காற்றை உள்ளிழுப்பது பூரகமெனப்படுகிறது. காற்றை 'அசையாமல் அடக்கிவைப்பது கும்ப$_4$கமாகும்; வெளிவிடுவது ரேசகமென்று சொல்லப்படும்.]* என்று யோகயாஜ்ஞாவல்க்யத்தில் சொல்லப்பட்டது. இப்படி விதிப்படி ப்ராணாயாமம்செய்வதினால் சரீராரோக்யம் முதலிய த்$_3$ருஷ்டப்ரயோஜனங்கள் ஸித்திக்கின்றன என்பது அநுஷ்டிப்பவர்கள் அநுபவத்தில் கண்ட உண்மையாகும். இனி ப்ராணாயாம மந்திரத்தின் பொருள் விவரிக்கப்படுகிறது.



*[ஓம் பூ$_4$ ஓம் பு$_4$வ:............ஓம் ஸத்யம்]* ஒவ்வொரு அண்டத்திலுமுள்ள பதினன்கு லோகங்களில், பூலோகம், பு$_4$வர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜநோலோகம், தபோலோகம் ஸத்யலோகம் என்பவை மேலுள்ள ஏழு லோகங்களாகச் சொல்லப்படுகின்றன. ஓங்காரமானது பகவத்வாசகமென்பது ஶ்ருதிஸ்ம்ருதிகளில் ப்ரஸித்தம்.

**"ய: புநரேதம் த்ரிமாத்ரேணைவ ஓமித்யேதேநைவ**
**அக்ஷரேண பரம் புருஷமபி$_4$த்$_4$யாயீத"**

*[மூன்று மாத்திரைகளுடைய 'ஓம்' என்னும் இந்த அக்ஷரத்தினால் பரமபுருஷனை எவன் தியானிக்கிறானே,.......]* என்று முண்டகோபனிஷத்திலும், *"சதுர்த்$_4$யர்த்த$_4$மாத்ரா புருஷைத$_3$வத்யா"* என்று அதர்வசிகையிலும்.

**"யத்$_3$வேத$_3$ாதெ$_3$ள ஸ்வர: ப்ரோக்தோ வேத$_3$ாந்தே**
**ச ப்ரதிஷ்டி$_2$த:।**
**தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பரஸ் ஸ மஹேஶ்வர:॥"**

*[வேதத்தின் ஆதியிலும் முடிவிலும் யாதொரு ஸ்வரமானது உச்சரிக்கப்படுகிறதோ, தனக்குக் காரணமான அகாரத்தில் ஒடுங்கின அவ்வோங்காரத்திற்கு எவனொருவன் பொருளோ அவனே மஹேஶ்வரன்.]* என்று நாராயணவல்லியிலும்,

**"ஓமித்யேகாக்ஷரம் ப்$_3$ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்।**
**ய: ப்ரயாதி த்யஜந் தே$_3$ஹம் ஸ யாதி பரமாம் க$_3$திம்॥"**

*[ப்ரஹ்மவாசகமான ஓங்காரத்தைச் சொல்லிக்கொண்டு, என்னை நினைத்துக்கொண்டு தேஹத்தை எவன் விட்டுச் செல்லுகிறானே, அவன் மேலான கதியை அடைகிறான்.]* என்று கீதையிலும்,

**"ஓமித்யேவம் ஸத$_3$ா விப்ரா: பட$_2$த்$_4$வம் த்$_4$யாத கேஶவம்"**

*[ப்ராஹ்மணர்களே! 'ஓம்' என்று எப்போதும் படியுங்கள்; (அதற்குப்பொருளான) கேசவனையே தியானம் செய்யுங்கள்.]* என்று ஹரிவம்சத்தில் ருத்ரனாலும்,

"க்லேஶகர்மவிபாகாஶயை: அபராம்ருஷ்ட
புருஷவிஶேஷ ஈஶ்வர: | தஸ்ய: வாசக: ப்ரணவ: |"

[துக்கம், கர்மபலன், வாஸனை ஆகியவைகளால் தொடப்படாத புருஷன் ஈச்வரன்; அவனுக்கு வாசகம் ப்ரணவம்.] என்று பாதஞ்ஜல யோகஸூத்ரத்திலும் சொல்லப்பட்டதன்றோ. ஓங்காரத்தையும் லோகங்களில் ஒவ்வொன்றையும் சேர்த்துப் படிப்பதற்குக் கருத்தென்னென்னில்: ஓங்கார வாச்யனான பகவானே பூலோகம் முதலிய ஸப்த லோகங்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறான் என்பதே. "அநுப்ரவேஶக்ருதம் ஸாமாநாதி4கரண்யம்" [ஒரே வேற்றுமையில் படிப்பது வியாபித்திருக்கையைக் காரணமாகக் கொண்டதாகும்.] என்பதல்லவோ வேதாந்திகள் கண்ட உண்மை. "ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:" [எல்லாவற்றையும் வியாபித்திருப்பதால் எல்லாமாகிறாய்.] என்றானன்றோ அர்ஜூனனும்.

"தத்ஸ்த2த்வாத3நுபஶ்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத4வ:"

[ஜீவனுக்குள் பரமாத்மா நிறைந்திருப்பதால் மஹான்கள் இருவரையும் ஒருவனென்றே பார்க்கிறார்கள்.] என்றார் வியாஸரும்.

அன்றிக்கே, மற்றொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம். ஓங்காரத்திற்கு, "அகாரவாச்யனான விஷ்ணுவுக்கே அடிமைப்பட்டிருப்பவன் மகாரவாச்யனான ஜீவன்" என்று ரஹஸ்யக்ரந்தங்களில் பொருளுரைக்கப்பட்டிருப்பது பிரஸித்தம். இதில் அசேதனதத்வம் சாப்தமாகக் காட்டப்படவில்லை. அதையும் காட்டுவதற்காக, ஓம் பூ4:........ஓம் ஸத்யம் என்று படிக்கப்படுவதாகவும் கொள்ளலாம்; சேதநாசேதநங்தளெல்லாம் பவவானுக்கு சேஷப் பொருள் என்று உணர்த்துகிறபடி. இத்தால் லீலாவிபூ4தியோக3ம் சொல்லப்பட்டது.



சுருதப்ரகாசிகாசாரியர், பூ:, புவ:, ஸுவ: முதலியவற்றை லோகபரமாகக்கொள்ளாமல் பகவத்பரமாகவே பின்வருமாறு விவரித்திருக்கிறார். (பூ4:) 'பூ4' சப்தமானது 'ப4வத்யஸ்மாத்' [இதனிடமிருந்து உண்டாகின்றது.] என்கிறவ்யுத்பத்தியின்படி காரணத்தைச் சொல்லும். இன்ன வஸ்துவுக்குக் காரணம் என்று விசேஷிக்காமையால் பூ4 சப்தம் ஸர்வகாரணமான ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது. (பு4வ:) 'பூ4:' என்னும் தாது வஸிப்பதையும் சொல்லும். 'ப4வந்தி அஸ்மிந்' [இவனிடத்தில் (எல்லாம்) வஸிக்கின்றன.] என்றும், 'ப4வதி அயம்' [இவன் (எல்லாவற்றிலும்) வஸிக்கிறான்.] என்றும் புவஶ் ஶப்தத்திற்குப் பொருளாகிறது. முதல் அர்த்தத்தினால் ஸர்வதா4ரகத்வமும், ப3ஹிர்வ்யாப்தியும் தெரிவிக்கப்படுகின்றன. இரண்டாவது பொருளிலிருந்து, ஸர்வ வ்யாபகத்வமும், அந்தர்வ்யாப்தியும் சொல்லப்படுகின்றன. இப்படிப்பட்ட பெருமையையுடையவன் பரவாஸுதேவனே என்பதை,

"யச்ச கிஞ்சித் ஜக3த்யஸ்மிந் த்3ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா |
அந்தர் ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த: ||"

[இவ்வுலகில், காண்பனவும், கேட்பனவுமாகிய எல்லாவற்றின் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான்.] என்று வேதமும்.

"ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத: |
தத: ஸ வாஸுதே3வேதி வித்3வத்3பி4: பரிபட்2யதே ||

[எல்லாவற்றிலும் இவன் வஸிக்கையாலும், எல்லாம் இவனிடம் வஸிக்கையாலும் இவன் பெரியோர்களால் வாஸுதேவன் எனப்படுகிறான்.] என்றும்.

"வஸந்தி தத்ர பூ4தாநி பூ4தாத்மந்யகி2லாத்மநி |
ஸ ச பூ4தேஷ்வஶேஷேஷு வகாரார்த்த2ஸ் ததோऽவ்யய: ||"

[பூதங்களை சரீரமாகக் கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூதங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூதங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனான பகவான் 'வகாரத்துக்கு அர்த்தமாகிறான்.] என்றும் விஷ்ணுபுராணமும் உத்கோஷித்தன.

(ஸூவ:) "ஷூஞ் ப்ராணிப்ரஸவே" ['ஷூஞ்' என்னும் தா$_4$து ப்ராணிகளை உண்டாக்குவதைச் சொல்லுகிறது.] என்று தாது பாடம். ஆகையால் 'ஸூ:' என்னும் பதம் (பகவானாகிய தன்னாலே) உண்டாக்கப்பட்ட வஸ்துக்களைச் சொல்லுகிறது. அவைகளை அடைகிறானாகையால் 'ஸூவ' எனப்படுகிறான் ஸர்வேஶ்வரன்.

**"தத் ஸ்ருஷ்ட்வா ததே$_3$வாநுப்ராவிஶத்"**

[அதை ஸ்ருஷ்டித்து, அதையே வியாபித்தது.] என்ற வேதவாக்யம் இவ்விஷயத்தில் ஆதாரம். "தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும் வானோர் பெருமான்" என்றார் ஆழ்வாரும். "ஸ ஏவ ஸ்ருஜ்ய:" என்ற விஷ்ணுபுராண ஶ்லோகத்திலும், பகவான் தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களைவியாபித்திருக்கிறானென்னும் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டது. 'ஸூவ:' என்னுமிடத்தில் ஜகத்தை ஸ்ருஷ்டிப்பவன் பகவான் என்று சொல்லப்பட்டதாகிறது. இது ஸ்தி$_2$தி ஸம்ஹாரங்களுக்கும் உபலக்ஷணம். 'பூ$_4$:' என்றவிடத்தில் பகவான் உபாத$_3$ான காரணமெனப்பட்டது. இங்கு அவனே நிமித்தகாரணமெனப்படுகிறது. 'ஜக$_3$த்$_3$வ்யாபாரவர்ஜம்' என்னும் ஸூத்ரத்திலே இந்த ஜகத் ஸ்ருஷ்டி முதலியவை இதரசேதனர்களுக்குக் கிடையாது என்று வியாஸர் நிர்ணயித்தார். பிரமன் முதலியோர் ஸ்ருஷ்டி முதலானவற்றை நடத்திப்போருவதாகக் கேளாநின்றோமே என்னில்.

**"ஸ்ருஷ்டிஸ்தி$_2$த்யந்தகரணீம் ப்$_3$ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் |
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப$_4$க$_3$வாந் ஏக ஏவ ஜநார்த்த$_3$ந: ||"**



[ஜநார்த்தனனான பகவான் ஒருவனே, ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தும் பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் ஸம்ஜ்ஞைகளை அடைகிறான்.] என்கிறபடியே ப்ரஹ்மருத்ரர்களை சரீரமாகக்கொண்டும், விஷ்ணுவாக அவதரித்தும் ஸ்ருஷ்ட்யாதிகளைச் செய்கிறானாகையால் இவனே ஜக$_3$ந்நிமித்தகாரணமாவான்.

(மஹ:) "மஹீயதே இதி மஹ:" [எல்லாராலும் பூஜிக்கப்படுகையால் 'மஹ:' எனப்படுகிறான்.] என்பது மஹஶப்தார்த்தம். 'மஹ-பூஜாயாம்' என்று தாது, அன்றிக்கே, 'மஹ:' என்று தேஜஸ்ஸைச் சொல்லுகையால் தேஜோமயனாயிருப்பவன் என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். எவ்விதமான தேஜஸ் என்று குறிப்பிட்டுச் சொல்லாமையால், எதிரிகளுக்கு ஆதித்யன், அக்னி முதலியவற்றைப்போல் அணுகவொண்ணாதவனாகவும், அடியார்களுக்குச் சந்திரன், ஸூவர்ணம், மின்னல் முதலியவற்றைப்போல் குளிர்ச்சிபொருந்தியவனாகவும் காட்சியளிப்பவன் என்று தோற்றுகிறது. ஒளியிலே ஸூர்யன் முதலியவற்றைப்போலேயும், குளிர்ச்சியிலே சந்திரன் முதலியவைகளைப்போலேயும் இருப்பவன் என்றும் கொள்ளலாம். வேதங்களும் "ஆதி$_3$த்யவர்ணம் புருஷம்" என்றும், "ஹிரண்மய: புருஷ:" என்றும், "வித்$_3$யுத: புருஷாத்" என்றும், "வித்$_3$யுல்லேகே$_2$வ பா$_4$ஸ்வரா" என்றும், "நக்ஷத்ராணி ரூபம்" என்றும் உத்கோஷித்தன. ரிஷிகளும், "ப்ரஸந்நாதி$_3$த்ய வர்ச்சஸம்" [குளிர்ந்த ஆதித்யனைப் போன்ற ஒளியுள்ளவன்.] என்றும், "சந்த்$_3$ரபா$_4$ஸ்கரவர்ச்சஸம்" என்றும், "சந்த்ரகாந்தாநநம் ராமம்" என்றும், "ஹேமஸமாநவர்ணம்" என்றும் வர்ணித்தார்கள்; "முளைக்கதிரை" என்றும் "புனலுருவாய் அனலுருவில்" என்றும், "கதிர்மதியம்போல் முகத்தான்" என்றும், "மலர்கதிரின் சுடருடம்பாய்" என்றும் இந்தத்தேஜஸ்ஸிலே ஆழ்வார்களும் ஆழங்காற்பட்டார்கள்.

(ஜந:) 'ஜாதாந் நயதீதி ஜந:' என்கிற வ்யுத்பத்தியின் படியே ஸகல ஜீவராசிகளையும் அவரவர்கள் கர்மத்திற்குத் தகுந்தவாறு நடத்திச்செல்கிறான் என்று பொருள். அந்தர்யாமியாயிருந்து நியமிக்கிறான் என்று அர்த்தமாகவுமாம்; "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம்" என்றது சுடர்மிகு சுருதி. "உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்றது தமிழ் மறை. லோகத்தை விடுகிறான் என்று அர்த்தமாகவுமாம்.

(தப:) ஸூர்யன், அக்னி முதலிய தேஜஸ்ஸுகளாயிருந்துகொண்டு தபிக்கிறானாகையால் 'தப:' எனப்படுகிறான்.

**"தஸ்ய பா$_4$ஸா ஸர்வமித$_3$ம் விபா$_4$தி ||"**

**[அவனுடைய ஒளியினாலேயே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.]** என்றும், "யேந ஸூர்யஸ் தபதி தேஜஸேத்$_3$த$_4$:" [எந்தப் பரம்பொருளின் ஒளியினாலே பிரகாசப்படுத்தப்பட்டவனாய் ஸூர்யன் ஒளிவிடா நிற்கிறானோ] என்றும், "யஸ்யாதி$_3$த்யோ பா$_4$முபயுஜ்ய பா$_4$தி" என்றும் மறை அறையாநின்றது.

**"யதா$_3$தி$_3$த்யக$_3$தம் தேஜ: ஜக$_3$த்$_3$ பா$_4$ஸயதேऽகி$_2$லம் |**
**யச்சந்த்$_3$ரமஸி யச்சாக்$_3$நௌ தத்தேஜோ வித்$_3$தி$_4$ மாமகம் ||"**

[உலகையெல்லாம் பிரகாசிக்கச்செய்யும் ஸூர்ய தேஜஸ்ஸும், சந்த்ராக்னிகளுடைய தேஜஸ்ஸும் என்னுடைய ஒளியே என்று அறிவாயாக] என்கிறான் கீதையில் கண்ணனும்.

(ஸத்யம்) ஸ்வரூபத்தாலும், ஸ்வபா$_4$வத்தாலும் விகாரமற்றவன் என்றபடி. "**ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம**" என்றும், "**ஸத்யஸ்ய ஸத்யம்**" என்றும் வேதாந்தங்கள் உத்கோஷித்தனவன்றோ.

'பூ$_4$:' 'பு$_4$வ:' முதலிய ஒவ்வொன்றோடும் ப்ரணவத்தைப் படித்திருப்பதால் இவை ஒவ்வொன்றும் தனித்தனி மந்திரங்



களென்று உணர்த்தப்படுகிறது. இப்படிப்பட்ட ஸ்வரூப ஸ்வபா$_4$வங்களை உடைய அகார வாச்யனுக்கே அடிமைப்பட்டது ஆத்மவஸ்து என்று தெரிவிப்பதற்காகவும் ஓங்காரம் ஆவ்ருத்தி செய்யப்படுகிறது என்று கொள்ளலாம். இப்படிப்பட்ட ப்ரஹ்மம் எதுவோ அது என்று மேல் மந்திரங்களோடு சேர்த்துக்கொண்டும் பொருள் கூறலாம்.

ஓங்காரமாகிய ப்ரணவத்திற்கு ருஷி—ப்$_3$ரஹ்மா, ச$_2$ந்தஸ்ஸு—கா$_3$யத்ரீ, தே$_3$வதை—பரமாத்மா என்று படிக்கப்பட்டிருக்கிறது. 'பூ$_4$:' முதலிய ஏழு வ்யாஹ்ருதிகளுக்கும் ருஷி-வாமதேவர், ச$_2$ந்த$_3$ஸ்ஸு கா$_3$யத்ரீ, ப்$_3$ரஹ்மா தே$_3$வதை என்று சுருதப்ரகாசிகாசாரியர் அருளிச்செய்தார்; இவைகளுக்குத் தனித்தனியே ரிஷிசந்தோதேவதைகளுண்டென்றும் சிலர் நிரூபிக்கிறார்கள் என்றும் காட்டினார். அதாவது:— அத்ரி, ப்$_4$ருகு$_3$, குத்ஸர், வஸிஷ்ட$_2$ர், கௌ$_3$தமர், காச்யபர்; ஆங்கி$_3$ரஸர் ஆகியோர் முறையே இவற்றுக்கு ரிஷிகளாவர். காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்$_3$ருஹதீ, பங்க்தி, த்ருஷ்டுப், ஜகதீ என்பவை முறையே இவற்றுக்குச் சந்தஸ்ஸுகள். அக்நி, வாயு, ஸூர்யன் (அர்க்கன்), வாகீ$_3$சர் (ப்ருஹஸ்பதி), வருணன், இந்திரன், விஶ்வேதேவர்கள் ஆகியோர் தேவதைகள். அதாவது, இந்த தேவதைகளை சரீரமாகக்கொண்ட பகவான் தேவதை என்று தாத்பர்யம். இம்மாதிரியே மற்ற மந்திரங்களிலும் பல பல தேவர்கள் தேவதைகளாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவர்களுக்கு அந்தர்யாமியான பகவானே மந்த்ரப்ரதிபாத்யமான தேவதை என்பதே வேதாந்திகளின் கொள்கையாகும்.

ஓங்காரம், வ்யாஹ்ருதிகள் முதலியவற்றின் உத்பத்தியைப்பற்றி வேதத்தில் சில வ்ருத்தாந்தங்கள் படிக்கப்படுகின்றன. அவை பின்வருமாறு:— பா$_3$ஹ்வ்ருச ப்$_3$ராஹ்மணத்தில்

"ப்ரஜாபதிரகாமயத ப்ரஜாயேயேதி। ஸ தபோऽதப்யத। ஸ தபஸ்தப்த்வா। இமாந் லோகாநஸ்ருஜத்। ப்ருதி2வீமந்தரிக்ஷம் தி3வம்। தாந் லோகாநப்4யதபத்। தேப்4யோऽபி4தப்தேப்4யஸ் த்ரீணி ஜ்யோதீம்ஷ்யஜாயந்த। அக்3நிரேவ ப்ருதி2வ்யா வாயுரந்தரிக்ஷாத் ஆதி3த்யோ தி3வ:। தேப்4யோऽபி4தப்தேப்4யஸ் த்ரீணி ஶுக்ராண்யஜாயந்த। பூ4ரித்யேவ ரிக்3வேதா3தஜாயத பு4வ இதி யஜுர்வேதா3த் ஸுவரிதி ஸாமவேதா3த்। தாநி ஶுக்ராண்யப்4யதபத்। தேப்4யோऽபி4தப்தேப்4யஸ் த்ரயோ வர்ணா அஜாயந்த। அகார உகார மகார இதி। தாநேகதா4 ஸமப4ரத் ததே3ததோ3மிதி। தஸ்மாதோ3மோமித்யாத்மா வ்ருணோதீத3மிதி வை ஸ்வர்க்க3லோக ஓமித்யாதி3த்யோ யோऽஸௌ தபதி॥"

[பரமபுருஷன் தான் பலவாக ஆக்வேண்டுமென்று விரும்பிஞன். அவன் (அதற்கனுகுணமாக) ஸங்கல்பத்தைச் செய்தான். அப்படி ஸங்கல்பத்தைச் செய்து பூமி, அந்தரிக்ஷம், தேவலோகம் ஆகிய இவ்வுலகங்களைப்படைத்தான். அப்படி ஸ்ருஷ்டி செய்யப்பட்ட லோகங்களைக் குறித்து மறுபடியும் ஸங்கல்பித்தான். அப்படி ஸங்கல்பவிஷயமான அந்த லோகங்களிலிருந்து மூன்று சோதிகள் உண்டாயின. ப்ருதிவியிலிருந்து அக்னியும், அந்தரிக்ஷத்திலிருந்து வாயுவும், ஸ்வர்க்கலோகத்திலிருந்து ஸூர்யனும் உண்டானர்கள். (அந்த ஜ்யோதிஸ்ஸுக்களைக் குறித்தும் ஸங்கல்பம் செய்தது) அவைகளிலிருந்து பரிசுத்தமான மூன்று வ்யாஹ்ருதிகள் உண்டாயின. ருக்வேதத்திலிருந்து 'பூ4:' என்றும், யஜுர் வேதத்திலிருந்து 'பு4வ:' என்றும், ஸாமவேதத்திலிருந்து 'ஸுவ:' என்றும் உண்டாயின. அவைகளைக் குறித்தும் ஸங்கல்பம் செய்தான் (பகவான்). அவைகளிலிருந்து 'அ', 'உ', 'ம', என்னும் மூன்று எழுத்துக்கள் தோன்றின. அவைகளை (பரமபுருஷன்) ஒன்று சேர்த்தான். அதுவே ஓங்காரமாயிற்று. ஆகையால் இவ்வோங்காரம் எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறது. இதுவே ஸுவர்க்கலோகமாகும்; ஓங்காரமே பிரகாசிக்கும்படியான ஸூர்யனுகவுமாகிறது.] என்று ஓதப்பட்டது.



"ப்ரஜாபதிர் லோகாநப்4யதபத்। தேப்4யோऽபி4தப்தேப்4யஸ் த்ரயோ வித்3யாஸ் ஸம்ப்ராஸ்ரவந்। தஸ்யா அபி4தப்தாயா: ஏதாந்யக்ஷராணி ப்ராஸ்ரவந்த। பூ4ர் பு4வஸ் ஸுவரிதி। தாந்யப்4யதபத்। தேப்4யோऽபி4தப்தேப்4ய: ஓங்காரஸ் ஸம்ப்ராஸ்ரவத்। யதா2 ஶுக்ரகாநாம் ஶங்குநாநாம் ஸர்வாணி பர்ணாநி ஸந்த்ருண்ணாநி ஏவமோங்காரேண ஸர்வா வாசஸ் ஸ ஓங்கார ஏவ வேத3ஸ் ஸ ப்3ரஹ்ம"

[ப்ரஜாபதியானவர் லோகங்களைக்குறித்து ஸங்கல்பித்தார். அவைகளிலிருந்து மூன்று வித்தைகள் (வேதங்கள்) உண்டாயின. அவைகளைக் குறித்தும் ஸங்கல்பித்தவுடன் 'பூர் புவஸ் ஸுவ:' என்னும் இம்மூன்று அக்ஷரங்களும் உண்டாயின. அவைகளைக் குறித்தும் ஸங்கல்பம் செய்தவுடன் ஓங்காரம் தோன்றிற்று. எப்படி வெளுத்த நிறமுள்ள பக்ஷிகளின் எல்லா இறகுகளும் ஒன்றுகச் சேர்க்கப்பட்டிருக்கின்றதோ, அப்படியே எல்லா வார்த்தைகளும் ப்ரணவத்தினுல் ஒன்றுகக் கோர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே ப்ரணவமே வேதமாகும். அதுவே ப்ரஹ்மம்.] என்று மற்ருெரு உபனிஷத்திலும் உரைக்கப்பட்டது. இவைகளிலிருந்து ஓங்காரத்தினுடையவும், பூ4ராதி3 வ்யாஹ்ருதிகளினுடையவும் பெருமைகள் விளங்குகின்றன.

அடுத்தபடியாக ப்ராணுயாமத்தில் உச்சரிக்கப்படுவது காயத்ரீமந்த்ரம். இதன் பெருமையும் பொருளும் வாசாமகோ3சரம். வைஷ்ணவர்களோடும், சைவர்களோடும், அத்வைதிகளோடும், த்வைதிகளோடும், விசிஷ்டாத்வைதிகளோடும் வாசியறஸர்வத3விஜர்களாலும் ஆதரித்து அநுஸந்திக்கப்படும் மந்திரம் இது ஒன்றேயாகும். ஒவ்வொருமதஸ்தர்களும் தம் தம் மதத்திற்கேற்றவாறு பலவகையாக இம்மந்திரத்திற்குப் பொருள்கொள்ளுகிருர்கள். ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களால் ஆதரிக்கப்பட்ட பொருள்களை, காயத்ரீவிசாரப்ரகரணத்தில் வெகு விரிவாகப் பின்னல்

விவரிப்போம். இப்போது காயத்ரிக்குப் பதவுரை மட்டும் இரண்டு விதமாக எழுதப்படுகிறது:—

**1. ஸவிது:**—உலகங்களை ஸ்ருஷ்டித்தவனுகிய. **தே₃வஸ்ய**—நாராயணனுடையதும். **வரேண்யம்**— எல்லாராலும் வரிக்கத்தகுந்ததுமான, **தத் ப₄ர்க்க₃:**—அந்தக் கல்யாண குணங்களின் ஸமூஹத்தை. **தீ₄மஹி**—தியானம் செய்வோம்; **ய:**—எந்த தேவன். **ந:**—நம்முடைய. **தி₄ய:**—புத்திகளை, **ப்ரசோத₃யாத்**—(தன் விஷயமான உபாஸனகைங்கர்யங்களில்) தூண்டுகிறுரோ;

**2. தே₃வஸ்ய:**—ப்ரகாசம் முதலிய குணங்களையுடைய, **ஸவிது:**— ஸூர்யனுக்குள்ளே எழுந்தருளியிருப்பவனும், **வரேண்யம்**—எல்லாராலும் வரிக்கப்படுபவனும், **ப₄ர்க்க₃:**—ஒளிமயமான திவ்ய மங்கள விக்ரஹவிசிஷ்டனுமான பகவானை. **தீ₄மஹி**—தியானம் செய்கிறேம். (மற்றவை முன்போல்)

இனி "ஓமாப:" என்று தொடங்கியுள்ள மந்திரம் காயத்ரீஶிரஸ் எனப்படும். இதற்கு ருஷி ப்₃ரஹ்மா; அநுஷ்டுப் சந்தஸ்ஸு; பரமாத்மா தேவதை. இதற்குப் பொருள் பின் வருமாறு:—

(ஓமாப:) ஓங்காரவாச்யனை பகவானே "ஆப:" எனப்படுபவன். "ஆபோ வா இத₃ம் ஸர்வம்" முதலான மந்திரங்களில் சொல்லப்படும் அப்ஶப்₃த₃வாச்யன் அச்சுதனே என்று உணர்த்தப்படுகிறது. "ஆப்லு வ்யாப்தௌ" என்கிற தாதுவில் "ஆப்நோதி இதி ஆப:" [எல்லாவற்றை யும் வியாபிக்கிறுனுகையால் 'ஆப:' எனப்படுகிறுன்.] என்பது வ்யுத்பத்தி. "ஸர்வம் ஸமாப்நோஷி" [எல்லா வற்றையும் நன்கு வியாபித்திருக்கிறுய்] என்றுன் கீதையில் அர்ஜுனனும். "யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா। அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய



நாராயண: ஸ்தி₂த:॥ "முதலான பரஸ்ஶப்₃தமான ஶ்ருதிவாக்யங் களும் இவ்விஷயத்தில் ப்ரமாணம். இப்படிப்பொருள் கொள்ளும்போது "ஆப்" என்று சொல்லாமல் "ஆப:" என்று பன்மையாகப் படித்திருப்பது ச₂ாந்த₃ஸமென்று கொள்ளவேண்டும். அன்றிக்கே 'ஆப:' என்று ஜலத்தைச் சொல்லுவதாகக்கொண்டு ஓங்காரவாச்யனே ஜலத்திற்கும் அந்தர்யாமி என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். இப்படி அந்தர்யாமிபர்யந்தமாகவோ. யௌகிகமாக பகவானைக் குறிப்பதாகவோ பொருள் கொள்ளாவிடில். "ஆபோ வா இத₃ம் ஸர்வம்" என்று யஜுர்வேதத்திலும். "ஸர்வம் வா இத₃மம்மயம்" என்று அத₂ர்வவேத₃த்திலும் சொல்லப்பட்டவை பொருந்தமாட்டா.

(ஜ்யோதி:) ஜ்யோதிஸ்வரூபனும் அவனே. "நாராயண பரோ ஜ்யோதி:" என்றும். "தம் தே₃வா ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்றும். "ஏஷ ஸம்ப்ரஸாதோ₃ அஸ்மாச்ச₂ரீராத் ஸமுத்த₂ாய பரஞ்ஜ்யோதி நுபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேணாபி₄ நிஷ்பத்₃யதே" [இந்த ஜீவன் இச்சரீரத்தினின்றும் கிளம்பி, பரஞ்சோதியை அடைந்து ஸ்வரூபப்ராப்தியைப் பெறு கிறுன்.] என்றும். "தச்சு₂ப்₄ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்றும் சுருதிகளிலும். "த்வம் ஹி ப்₃ரஹ்ம பரம் ஜ்யோதி:" என்று பாகவத புராணத்திலும். "சுடரடி தொழுதெழு" "என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதி"

"பரஞ்சோதி நீ பரமாய் நின்னிகழ்ந்து பின் மற்றோர்
பரஞ்சோதியின்மையில் படியோவிநிகழ்கின்ற
பரஞ்சோதி நின்னுள்ளே படருலகம் படைத்தவெம்
பரஞ்சோதி கோவிந்தா! பண்புரைக்க மாட்டேனே"

"மாயன் மலரடிக்கீழ் சுழிபட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளம்" "சூழ்ந்ததனில் பெரிய பரநன்மலர்ச்சோதியோ"

என்று முதலிலும், நடுவிலும், முடிவிலும் ஆழ்வாராலும் பரமபுருஷன் சோதிமயனாயிருக்கிறானென்று சொல்லப் பட்டது. அன்றிக்கே, 'ஆப:' என்று ஜலத்திற்கு அந்தர் யாமியாயுள்ளவன் என்று சொன்னாப்போலே, 'ஜ்யோதி:' என்று ஸூர்யன் அக்னி முதலான தேஜஸ்தத்வத்திற்கும் அந்தர்யாமி அவனே என்று சொல்லுவதாகவும் கொள்ள லாம். இப்படி அப்பு, தேஜஸ் என்னும் இரண்டு தத்துவங் களையும் சொன்னது பஞ்சபூதங்களுக்கு உபலக்ஷணம்.

"ய: ப்ருதி₂வ்யாம் திஷ்ட₂ந். ப்ருதி₂வீமந்தரோ யமயதி
யம் ப்ருதி₂வீ ந வேத₃,
யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம்... யஸ்யாப: ஶரீரம்......"

[எவனொருவன் ப்ருதிவியின் உள்ளும் புறமுமிருந்து கொண்டு நியமிக்கிறானோ, எவனை ப்ருதிவி அறியாதோ, எவனுக்கு ப்ருதிவி சரீரமோ....எவனுக்கு ஜலம் சரீரமோ....] என்று வேதம் உத்கோஷித்தது.

"ஜக₃த்ஸர்வம் ஶரீரம் தே" [இவ்வுலகெல்லாம் உனக்கு சரீரம்.] என்று ஸ்ரீராமாயணத்திலும், "தாநி ஸர்வாணி தத்₃வபு:" [அவையெல்லாம் அவனுடைய சரீரம்.] "தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு:" [அவையெல்லாம் ஹரியினுடைய தேஹம்] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும், "பூ: ப்ராணி நஸ் ஸர்வ ஏவ கு₃ஹாஶயஸ்ய" [எல்லா ப்ராணிகளும் ஹ்ருதய குஹையிலுள்ள பரமாத்மாவுக்கு இருப்பிடம்.] என்று ஆபஸ்தம்ப தர்மஸூத்ரத்திலும் இப்படி ஜக₃த்₃காரணாய் நிற்கும் நிலை நிர்ணயிக்கப்பட்டது.

"திடவிசும்பெரி வளி நீர் நிலமிவைமிசை
படர்பொருள் முழுவதுமாயவையவைதொறும்
உடல்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்டசுரனே"

என்றும் "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்" என்றும் ஆழ்வாரும் அருளிச்செய்தார்.



(ரஸ:) ரஸஸ்வரூபனாயிருப்பவனும் ஓங்காரவாச்யனான பரமபுருஷனே "ரஸோ வை ஸ:। ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாநந்தீ₃ ப₄வதி" [அந்தப் பரம புருஷன் ரஸஸ்வ ரூபனாயிருப்பவனன்றோ. ரஸஸ்வரூபியான அவனை அடைந்து ஜீவன் ஆநந்தத்தையுடையவனாகிறான்.] என்றும், "ஸர்வ க₃ந்த₄: ஸர்வரஸ:" [எல்லா கந்தங்களையுடையவன்: எல்லா ரஸங்களையுமுடையவன்.] என்றும், "யோ வ: ஶிவதமோ ரஸ:" என்றும் வேதம் விளம்பிற்று.

"கனியைக் கரும்பினின்சாற்றைக் கட்டியைத் தேனையமுதை"
என்றும்,

"கட்டியைத்தேனை அமுதைநன்பாலைக்கனியைக்கரும்புதன்னை"
என்றும்,

"அச்சுதன் அமலனென்கோ? அடியவர் வினைகெடுக்கும்
நச்சுமாமருந்தமென்கோ? நலங்கடலமுதமென்கோ?
அச்சுவைக்கட்டியென்கோ? அறுசுவையடிசிலென்கோ?
நெய்ச்சுவைத்தேறலென்கோ?கனியென்கோ?பாலென்கேனோ?
என்றும்,

"எனக்குத்தேனே பாலே கன்னலே அமுதே" என்றும்,
"எனக்கென்றும் தேனும் பாலும் அமுதுமாகிய திருமால"

என்றும், "ஸர்வரஸ:" என்று வேதம் உத்கோஷித்த இவ் விஷயத்தில் ஆழ்வார்களும் ஆழங்காற்பட்டார்கள். (ரஸ:) "ஓமாபோ ஜ்யோதி:" என்றவிடத்தில் பஞ்சபூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன் பகவான் என்று ஒரு பொருள் விளக்கப்பட்டது. அதற்குச்சேர, 'ரஸ:' என்பதற்கு ரஸம் முதலிய பூதகுணங்களுக்கும் நிர்வாஹகனாயிருப்பவன் என்றும் ஒரு பொருள் கொள்ளலாம். இங்கு 'ரஸ:' என்றது ஶப்₃த₃ ஸ்பர்ஶாதி₃ குணங்கள் எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்.

"பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண் நின்ற நான்குமாய்
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த கால் இரண்டுமாய்
மீநிலாய தொன்றுமாகி வேறு வேறு தன்மையாய்
நீநிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே"

என்று திருமழிசைப்பிரானும். [பூநிலாய ஐந்து-பூமியிலிருக்கும் ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் ஐந்து குணங்கள்; புனற்கண்....நான்கு-ஜலத்திலுள்ள ஶப்தஸ்பர்ஶ ரூபரஸகுணங்கள்; கால்—காற்று; மீன்—ஆகாசம்.]

"நாற்றச் சுவையூறொலியாகிய நம்பீ"

[நாற்றம்—கந்தம்; சுவை—ரஸம்; ஊறு—ஸ்பர்சம்; ஒலி—சப்தம்] என்று திருமங்கையாழ்வாரும்,

"நாற்றத் தோற்றச்சுவை ஒலி உறலாகி நின்ற எம் வானவர்
ஏற்றையேயன்றி மற்றொருவரை யானிலேன் எழுமைக்குமே"

என்று நம்மாழ்வாரும் இவ்வர்த்தத்தை அநுஸந்தித்தருளினார்கள். இப்படிப் பஞ்சபூதங்களும், அவற்றின் குணங்களும் பகவத3தீ4னங்களென்று இங்கு அநுஸந்திப்பதற்குக் கருத்து "பஞ்சபூ4தாத்மகமான சரீரத்திலும், சப்தாதி விஷயங்களிலும் உழன்று திரியும் என்னை அவற்றுக்கு நிர்வாஹகனான நீயே ரக்ஷித்தருளவேணும்" என்பதே. இத்தால் விரோதிகளைப் போக்கித்தருபவன் என்னுமர்த்தத்தை இவ்வாறு அநுஸந்தித்தபிறகு ப்ராப்யமாகிய கைங்கர்யத்தை ஸாதித்துத்தருமவனென்னும் விஷயம் அறிவிக்கப்படுகிறது "அம்ருதம்" என்னும் பதத்தால்.

(அம்ருதம்) மோக்ஷத்திற்குக் காரணமாயிருப்பவன். கார்யமாகிய மோக்ஷத்தைக் குறிக்கும் அம்ருதபதம் காரணமாகிய பகவானைக்குறித்து ஔபசாரிகமாகப் பிரயோகிக்கப் படுகிறது. உபாஸகர்களுக்கு ஜராமரணாதிகள் நீங்கியிருக்கையாகிற மோக்ஷ ஸுகத்தைத் தருபவன் என்றபடி. இவ்விஷயத்தை "உதாம்ருதத்வஸ்யேஶாந:" [மோக்ஷஸுகத்திற்கு நிர்வாஹகன் பரமபுருஷன்] "ய ஏநம் விது3ரம்ருதாஸ்தே ப4வந்தி" [எவர்கள் இவனை அறிகிறார்களோ, அவர்கள் முக்தர்களாக ஆகின்றனர்.] "ததே3வ ஶுக்ரமம்ருதம் தத்3 ப்3ரஹ்ம ததா3பஸ் ஸ ப்ரஜாபதி:" [அதுவே பரிசுத்தமானதும், மோக்ஷப்ரத3மானதும், ஸர்வவ்யாபியும் ஸர்வஸ்வாமியுமான ப்ரஹ்மம்.] "ப்ரதத்3 வோசே அம்ருதம் நு வித்3வாந் க3ந்த4ர்வோ நாம நிஹிதம் கு3ஹாஸு"(தை-நா) [கந்தர்வன் (கா3ம் த4ாரயதி) எனப்படும் ப்ரஹ்மஜ்ஞானி ஹ்ருதய குஹையிலுள்ள அந்த அம்ருதத்தை உபதேசித்தான்.] "யத்ர தே3வா அம்ருதமாநஶாநா:" (தை-நா) [எவ்விடத்தில் நித்யஸூரிகள் அவ்வம்ருதத்தை அநுபவித்துக்கொண்டிருக்கின்றார்களோ] "பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே" [உயர்ந்த அம்ருதமாகிற பகவானால் எல்லாரும் முக்தியடைகிறார்கள்.] "அம்ருதம் ப்ரபத்3யே அம்ருதகோஶம் ப்ரபத்3யே" [அம்ருதத்தை ஶரணமடைகிறேன். அம்ருதத்திற்கு உறைவிடமாயிருப்பதை சரணமடைகிறேன்.] "அஸ்மாகம் அம்ருதம் லோகம் த3த3ாது" "அம்ருதம் து3ஹாநா ஸா நோ லோகமம்ருதம் த3த3ாது" [அம்ருதத்தைக் கொடுக்கும் அது நமக்கு அம்ருதலோகத்தைத் தரட்டும்.] "அம்ருதஸ்ய தே3வ த4ாரணோ பூ4யாஸம்" [தேவனே! மோக்ஷ ஸுகத்தை தரிப்பவனாக ஆகக்கடவேன்.]

"அம்ருதஸ்யைஷ ஸேது:" [இவனே மோக்ஷத்திற்கு வழியாவான்.] (முண்டகம் 2-2-4) முதலான நூற்றுக் கணக்கான வேதவாக்கியங்களும், "அம்ருதத்வஞ்ச க3ச்சதி" (கௌதமஸ்ம்ருதி) முதலான பல ஸ்ம்ருதி வாக்கியங்களும்,

"வீடாக்கும் மெய்ப்பொருள்தான் வேதமுதற்பொருள்தான்
விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாராயணன்" [நான்-திருவ 13]

முதலான ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளும் இவ்விஷயத்தில் ப்ரமாணம். (அம்ருதம்) மிகவும் இனியவன் என்றும்

பொருள்கொள்ளலாம். இவனுடன் ஒப்பிடும்போது தேவ லோகத்து அம்ருதமானது உப்புச்சாறு என்று சொல்லத் தக்கதாகிறது. முன் எடுத்த வேத வாக்யங்கள் பலவற்றில் அம்ருத சப்தம் இப்பொருளையும் உடையதாய் விளங்குகிறது.

''அமுதினுமாற்றவினியன் நிமிர்திரை நீள்கடலானே''என்றும்.

'' கனிவார் வீட்டின்பமே என் கடற்படாவமுதே '' என்றும்,

'' அமுதென்றும் தேனென்றும் ஆழியானென்றும்
அமுதன்று கொண்டுகந்தானென்றும்—அமுதன்ன
சொல்மாலை ஏத்தித் தொழுதேன் சொலப்பட்ட
நன்மாலை ஏத்தி நவின்று '' என்றும்

ஆழ்வார்களும் இவனுடைய இனிமையிலே ஈடுபட்டார்கள் (ப்₃ரஹ்ம) கடைசியாக இவனே ப்₃ரஹ்ம சப்தந்தால் வேதாந்தங்களில் படிக்கப்படுபவன் என்று உணர்த்தப் படுகிறது.

'' ப்₃ருஹத்த்வாத்₃ ப்₃ரும்ஹணத்வாச்ச தத்₃
ப்₃ரஹ்மேத்யபி₄தீ₄யதே ''

[பெரியதாயிருக்கையாலும், பிறரைப் பெரியவர்களாகச் செய்வதாலும் ப்ரஹ்மமென்று அப்பரம்பொருள் சொல்லப் படுகிறது.] என்று ப்ரஹ்ம சப்தார்த்தம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டது. இந்த ப்ரஹ்ம சப்தம் அநந்தனென்றும் நாராயணனென்றும் வேதங்களில் சொல்லப்படுமவனையே குறிக்கிறது என்பது '' ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்₃ரஹ்ம '' என்றும், ''நாராயணபரம் ப்₃ரஹ்ம'' என்றும் வேதாந்தங்களில் நிர்ணயிக்கப்பட்டது.''அம்ருதம் ப்₃ரஹ்ம-முக்தாத்மா'' என்று ரங்கராமாநுஜமுனி தைத்திரியோபனிஷத் பாஷ்யத்தில் உரைத்தார்.

''ஓமாப: ஜ்யோதிரஸ:'' என்று பஞ்ச பூ₄தாத்மகமான லீலாவிபூ₄தி ப₄க₃வத₃தீ₄னமென்று சொல்லப்படுவதாகவும், 'அம்ருதம் ப்₃ரஹ்ம' என்று நித்ய விபூதியும் பகவததீனம்



என்று சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். '' பூர்பு₄வஸ் ஸுவரோம் ''என்று லோகத்ரயமும் ப்₃ரஹ்மாத்மகமே என்று உணர்த்தப்படுகிறது. இப்படிப்பட்ட பகவானை தியானம் செய்கிறேன் என்று'காயத்ரீ மந்திரத்துடன் சேர்த்து ஒரே வாக்கியமாகப் பொருள்கொள்ளவேண்டும். இந்தப் பிராணாயாம மந்திரங்கள் முழுவதும் தைத்திரீயோபநிஷத் நாராயணவல்லியில் இருபத்தேழு இருபத்தெட்டாவது அநுவாகங்களில் படிக்கப்பட்டிருப்பதினால்இவை பரமபுருஷனை நாராயணனையே தெரிவிக்கின்றன என்று தெளிவாகிறது.

நிற்க, ஸந்த்யாவந்தனத்தின் ஆரம்பத்தில் முற்கூறிய முறைப்படி ஆசமனத்தையும், ஒரு பிராணாயாமத்தையும் செய்து, பிறகு பின்வருமாறு ஸங்கல்பித்துக்கொள்ள வேண்டும்.

''ஸ்ரீ ப₄க₃வதா₃ஜ்ஞயா ப₄க₃வத் கைங்கர்யரூபம் ப்ராதஸ் ஸந்த்₄யாவந்த₃நம் கரிஷ்யே'' என்று காலையிலும், ''ஸ்ரீ ப₄க₃வதா₃ஜ்ஞயா ப₄கவத்₃கைங்கர்யரூபம் மாத்₄யாந்ஹிகம் கரிஷ்யே'' என்று மத்யாஹ்நத்திலும் ''ஸ்ரீ ப₄க₃வத₄ாஜ்ஞயா ப₄க₃வத் கைங்கர்யரூபம் ஸாயம் ஸந்த்₄யாவந்த₃நம் கரிஷ்யே'' என்று ஸாயங்காலத்திலும் ஸங்கல்பப்ரகாரம். ''ப₄க₃வதா₃ஜ்ஞயா ப₄க₃வத் கைங்கர்யரூபம்'' என்பதற்கு பதிலாக ''ப₄க₄வத்ப்ரீத்யர்த்த₂ம்'' என்றும், ''ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரீத்யர்த்த₂ம்'' என்றும் சிலர் அநுஸந்திப்பார்கள். ''ஸந்த்₄யாவந்த₃நம் கரிஷ்யே'' என்பதற்கு பதில் ''ஸந்த்₄யாமுபாஸிஷ்யே'' என்றும் சொல்லுவதுண்டு.

அடுத்தபடியாக ஜலத்தை அபி₄மந்த்ரணம் செய்வதில் விநியுக்தமான ''ஆபோ வா இத₃ம் ஸர்வம்'' என்னும் மந்திரத்தை அநுஸந்திக்கவேண்டும். இது நாராயணவல்லியில் இருபத்திரண்டாவது அநுவாகமாகப் படிக்கப்படுகிறது. இம்மந்திரம் ஸந்தியாவந்தனத்தின் ஆதியில் ''ஆபோஹிஷ்ட₂ா'' முதலான மந்திரங்களுக்கு முன்

போதாயந ஸூத்ரத்தைச் சேர்ந்தவர்களால் அநுஸந்திக்கப் பட்டுவருகிறது. ஆபஸ்தம்ப ஸூத்ரத்தைச் சேர்ந்தவர்கள் இதை அநுஸந்திப்பதில்லை. இனி இம்மந்திரத்தையும், அதன் பொருளையும் விளக்குகிறோம்.

**आपो वा इदँ सर्वं। विश्वाभूतान्यापः। प्राणा वा आपः। पशव आपः। अमृतमापः। अन्नमापः। संराडापः। विराडापः। स्वराडापः। छन्दांस्यापः। ज्योतींष्यापः। सत्यमापः। सर्वा देवता आपः। भूर्भुवस्सुवराप ओं।**

**ஆபோ வா இத$_3$ம் ஸர்வம்। விஶ்வா பூ$_4$தாந்யாப:। ப்ராணா வா ஆப:। பஶவ ஆப:। அம்ருதமாப:। அந்நமாப:। ஸம்ராட$_3$ாப:। விராட$_3$ாப:। ஸ்வராட$_3$ாப:। ச$_2$ந்த$_3$ாம்ஸ்யாப:। ஜ்யோதீம்ஷ்யாப:। ஸத்யமாப:। ஸர்வா தே$_3$வதா ஆப:।**

**பூ$_4$ர்பு$_4$வஸ்ஸுவராப ஓம்॥**

(ஆபோ வா இத$_3$ம் ஸர்வம்) இங்கு அப்சப்தத்தினால் சொல்லப்படுபவன் ஸர்வவ்யாபியான பரமபுருஷனேயாவன். "**ஆப்லு வ்யாப்தௌ**" என்று தாதுவாகையாலே. "**ஸர்வம் ஸமாப்நோஷி**" என்று பகவத் விஷயத்தில் படிக்கப்பட்டுமிருக்கிறது. அன்றிக்கே, அப்சப்தம் ஜலத்தைக் குறிக்கின்றதென்று கொண்டாலும், அபர்யவஸாநவ்ருத்தியாலே ஜலாந்தர்யாமியான பரமாத்மபர்யந்தம் சொல்லுவதாகக் கொள்ளவேண்டும். அல்லாவிடில், "இத$_3$ம் ஸர்வம்" "ச$_2$ந்த$_3$ாம்ஸ்யாப:" "ஜ்யோதீம்ஷ்யாப:" இத்யாதி$_3$களாலே எல்லாப் பொருள்களுடனும் ஒரே வேற்றுமையில் படித்திருப்பதை ஒருவிதமாகவும் நிர்வஹிக்கமுடியாது. (ஆபோ வா இத$_3$ம் ஸர்வம்) இவை எல்லாம் அப்சப்தவாச்யனான பகவானே. 'இத$_3$ம் ஸர்வம்' என்று இந்திரியங்களுக்கு விஷயமான ஸர்வ பதா$_3$ர்த்த$_2$ங்களும் காட்டப்படுகின்றன. "**புருஷ ஏவேத$_3$ம் ஸர்வம்**" என்றும், "**விஶ்வம் நாராயணம்**" என்றும், "**புருஷ ஏவேத$_3$ம் விஶ்வம்**" என்றும், "**விஶ்வமேவேத$_3$ம் புருஷ:**" என்றும் வேதாந்தங்களில் பலவிடங்களில்



ஸகலவஸ்துக்களும் புருஷ ஶப்$_3$த$_3$வாச்யனே என்று படிக்கப்பட்டது. இப்படிச் சொல்லுவது புருஷனுக்கும், மற்றவைகளுக்கும் ஐக்யத்தினாலல்ல; பரம புருஷன் மற்றெல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பதாலேயே இந்த வ்யவஹாரம் என்பதை "**விஶ்வாத்மாநம் நாராயணம்**" என்றும்,

"**யச்ச கிஞ்சித் ஜக$_3$த்யஸ்மிந் த்$_3$ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா।**
**அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:॥**"

என்றும், "**தேநேத$_3$ம் பூர்ணம் புருஷேண ஸர்வம்**" என்றும், "**ஈஶாவாஸ்யம் இத$_3$ம் ஸர்வம்**" என்றும், "**ய: ப்ருதி$_2$வ்யாம் திஷ்ட$_2$ந்....யஸ்ய ப்ருதி$_2$வீ ஶரீரம்**" என்றும், "**அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா**" [ஸர்வாந்தர்யாமியான பகவான் ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.] என்றும் கணக்கற்ற வேத வாக்யங்கள் உத்கோஷித்தன. "**ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:**" "**தத்ஸ்த$_2$த்வாத$_3$நுபஶ்யந்தி**" "**அவஸ்தி$_2$தேரிதி காஶக்ருத்ஸ்ந:**" [ஜீவனுள் பரமாத்மா வியாபித்து நிற்பதால் அவர்களுக்குள் அபே$_4$த$_3$வ்யவஹாரம் காணப்படுகிறது என்று காஶக்ருத்ஸ்னரென்னும் ஆசார்யர் நினைக்கிறார்.] என்றும் ஞானிகளான பெரியோர்களும் பிரகடனப்படுத்தினார்கள். இவை எல்லாவற்றையும் கண்டு வைத்தும் ஐக்யம் ஐக்யமென்று கூறிவரும் க$_3$ர்ப்ப$_4$ நிர்ப$_4$ாக்$_3$யர்களைக் (கருவிலேதிருவிலாதவர்களைக்) கண்டு நாம் வருந்துவதல்லால் செய்யலாவதொன்றில்லை. இவ்வர்த்தத்தை,

**"நாம் அவன் இவன் உவன் அவள் இவள் உவள் எவள்**
**தாம் அவர் இவர் உவர் அது இது உது எது**
**வீம் அவை இவை உவை அவை நலம் தீங்(கு) அவை**
**ஆமவை ஆயவை ஆய்நின்ற அவரே"** என்றும்,

**"யாவையும் யாவரும் தானும் அமைவுடை நாரணன்"**
என்றும்,

"தீதறு நிலத்தொடெரிகாலினொடு நீர்கெழு
விசும்புமவையாய்" என்றும்.

ஆழ்வார்களும் அத்யாத3ரத்துடன் அருளிச்செய்து போந்தார்கள். இப்படி எல்லா வஸ்துக்களும் ப4க3வதா3த்மகமே என்று பொதுவாகச் சொன்னதோடு திருப்தியுறாமல். சில முக்கியமான பதார்த்தங்களை எடுத்து அவைகளும் ப4க3வதா3தீ4நமே என்று அடுத்தபடியாகப் படிக்கப்படுகிறது, **(விஶ்வா பூ4தாந்யாப:)** என்று தொடங்கி.

"எங்கு வந்துறுகோ என்னையாள்வானே ஏழுலகங்களும் நீயே
அங்கவர்க்கமைத்த தெய்வமும் நீயே அவற்றவை
கருமமும் நீயே
பொங்கிய புறம்பால் பொருளுளவேனும் அவையுமோ
நீயின்னேயானால்
மங்கிய அருவாம் நேர்ப்பமும் நீயே வான்புலனிறந்ததும் நீயே"

"இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ
நீயின்னேயானால்"

"திங்களும் ஞாயிறுமாய்ச் செழும் பல் சுடராயிருளாய்"

"தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்
தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்"

"தீதறு நிலத்தொடெரி காலினொடு நீர்கெழு விசும்புமவையாய்"

"சந்தமாய்ச் சமயமாகிச் சமயவைம்பூதமாகி
அந்தமாய் ஆதியாகி அருமறை அவையுமானாய்"

என்று ஆழ்வார்களும் இப்படி அநுபவித்தார்கள்.

**(விஶ்வா பூ4தாந்யாப:)** "ஆபோ வா இத3ம் ஸர்வம்" என்று எல்லா அசேதனங்களையும் சொல்லுவதாகவும். **"விஶ்வா பூ4தாநி"**, என்று ஸர்வசேதனதத்வத்தையும் சொல்லுவதாகவும் கொள்ளலாம். அன்றிக்கே, **"இத3ம் ஸர்வம்"** என்று எல்லாவற்றையும் சொன்னபோதிலும் ஜீவர்களே அவ்யவஹித ஶரீர பூ4தர்களாயிருப்பதாலும். அவர்களே மோக்ஷ யோக்3யர்களாயிருப்பதாலும், ஸ்ரீ கௌஸ்துப4ம்போலே பகவானுக்கு உகந்தவர்களாகையாலும் ஆத3ராதிஶயத்தாலே தனியே படிக்கிறது. ஸர்வேஶ்வரன் ஜீவர்களை ஸாக்ஷாத்தாகவே வியாபித்து தரித்து நிற்கிறான்; அசேதன தத்வத்தையோவெனில், ஜீவத்3வாரா வியாபித்து தரித்து நிற்கிறான் என்பதே ஶ்ருதி ஸ்ம்ருதிகளுடைய ஸித்தாந்தமாகத் தேறி நிற்கிறது. அசேதன தத்வத்தையும். ஜீவ தத்வத்தைப்போல் ஸாக்ஷாத்தாக ஸர்வேஶ்வரன் வியாபித்து நிற்பதாக ஓர் பக்ஷமுண்டென்று நியாய ஸித்தாஞ்ஜநாதிகளில் ஸ்ரீ வேதாந்த தேசிகர் எடுத்திருந்தபோதிலும், அப்பக்ஷம் நம் ஆசாரியர்களிற் பலரால் ஆதரிக்கப்பட்டதன்று.



**"அநேந ஜீவேந ஆத்மநா அநுப்ரவிஶ்ய நாமரூபே
வ்யாகரவாணி"**

*[என்னுடைய ஶரீர பூ4தனான இந்த ஜீவனால், அசேதன தத்வத்தை வியாபித்து, (அதற்கு) நாம ரூபங்களைக் கொடுக்கக்கடவேன்.]*

**"தத்3யதா2 ரத2ஸ்ய அரேஷு நேமிரர்ப்பிதா நாப4ாவரா
அர்ப்பிதா:।
ஏவமேவ ஏதா பூ4தமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸ்வர்ப்பிதா:।
ப்ரஜ்ஞாமாத்ரா: ப்ராணே அர்ப்பிதா:॥"**

*[ரத2 சக்ரத்தின் வளையமானது ஆரங்களிலும், ஆரங்கள் (சக்ரமத்தியிலிருக்கும்) நாபியிலும் எப்படிச் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோ அம்மாதிரியே. அசேதனதத்வம் சேதன தத்வத்தினிடமும், சேதனதத்வம் பரமாத்மாவினிடமும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.]* முதலான ஶ்ருதி வாக்யங்கள் இவ்விஷயத்தில் ப்ரமாணம். **(விஶ்வா பூ4தாந்யாப:)** பஞ்சபூ4தங்களும் ப4க3வதா3த்மகமே என்று சொல்லுகிறதாகவும் கொள்ளலாம். **(ப்ராணோ வா ஆப:)** ஸகல ஸம்ஸாரி சேதனர்க்கும் ஜீவிதஹேதுவான ப்ராணன் என்னும் வாயு விஶேஷமும்

பகவானே. "ப்ராணஸ் தத2ானுக3மாத்" என்று தொடங்கும் இந்த்3ர ப்ராணுதி4கரணத்தில் ப்ராணனுக்கும் ஆத்மாவாயிருப்பவன் பகவானே என்னும் விஷயம் விவரிக்கப்பட்டது. ஜீவர்கள் உயிருடனிருப்பதற்கு ப்ராணனே முக்கிய காரணமாகையால் இங்கு அது தனியாகப் படிக்கப்படுகிறது. இவ்விடத்தில் சாந்தோக்ய உபநிஷத் ஐந்தாவது ப்ரபாடகத்தில் சொல்லப்பட்ட பின் வரும் விருத்தாந்தம் அநுஸந்திக்கத்தக்கது:— ப்ராணன், வாக்கு, கண், காது' மனஸ் என்னும் ஐந்தும் தங்களுக்குள் யார் மேலானவர் என்று அறிவதற்காக, பிதாவான ப்ரஹ்மாவிடம் சென்றன. "உங்களில் யார் வெளிப்பட்டால் இந்த சரீரம் மிகவும் ஹேயமானதாகக் காணப்படுகிறதோ, அவனே உங்களில் உயர்ந்தவன்" என்று அவர் பதிலுரைத்தார். அதைக் கேட்ட வாக்கு முதலில் சரீரத்தைவிட்டுச் சிறிது காலம் வெளிச்சென்று திரும்பிவந்தது. அந்த சரீரமானது அக்காலத்தில் பேசமுடியாமலிருந்ததேயொழிய வேறு விதமான கிலேசமொன்றையுமடையவில்லை. இம்மாதிரியே கண், காது, மனம் ஆகியவைகள் வெளிப்பட்டபோதும் சரீரம் உயிருடனேயே இருந்தது. கடைசியாக முக்யப்ராணன் வெளிச்செல்லவேண்டுமென்று நினைத்த மாத்திரத்திலேயே கண், காது முதலியவையும் அத்துடன் சேர்த்து இழுக்கப்பட்டன. உடனே அந்நாலும் ப்ராணனை வெளிச்செல்லாமலிருக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு 'நீயே எங்களில் உயர்ந்தவன்' என்று ஒப்புக்கொண்டன என்பதே அவ் விருத்தாந்தம்.

**"ப்ராணோ ஹி வா஽ங்கா3நாம் ரஸ:| தஸ்மாத் யஸ்மாத் கஸ்மாச்ச**
**அங்கா3த் ப்ராண உத்க்ராமதி ததே3வ தச்சு2ஷ்யதி"**

[ப்ராணனே அங்கங்களுக்கு ஸாரமாயிருப்பது. ஆகையால் எந்த அங்கத்திலிருந்து ப்ராணன் வெளிக்கிளம்புகிறதோ, அந்த அங்கம் அப்போதே உலர்ந்து போகிறது.]" என்று



சாந்தோக்யத்திலும் படிக்கப்பட்டது. (ப்ராணு வா ஆப:) கண் காது முதலிய எல்லா இந்திரியங்களும் ப்ராண ஶப்தத்தால் வேதாந்தங்களில் படிக்கப்படுவதுண்டாகையால் அவைகளெல்லாம் ப4க3வத3தீ4னங்களே என்று சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம்.

அடுத்தபடியாக, முற்கூறிய ப்ராணன்களுக்கு ஆத4ாரபூ4தரான ஸம்ஸாரி சேதனரும் ப4க3வத3தீ4னரே எனப்படுகிறது. (பஶவ ஆப:) ஸம்ஸாரத்தில் கட்டுண்டு கிடப்பவராகையாலும், 'ந்ருபஶு:' என்று சொல்லும்படி ஜ்ஞானஹீனராயிருக்கையாலும் 'பஶவ:' என்று ஸம்ஸாரிசேதனர் அனைவரையும் எடுக்கிறது. "தத் த்வமஸி" "அஹம் ப்3ரஹ்மாஸ்மி" "அயமாத்மா ப்3ரஹ்ம" "யோ஽ஸாவஸௌ புருஷஸ் ஸோ஽ஹமஸ்மி" என்று வேதங்களிலும், "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்3தி4" என்று கீதையிலும், "மன் பல்லுயிர்களுமாகி" "காயமும் சீவனுமாய்" என்று ஆழ்வாராலும் இவ்விஷயம் கீர்த்திக்கப்பட்டது. இவ்விடங்களில் ஒரே வேற்றுமையில் படித்திருப்பது ஶரீராத்ம ப4ாவத்தைக் காரணமாகக்கொண்டது என்பதை வேத3வித்துக்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். பஶுப்ராயனான சேதனனுக்கும், ஸர்வவ்யாபியான ஸர்வேஶ்வரனுக்கும் ஐக்யம் சொல்லுவது ஸகல ப்ரமாண விருத்தமென்பதை நிஷ்பக்ஷபாதிகள் நன்குணர்வர்.

அடுத்தபடியாக இச்சேதனர்க்கு மோக்ஷஸுகத்திற்கும், இவ்வுலகஸுகத்திற்கும் நிர்வாஹகனாயிருப்பவன் பகவானே என்று உணர்த்துகிறது. (அம்ருதமாப.) (அந்நமாப:) என்னும் வாக்கியங்களால்.

**"ஊனமில் செல்வமென்கோ? ஊனமில் சுவர்க்கமென்கோ?**
**ஊனமில் மோக்கமென்கோ? ஒளிமணிவண்ணனையே"**

என்றும்

"கோலங்கொள் சுவர்க்கமும் யானேயென்னும்
கோலமில் நரகமும் யானே என்னும்
கோலந்திகழ் மோக்கமும் யானேபென்னும்
கோலங்கொளுயிர்களும் யானேயென்னும்"

என்றும் ஆழ்வாரும் அருளிச்செய்தார்.

(அம்ருதம்ப:) மோக்ஷத்திற்கும் நிர்வாஹகனெனப்படுகிறது. இவ்விடத்தில் ப்ராணயாமத்தில் 'அம்ருதம் ப்$_3$ரஹ்ம' என்றவிடத்தில் படித்த ப்ரமாணங்களை அநுஸந்திப்பது. (அந்நமாப:) "அத்$_3$யதே—அநுபூ$_4$யதே—இதி அந்நம்" என்கிறபடியே, ஸர்வேந்திரியங்களாலும் அனுபவிக்கப்படும் ப்ராக்ருதமான இன்பங்களெல்லாவற்றுக்கும் நிர்வாஹகன் என்று தாத்பர்யம்.

"பாவமும் அறமும் வீடும் இன்பமும் துன்பம் தானும்
கோவமும் அருளும் அல்லாக் குணங்களுமாய எந்தை"

என்றார் திருமங்கையாழ்வாரும். 'வீடும்' என்று அம்ருதஶப்$_3$த$_3$ார்த்த$_2$மும். 'இன்பமும்' என்று அந்நசப்தார்த்தமும் விவரிக்கப்பட்டது. இப்படி மோக்ஷஸுகத்தையும். இவ்வுலக இன்பத்தையும் சொன்னபிறகு, மோக்ஷஸ்தானமாகிற பரமபதமும். ப்ராக்ருத ஸுகத்தை அனுபவக்குமிடமாகிய இவ்வண்டமும் "ஸம்ராட$_3$ாப:" "விராட$_3$ாப:" என்னும் பதங்களால் படிக்கப்படுகின்றன. (ஸம்ராட$_3$ாப:) "ஸம்யக் ராஜதி இதி ஸம்ராட்" [மிகவும் பிரகாசிக்கிறதாகையால் ஸம்ராட்] என்கிற வ்யுத்பத்தியின்படியே அதிகமான ஒளியை உடைத்தான பரமபதம் 'ஸம்ராட்' சப்தத்தினால் சொல்லப்படுகிறது.

"அத்யர்க்காநலதீ$_3$ப்தம் தத் ஸ்த$_2$ாநம் விஷ்ணோர் மஹாத்மந: |
ஸ்வயைவ ப்ரப$_4$யா ராஜந் து$_3$ஷ்ப்ரேக்ஷம் தே$_3$வத$_3$ாநவை: ||"

[மஹாபுருஷனான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தானம், ஸூர்யாக்னிகளுடைய ஒளிகளை விஞ்சிய ஒளியையுடையது.



அரசனே! தன்னுடைய ஒளியாலேயே அது தேவதானவர்களால் காணவொண்ணாததாய் விளங்குகிறது.] என்று மஹாபாரதத்தில் சொல்லப்பட்டதன்றோ, "ஆதியஞ்சோதியென்கோ?" என்று ஆழ்வார் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தார்.

(விராட$_3$ாப:) "தஸ்மாத்$_3$ விராட$_3$ஜாயத" என்று புருஷஸூக்தத்தில் 'விராட்' சப்தத்தில் சொல்லப்பட்ட அண்டத்திற்கும் ஆத்மாவாயிருப்பவன். 'விராட்' என்பதில் ஏகவசநம் (ஒருமை) ஜாத்யேக வசநமென்று கொள்ளத்தக்கது.

"அண்ட$_3$ாநாந்து ஸஹஸ்ராணம் கோடிகோடிஶதாநி ச"

என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் சொல்லிய ஸகலாண்டங்களுக்கும் நிர்வாஹகன் என்றபடி.

"அண்டக்குலத்துக்கதிபதியாகி" என்றார் பெரியாழ்வாரும். "பரஞ்சுடருடம்பாய்" என்றவுடன் நம்மாழ்வார் "அழுக்குப்பதித்த உடம்பாய்" என்றாற்போலே "ஸம்ராட$_3$ாப:" என்றவுடன் "விராட$_3$ாப:" எனப்படுகிறது.

"அயம் லோகஸ்து வை ஸம்ராட் அந்தரிக்ஷம் விராட்
ஸ்ம்ருதம்"

[இவ்வுலகம் ஸம்ராட் என்றும் அந்தரிக்ஷம் விராட் என்றும் சொல்லப்படும்.] என்று வாயு புராணத்தில் சொல்லியிருக்கிறபடியே. பூலோகத்திற்கும், அந்தரிக்ஷத்திற்கும் நிர்வாஹகன் பகவான் என்று சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். "நிகரில் சூழ்சுடராய் இருளாய் நிலனாய் விசும்பாய்" என்றார் ஆழ்வாரும்.

(ஸ்வராட$_3$ாப:) 'பஶவ ஆப:' என்றவிடத்தில் சொல்லப்பட்ட ஸம்ஸாரி சேதனரைப்போலே. முக்தசேதனரும் பகவததீனர்களே என்று உணர்த்தப்படுகிறது. "ஸ ப்$_3$ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்$_3$ர: ஸோக்ஷர: பரம: ஸ்வராட்" என்று நாராயணவல்லியில் இவ்வர்த்தம் சொல்லப்பட்டது.

அங்கு 'ஸ:' என்று தச்ச₂ப்₃த₃த்தினால் சொல்லப்பட்ட நாராயணனே இங்கு 'ஆப:' எனப்படுகிறான் என்று தெளிவாகிறது. "ஸ ஸ்வராட் ப₄வதி" [அவன் ஸ்வதந்திரனாகிறான்.] என்ற வேத வாக்யத்திலும் முக்தாத்மாவைக் குறித்து 'ஸ்வராட்' ச₂ப்₃த₃ம் பிரயோகிக்கப்படுகிறதாகையால் அதுவே இங்கும் அர்த்த₂மாகக்கடவது. இங்கு சொல்லப்படும் ஸ்வாதந்த்ரியம் கர்மபாரதந்த்ரியமில்லாமையைக் காட்டுமேயொழிய, பகவத்பாரதந்த்ரியத்தை நிஷேதிக்கமாட்டாது. அப்படிக்கொண்டால் பகவச்சே₂ஷத்வ பாரதந்த்ரியங்களை ஜீவஸ்வரூபமாகச் சொல்லும் பல ப்ரமாணங்களுக்கு விரோதிக்கும்.

"பாரதந்த்ர்யம் பரே பும்ஸி ப்ராப்ய நிர்க₃த₃ப₃ந்த₄ந: |
ஸ்வாதந்த்ர்யமதுலம் ப்ராப்ய தேநைவ ஸஹ மோத₃தே ||"

[ஸம்ஸாரக்கட்டிலிருந்து விடுபட்ட முக்தாத்மா பரமபுருஷனிடத்தில் பாரதந்திரியத்தை அடைந்து, (கர்மத்திற்கு வசப்பட்டிராமையாகிற) ஒப்பற்ற ஸ்வாதந்திரியத்தையும் பெற்று அப்பரமபுருஷனுடன் ஆநந்திக்கிறான்.] என்றல்லவோ ஸ்ரீ விஷ்ணுதத்வத்தில் உரைக்கப்பட்டது.

(ச₂ந்தா₃ம்ஸ்யாப:) வேதங்களும் பகவானே. பகவானை ப்ரதிபாதி₃ப்பவையே என்று தாத்பர்யம். அன்றிக்கே, காயத்ரீ, அனுஷ்டுப் முதலிய சந்தஸ்ஸுக்களை "ச₂ந்தா₃ம்ஸி" என்று குறிப்பதாகக்கொண்டு அவைகளுக்கும் நிர்வாஹகன் என்று உரைப்பதாகவும் கொள்ளலாம். இவ்விரண்டு பொருள்களும் விளங்கும்படி

"சந்தமாயச் சமயமாகிச் சமயவைம்பூதமாகி
அந்தமாயாதியாகி அருமறையவையும் ஆனாய்!"

என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்திருக்கும் அழகு அறியத்தக்கது. (ஜ்யோதீம்ஷ்யாப:) எல்லாச் சோதிகளும் ப₄க₃வதா₃த்மகமே.



"ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் பு₄வநாநி விஷ்ணு:
வநாநி விஷ்ணு: கி₃ரயோ தி₃ச₂ஶ்ச"

[எல்லாச் சோதிகளும் விஷ்ணுவே; எல்லா உலகங்களும் விஷ்ணுவே; வனங்களும் விஷ்ணுவே; மலைகளும், திக்குகளும் அவனே] என்று ஸ்ரீபராசரபகவான் விஷ்ணுபுராணத்தில் இதை உபப்ரும்ஹணம் செய்தார்.

"குன்றமும் வானும் மண்ணும் குளிர்புனல் திங்களோடு நின்ற வெஞ்சுடரும் அல்லா நிலைகளுமாய எந்தை" என்று திருமங்கை மன்னனும், "நீள் சுடரிரண்டுமென்கோ" என்று வேதம் தமிழ் செய்த மாறனும் அருளிச்செய்தனர்.

(ஸத்யமாப:) "ஸத்யமேவ ஜயதி நாந்ருதம்" [உண்மையே வெல்லும்; பொய் வெற்றி பெறாது.] என்றும். "ஸத்யம் பரம பரம ஸத்யம்" என்றும். "ஸத்யேந வாயுராவாதி | ஸத்யேந ஆதி₃த்யோ ரோசதே தி₃வி | ஸத்யம் வாச: ப்ரதிஷ்டா₂ | ஸத்யே ஸர்வம் ப்ரதிஷ்டி₂தம் | தஸ்மாத் ஸத்யம் பரமம் வத₃ந்தி ||" [ஸத்யத்தினாலேயே வாயுவானது வீசுகிறது; ஸத்யத்தினாலேயே ஆகாயத்தில் ஸூர்யன் பிரகாசிக்கிறான். ஸத்யம் வாக்கை நிலைநிறுத்துகிறது. ஸத்யத்தினாலேயே எல்லாம் நிலைநிற்கின்றன.] என்றும் வேதங்களில் புகழப்பட்ட ஸத்யத்திற்கு நிர்வாஹகன் பகவானே.

"சங்கையும் துணிவும் பொய்யும் மெய்யும் இத்தரணியோம்பும்
பொங்கிய முகிலும் அல்லாப் பொருள்களும் ஆய எந்தை"

"மெய்நலத்தைத் தவத்தைத் திவத்தைத்தரும் மெய்யை"

என்று திருமங்கையாழ்வாரும். "பொய்யினோடு மெய்யுமாய்" என்று திருமழிசையாழ்வாரும்.

"மெய் பொய் இளமை முதுமை புதுமை பழமையுமாய்"

என்று நம்மாழ்வாரும் ஸர்வேஶ்வரனையும் ஸத்ய சப்தத்தையும் ஒரே வேற்றுமையில் படித்தனர்.

(ஸர்வா தே3வதா: ஆப:) ஆராதிக்கப்படுபவரான ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன் அவனே.

**"ஸர்வே வேத3ாஸ் ஸர்வவேத்3யாஸ் ஸஶாஸ்த்ரா:**
**ஸர்வே யஜ்ஞாஸ் ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண:"**

[எல்லா வேதங்களும், அறியத்தகுந்த எல்லாப் பொருள்களும், எல்லா சாஸ்திரங்களும், எல்லா யஜ்ஞங்களும், (அந்த யஜ்ஞங்களில் ஆராதிக்கப்படும்) **எல்லா தேவதைகளும் கிருஷ்ணனே.**] என்று இந்த ஶ்ருதி உபப்3ரும்ஹணம் செய்யப்பட்டது.

**"தேவராய் நிற்குமத்தேவும், அத்தேவரில்**
**மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும்—யாவராய்**
**நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார்**
**கற்கின்றதெல்லாம் கடை"**

என்று திருமழிசைப்பிரானும், "அமைவுடையமரரும் யாவையும் யாவரும்தானும் அமைவுடை நாரணன்" என்றும் "அங்கவர்க்கமைத்த தெய்வமும் நீயே" என்றும் நம்மாழ்வாரும் இவ்விஷயத்தை வெளியிட்டருளினார்கள். கடைசியாக (ஓம் பூ4ர்பு4வஸ்ஸுவராப ஓம்) என்று மூவுலகங்களும் ஓங்காரவாச்யப4க3வத3ாத்மகமே என்று உணர்த்தப்படுகிறது. "மூவுலகங்களுமாய் அல்லனாய்' என்றார் ஆழ்வாரும். அன்றிக்கே இம்மூவுலகங்களும் ஏழு லோகங்களுக்கும் உபலக்ஷணம். "ஏழுலகங்களும் நீயே" என்றார் ஆழ்வார்.

இம்மாதிரியாக இந்த ஸாமாநாதி4கரண்யங்களை சரீராத்ம பா4வம், நிர்வாஹக நிர்வாஹ்ய ஸம்ப3ந்த4ம் முதலானவற்றை யிட்டு நிர்வஹியாமல் 'ப்ராணா வா ஆப:' 'அம்ருதமாப:' முதலானவற்றை ஸாக்ஷாத்தாக பகவத் வாசகமாக நிர்வஹிப்பதுமுண்டு. அது பின்வருமாறு:—

(ப்ராணா வா ஆப:) "**கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் யதே3ஷ ஆகாஶோ ஆநந்தோ3 ந ஸ்யாத்**" [ஆநந்த



ஸ்வரூபியும், பிரகாசியா நிற்பவனுமான இப்பரம்பொருளில்லாவிடில் யார் இவ்வுலக இன்பங்களையும், மோக்ஷ ஸுகத்தையும் அடைய முடியும்"] என்கிறபடியே மோக்ஷ ஸுகத்திற்குக் காரணமாயிருப்பதால் ப்ராணசப்தத்தால் சொல்லப்படுமவன் பகவான் என்றபடி.

(அம்ருதமாப:) அமுதிலுமாற்ற இனியனாயிருப்பவன் அப்ஶப்தவாச்யன் என்றபடி. 'அம்ருதம் ப்3ரஹ்ம' என்றவிடத்திலுள்ள ப்ரமாணங்களை அநுஸந்திப்பது.

(அந்நமாப:) "**அஹமந்நாத3:**" [நான் அந்நமாகிய பகவானை அநுபவிக்கிறேன்.] என்று சொல்லியபடியே நித்ய முக்தர்களுக்கு போக்யமாயிருப்பவன் பரமாத்மா என்றபடி.

**"வானவர் போகமென்கோ? வானவர் முற்றுமென்கோ?"**
என்றார் ஆழ்வார்.

(ஸம்ராட3ாப:......ஸ்வராட3ாப:) "**ஸம்யக் ராஜதீதி ஸம்ராட் | விஶிஷ்ய ராஜதீதி விராட் | ஸ்வயமேவ ராஜத இதி ஸ்வராட்**" [நன்கு பிரகாசிக்கிறுகையால் ஸம்ராட்; (மற்றவைகளைவிட) விசேஷமாகப் பிரகாசிக்கிறுகையால் விராட்; தானாகவே பிரகாசிக்கிறுகையால் ஸ்வராட்.] என்று ரங்கராமாநுஜமுனி பொருளுரைத்தார். "ஓம் மஹ:" "ஓமாபோ **ஜ்யோதி:**" என்றவிடத்திலுள்ள ப்ரமாணங்களைப் படிப்பது.

(ஸத்யமாப:) ஸ்வரூபத்தாலும், ஸ்வபா4வத்தாலும் விகாரமற்றவன் பகவான் என்றபடி. "ஓம் ஸத்யம்" என்றவிடத்திலுள்ள ப்ரமாணங்களைப் படிப்பது. நிற்க; இம்மந்திரத்தைப் படித்து ஜலத்தை அபிமந்திரித்து "**ஓம் ஶ்ரீ கேஶவாய நம:**" என்று அந்த ஜலத்தை நெற்றியில் இட்டுக்கொள்வது வழக்கம்.

## ப்ரோக்ஷண மந்த்ரம்

அடுத்தபடியாக அந்த ஜலத்தைத் தலை முதலிய அங்கங்களில் பின்வரும் மந்திரத்தைச் சொல்லி ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும்:—

**आपो हि ष्ठा मयोभुवः। ता न ऊर्जे दधातन। महे रणाय चक्षसे।
यो वः शिवतमो रसः। तस्य भाजयतेह नः। उशतीरिव मातरः।
तस्मा अरं गमाम वः। यस्य क्षयाय जिन्वथ। आपो जनयथा च नः॥**

ஆபோ ஹி ஷ்டா2 மயோபு4வ:। தா ந ஊர்ஜே த3தா4தந। மஹே ரணாய சக்ஷஸே। யோ வ: ஶிவதமோ ரஸ:। தஸ்ய பா4ஜயதேஹ ந:। உஶதீரிவ மாதர:। தஸ்மா அரங்க3மாம வ:। யஸ்ய க்ஷயாய ஜிந்வத2। ஆபோ ஜநயதா2 ச ந:॥

**आपो हि ष्ठेति मन्त्रस्य सिन्धुद्वीप ऋषिः देवी गायत्री छन्दः।
आपो देवता। प्रोक्षणे विनियोगः॥**

[ஆபோஹிஷ்டா2 என்று தொடங்கும் மந்திரத்திற்கு ஸிந்து4த்3வீபர் ரிஷி; காயத்ரீ சந்தஸ்ஸு. ஜலாந்தர்யாமியான பகவான் தேவதை; ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்வதில் விநியோகம்.]

"யஸ்ய க்ஷயாய ஜிந்வத2" என்று உச்சரிக்கும்போது மட்டும் கால்களிலும், மற்ற மந்திரங்களைச் சொல்லும்போது தலையிலும் ப்ரோக்ஷித்துக்கொள்ளவேண்டும். இம்மந்திரத்தில் பகவானுக்கு உறைவிடமாகவுள்ள தண்ணீரைப் புருஷகாரமாகப்பற்றி அவனிடம் ஆத்மாவானது ஸமர்ப்பிக்கப்படுகிறது.

**"கடலே! கடலே! உன்னைக் கடைந்து கலக்குறுத்து
உடலுள் புகுந்து நின்று ஊறலறுத்தவற்(கு) என்னையும்
உடலுள் புகுந்து நின்று ஊறலறுக்கின்ற மாயற்(கு) என்
நடலைகளெல்லாம் நாகணைக்கே சென்(று) உரைத்தியே"**



என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரம் இம்மந்திரத்திற்குத் தாத்பர்யார்த்த2மாக அநுஸந்திக்கத்தக்கது. இனி இம்மந்திரத்தின் ஶப்தார்த்தத்தை விவரிக்கிறோம்.

**"ஆபோஹிஷ்டே2திமந்த்ராணாம் ஸ்ரீபாஞ்சராத்ராதி3 ஸச்சா2ஸ்த்ரேஷு பரமாத்மா தே3வதேத்யபி4தா4நாத். அத்ரத்யா தே3வதாஶப்3தா3: பரமாத்ம நாராயணவாசகா:"**

[ஸ்ரீ பாஞ்சராத்ரம் முதலிய ஸாத்விக சாஸ்திரங்களில், 'ஆபோ ஹிஷ்டா2' முதலிய மந்திரங்களுக்குப் பரமாத்மா தேவதையென்று சொல்லியிருப்பதால், இங்குள்ள தேவதா நாமங்களெல்லாம் பரமாத்மாவான நாராயணனையே குறிக்கும்] என்று நாராயணயதீந்த்3ரர் உணர்த்தினர்.

(ஆபோ ஹி ஷ்டா2 மயோபு4வ:) 'ஜலமே! (நீ) ஸுகத்திற்கு ஸாதனமாகிறாயல்லவா' என்று பொருள். "**யத்3வை ஶிவம் தந்மய:**" என்றும், "**தத3ாத்மநீநமாநந்த3ம் ஶர்ம தோஷம் ஸுக2ம் மய:**" என்றும் சொல்லப்பட்டபடியே, 'மய:' என்னும் ஶப்தம் ஸுகம் என்னும் பொருளையுடையது. "மாத3யதீதி-மய:" [மதங்கொள்ளச்செய்கிறதாகையாலே 'மய:' எனப்படுகிறது.] என்று வ்யுத்பத்தி. "மாத்3யதே: அந்தர்ணீதணிஜர்த்த2ஸ்ய அஸுந்ப்ரத்யயாந்தஸ்ய தகாரஸ்ய யகாரவ்யாபத்யா ச ஏதத் ரூபம்" என்று வரருசி என்னும் நிருக்தகாரர் இந்த ஶப்தம் நிஷ்பந்நமாகிறபடியை விளக்கினர். 'மயஸ:— ஸுக2ஸ்ய பா4வயித்ர்ய: மயோபு4வ:' என்று ஸுகத்தை உண்டாக்குமவை 'மயோபு4வ:' எனப்படுகின்றன. யாருக்கு ஸுகத்தை உண்டாக்குகின்றன? என்ற கேள்வி எழுந்தவளவில், ('மயோபு4வ: ஆப:') என்பதையே பதிலாகக் கொள்ளவேண்டும். ஸகல சேதனர்க்கும் ஸுகத்தை உண்டாக்குமவனும், ஸர்வவ்யாபியுமான நாராயணனுக்கு என்றபடி. "**அம்ருதத்வஸ்ய ஈஶாந:**" [மோக்ஷஸுகத்திற்குக் காரணமானவன்] "**கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் யதே3ஷ ஆகாஶ ஆநந்தோ3 ந ஸ்யாத்**" [பிரகாசியாநிற்பவனும், ஆநந்தஸ்வரூபியுமான

பரமாத்மா இல்லாவிடில் எவன்தான் இவ்வுலகஸுகத்தையும் பரலோகவின்பத்தையும் அடைவான்?] முதலான வேத வாக்கியங்களில் பரமபுருஷன் ஸகல ஸுக$_2$ஸாத$_4$ன பூ$_4$தனென்றும். 'அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:' முதலானவிடங்களில் ஸர்வவ்யாபியென்றும் உத்கோஷிக்கப்பட்டதன்றோ.

(ஹே ஆப: மயோபு$_4$வ: ஆப: மயோபு$_4$வ: ஹி ஸ்த$_2$) ஏ! ஜலங்களே! எல்லோருக்கும் ஸுகத்தையளிக்கும் ஸர்வேஶ்வரனுக்கும் ஸுகத்தையளிப்பவர்களன்றோநீங்கள். உங்கள் மேலே திருக்கண்வளர்ந்தருளும்படியான அந்த க்ஷீராப்திநாதனுடைய திருமேனியை உங்களுடைய குளிர்ந்த அலைகளால் ஸ்பர்சித்து அவனுக்கு ஸுகத்தையுண்டாக்குகிறீர்களல்லவா.

''மாலும் கருங்கடலே! என் நோற்ருய் வையகமுண்(டு)
ஆலினிலைத் துயின்ற ஆழியான்—கோலக்
கருமேனிச் செங்கண்மால் கண்படையுள் என்றும்
திருமேனி நீ தீண்டப்பெற்று.''

என்ற பொய்கையாழ்வாரைப்போலே வேத புருஷன் வித்$_3$த$_4$(ஞு)ஞகிருன். நம்மாழ்வாரும் ''குறைவில் தடங்கடல்'' என்று இதில் ஈடுபட்டார்.

''ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:|
தா யத$_3$ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத:||''

[ஜலம் நரனுகிற பகவானல் ஸ்ருஷ்டி செய்யப்பட்டதாகையால் நாரமெனப்படுகிறது. அது ப்ரளயகாலத்தில் இவனுக்கு இருப்பிடமாயிருக்கையால் இவன் நாராயணனெனப்படுகிருன்] என்று மனுஸ்ம்ருதியிலும்.

''ஸ்ருஷ்ட்வா நாரம் தோயமந்த: ஸ்தி$_2$தோऽஹம்
யேந ஸ்யாந்மே நாம நாராயணேதி''



[நாரசப்தவாச்யமான ஜலத்தை ஸ்ருஷ்டித்து அதனுள்ளிருந்தபடியால் எனக்கு நாராயணனென்று பெயர்.] என்று வராஹபுராணத்திலும்.

''ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:''

[பாற்கடலில் பையத்துயின்றவன் ஸ்ரீமந் நாராயணன்.] என்று விஷ்ணு த$_4$ர்மத்திலும்.

''விஷ்ணோராயதநம் ஹ்யாப: ஸ ஹ்யபாம் பதிருச்யதே|
தஸ்யைவ ஸூநவஸ்த்வேதாஸ் தஸ்மாத் தம் ஹ்யப்ஸு
ஸம்ஸ்மரேத்||''

[ஜலம் விஷ்ணுவுக்கு இருப்பிடம்; அவன் ஜலத்திற்குப் பதியெனப்படுகிருன்; அது அவனிடமிருந்து பிறந்தது. ஆகையால் அவனை ஜலத்தில் தியானிக்கவேண்டியது.] என்று யாஜ்ஞவல்க்யராலும்.

''தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள்
கண்வளரும்''

முதலான ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலும் ஜலம் பகவானுக்கு இருப்பிடமென்னும் விஷயம் கீர்த்திக்கப்பட்டது. ''யமந்த: ஸமுத்$_3$ரே கவயோவயந்தி'' ''ஸமுத்$_3$ரேந்தம் நாராயணம்'' என்று வேதத்திலும் உத்கோஷிக்கப்பட்டது. அவற்றை மனத்தில்கொண்டு 'ஆபோ ஹிஷ்டா$_2$மயோபு$_4$வ:' என்கிருன் வேதபுருஷன். ''ஆப:'' என்று பகவானுக்காகும்போது, 'ஆப்நோதி இதி ஆப்' என்று ஆகி, அதனுடைய—ஆருவது வேற்றுமையாயிருக்கிறது; ஸர்வவ்யாபியான விஷ்ணுவுக்கு என்றபடி. 'மயோபு$_4$வ:' என்றதும் பகவானுக்காகும்போது ஆருவது வேற்றுமை.(ஆபோ ஹிஷ்டா$_2$ மயோபு$_4$வ:)ஜலமே! (எல்லாப் பிராணிகளுக்கும்) ஸுகத்தைக் கொடுப்பதாயிருக்கிருயன்றோ என்றும் பொருள் கூறுவதுண்டு.

(தா:) இப்படி பகவானுடைய திருமேனியைத் தீண்டுவதினல் பரிசுத்தமடைந்த நீங்கள். நதீஜலம், கிணற்று

ஜலம். ஸமுத்ர ஜலம் என்று பலபடிப்பட்டிருப்பதால் பன்மையாகப் படிக்கப்படுகிறது.

(ந:) பகவானை அடையவேணுமென்னும் ஆசையுடைய எங்களை; உங்களைட்புருஷகாரமாகப்பற்றியிருக்கும் எங்களை என்றுமாம். (ஊர்ஜே த₃த₄ாதந) உயர்ந்த குணங்களையுடைய பகவானுக்கு ஸமர்ப்பியுங்கள்.

**"யத்₃யத்₃விபூ₄திமத் ஸத்வம் ஸ்ரீமதூ₃ர்ஜிதமேவ வா |**
**தத்ததே₃வாவக₃ச்ச₂ த்வம் மம தேஜோம்ஶஸம்ப₄வம் ||"**

[விபூதிகள் பலவற்றையுடையதும், செல்வம் நிரம்பியதும், மேலானதுமான எதெது இருக்கின்றதுவோ. அது எல்லாம் என்னுடைய தேஜஸ்ஸில் ஒரு பாகத்தினுல் உண்டானது என்று அறி.] என்று இவனுடைய தேஜஸ்ஸினுலேயே மற்ற வஸ்துக்களும் ஊர்ஜிதமாகின்றனவென்று சொல்லப்பட்டதன்றோ. "தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்" என்று ஸ்ரீராமாயணத்திலும் சொல்லப்பட்டது. மறுபடியும் எப்படிப்பட்டதெனில்:—

(மஹே) பெரியோனுயிருக்கும் பகவானின் பொருட்டு.

**"அணோரணீயாந் மஹதோ மஹீயாந்"**

[அணுவைக்காட்டிலும் அணுவாகவும், மஹத்தைக்காட்டிலும் பெரியதாகவும் உள்ளவன்.] என்றும்,

**"ந தத்ஸமஶ்சாப்₄யதி₄கஶ்ச த்₃ருஶ்யதே"**

[அவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் காணப்படவில்லை.]என்றும்

**"தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம்"**

[ஈச்வரர்களைக்காட்டிலும் மேலான ஈச்வரனும், தேவதைகளைக்காட்டிலும் மேலான தேவதையுமானஅவனை.]என்றும் "பரமம் ப்ரபு₄ம் நாராயணம்" என்றும் வேதங்களிலும்.



**"பூ₄மா ஸம்ப்ரஸாதா₃த₃த்₄யுபதே₃ஶாத்"**

[பூ₄மா (பெரியோன்)எனப்படுபவன் பரமாத்மாவே; ஜீவனைக்காட்டிலும் மேலானவனுகச் சொல்லியிருப்பதால்.] என்று ப்ரஹ்ம ஸூத்ரத்திலும்

**"சூழ்ந்ததனில் பெரிய சுடர்ஞானவின்பமேயோ"** என்றும்,
**"ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா"** என்றும்,
**'ஒத்தாரும் மிக்கார்களும் தன்தனக்கின்றி நின்றனை"** என்றும்
ஆழ்வாராலும் இவனுடைய பெருமை பேசப்பட்டதன்றோ.

(ரணய) பூஜிக்கத்தக்கவரான. 'ர' என்று ஸுகத்தைச் சொல்லி ஸுகமாகிய மோக்ஷத்திற்கு அழைத்துச் செல்லுமவனுகையாலே 'ரணய' எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

**"சன்மசன்மாந்தரம் காத்தடியார்களைக் கொண்டுபோய்த்**
**தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க்கொள்ளுமப்பனை"**

என்றார் ஆழ்வார். 'ரமணய' என்பது ஶ்ரௌதப்ரயோகமாகையால் ரணய' என்றுஇடைக்குறையாகஇருப்பதாகவும் கொள்ளலாம்.

**"அந்தராதி₃த்யே ஹிரண்மய: புருஷ:"** என்றும், **"ஆதித்₃ய வர்ணம்"** என்றும் பல பல வாக்யங்களில் சொல்லப்பட்ட திவ்யமங்களவிக்ரஹத்தாலும். விக்ரஹ குணங்களாலும். ஸ்வரூப குணங்களான தயை. வாத்ஸல்யம் முதலானவற்றாலும் அழகியவனுயிருந்து கொண்டு உலகம் முழுவதையும் ஆநந்திக்கச்செய்பவன் என்று தாத்பர்யம். **"ராமோ ராமோ ராம இதி"** என்றும் **"ராமம் மேऽநுக₃தா த்₃ருஷ்டி:"** [ரமிக்கச் செய்யும் ராமனை என்னுடைய கண் பின் தொடர்ந்தது.] என்றும். **"ஆஶயா யதி₃ வா ராம:"** என்றும். **"ஸர்வே ராமமநுவ்ரதா:"** என்றும் தன்னுடைய வடிவழகாலும். பேச்சாலும் குணங்களாலும் எல்லாரையும்

ஆநந்திப்பிப்பவனல்லவோ இவன். "அழகனே!" என்று ஆழ்வார்களும் ஆழங்காற்படுவார்கள். (சக்ஷஸே) "**ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம**"என்றும்,"**யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்**" என்றும் ஸர்வஜ்ஞனைச் சொல்லப்படும் பரமபுருஷனின் பொருட்டு. "எல்லையில் ஞானத்தன் ஞானமஃதே கொண்டெல்லாக் கருமங்களும் செய் எல்லையில் மாயன்" என்றார் ஆழ்வாரும். (சக்ஷஸே) எல்லாச் சேதனர்க்கும் கண்போன்றிருப்பவனென்றும் பொருள்கொள்ளலாம். "**சக்ஷுர் தே3வாநாமுத மர்த்யாநாம்**" [தேவர்களுக்கும் மனிதர்களுக்கும், கண்ணாயிருப்பவன்] என்றும், "**கண்ணவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு**"என்றும் வேதங்கள் உரைத்தன. (சக்ஷஸே த3த4ாதந)என்று கூட்டி "ஞானகுணம் எங்களுக்கு பிரகாசிக்கும் பொருட்டு எங்களை அடைவியுங்கள்" என்றும் பொருள் கொள்ளலாம் (த3த4ாதந) சரணமாக அடைவியுங்கள். **'डुदाङ्-दाने' (டு3த3ாங்-த3ாநே)** என்னும் தாதுவின்மேல் 'தப்த நப்தநதநாஶ்சேதி' என்று தநப்ரத்யம் வந்ததென்பர். இத்தால் பரமபுருஷனுக்கு வாஸஸ்தானமாகிய ஜலம் புருஷகாரமாகப் பற்றப்படுகிறது. "ஊர்ஜே த3த4ாதந மஹேரணாய சக்ஷஸே" என்னும் தொடருக்கு வேறுவிதமாகவும் பொருள் உரைப்பதுண்டு. 'ஊர்க்' என்னும் சப்தம் அந்நத்தைச் சொல்லுவதாக நிகண்டுவில் படிக்கப்பட்டிருக்கிறது. 'சக்ஷஸே' என்று இந்திரியங்களைச் சொல்லுகிறது. **தா:**—அப்படிப்பட்ட நீங்கள், ந:—எங்களுக்கு, **மஹே**—பெரியதும், **ரணாய**—அழகியதுமான **சக்ஷஸே**—இந்திரியங்களை அடையும் பொருட்டு, **ஊர்ஜே த3த4ாதந**—அந்நத்தைக் கொடுங்கள் என்று பொருள் கொள்வது. எங்களுடைய இந்த்ரியங்கள் பகவத்கைங்கர்யத்தில் தீவ்ரமாயீடுபடும் பொருட்டு, அவைகளுக்கு ப3லத்தைத்தரும் அந்நத்தைக் கொடுங்கள் என்றபடி. "அந்நமயம் ஹி ஸோம்ய மந:" என்று அந்நமானது மனம் முதலிய இந்திரியங்களைப் போஷிப்பதென்று சொல்லப்பட்டதன்றோ. "**யயா கயா ச வித4யா ப3ஹ்வந்நம் ப்ராப்நுயாத்**" [எவ்விதத்திலாவது அதிகமான அன்னத்தை



அடையவேண்டியது.] என்று வேதத்திலும், அந்நத்தை அடையவேண்டியதின் அவசியம் சொல்லப்பட்டது. ச2ாந்தஸமாகையாலே ஊர்ஜே என்றிருப்பதாகக் கொள்ளவேண்டும்.

முமுக்ஷுவான சேதநன் அன்னத்தை ப்ரார்த்திக்கலாமோ? எனில்: இவ்வுலகிலிருக்கும் வரையில் தே3ஹத4ாரணத்திற்கு அவசியமான அந்நத்தை ப்ரார்த்திக்கக் குறையில்லை.

"**இந்த்3ரிய போஷகத்வேந அந்நப்ரார்த்த2நம் ச ந முமுக்ஷுத்வ விரோதி4 |**
**முமுக்ஷோரபி யாவத்ஸாத4ந நிஷ்பத்தி தே3ஹேந்த்3ரிய த4ாரணஸ்ய**
**தத்3த்3வாரா ஜ்ஞாநவிகாஸஸ்ய ச அபேக்ஷிதத்வாத்**"

[இந்திரியங்களைப் போஷிப்பதற்காக அந்நத்தை ப்ரார்த்திப்பது முமுக்ஷுத்வத்திற்கு விரோதியல்ல: முமுக்ஷுவுக்கும் ஸாதநாநுஷ்டாநம் முடியும் வரையில் தேஹேந்திரியங்கள் தரித்திருக்கவேண்டியதும், அதன் மூலம் ஞானம் விருத்தியடைவதும் அவசியமாகையால் ]என்று நாராயணயதீந்த்ரர் வியாக்கியானமிட்டார்.

ஆக, இதுவரையில் பகவானை அடைவதற்காக ஜலம் புருஷகாரமாகப் பற்றப்பட்டது.

"**தை3வே புருஷகாரே ச கர்மஸித்3தி4ர் வ்யவஸ்தி2தா**"

[தைவத்தினாலும், புருஷகாரத்தினாலும் காரியஸித்தி ஏற்படுகிறது.] என்று சொல்லப்பட்டதன்றோ. இப்புருஷகாரம் இருந்தபோதிலும் ப2லத்தைக் கொடுப்பவனான அந்த பகவானுடைய முகோல்லாஸமில்லாவிடில் ப2லம் ஸித்தியடையாது. இவ்விஷயம்

"**நாயமாத்மா ப்ரவசநேந லப்4யோ**
**ந மேத4யா ந ப3ஹுநா ஶ்ருதேந |**
**யமேவைஷ வ்ருணுதே தேந லப்4யஸ்**
**தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ||**"

[இப்பரமாத்மா (பக்தியற்ற) ஶ்ரவண மநந தியானங்களால் அடையத்தக்கவனல்லன்; எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ அவனாலேயே அடையத்தக்கவன்; அவனுக்கு இப்பரமாத்மா தன் திவ்யரூபத்தை-(ஸ்வரூபத்தை)-காட்டுகிறான்.] என்று சுடர்மிகுசுருதியில் சொல்லப்பட்டது.

இனி, இப்பரமபுருஷன் எவனை வரிப்பான் என்ற கேள்வி பிறக்கிறது; எவன் இப்பரமபுருஷனுக்கு மிகவும் ப்ரியனானவனோ அவனே இவனுக்கு வரிக்கத்தக்கவன். எந்தச் சேதனன் இப்பரம சேதனனிடம் பரமப்ரீதியை வைத்துள்ளானோ அவனே இவனுக்கு மிகவும் ப்ரியனாகிறான். ஆக, எந்த ஜீவன் புருஷோத்தமனிடம் பெருங்காதலுற்றவனாயிருக்கிறானோ அவனையே இவன் வரிப்பான் என்று தேறிநிற்கிறது.

**"ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த2ம் அஹம் ஸ ச மம ப்ரிய:"**
[பக்திமானான ஞானிக்கு நான் மிகவும் ப்ரியன்; அவனும் எனக்கு (மிகவும்) ப்ரியன்.] என்றும்,

**"தேஷாம் ஸததயுக்தாநாம் ப4ஜதாம் ப்ரீதிபூர்வகம் ।**
**த3தா3மி பு3த்3தி4யோக3ம் தம் யேந மாமுபயாந்தி தே ॥"**

[என்னுடன் எப்போதும் சேர்ந்திருக்கையை விரும்புமவர்களும், என்னை ப4ஜனம் செய்பவர்களுமான அவர்களுக்கு, என்னை அடைவதற்கு ஸாதனமான புத்தியோகத்தை மிக அன்புடன் (நான்) அளிக்கிறேன்.] என்றும்,

**"நாஹம் வேதை3ர் ந தபஸா ந தா3நேந ந சேஜ்யயா ।**
**ஶக்ய ஏவம்விதோ4 த்3ரஷ்டும் த்3ருஷ்டவாநஸி மாம் யதா2 ॥**
**ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோ4ऽர்ஜுந ।**
**ஜ்ஞாதும் த்3ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥"**

[வேதங்களாலும், தபஸ்ஸினாலும், தானத்தினாலும், யாகத்தினாலும், நீ என்னைக் கண்டதுபோல் நான் (ஒருவரால்) காணத்தக்கவனல்லன்; அர்ஜுனா! எதிரிகளை அழிப்பவனே! மற்றொன்றிலும் ஈடுபடாத பக்தியினாலேயே நான் இம்மாதிரி உண்மையாக அறிவதற்கும், காண்பதற்கும், நுழைவதற்கும் தகுந்தவன்.] என்றும்



**"உதா3ராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்"**
[இந்த நான்கு வகைப்பட்ட பக்தர்களும் உதாரர்களே; ஞானியோவெனில் எனக்கே தா4ரகன் என்பது என் ஸித்தாந்தம்.] என்றும் பக்தியினுடையவும், பக்தர்களுடையவும் பெருமைகள் பகவானாலேயே பரக்கப்பேசப்பட்டனவன்றோ. வேதங்களிலும், "தமேவ விதி3த்வா அதிம்ருத்யுமேதி" "தமேவம் வித்3வாநம்ருத இஹ ப4வதி நாந்ய: பந்தா2 அயநாய வித்3யதே" "தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத" "நிதி3த்4யாஸிதவ்ய:" "ய: பூர்வ்யாய வேத4ஸே நவீயஸே.... ஸுமதிம் ப4ஜாமஹே" [எவனொருவன் ஆதிகாரணனாகவும் (அநுபவிக்கப்புகும் ஒவ்வொரு க்ஷணத்திலும்) புதியனாகவுமிருக்கிறானோ அந்த பகவானிடத்தில் பக்தியை அடைகிறோம்.] முதலான பலவிடங்களில் பக்தியானது மோக்ஷஸாதனமாக விதிக்கப்பட்டுள்ளது. அந்த பக்தியையும் தனக்கு அளிக்கும்படி ஜலத்தை ப்ரார்த்திக்கிறான்— "யோ வ: ஶிவதமோ ரஸ:" என்று தொடங்கி. பக்தி நிஷ்டர்களுக்கேயன்றிக்கே ப்ரபந்நர்களுக்கும் பகவத்பக்தியானது மிகவும் விரும்பத்தக்கதாகிறது. பக்திநிஷ்டன் பக்தியை ஸாதனமாக விரும்புகிறான். ப்ரபத்திநிஷ்டனோவெனில் அதைப் ப2லமாக (ஸ்வயம் ப்ரயோஜநமாக) விரும்புகிறான். பக்தியை ஸாதித்துத்தருவதால் ப்ரபத்தியும் ஸாத்2யபக்தி என்று பெயர் பெற்றிருக்கிறது.

**"பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்"**

**"பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த**
**காரமர் மேனி நம் கண்ணன்"**

**"சூழ்ந்ததனிற்பெரிய என் அவாவறச் சூழ்ந்தாயே"**

என்று நம்மாழ்வாரும்,

"பத்தராமவர்க்கலாது முத்தி முற்றலாகுமே"

"எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக்
கட்டி வீடிலாதுவைத்த காதலின்பமாகுமே"

"அன்பிலன்றியாழியானை யாவர் காணவல்லரே"

"நின்பாலராய பத்தர் சித்தம் முத்தி செய்யும் மூர்த்தியே"

"பெறற் கரிய நின்ன பாத பத்தியான பாசனம்
பெறற்கரிய மாயனே! எனக்கு நல்கவேண்டுமே"

என்று பக்திஸாரரும் தாங்கள் பக்தி பரிபூர்ணராயிருந்ததையும், பக்தியின் பெருமையையும் பண்ணியுரைத்தார்கள். இப்படி பக்திநிஷ்டர்களோடு,ப்ரபந்நர்களோடு வாசியற ஸர்வர்க்கும் உபாதே3யதமமான பக்தியானது இம்மந்திரத்தின் பிற்பகுதியால் பிரார்த்திக்கப்படுகிறது.

பகவத்பக்தியை ஜலங்களை நோக்கி ப்ரார்த்திப்பானென்னென்னில்: பகவானுக்கு எப்போதும் பள்ளிகொள்ளுமிடமாயிருக்கும்படி தம்மை அமைத்து வைத்திருக்கும்படியான பரமபக்தி அவைகளுக்கே உள்ளதாகையால் அவ்விதமான பக்தியை எங்களுக்கும் அடைவியுங்கள் என்று அவைகளை நோக்கி ப்ரார்த்தனை செய்யப்படுகிறது. (யோ வ: ஶிவதமோ ரஸ:...) உங்களிடமிருக்கும்படியான மிகப்பரிசுத்தமான யாதொரு ரஸம் உண்டோ அதை எங்களை அடைவியுங்கள். (ரஸ:) என்று இங்கு சொல்லப்படுவது அமுதிலும் இனிதான பகவத் பக்தியேயாகும். தித்திப்பு, புளிப்பு முதலான ஷட்ரஸங்களல்ல; 'ஶிவதம:' என்னும் விசேஷணம் அவைகளுக்குப் பொருந்ாது: மேலும் இந்த ப்ரகரணத்திற்கு அப்பொருள் சேராது. (ஶிவதமோ ரஸ:) மிகப்பரிசுத்தமான அன்பு. பக்திக்குப் பரிசுத்தியாவது: தனக்கு ப்ரயோஜனமாக ஒன்றை விரும்பாதிருக்கை. பகவானுடைய திருவடிகளை எப்போதும் வருடுவதையே ஸ்வயம் ப்ரயோஜனமாகக் கொண்டிருப்பவையன்றோ இவை. (ஶிவதமோ ரஸ:)



"உலகு படைத்துண்ட வெந்தை அறைகழல்
சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவா
ஆருயிர் உருகி உக்க நேரிய காதல்
அன்பில் இன்(பு) ஈன் தேறல் அமுதவெள்ளத்தானாம் சிறப்பு"

என்று வேதம் தமிழ்செய்த மாறனால் சொல்லப்பட்ட பரம பக்தி ரஸம். (ஶிவதமோ ரஸ:) பரமமங்களமான பகவதனுபவம் இங்கு பிரார்த்திக்கப்படுவதாகவும் பொருள்கொள்ளலாம். "ஶாஶ்வதம் ஶிவம்" எனப்பட்ட பகவானைப்பற்றிய அனுபவமாகையால், 'சிவதமமான ரஸம்' என்பது பொருந்தும். "பவித்ராணாம் ஹி கோ3விந்த3: பவித்ரம் பரமுச்யதே" [பரிசுத்தமானவற்றினுள் கோவிந்தன், மிகப் பரிசுத்தனெனப்படுகிறான்.) "மங்க3ளாநாஞ்ச மங்க3ளம்" [மங்களங்களுக்குள் மங்களமானவன்.] "பாவநஸ்ஸர்வ லோகாநாம் த்வமேவ ரகு4நந்த3ந" [ராகவ! எல்லாவுலகையும் நீரே பரிசுத்தப்படுத்துபவர்] என்று பகவான் பரம பவித்ரமானவரென்றும், "ஆவிரிஞ்சாத3மங்க3ளம்" [பிரமன் முதலிய யாவரும் அமங்களமானவர்கள்.] முதலான ப்ரமாணங்களால் பிறர் அபரிசுத்தரென்றும் அறியப்படுகிறதன்றோ. 'ஶிவதம:' என்னும் சொல்லால் அபரிசுத்தமும் அல்பமும் அஸ்திரமுமான ப்ரஹ்மாதிகளை அனுபவித்தல் தள்ளப்படுகிறது.

"ஆப்3ரஹ்மபு4வநால்லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந।
மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்3யதே॥"

[அர்ஜுனா! ப்ரஹ்மலோகம் முதலான எல்லா உலகங்களும் மறு பிறப்பைத் தரக்கூடியவை. குந்திபுத்ரனே! என்னை அடைந்தபிறகோவெனில் மறுபிறப்பு கிடையாது] என்று கீதையிலும்.

"ப்3ராஹ்மோऽபி லோகோऽல்பக:" [ப்ரஹ்மலோகமும் (முமுக்ஷுவுக்கு) அல்பமானது] "ஸ்வர்க்கே3ऽபி யச்சிந்தநே விக்4ந:" 'ஸ்வர்க்க3ாப்திஸ் தஸ்ய விக்4நோऽநுமீயதே"

[ஸ்வர்க்கப்ராப்தியும் அவனுக்கு இடையூறு] "தஸ்யாந்தராயோ மைத்ரேய தே$_3$வேந்த்$_3$ரத்வாதி$_3$கம் ப$_2$லம்" [மைத்ரேயரே! தேவேந்திரனுயிருக்கை முதலிய பலன்கள் அவனுக்கு இடையூறு.] என்று விஷ்ணுபுராணத்திலும் உத்கோஷிக்கப்பட்டது. 'சிவதமமான ரஸம்' என்கையால், நித்யமாயிருந்தபோதிலும் பகவதனுபவத்தைக் காட்டிலும் மிகத் தாழ்வானதான ஆத்மாநுபவரூபமான கைவல்யமோக்ஷமும் தவிர்க்கப்பட்டது.

"குறுகா நீளா இறுதி கூடா எனையூழி
சிறுகா பெருகா அளவில் இன்பம் சேர்ந்தாலும்
மறுகாலின்றி மாயோன் உனக்கே ஆளாகும்
சிறுகாலத்தை உறுமோ? அந்தோ! தெரியிலே"

என்று உள்ளமுருகி ஓலமிட்டாரன்றோ ஆழ்வார். (ஶிவதமோ ரஸ:) நரகாதி அநுபவம் அசிவமானது; ப்ரஹ்மலோகம் முதலியவற்றில் அனுபவம் சிவமானது. கைவல்யாநுபவம் சிவதரமானது; பகவதநுபவமே சிவதமமானது.

"பே$_4$ாக$_3$ா இமே விதி$_4$ஶிவாதி$_3$பத$_3$ஞ்ச கிஞ்சித்
ஸ்வாத்மாநுபூ$_4$திரிதி யா கில முக்திருக்தா।
ஸர்வம் ததூ$_3$ஷஜலஜோஷமஹம் ஜுஷேய
ஹஸ்த்யத்$_3$ரிநாத$_2$! தவ தா$_3$ஸ்யமஹாரஸஜ்ஞ:"

[அத்திகிரியருளாளனே! உன் கைங்கர்யமாகிற மஹாரஸத்தை அறிந்தவனான நான், இந்த ஸ்வர்க்காதிபோகங்களையும், பிரமன், சிவன் முதலியோரின் லோகங்களையும், ஆத்மாநுபூதி எனப்படும் கைவல்ய மோக்ஷத்தையும் உப்புத் தண்ணீரைப்போல் உதறித்தள்ளுகிறேன்.] என்று கூரத்தாழ்வான் அருளியது இவ்விடத்தில் அநுஸந்திக்கவுரியது. (ஶிவதமோ ரஸ:) "ஶாஶ்வதம் ஶிவம்" என்றும் "ரஸோ வை ஸ:। ரஸம் ஹ்யேவாயம் லப்$_3$த்$_4$வாநந்தீ$_3$ ப$_4$வதி" [அப்பரமாத்மா ரஸஸ்வரூபியன்றோ; ரஸஸ்வரூபியான அவனை அடைந்தே இந்த ஜீவன் ஆநந்தத்தை உடையவனாகிறான்.]



என்றும் சுருதி வாக்கியங்களில் சொல்லப்பட்ட பரமாத்மாவே இங்கு 'சிவதமமான ரஸம்' என்று கூறப்படுவதாகவும் கொள்ளலாம். "கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை" என்று ஆழ்வாரால் பாடப்பட்ட புருஷோத்தமனை ரஸமெனக் குறையில்லையன்றோ. (யோ வ: ஶிவதமோ ரஸ:), "வர்த்ததே" (இருக்கிறதோ) என்று சேர்த்துப் பொருள்கொள்ள வேண்டும். (தஸ்ய) 'தஸ்ய ஏகதே$_3$ஶம்' என்று கூட்டி, அந்தபக்தியின் ஒரு சிறு பாகத்தையாவது எங்களை அடையச் செய்யுங்கள் என்கை. (இஹ) இவ்வுலகத்தில். அவ்வுலகத்திற்குப்போய் பகவத்பக்தியைப் பெறக்கடவோம் என்று ஆறியிருக்கக்கூடிய ஸ்வபாவத்தை உடையோமல்லோம் காண்!

"கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்
இம்மைப்பிறவி செய்யாமே இனிப்போய்ச்செய்யும்
தவந்தானென்"

"ஏரார் முயல் விட்டுக் காக்கைப் பின் போவதே"

"இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும்
அச்சுவைபெறினும் வேண்டேன்"

"நேரியகாதல் அன்பில் இன்பு ஈன் தேறல் அமுத வெள்ளத்தானாம் சிறப்பு விட்டு.......நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே?' என்னுமவர்களன்றோ நாங்கள் என்கிறான். (ந:) எங்களுக்கு, அவனைப் பெறுவிடில் தரியோம் என்றிருக்கும் எங்களை (அடைவியுங்கள்). உங்களுடைய ஸம்பந்தத்தால் பரிசுத்தமடைந்த எங்களுக்கு என்றுமாம். (ந:) 'எங்களுக்கு' என்று தன்னுடன் ஸம்பந்தம் பெற்ற எல்லாரையும் கூட்டிக்கொள்கிறான். தனியனுபவிக்கும் விஷயமன்றே இது; "ஏக: ஸ்வாது$_3$ ந பு$_4$ஞ்ஜீத" [இனிய பொருளைத் தனியருந்தலாகாது.] என்பதன்றோ ஶாஸ்த்ரார்த்த$_2$ம்.

(உஶதீரிவ: மாதர:) ஸ்நேஹத்துடன் கூடிய தாய்மார்களைப்போல் எங்களுக்கு அந்த ரஸவிசேஷத்தை ஊட்டுங்கள். ப்ராக்ருதரான தாய்மார்கள் தேஹத்துக்கு தா4ரகமான பாலை ஊட்டுவது போல் நீங்கள் ஆத்மாவுக்கு தா4ரகமான ரஸத்தைப் பருகச் செய்யுங்கள். (உஶதீரிவமாதர:) 'அன்பு நிரம்பிய தாய்மார்களைப் போலே' என்றாவது 'தாய்மார்களைப்போலே அன்பு நிரம்பியவர்களாய்' என்றாவது பொருள் கொள்ளலாம். (உஶதீ:) 'ஜஸி வா ச2ந்த3ஸி' என்கிற ஸூத்ரத்தினால் 'உஶதீ:' என்றாகிறது. ஸ்நேஹமுடையவர்கள் என்று பொருள். "'ஸ்நேஹிந்ய ஆப:' [பசை (அன்பு) உடையது ஜலம்] என்றல்லவோ உங்களுக்கு லக்ஷணம் சொல்லப்பட்டது" என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் ரஸோக்தியாக அருளிச்செய்வர். ஸ்நேஹஶப்தமானது, பசை அன்பு என்னும் இரு பொருள்களை உடையது.

(யஸ்ய க்ஷயாய ஜிந்வத2 தஸ்மா அரம் க3மாம வ:....) **யஸ்ய**—எந்த நாராயணனுடைய, **க்ஷயாய** - வாஸஸ்தானமாயிருந்துகொண்டு, **ஜிந்வத2**—ப்ரீதியை அடைகிறீர்களோ, **தஸ்மை**—அந்த பகவானை அடையும் பொருட்டு, **வ:**—உங்களை, **அரம் க3மாம**—அதிகமாக உபாஸிக்கிறோம். **ஆப:**—ஜலங்களே! **ந:**—எங்களை, **ஜநயத3**— (பகவத் பக்தியைக் கொடுப்பதன் மூலம்) ஸத்தைபெற்றவர்களாகச் செய்யுங்கள். இது மந்த்ரசேஷத்தின் பதவுரை. விசேஷார்த்தங்களை இனிச்சிந்திப்போம்.

(யஸ்ய க்ஷயாய) எவன் வஸிப்பதற்காக; எவனை அடைவதற்காக என்றும் பொருள் கொள்ளலாம். (ஜிந்வத2) ப்ரியங்களாக ஆகிறீர்களோ; 'ஜிவி' என்கிற தாது ப்ரீதி விஷயம் என்னும் பொருளையுடையது. (யஸ்ய க்ஷயாய ஜிந்வத2) எவன் உங்களை வாஸஸ்தானமாக உகந்தருளியிருக்கிறானோ என்றபடி. எவனுடைய வாஸஸ்தானமாயிருக்கையால் (எங்களுக்கு) ப்ரியங்களாயிருக்கிறீர்களோ என்னவுமாம். எவனை அடைதற்கு நீங்கள் உகக்கின்றீர்



களோ என்றுமாம். "குறைவில் தடங்கடல்" என்கிறபடியே எம்பெருமானுடைய வாஸஸ்தானமாயிருந்துகொண்டு குறைவற்றிருப்பவையன்றோ இவை. "ஆபோ ஹி ஷ்டா2 மயோபு4வ:" என்றவிடத்திலெடுத்த ப்ரமாணங்களை இங்கும் படிப்பது. (தஸ்மா அரம் க3மாம வ:) அவனை அடையும் பொருட்டு உங்களை மிகவும் உபாஸிக்கிறோம். (தஸ்மா) அவனுடைய கைங்கரியத்தைப் பெறும் பொருட்டு என்றும் கொள்ளலாம். (வ: அரம் க3மாம) உங்களை மிகவும் அடைகிறோம்; உங்களை மிகவும் உபாஸிக்கிறோம் என்றபடி. "க3த்யர்த்தா2 பு3த்3த்4யர்த்தா2:" [கதியைச் சொல்லும் பதங்கள் (மாநஸகதியாகிற) புத்தியையும் பொருளாகவுடையவை.] என்னும் ந்யாயத்தால் 'க3மாம'(அடைகிறோம்) என்னும் பதம் 'உபாஸிக்கின்றோம்' என்றாவது 'ஶரணமாக அத்4யவஸிக்கிறோம்' என்றாவது பொருள்படுகிறது. (அரம் க3மாம) உங்களை **மிகவும் உபாஸிக்கிறோம்.** **"முயன்று உன்னை நோற்கின்றேன் காமதேவா!"** என்ற ஆண்டாளைப்போலே சொல்லுகிறான். பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கும் பரமைகாந்தியான இவன் அப்புக்கு (ஜலத்துக்கு) அபி4மானி தேவதையை இப்படி உபாஸிக்கை பொருந்துமோ? என்னில்: பகவத்விஷயப்ராவண்யம் படுத்துகிற பாடு இது. பெருமாளையல்லது அறியாத திருவயோத்யையிலுள்ளார், அவர்க்கு நன்மையையெண்ணி "**ஸர்வாந் தே3வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே2 யஶஸ்விந:**" [யஶஸ்விகளான அயோத்யாவாஸிகள் ராமனுக்காக எல்லா தேவதைகளையும் நமஸ்கரிக்கிறார்கள்] என்கிறபடியே எல்லா தேவதைகளின் காலிலும் விழுந்தனர். பரமபுருஷனைப் பரமபதத்திலும் வேண்டேனென்ற திருவடி, ராமனுக்காக ஸமுத்3ரதரணம் பண்ணும்போது "**நமோऽஸ்து வாசஸ்பதயே**" என்றான். நித்யானபாயினியான பிராட்டியும் அவதாரத3சையில்

**"பூர்வாம் தி3ஶம் வஜ்ரத4ரோ த3க்ஷிணாம் பாது தே யம:|**
**வருண: பஶ்சிமாமாஶாம் த4நேஶஸ்தூத்தராம் தி3ஶம்||"**

[கீழ் திசையில் இந்திரனும், தென்திசையில் யமனும், மேற்குத்திக்கில் வருணனும், வடதிசையில் குபேரனும் (உம்மை) ரக்ஷிக்கட்டும்.] என்று ஸர்வலோகபாலனுக்கு திக்பாலகர்களைக் காவலிட்டாள். ஸாத்விகாக்₃ரேஸரரான பெரியாழ்வார் திருமகளார் "உன்னையும் உம்பியையும் தொழுதேன்" என்று ரஜோகுணப்ரசுரனான காமன் காலிலே விழுந்தாள். ப்ரபந்நஜனகூடஸ்தரான நம்மாழ்வாரும் "தெய்வங்காள்!" என்று தேவதைகளை முன்னிட்டார். பகவானைப் பெறவேண்டுமென்னும் ப்ராப்யத்வரை மிக்கிருப்பவர்கள் கலக்கமிருக்கும்படி இது. "யமயள ச காசித் ப்ரேமாந்த₄ா" என்கிறபடியே பகவத்விஷயத்தில் ப்ரேமத்தாலே வரும் கலக்கமும், அத்தாலே வரும் அதிப்ரவ்ருத்திகளும் அத்யந்தம் உபாதே₃யங்களே என்று நம் ஆசாரியர்கள் அறுதியிட்டிருக்கின்றார்கள். அந்த சாஸ்த்ரார்த்தத்தை வேதபுருஷன் இங்கு வெளியிடுகிறான். (அரம் க₃மாம) "முயன்று நோற்கின்றேன்" "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" [என்னைக் கொள்ளுகை அவனுக்கே தகுதி] என்னும்படியே அவனேயுபாயம் என்று அறுதியிட்டிருக்கவேண்டிய நான் இப்போது அவனைப் பெறுகைக்கு உன் காலிலே விழுந்து படுகிறயத்நமெல்லாம் கண்டாயே என்கிறான். (வ:) உங்களை, நான் பற்றியிருக்கும் விஷயந்தான் இன்னதென்னுமிடமறியீரோ? அவனைப்பற்றியிருக்கக் கடவ நானன்றோ உங்கள் காலிலே விழுந்து துவளுகிறேன். (தஸ்மை) இவையெல்லாம் அவனுடைய இனிமைபடுத்துகிற பாடுகிடீர்!

(ஆபோ ஜநயத₂ா ச ந:) ஜலங்களே! அவனையும் அவன் விஷயத்தில் பக்தியையும் கொடுப்பதன் மூலம் எங்களை ஸத்தை பெற்றவர்களாகச் செய்யுங்கள்.

**"அஸந்நேவ ஸ ப₄வதி அஸத்₃ ப்₃ரஹ்மேதி வேத₃ சேத்।**
**அஸ்தி ப்₃ரஹ்மேதி சேத்₃ வேத₃ ஸந்தமேநம் ததோ விது₃:॥"**

[ப்ரஹ்மம் 'ஸத்' (உள்ளது) என்று அறியவில்லையாகில் அவன் அஸத்தாகவே ஆகிறான். ப்ரஹ்மம் உள்ள



தென்றறிந்தானாகில் அதனாலேயே இவனை நல்லோனென அறிகின்றனர்.] என்று வேதத்திலும்,

**"ஶரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:।**
**ஸ ஹி வித்₃யாதஸ் தம் ஜநயதி தச்ச்₂ரேஷ்ட₂ம் ஜந்ம॥"**

[தாய் தந்தையர்கள் சரீரத்தையே உண்டுபண்ணுகிறார்கள். ஆசாரியனே ப்ரஹ்மவித்யையை அளிப்பதனால் அவனை ஸத்தை பெறச்செய்கிறான். அதுவே மேலான பிறப்பு.] என்று ஆபஸ்தம்ப ஸூத்ரத்திலும்,

**"ஸ்வோஜ்ஜீவநேச்சா₂ யதி₃ தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி₃।**
**ஆத்மதா₃ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபா₄வஞ்ச ஸ்தா₃ ஸ்மர॥"**

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் ஸத்தையில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவின் தா₃ஸ்யத்தையும், ஹரியின் ஸ்வாம்யத்தையும், இவைகளின் தன்மையையும் எப்போதும் எண்ணு] என்று விஷ்ணு தத்வத்திலும், "**அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்**" என்றும், "**அடியேனும் உளனுவன்**" என்றும் ஆழ்வார்களாலும் பகவத்விஷயத்தில் ருசி பிறந்தவன்றே சேதனனுக்கு ஸத்தையுள்ளது என்னும் சீரிய பொருள் பலவிடங்களிலும் பேசப்பட்டதன்றோ. (ஆபோ ஜநயத₂ா ச ந:) ஆப:—ஜலங்களே!, ந:—எங்களுக்கு, ஜநயத₂—(பகவத்ப்ராப்தியாகிற ப்ரயோஜனத்தையும்) நீங்களே உண்டு பண்ணுங்கள் என்று பிரார்த்திப்பதாகவும் பொருள் கொள்ளலாம். (ஜநயத₂) நிகழ்காலத்துக்கு ஸமீபமான காலத்தையும் நிகழ்காலமாகச் சொல்லலாமாகையால், இங்கு 'உண்டுபண்ணுங்கள்' என்னும் பொருளில் 'ஜநயத₂' என்று நிகழ்காலமாகப்படிக்கப்படுகிறது. நாராயணயதீந்த்ரர் இம் மந்திரத்திலுள்ள 'அப்' சப்தங்கள் பரமாத்மாவையே குறிக்கின்றனவென்றார். ஶ்ருதப்ரகாசிகாசாரியர் பகவானை அடைவதற்கு ஜலத்தைப் புருஷகாரமாகப் பற்றுகிறான் என்று கொண்ட பொருள் மிகவும் சுவையையுடையது.

## ஜலப்ராஶந மந்த்ரம்

அடுத்தபடியாக சிறிது ஜலத்தைக் கையில் கொண்டு பின்வரும் மந்திரங்களை முறையே காலையிலும், மத்யாஹ்நத்திலும் மாலையிலும் அநுஸந்தித்து அந்த ஜலத்தைப் பருகவேண்டும்.

**" அப்ராயத்யமித்யந்யந்மஹாபாதகேப்4ய: "**

[மஹாபாதகங்களைத்தவிர மற்றவை அப்ராயத்யம் எனப்படுகின்றன] என்று தொடங்கி **" ஆபோ வா ஆசாமேத் "** [ஜலத்தை ஆசமனம் செய்யவேண்டியது.] என்றுபாபங்களைப் போக்கடிப்பதற்கு ஸாதனமாக இம்மந்திரங்கள் வேதத்தில் சொல்லப்பட்டன. அவற்றுள் ஸாயம் ஸந்த்யாவந்தன மந்திரங்களை முற்படச் சொல்லியிருப்பதாலும்

**" ஜபந்நாஸீத ஸாவித்ரீம் ப்ரத்யகா3தாரகோத3யாத் "**

[ஸாயம்ஸந்த்யையில். நக்ஷத்திரங்கள் உதிக்கும் வரையில் காயத்ரியை ஜபித்துக்கொண்டு இருக்கக்கடவன்] என்று சொன்னபின்பு.

**"ப்ராதஸ்ஸந்த்4யாம் ஸநக்ஷத்ராம் திஷ்ட2ந்நாஸூர்யத3ர்ஶநாத்"**

[நக்ஷத்திரங்களுடன் கூடியிருக்கும்போது தொடங்கி ப்ராதஸ் ஸந்த்யையை ஸூர்யனைக் காணும் வரையில் உபாஸிப்பது.] என்று யோகீஸ்வரரால் படிக்கப்பட்டிருப்பதாலும் சுருதப்ரகாசிகாசார்யர் முதன்முதலில் ஸாயம் ஸந்த்யா மந்திரங்களைத் தொடங்கி வியாக்கியானம் செய்தார். உபநயனம் செய்யப்பட்ட ப்ரஹ்மசாரிக்கு முதன் முதலில் மாத்யாஹ்நிகமந்த்ரங்களே உபதேசிக்கப்படுவதால், நாராயணவல்லியில் மாத்யாஹ்நிக மந்த்ரம் முதலிலும், பிறகு ஸாயம் ஸந்த்யாமந்த்ரமும் பிறகு ப்ராதஸ்ஸந்த்யாமந்த்ரமும் படிக்கப்பட்டன. தினத்துக்குக் காலைவேளையே முதலாகையாலும், நாம் தினந்தோறும் முதலில் செய்யவேண்டிய நித்யகர்மம் ப்ராதஸ்ஸந்த்யையாகையாலும்,ப்ராதஸ்ஸந்த்யா



மந்த்ரத்தைத் தொடங்கி வியாக்கியானம் செய்வோம். "ஆபோ ஹிஷ்டா2" என்னும் மந்திரத்தில் ஜலம் புருஷகாரமாகப் பற்றப்பட்டது. இங்கு அநிஷ்டநிவ்ருத்தியான ப்ராப்யப்ரார்த்தனையை முன்னிட்டுப் பரமபுருஷனிடம் ஆத்மா ஸமர்ப்பிக்கப்படுகிறது.

**सूर्यश्च मा मन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः।**
**पापेभ्यो रक्षन्तां। यद्रात्र्या पापमकार्षम्। मनसा वाचा हस्ताभ्यां।**
**पद्भ्यामुदरेण शिश्ना। रात्रिस्तदवलुम्पतु। यत्किञ्च दुरितं मयि।**
**इदमहं माममृतयोनौ सूर्ये ज्योतिषि जुहोमि स्वाहा॥**

**ஸூர்யஶ்ச மா மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச மந்யுக்ருதேப்4ய:।**
**பாபேப்4யோ ரக்ஷந்தாம்। யத்3ராத்ர்யா பாபமகார்ஷம்।**
**மநஸா வாசா ஹஸ்தாப்4யாம்।**
**பத்3ப்4யாமுத3ரேண ஶிஶ்நா। ராத்ரிஸ்தத3வலும்பது।**
**யத்கிஞ்ச து3ரிதம் மயி**
**இத3மஹம் மாமம்ருதயோநௌ ஸூர்யே ஜ்யோதிஷி**
**ஜுஹோமி ஸ்வாஹா॥**

இம்மந்திரத்திற்கு ருஷி வாமதேவர்; அக்னி என்றும் சொல்லுவர். காயத்ரீ சந்தஸ்ஸு; ஸூர்யன் தேவதை: ஸூர்யனும் மந்யுபதிக்களும் தேவதை என்றும் சொல்லுவர். இங்கு காயத்ரீ சந்தஸ் என்று படித்திருந்தபோதிலும் இந்த மந்திரத்திற்குச் சந்தஸ்ஸு இல்லை. **ச2ந்த3: பாத3ப3த்3த4:"** [பாதங்களால் பிணைக்கப்பட்டது சந்தஸ்] என்று சௌனகராலும் **" தேஷாம் ருக் யத்ரார்த்த2வஶேந பாத3வ்யவஸ்த2ா "** [அவைகளுள் எதில் அர்த்தவசத்தினால் பாதப்பிரிவு ஏற்பட்டிருக்கிறதோ அதுவே ருக்] என்று பூர்வமீமாம்ஸையிலும் சொல்லப்பட்ட லக்ஷணம் இங்கு இல்லையன்றோ. காயத்ரீசந்தஸ்ஸுடைய சில லக்ஷணங்கள் இங்கு காணப்படுவதால் இங்கு "தேவீ காயத்ரீ சந்த:" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(ஸூர்யஶ்ச) இந்த ஸூர்யாதிசப்தங்கள் அப்பெயர்களால் ப்ரஸித்தரான தேவதைகளைச் சொல்லி, அவர்களுக்கு அந்தர்யாமியான பகவானையும் உணர்த்துகின்றன. பாப நிவர்த்தனமாகிற பலனைப் பரமாத்மாவையொழிந்த அந்த தேவதைகளால் அளிக்கமுடியாதன்றோ. " **மயைவ விஹிதாந் ஹி தாந்** " என்றன்றோ கீதாசாரியனும் அருளினான். (ஸூர்யஶ்ச மந்யுஶ்ச) ஸூர்யனும் மந்யுவும். இங்கு மந்யு ஶப்தத்தினால் சொல்லப்படுமவன் இந்திரனே. இந்த சப்தத்திற்கு (எல்லா தேவதைகளாலும்) பஹுமானம் செய்யத் தகுந்தவன் என்றாவது மனத்தினால் தியானம் செய்யத் தக்கவன் என்றாவது பொருள் கொள்ளலாம். இப்பொருளையுடைய தேவதை இந்திரனேயாயிருக்கவேண்டுமாகையாலும், வேதத்திலும், ' **மந்யுரிந்த்3ரோ மந்யுரேவாஸ தே3வ:** " [மந்யுவாவது இந்திரன்; அந்த தேவன் மந்யுவாகவே (பஹுமானம் செய்யப்படுபவனாகவே) இருந்தானன்றோ.] என்று இந்த சப்தமும்.

" **யஶ்ஶூரோ ப4வ்யோ யஶ்ச பீ4ருபி4ர்**
**யோத4ாவத்4பி4ரபி4பூ4யதே**
**யஶ்ச ஜிக்3யுபி4: இந்த்3ரம் யம் விஶ்வா பு4வநாநி ஸந்த3து4ர்**
**மருத்3வந்தம் ஸக்2யாய ஹவாமஹே யதி3ந்த்3ர**
**ப்ராக3வாது3த3ந்யசா–**
**ஹூயஸே ந்ருபி4: ஆயாஹி தூ3யமாஶுபி4:** "

[எவன் சூரனோ, எவன் பயந்தோடும் எதிரிகளை ஜயிக்கிறானோ, எவன் ஜயசாலிகளால் தோல்வியடைகிறானோ, இந்த எல்லா ஜனங்களும் எந்த இந்திரனுடன் சேருகிறார்களோ, அப்படிப்பட்ட இந்திரனுடன் நட்புகொள்ள நானும் யாகம் செய்கிறேன். இந்திரனே! கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலுமுள்ள மனிதர்களால் கூப்பிடப்படுகிறாய். ஆயினும், சீக்கிரமாக இவ்விடம் வரவேண்டும்.] என்று இந்த சப்தத்தின் அர்த்தமும் இந்திரன் விஷயமாகப் படிக்கப்பட்டன. 'ஶதமந்யு:' என்பது இந்திரனுடையதோர் நாமம். அதின்



ஏகதே3ஶமாகையாலே மந்யுஶப்தம் இந்திரனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (மந்யுபதயஶ்ச) மந்யுவாகிற இந்திரனைப் பதியாகவுடைய மற்ற தேவதைகளும், (ஸூர்யஶ்ச........ மந்யுபதயஶ்ச) ஸூர்யனுக்கும், இந்திரனுக்கும், மற்ற தேவதைகளுக்கும் அந்தராத்மாவான பரமாத்மா என்றபடி. (மா) என்னை; வர்ணாஶ்ரமாசாரத்தை உடையவனான என்னை. (மந்யு க்ருதேப்4ய: பாபேப்4யோ ரக்ஷந்தாம்) மந்யுவினால் ஏற்பட்ட பாபங்களிலிருந்து காப்பாற்றட்டும். மந்யுவாவது கோபம். இங்கு க்ரோத4த்தைச் சொன்னது காமம், லோப4ம் மத3ம், மாத்ஸர்யம் என்னுமவற்றுக்கெல்லாம் உபலக்ஷணம். 'வ்யத்யயோ ப3ஹுளம்' என்னும் ப்ரமாணத்தினால் பரஸ்மை பதத்திற்கு பதிலாக 'ரக்ஷந்தாம்' என்று ஆத்மநேபதம் வந்துள்ளது. " **மந்யுர் தை3ந்யே க்ரதௌ க்ருதி** " என்று நிகண்டுவில் படிக்கப்படுவதால் 'மந்யுக்ருதேப்4ய:' என்றவிடத்தில் மந்யுஶப்தம் தை3ந்யத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். தை3ந்யமாவது, தீனனாயிருக்கை: அதாவது: மன உறுதியற்றவனாயிருக்கை. அத்தாலுண்டான அப4க்ஷ்ய ப4க்ஷணம் முதலியபாபங்களிலிருந்து ரக்ஷிக்கட்டும் என்றபடி. " **நாயமாத்மா ப3லஹீநேந லப்4ய:** " [மனோபலமற்றவனால் இப்பரமாத்மா அடையப்படமாட்டான்.] என்று வேதத்திலும் தை3ந்யம் பரமாத்மப்ராப்தி விரோதி4 என்று சொல்லப்பட்டதன்றோ.

" **காம ஏஷ க்ரோத4 ஏஷ ரஜோகு3ணஸமுத்3ப4வ: |**
**மஹாஶநோ மஹாபாப்மா வித்3த்4யேநமிஹ வைரிணம் ||** "

[ரஜோகுணத்தினாலுண்டான இந்தக்காமம் பெருந்தீனிதின்பது; இதுவே கோபமாய்ப் பரிணமித்து மஹாபாபியாய் விளங்குகிறது. இதை உனக்கு விரோதியென்றறி.] என்று காமக்ரோதாதிகளும் முமுக்ஷுவுக்கு விரோதிகள் என்பது கீதையில் கீர்த்திக்கப்பட்டது.

**''அவஶ்யமநுபே$_4$ாக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுப$_4$ாஶுப$_4$ம் ।**
**நாபு$_4$க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஶதைரபி ॥''**

*[மனிதனுல் செய்யப்படும் புண்யாபுண்ய க்ர்மங்களின் பலன் அவசியம் அனுபவிக்கப்படவேண்டியதே; கல்பகோடிசதங்களானலும், கர்மம் அநுபவிக்காமல் நசியாது ]* என்று சொல்லியிருக்கையில், பாபங்களிலிருந்து இவனை தேவதைகள் ரக்ஷிக்கையாவதென்? என்னில்: ''**யத் த்வத் ப்ரியம் தத்$_3$ஹ புண்யமபுண்யமந்யத்**'' *[எது உனக்குப் பிரியமோ அதுவே இங்கு புண்யமெனப்படுகிறது. மற்றவை பாபங்கள்.]* என்று ஆழ்வான் அருளியபடியே, அந்தந்த தேவதைகளை சரீரமாகக்கொண்ட எம்பெருமானுடைய ப்ரீதிகோபங்களே புண்யபாபங்களாகின்றன. இனி, சிற்சில பாபகர்மங்களுக்கு ப்ராயஶ்சித்தமாக ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் சிற்சில கர்மவிஶேஷங்களை அநுஷ்டித்தால் அப்பாபங்கள் போய்விடும் என்று எம்பெருமான் ஸங்கல்பித்தால் அவனை விலக்குவாரார்? இப்படிக் கொள்ளாவிடில், ப்ராயஶ்சித்தங்களை விதிக்கும் சாஸ்திரங்களும், ''**மோக்ஷயிஷ்யாமி**'' என்றாப்போலே ஸர்வபாபவிமோசனத்தைச் சொல்லும் ப்ரமாணங்களும் அர்த்தமின்றியிலேயொழியும். ''**நாபு$_4$க்தம் க்ஷீயதே கர்ம**'' என்றது ப்ராயஶ்சித்தாதி$_4$கள் செய்யப்படாத பாபவிஷயமானதாகையால், இங்கு ''பாபேப்$_4$யோ ரக்ஷந்தாம்'' ''ராத்ரிஸ்ததத$_3$வலும்பது யத்கிஞ்ச து$_3$ரிதம் மயி'' என்று பாபவிமோசனத்தைச் சொல்லக் குறையில்லை.

(பாபேப்$_4$யோ ரக்ஷந்தாம்) 'பாபங்களிலிருந்து காப்பாற்றட்டும்' என்றதால், இங்கு இனிவரவிருக்கும் பாபமே சொல்லப்படுகிறதென்று தெளிவாகிறது. பாபம் பலவகைப்பட்டது. ''**போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்**'' என்றபடியே அதைப் பூர்வாக$_4$ம் (முன் செய்யப்பட்ட பாபம்) உத்தராக$_4$ம் (பின் வரவிருக்கும் பாபம்) என்று இரு பிரிவாகப்பிரிக்கலாம். பூர்வாக$_4$மும் ஸஞ்சிதம்



என்றும் ப்ராரப்$_3$த$_4$ம் என்றும் இருவகைப்பட்டது. இன்னும் பலன்கொடுக்க ஆரம்பிக்காத பாபமலைகள் ஸஞ்சிதமெனப்படுகின்றன. பகவத்ஸங்கல்பத்தாலே பலன்கொடுக்க ஆரம்பித்தவையான, சில பாபக்குன்றுகள் ப்ராரப்$_3$த$_4$ம் (பலன் கொடுக்கத் தொடங்கியது) எனப்படுகின்றன. இவற்றில் பூர்வாக$_4$மானது பெரும்பாலும் இவன் ஸம்ஸாரியாயிருக்கையில் ஏற்பட்டது; 'அன்று நான் பிறந்திலேன்' என்கிறபடியே இவன் அஸத்ஸமமாகக்கிடந்தபோது உண்டானது. உத்தராக$_4$மோவெனில், இவனுக்கு ஞானம் பிறந்தபின்பு உண்டாவதாகையால் மிகவும் க்ரூரமானது; முமுக்ஷுவாகிற இவன் ஸ்வரூபத்திற்குச் சிறிதும் பொருந்தாதது. ஆகையால், 'எனக்கு இனி வரக்கூடிய பாபங்களிலிருந்து என்னைக் காப்பாற்றட்டும்' என்று முதன்முதலில் உத்தராக$_4$ம் வராமலிருக்கவேண்டுமென்று வேண்டுகிறான். ''உத்தரபூர்வாக$_4$யோரஶ்லேஷவிநாஶௌ'' *[(முமுக்ஷுவுக்கு), உத்தராக$_4$ம் ஒட்டாது; பூர்வாக$_4$ம் நசிக்கும்]* என்று வியாஸரும் உத்தராகத்தின் ஒட்டாமையையே முதலில் சொன்னாரன்றோ. ஞானம் பிறந்த இவனுக்குப் பாபம் பிறக்குமோ எனில்: ''**விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலன் இவை**'' என்கிறபடியே மிகவும் தண்ணியதான ஸம்ஸாரத்தில் இருக்கும் வரையில் பாபம் செய்யாமலிருக்கவே முடியாதன்றோ. ஆக, ''பாபேப்$_4$யோ ரக்ஷந்தாம்'' என்னுமத்தால் ''**யதா$_2$ புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்தே, ஏவம்விதி$_3$ பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே**'' *[எப்படித் தாமரையிலையில் தண்ணீர் ஒட்டாதோ, அப்படியே இப்பரவஸ்துவை அறிந்தவனிடம் பாபகர்மம் ஒட்டாது]* என்று சுருதியில் சொல்லப்பட்ட உத்தராக$_4$ாஶ்லேஷம் பிரார்த்திக்கப்பட்டதாயிற்று. இனி, ''யத்$_3$ ராத்ர்யா'' என்று தொடங்கி ''ராத்ரிஸ்ததத$_3$வலும்பது'' என்பது வரையில் பூர்வாக$_4$த்தில் பெரும்பாகமான ஸஞ்சிதகர்ம விநாஶத்தை வேண்டுகிறது.

''தத்₃ யதா₂ இஷீகதூலமக்₃நௌ ப்ரோதம் ப்ரதூ₃யேத।
ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ₃யந்தே ॥''

[அக்னியில் இடப்பட்ட இஷீகப்பஞ்சு எப்படிக் கொளுத் தப்படுகிறதோ, அப்படியே இவனுடைய எல்லாப் பாபங் களும் கொளுத்தப்படுகின்றன] என்று சா₂ந்தோக்₃யத்தில் போயபிழைகளின் நாசம் சொல்லப்பட்டதன்றோ. (யத் ராத்ர்யா பாபமகார்ஷம்) ராத்ரியில் என்னால் என்ன பாபம் செய்யப்பட்டதோ, இங்கு மந்த்ரபட₂ன காலத்திற்கு முன் சென்ற காலமான ராத்ரியைச் சொன்னது அநாதிகாலத் திற்கும் உபலக்ஷணம்.

(ராத்ர்யா) '' அபவர்க்கே₃ த்ருதீயா '' என்னும் விதிப்படி ஏழாம் வேற்றுமை அர்த்தத்தில் மூன்றாம் வேற்றுமை வந் துள்ளது. 'ராத்ரியில்'என்றபடி. (மநஸா) ''நின்றவா நில்லா நெஞ்சு''என்றும்,''சஞ்சலம் ஹி மந:'' [மனம் சஞ்சலமானது.] என்றும் சொல்லியபடியே ஸத்விஷயத்தில் நிலைநில்லாததாய். மற்ற விஷயங்களிலேயே மண்டிகிடக்குமதான மனத்தாலே. ''மனத்திலோர் தூய்மையில்லை '' எனப்பட்ட மனத்தாலே. (வாசா) ''வாயில் ஓர் இன்சொலில்லை சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன் வாளா'' என்று தொண்டரடிப் பொடிகளருளியபடியே பரநிந்தாதிகளிலேஊன்றிக்கிடக்கும் வாயால், ''வாயவனையல்லது வாழ்த்தாது'' என்றும், ''ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி'' என்றும், ''ஸங்கீர்த்த யேஜ்ஜக₃ந்நாத₂ம் வேத₃ம் வாபி ஸமீரயேத்'' [ஜகந்நாதனை ஸங்கீர்த்தனம் செய்யக்கடவன்; வேதத்தையாவது ஓதக் கடவன்.] என்றும்

''ஸத்யம் ப்₃ரூயாத் ப்ரியம் ப்₃ரூயாத் ந ப்₃ரூயாத் ஸத்யமப்ரியம்।
ப்ரியஞ்ச நாந்ருதம் ப்₃ரூயாத் ஏஷ த₄ர்ம: ஸநாதந: ॥

[உண்மை உரைக்கவேண்டும்; இன்சொல்லே பேசவேண்டும்; உண்மையாயினும் இனிமையற்றதைப் பேசலாகாது. இனி தாயினும் பொய் பேசக்கூடாது; இதுவே பழமையான தர்மம்.] என்றும் இருக்கவேண்டிய வாய் இவ்வுலகில் பெரும்பாலும், அஸத்விஷயங்களைக் கீர்த்தனம் செய்வதாக வும், பொய் வார்த்தைகளும் கடுஞ்சொற்களும் நிறைந்த தாகவுமே காணப்படுகிறதன்றோ. ''மனஸா வாசா'' என்று மனோவாக்காயங்களாகிற த்ரிகரணங்களில் முதலிரண்டா லும் செய்யப்பட்ட பாபங்கள் படிக்கப்பட்டன. ''ஹஸ்தாப்₄ யாம்'' என்று தொடங்கிக்காயத்தினால் (சரீரத்தினால்) செய்யப்படும் பாபங்கள் சொல்லப்படுகின்றன. (ஹஸ்தாப் யாம்) ''யௌ தத்பூஜாகரௌ கரௌ'' [எவை ஹரிபூஜை செய்கின்றனவோ, அவையே கைகள்.] என்றும், ''கை உலகம் தாயவனையல்லது தாம் தொழா'' என்றும், ''கைகளா லாரத்தொழுது தொழுதுன்னை'' என்றும், ''கடைத்தலை சீய்க்கப்பெற்றால கடுவினை களையலாமே'' என்றும் இருக்கக் கண்ட கைகளைக்கொண்டு கண்டகண்டவிடங்களிலே கை கூப்புவதும் அஸத்காரியங்களில் ஈடுபடுவதுமாயன்றோ இச்சேதனனிருப்பது. (பத்₃ப்₄யாம்) அவனுடைய ஆலயங் களுக்குச் செல்ல யோக்₃யமான கால்களைக்கொண்டு இவன் புகத்தகாத இடங்களிலன்றோ புகுவது. போய் வரும் காலங்களில் புழு முதலானவற்றை ஹிம்ஸிப்பதாலேற்படும் பாபங்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (உத₃ரேண) வயிற்றால்.

''யஜ்ஞஶிஷ்டாஶிநஸ் ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பி₃ஷை:''
[யஜ்ஞத்தில் மிகுந்ததை உண்ணும் பெரியோர்கள் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள்.] என்றும்,

''யஜ்ஞஶிஷ்டாம்ருதபு₄ஜோ யாந்தி ப்₃ரஹ்ம ஸநாதநம்''
[யஜ்ஞத்தில் மிகுந்த அமுதைப் புசிப்பவர்கள் பழமையான தான ப்ரஹ்மத்தை அடைகிறார்கள்] என்றும், ''உடுத்துக் கலத்ததுண்டு'' என்றும், ''த்வதீ₃ய பு₄க்தோஜ்ஜி₂தஶேஷ போ₄ஜிநா'' [நீ உண்டு கைவிட்டதைப் புசிக்கும் விஷ்வக் ஸேனரால்] என்றும் சொல்லப்பட்ட லக்ஷணங்களற்ற

வயிறால். சாஸ்திரங்களில் தடுக்கப்பட்ட உள்ளிப்பூண்டு எச்சில் முதலியவற்றை உண்ணும் வயிறால் என்றும் பொருள் கொள்ளலாம். (ஶிஶ்நா) ஆண்குறியினால். 'ஶிஶ்நேந' என்பது சா2ந்தஸமாகையால் 'ஶிஶ்நா" என்று கிடக்கிறது. வைஷ்ணவஸங்கதி விருத்3தி4ஹேதுவானது என்றிருக்கையன்றிக்கே, தனக்கு ஆநந்த3ஹேது என்றிருக்கை இதனால் ஏற்படும் பாபம். அன்றிக்கே, 'புணரத்தகாத ஸ்த்ரீயைப் புணருவதில் ஆசையை உடையதாயும், தன் பத்னியிடத்தில் ருதுகாலத்தில் புணர்வது முதலியதில்லாததுமாகிய ஶிஶ்நத்தினால்' என்றும் பொருள் கொள்வர். இங்கு சில இந்திரியங்களைப் படித்தது கண், காது முதலான ஸகலேந்திரியங்களுக்கும் உபலக்ஷணம்.

"யது3பஸ்த2க்ருதம் பாபம் பத்3ப்4யாம் வா யத் க்ருதம் ப4வேத்|
பா3ஹுப்4யாம் மநஸா வாசா ஶ்ரோத்ரத்வக்3
க்4ராணசக்ஷுஷா ||"

[உபஸ்தத்தினாலும், கால்களாலும், கைகளாலும், காது, தோல், மூக்கு, கண் ஆகியவற்றாலும் எந்தப் பாபங்கள் செய்யப்பட்டனவோ........] என்று போ3தா4யனராலும்,

"ஸர்வாப4க்ஷ்யப4க்ஷணமபேயபாநமயாஜ்யயாஜநமஸத்ப்ரதிக்3ரஹணம் பரதா3ராபி4மர்ஶநம் பாத்3ரவ்யாபஹரணம் ப்ராணிஹிம்ஸநம் சேதி ஶாரீராணி| வாக்பாருஷ்யம் அந்ருதம் விவாத3: ஶ்ருதிவிக்ரயஶ்சேதி வாசிகாநி| பரோபதாபநம் பராபி4த்3ரோஹ: க்ரோத4லோப4மோஹாஹங்காராஶ்சேதி மாநஸாநி"

[புசிக்கத்தகாத ஸகலவஸ்துக்களையும் புசித்தல். குடிக்கத்தகாதவற்றையெல்லாம் குடித்தல். யாகம் செய்விக்கத்தகாதவனுக்கு யாகம் செய்வித்தல், அஸத்துக்களிடமிருந்து தானம் வாங்குதல். பரஸ்த்ரீகளைப் புணர்தல். பிறர் பொருளை அபஹரித்தல், ஜீவராசிகளை ஹிம்ஸித்தல் ஆகிய இவை சரீரத்தினால் ஏற்படும் பாபங்கள்; கொடுஞ்சொற்களைப்



பேசுதல், பொய்யுரைத்தல், விவாதம் செய்தல், வேதத்தை விலைக்கு விற்பது ஆகிய இவை வாக்கினால் ஏற்படும் பாபங்கள்; பிறருக்குத் தீங்கு நினைத்தல், பிறருக்கு த்3ரோஹம் செய்தல், கோபம், பேராசை, மோஹம், அஹங்காரம் ஆகிய இவைகள் மனஸ்ஸினால் ஏற்படும் பாபங்கள்,] என்று ஹாரீதராலும்,

"கோவாய் ஐவர் என் மெய் குடியேறிக்
கூறை சோறிவை தாவென்று குமைத்துப்
போகார் நான் அவரைப் பொறுக்ககிலேன்
புனிதா! புட்கொடியாய்! நெடுமாலே!
தீவாய் நாகணையில் துயில்வானே!
திருமாலே! இனிச் செய்வதொன்றறியேன்" என்றும்,

"பொறுத்துக் கொண்டிருந்தால் பொறுக்கொண்ணாப்
போகமே நுகர்வான்புகுந்து ஐவர்
அறுத்துத் தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்" என்றும்,

"ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்
பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ?" என்றும்

ஆழ்வார்களும் இவ்விந்திரியங்களால் ஏற்படும் ப்ரப3லபாபங்களையும் பொறுக்கவொண்ணாத் துன்பத்தையும் பேசினார்கள். (யத் ராத்ர்யா பாபமகார்ஷம்........ ராத்ரிஸ்தத3வலும்பது) ராத்ரியில் நான் செய்த பாபங்களை ராத்திரிக்கு நிர்வாஹகனான பகவான் போக்கடிக்கட்டும். "கங்குலைப் பகலைச் சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே" என்று திருமங்கையாழ்வாரும் எம்பெருமானை இரவென்றும் பகலென்றும் நிர்தேசித்தாரன்றோ. "ராயந்தே த்ராயந்தே அநேந (வஸ்த்வந்தராணி) இதி ராத்ரி:" [இவனால் (மற்ற வஸ்துக்கள்) புருஷார்த்தங்களை அளிக்கப்படுவதாலும் காப்பற்றப்படுவதாலும், இவன் ராத்ரியெனப்படுகிறான்.] என்பது வ்யுத்பத்தி. "ரா-தா3நே" "த்ரைங்-ரக்ஷணே" என்னும் இருதாதுக்களிலிருந்து உண்டான இந்த ராத்ரி

சப்தம் ஸகலபுருஷார்த்த$_2$ங்களையும், அளிப்பவனும், ஸர்வ வஸ்துக்களுக்கும் நிருபாதி$_4$கமான ரக்ஷகனுமான இவனையே குறிக்கின்றது. "த$_4$ர்மார்த்த$_2$ காம மோக்ஷாக்$_2$யா: புருஷார்த்த$_2$ா: உத$_3$ாஹ்ருதா:। இத$_3$ம் சதுஷ்டயம் யஸ்மாத்" [த$_4$ர்மார்த்த$_2$ காமமோக்ஷங்களாகிய இந்நான்கும் புருஷனால் விரும்பத்தக்க புருஷார்த்தங்களெனப்படுகின்றன: இந்நான்கும் எவனிடமிருந்து கிடைக்கின்றனவோ……] "ஸகலப$_2$லப்ரதே$_3$ா ஹி விஷ்ணு:" [விஷ்ணுவானவன் எல்லாப் பலன்களையும் அளிப்பவன்.]

"நாடும் நகரமும் நன்குடன் காண நலனிடையூர்தி பண்ணி
வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்கும் தரும் ஒரு நாயகமே"

"ய ஆத்மதா$_3$ ப$_3$லதா$_3$:" [எவன் (தன்னடியார்க்கு) தன்னையே அளித்துத் தன்னை அனுபவிக்கத்தகுந்த பலத்தையும் கொடுக்கிறானோ] என்று இவனுடைய ஸகல ப$_2$ல ப்ரத$_3$த்வமும், "காக்கும் இயல்வினன் கண்ணபெருமான்" "ந ஹி பாலந ஸாமர்த்$_2$யம் ருதே ஸர்வேஸ்வரம் ஹரிம். ஸ்தி$_2$தௌ ஸ்தி$_2$தம்" [ரக்ஷணத்தில் நிலை நின்ற ஸர்வேஸ்வரனான ஹரியைத் தவிர வேறொருவனிடம் ரக்ஷணஸாமர்த்$_2$யம் கிடையாது.] என்று இவனுடைய ஸர்வரக்ஷகத்வமும் கீர்த்திக்கப்பட்டனவன்றோ. ஆக, இவ்வளவால் உத்தராக$_4$ம் ஒட்டாமலிருக்கவேண்டுமென்றும், பூர்வாக$_4$த்தில் பெரும் பாகமான ஸஞ்சித கர்மம் போக்கடிக்கப்படவேண்டும் என்றும் பிரார்த்திக்கப்பட்டதாயிற்று.

இனி, "யத் கிஞ்ச து$_3$ரிதம் மயி" என்று ப்ராரப்$_3$த$_4$கர்மத்தையும் போக்கடிக்கவேண்டும் என்று பிரார்த்திக்கப்படுகிறது. இவ்விடத்தில் சில சாஸ்த்ரார்த்தங்களை அறியவேண்டும். பகவானை அண்டியிருப்பவர்கள் பக்தர் என்றும் ப்ரபன்னர் என்றும் இருவகைப்படுவர். பக்தர்கள் பகவானும் உபாயம். அதற்கு ஸாதனமாகத் தாங்கள் பற்றியிருக்கும் பக்தியும் (அவனைப் பெற) உபாயம் என்றிருப்பார்கள்.



தங்களுடைய முயற்சியால் பகவானை ஸாதிக்க நினைத்திருப்பது இவர்களுக்குள்ள குறையாகும். இந்த தோஷம் இவர்களிடம் இருப்பதாலேயே பகவான் இவர்களுக்கு ஒரு தண்டனையை விதித்துள்ளான். அதாவது:— இவர்கள் விஷயத்தில் ஸர்வேஸ்வரன் உத்தராக$_4$த்தையும், பூர்வாக$_4$த்தில் ஸஞ்சிதகர்மங்களையும் மட்டுமே விலக்குகிறான். பலன் கொடுக்க ஆரம்பித்த ப்ராரப்தகர்மத்தை இவர்கள் எத்தனை ஜன்மமெடுத்தாகிலும் அனுபவித்தே தீரவேண்டும். தன்னையே உபாயமாக எண்ணி, மார்பிலே கைவைத்து உறங்கும்படியான ப்ரபந்நர்களுக்கோவெனில், அவர்களுடைய பிரார்த்தனைக்குத் தக்கபடி ப்ராரப்$_3$த$_4$கர்மத்தில் அநுபவித்ததுபோக மிகுந்தது முழுவதையுமாவது அல்லது அதில் பெரும்பாகத்தையாவது கழித்துவிடுகிறான். ப்ரபந்நர்களிலும் ஆர்த்தரென்றும், த்$_3$ருப்தரென்றும், இருவகையுண்டு. இவ்வுலகத்தின் தாழ்மையையும், எம்பெருமானுடைய மேன்மையையும் அநுஸந்தித்து, "கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" என்று இக்கணத்திலேயே மோக்ஷம் வேண்டும் என்று தவிப்பவர்கள் ஆர்த்தப்ரபன்னர்களாவர். இப்படிப்பட்ட த்வரையை உடைய இவர்களுக்கு எம்பெருமான் ப்ராரப்$_3$த$_4$ம் முழுவதையும் கழித்து, உடனே தன் பொன்னடிச் சேர்த்துக்கொள்ளுகிறான். த்$_3$ருப்தப்ரபந்நர்களோவெனில், இந்த ஜன்மக்கடைசியில் மோக்ஷம் கொடுத்தால் போதுமானது என்று ஆறியிருப்பவர்கள். இவர்களுக்கு ஏதச்ச$_2$ரீராரப்$_3$த$_4$த்தைத் (இந்த ஜன்மத்தில் அனுபவிக்கவேண்டிய ப்ராரப்தகர்மத்தைத்) தவிர மற்ற ப்ராரப்த கர்மங்களைப் போக்குகிறான். ஆக, இங்கு "யத் கிஞ்ச து$_3$ரிதம் மயி" என்னுமத்தால், ஆர்த்தப்ரபன்னர்கள் விஷயத்தில் ப்ராரப்$_3$த$_4$ கர்மம் முழுவதும் சொல்லப்படுகிறது, த்$_3$ருப்தப்ரபன்னர்கள் விஷயத்தில் ஏதச்ச$_2$ரீராரப்$_3$த$_4$த்தைத் தவிர மற்ற பா$_4$க$_3$த்தைச் சொல்லுகிறது. "இத$_3$மஹம் மாம்….ஜுஹோமி

ஸ்வாஹா" என்று கடைசியில் படிப்பதிலிருந்து இம் மந்திரம் ப்ரபத்தியை அநுஷ்டிப்பவனால் படிக்கப்பட வேண்டியது என்று தோற்றுகிறதன்றோ.

**"தமேவம் வித்$_3$வாநம்ருத இஹ ப$_4$வதி"**

*[அவனை இம்மாதிரி அறிபவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிறான்.]* என்று புருஷஸூக்தத்தில் பக்தி நிஷ்டனுக்கும் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமுண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறதே என்ற ஸந்தேஹம் இங்கு எழக்கூடும். இவ்விடத்தில் ஒரு ரஹஸ்யார்த்த$_2$ம் அறியக் கிடக்கிறது. அதாவது:—

**"ஜந்ம கர்ம ச மே தி$_3$வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:।**
**த்யக்த்வா தே$_3$ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந॥"**

*[என்னுடைய திவ்யமான ஜன்மத்தையும், சேஷ்டிதங்களையும் எவனொருவன் இம்மாதிரி உண்மையாக அறிகிறானோ, அவன் தன் தேஹத்தை விட்டவுடன் மறு பிறப்பை அடையமாட்டான். என்னை அடைகிறான்.]* என்று கீதையில் சொல்லியபடியே பக்திநிஷ்டனும், அவதாரரஹஸ்ய ஜ்ஞானத்தை உடையவனாயிருந்தால் அவனுக்கு மறு ஜன்மம் கிடையாது. அவன் விஷயத்தில், பகவான், த்$_3$ருப்த ப்ரபந்நவிஷயத்தில் போலவே, ப்ராரப்$_3$த$_4$த்தின் பெரும் பகுதியையும் போக்கடித்துவிடுகிறான். இப்புருஷஸூக்தத்திலும், **"ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாநஶநே அபி$_4$"** *[அதற்குப்பின் எல்லாப் பக்கத்திலும் ஜீவன் ஜட$_3$ம் இவர்களைக் குறித்து (அவதாரம் செய்வதன்மூலம்) வியாபித்தார்.]* என்று முன்னாலும். **"அஜாயமாநோ ப$_3$ஹுதா$_4$ விஜாயதே। தஸ்ய தீ$_4$ரா: பரிஜாநந்தி யோநிம்"** *[பிறப்பற்றவனாயிருந்தும் பலபடியாகப் பிறக்கிறான் (பரம புருஷன்). அவனுடைய அவதாரரஹஸ்யத்தை தீ$_4$ரர்களே நன்கு அறிகிறார்கள்.]* என்று பின்பும் அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம் அறிவிக்கப்பட்டது. **"வேதா$_3$ஹமேதம்"** என்னும்



இந்த மந்திரத்தை உபப்$_3$ரும்ஹணம் செய்த ஸ்ரீராமாயணமும் **"அஹம் வேத்$_3$மி மஹாத்மாநம் ராமம்"** என்று 'ஏதம்' என்னும் பதத்தை **'ராமம்'** என்று விவரிப்பதன்மூலம் ஏதச்ச$_2$ப்$_3$த$_3$ம் அவதாரவிஷயமானதென்று காட்டிற்று. ஆகவே, இங்கு **"அம்ருத இஹ ப$_4$வதி"** *[இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிறான்]* என்று படித்தது அவதார ரஹஸ்யஜ்ஞாநபூர்வகமாக பக்தியோகத்தை அநுஷ்டிப்பவர் விஷயமென்றதாயிற்று. இந்த பக்திநிஷ்டர் விஷயத்திலும் இங்கு **"யத் கிஞ்ச து$_3$ரிதம் மயி"** என்னும் வாக்கியம் ப்ராரப்$_3$த$_4$த்தில் ஒரு பாகத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இனி, மற்ற பக்திநிஷ்டர் விஷயத்தில் இவ்வாக்கியத்திற்கு என்ன பொருளெனில்: அவர்கள் விஷயத்தில் 'பாபேப்$_4$யோ ரக்ஷந்தாம்' என்றது உத்தராக$_4$த்தையும், "யத்$_3$ ராத்ர்யா பாபமகார்ஷம்" என்றது ராத்ரியில் மட்டும் செய்த பாபத்தையும், "யத் கிஞ்ச து$_3$ரிதம் மயி" என்பது ஸஞ்சித கர்மத்தில் மற்ற பாகங்களையும் சொல்லுவதாகக் கொள்ள வேண்டும். அவர்களுக்கு ப்ராரப்$_3$த$_4$கர்மம் அநுப$_4$வித்தே தீரவேண்டியதொன்றன்றோ. ஆக, இவ்வளவால் **"ஸர்வ பாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி"** *[எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்.]* என்று கீதையில் கண்ணனால் அருளிச் செய்யப்பட்ட பாபவிமோசனம் பிரார்த்திக்கப்பட்டதாயிற்று. இங்கு இஷ்டப்ராப்தியாகிற ப்$_3$ரஹ்மாநுப$_4$வமும், கைங்கர்யமும் பிரார்த்திக்கப்படாதொழிவானென்? எனில்:

**"யதா$_2$ ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா மலப்ரக்ஷாளநாந் மணே:।**
**ததா$_2$ ஹேயகு$_3$ணத்$_4$வம்ஸாத$_3$வபோ$_3$த$_4$ாத்$_3$யோ கு$_3$ணா:॥**
**ப்ரகாஶ்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே॥"**

*[மணியிலுள்ள அழுக்கைப் போக்கினால் எப்படி ஒளியானது தானாகவே பிரகாசிக்கின்றதோ, அப்படியே (பாபமூலமான) ஹேயகுணங்கள் நீங்கினால் ஜ்ஞானாதிகுணங்கள் தன்னடையே பிரகாசிக்கின்றன. உண்டாக்கப்படுவதில்லை; ஆத்மாவுக்கு அவை நித்யமன்றோ.]* என்று விஷ்ணுதர்மத்தில் சொல்லிய

படியே பாபம் நீங்கினால் ப்3ரஹ்மாநுப4வம் முதலியவை தானாகவே ஏற்படுமாகையால் அவை தனியாகப் பிரார்த்திக்கப்படவில்லை. சரமஸ்லோகத்திலும் இப்படியேயன்றோ இருப்பது.

அடுத்தபடியாக, "ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ" [எல்லா தர்மங்களையும் வாஸனையுடன் விட்டு என்னையே சரணமடை] என்று பகவானால் உபதேசிக்கப்பட்ட ஆத்மஸமர்ப்பணம் செய்யப்படுகிறது. (இத3ம் மாம்) 'இமம் மாம்' என்றபடி; இந்த என்னை; பகவத் ஸம்பந்தத்தாலே ஒரு வஸ்துவென்று எண்ணலாம்படியிருக்கிற என்னை. நான் எப்படிப்பட்ட ஸ்வரூபஸ்வபா4வங்களுடன் இருக்கிறேனோ அப்படியிருந்துகொண்டே என்னை ஸமர்ப்பிக்கிறேன் என்றும் பொருள்கொள்ளலாம். அதாவது: ஆத்மாவின் ஸ்வரூபத்தைப்பற்றி விசாரிக்கையில், தேஹமே ஆத்மா என்றும், இந்த்ரியமே ஆத்மா என்றும், மனஸ்ஸே ஆத்மா என்றும், ப்ராணனே ஆத்மா என்றும், புத்தியே ஆத்மா என்றும், பலர் பலவிதமாகச் சொல்லுவர். வேதாந்திகளோவெனில் இவையெல்லாவற்றைக்காட்டிலும்மேலானதாய், ஜ்ஞாநாநந்த3 லக்ஷணமாய் ப4க3வச்சே2ஷமானதானதொரு வஸ்து ஆத்மா என்பர்; ஆத்மாவின் ஸ்வபா4வத்தைப்பற்றி விசாரம் செய்யும் போது, அணுவென்றும், விபு4வென்றும், சரீரபரிமாணனென்றும், நித்யனென்றும், அநித்யனென்றும், ஜ்ஞாதாவென்றும், ஜ்ஞானமாத்திரமே என்றும், பலவிதமான அபிப்ராயங்களுண்டு. இவற்றைப் பற்றி நான் இப்போது ஆலோசிக்கப் போவதில்லை. நான் யாதொருபடியாயிருக்கிறேனோ, அப்படியிருந்துகொண்டே இந்த ஆத்மாவை ஸமர்ப்பிக்கிறேன் என்றபடி. "யோऽஹமஸ்மி ஸ ஸந் யஜே" [நான் எவ்விதமாயிருக்கிறேனோ அப்படியிருந்துகொண்டே சரணமடைகிறேன்.] என்று சுருதியிலும்,

"வபுராதி3ஷு யோऽபி கோऽபி வா
கு3ணதோऽஸாநி யதா2 தத2ாவித4: |



தத3யம் தவ பாத3பத்3மயோ:
அஹமத்3யைவ மயா ஸமர்ப்பித: ||

[சரீரம் முதலியவைகளுள் ஏதேனுமொன்றாகவும், ஸ்வபா4வத்தினால் ஏதேனும் ஒருபடிப்பட்டவனாகவும் இருக்கக்கடவேன். (அவைகளை நான் இப்போது ஆராயவேண்டியதில்லை.) ஆகையால், இந்த நான் உன்னுடைய இரு திருவடித் தாமரைகளிலும் இந்த க்ஷணத்திலேயே என்னால் ஸமர்ப்பிக்கப்பட்டேன்.] என்று ஆளவந்தாராலும் ஆத்மஸமர்ப்பணம் செய்யும்போது இப்படி அநுஸந்திக்கப்பட்டது. வேதத்தில் "ஸ: ஸந் அஹம்" என்றும், ஆளவந்தாரால் "அயம் அஹம்" என்றும் சொல்லப்பட்டாப்போலே இங்கும் 'இத3ம் மாம்' எனப்படுவதைக் காண்க. (அஹம்) வெளிப்பொருள்களைக் (பராக3ர்த்த2ங்களைக்) காட்டிலும் வேறுபட்டவனாய், உள்ளிருந்து ப்ரத்யக்ஷமாக ப்ரகாசிக்கிற நான். அன்றிக்கே,

"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் |
ரக்ஷிஷ்யதீதி விஸ்வாஸோ கோ3ப்த்ருத்வவரணம் ததா2 ||
ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே ஷட்3வித4ா ஶரணாக3தி: ||"

[(பகவத்பாகவதர்களுக்கு) அநுகூலராயிருப்பதாக ஸங்கல்பித்துக்கொள்வது, ப்ரதிகூலங்களை விடுவது, (உடையவனாகிய அவன் உடைமையாகிற நம்மை) ரக்ஷிப்பான் என்னும் விஸ்வாஸத்துடனிருப்பது, 'நீ எனக்கு ரக்ஷகனாகவேண்டும்' என்று அவனை வரிப்பது, தன் ஆத்மாவை அவனிடம் வைப்பது, தன்னிடம் ஒரு கைம்முதலும் இல்லாமையை அநுஸந்திப்பது என்று சரணாகதி ஆறுவகைப்பட்டது.] என்று அஹிர்பு3த்4ந்யஸம்ஹிதையில் சொல்லப்பட்ட ஸம்பா4விதஸ்வபா4வங்களையுடையவனான நான் என்றும் பொருள் கொள்ளலாம்.

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலுமினி உன்னைவிட்டொன்றும்
ஆற்றகிற்கின்றிலேன் அரவினணையம்மானே" என்றும்,

"எனதாவியுள் கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறு"
எனதாவி தந்தொழிந்தேன் இனிமீள்வதென்பதுண்டே"

என்றும்,

"குளித்து மூன்றனலையோம்பும் குறிகொளந்தணமை தன்னை
ஒளித்திட்டேன் என்கணில்லை நின்கணும் பத்தனல்லேன்
களிப்பதென்கொண்டு நம்பீ கடல்வண்ணா கதறுகின்றேன்
அளித்தெனக்கருள் செய்கண்டாய் அரங்கமாநகருளானே"

என்றும்,

"ந த4ர்மநிஷ்டோ2ऽஸ்மி ந சாத்மவேதீ3
ந ப4க்திமாம்ஸ்த்வச் சரணாரவிந்தே3 ।
அகிஞ்சநோऽநந்யக3தி: ஶரண்ய
த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே ||

*[சரணமடையத்தகுந்த எம்பிரானே! (அடியேன்) கர்ம யோகத்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஆத்மஜ்ஞானமும் உடையேனல்லேன்; உன் திருவடித்தாமரைகளில் பக்தியை உடையவனல்லேன்; ஒரு உபாயமுமற்றவனும், வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித் தாமரைகளை சரணமடைகிறேன்.]* என்று நம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் சரணம்பற்றும் ஸ்தலங்களில் இந்த ஆறு ஸ்வப4ாவங்களையும் தங்களிடம் உள்ளனவாக அநுஸந்தித்தருளினார்களன்றோ.

*(அம்ருதயோநௌ)* மோக்ஷத்திற்குக் காரணபூ4தனாகிற பகவானிடத்தில்; மோக்ஷத்திற்கு நிரபேக்ஷோபாய பூ4தனான பகவானிருக்கும்போது என்னுடைய குறைவைக்கண்டு நான் கலங்கவேண்டியதில்லை என்கிறான். "அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து" என்று தங்கள் குறைவைச் சொன்னவுடன், "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்று அவனுடைய நிறைவைச்சொன்னாற்போலே. "இத3மஹம் மாம்" என்று தன் தாழ்மையை அநுஸந்தித்தவுடன் "அம்ருதயோநௌ" என்று தொடங்கி அவன் மேன்மையை



அநுஸந்திக்கிறான். *(அம்ருதயோநௌ)* மோக்ஷத்தைத் தருபவனிடம்; "அம்ருதம் ப்3ரஹ்ம" என்றவிடத்தில் எடுத்த "**உதாம்ருதத்வஸ்யேஶாந:**" முதலான ப்ரமாணங்களை இங்கும் படிப்பது. *(அம்ருதயோநௌ)* பிறப்பிறப்பு முதலியன அற்றவர்களான நித்யமுக்தர்களுக்கும் முதல்வனான பகவானிடத்தில் என்றும் பொருள் கொள்ளலாம். "**வானவராதியென்கோ?**" என்றார் நம்மாழ்வாரும்.

*(ஸூர்யே)* "**(ப்ராணிந:) ஸுஷ்டு2 (கர்மஸு) ஈரயதி இதி ஸூர்ய:**" *[(ப்ராணிகளை) நன்றாகத் (தங்கள் தங்கள் காரியங்களைச் செய்யும்படி) தூண்டுகிறானாகையால் ஸூர்யன் எனப்படுகிறான்.]* என்கிறபடியே ஸூர்யசப்தம் இவ்விடத்தில் பரமாத்மாவைக்குறிக்கிறது. "**அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா**" *[ஸர்வாந்தர்யாமியான பகவான் எல்லாச் சேதனரையும் உள்நுழைந்து நியமிக்கிறான்.]* என்றும், "**ஏஷ ஏவ ஸாது4 கர்ம காரயதி । தம் யமேப்4யோ லோகேப்4யோ உந்நிநீஷதி । ஏஷ ஏவாஸாது4 கர்ம காரயதி । தம் யமேப்4யோ லோகேப்4யோ அதோ4 நிநீஷதி ||**" *[எவனொருவனை இப்பரமபுருஷன் இவ்வுலகங்களிலிருந்து மேலுலகத்திற்குக் கொண்டு செல்ல விரும்புகிறானோ, அவனை இவனே நற்காரியங்களைச் செய்விக்கிறான். எவனொருவனை இப்பரமன் கீழே தள்ள விரும்புகிறானோ, அவனை இவனே கெட்ட காரியங்களைச் செய்விக்கிறான்.]* என்று வேதத்திலும் பரமாத்மாவினுடைய இப்பெருமை படிக்கப்பட்டது. அன்றிக்கே, "**ஸூதிஹேதுத்வாத் ஸூர்ய:**" என்கிறபடியே ஸர்வஸ்ரஷ்டாவாகையால் ஸூர்யனாகிறான். அன்றிக்கே, யஜ்ஞம், தானம், தபஸ் முதலான கர்மங்களால் நன்றாக ஆராதிக்கப்படுபவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

"**அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ4க்தா ச ப்ரபு4ரேவ ச**" *[நானே எல்லா யஜ்ஞங்களுக்கும் போக்தா; அவைகளுக்குப் பலத்தையளிப்பவனும் நானே.]* என்று கீதையிலும்,

"ஸர்வே யஜ்ஞாஶ்ச க்ருஷ்ண:" என்று பாரதத்திலும் இவ்வர்த்தம் அச்சுதனிடத்தில் அறிவிக்கப்பட்டது. இங்கு அம்ருதயோநியாகப் படிக்கப்படும் ஸூர்யன் ஸம்ஸாரியான ஆதித்யனல்லன்; அச்யுதப$_4$ானுவே இங்கு ஸூர்யஶப்தவாச்யனாகிறான். அன்றிக்கே, ஸூர்யனுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

(ஜ்யோதிஷி) சோதியுருவனான பரமாத்மாவிடத்தில், "ஓமாபோஜ்யோதி:" என்றவிடத்திலும் "ஜ்யோதீம்ஷ்யாப:" என்றவிடத்திலும் எடுக்கப்பட்ட, "நாராயண பரோ ஜ்யோதி:" முதலான ப்ரமாணங்களை இங்கும் படிப்பது. (அம்ருதயோநௌ ...ஜ்யோதிஷி ஜுஹோமி) இப்படிப்பட்ட பெருமைகளையுடைய பரமபுருஷனாகிற அக்னியில் என்னையே நான் ஹோமம் செய்துகொள்ளுகிறேன். இம்மந்திரத்தின் பொருள் "அஹமேவாஹம் மாம் ஜுஹோமி ஸ்வாஹா" என்று வேறொரு வேதமந்திரத்திலும்.

"எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக் கைம்மாறு
எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே"

என்று தமிழ்மறையிலும் தெரிவிக்கப்பட்டது. இப்படித் தன்னையே தான் ஹோமம் செய்து பெரும்பலன்களைப் பெற்றார்களென்பது.

"மஹாதே$_3$வ: ஸர்வமேதே$_4$ மஹாத்மா
ஹுத்வாத்மாநம் தே$_3$வதே$_3$வோ ப$_3$பூ$_4$வ"

[மஹாத்மாவான 'மஹாதேவன் ஸர்வமேதயாகத்தில் தன்னையே ஹோமம் செய்து தேவதேவனானார்.] என்று பாரதத்திலும் படிக்கப்பட்டது. நிற்க; பகவானுடையதேயான இவ்வாத்மஸ்துவை இவன் தன்னுடைய பொருளைப் போலே பகவானிடம் ஸமர்ப்பிப்பதென்பது எப்படிப் பொருந்தும்? எனில்: ராஜாவினுடைய பொருளை ரக்ஷித்து வைத்திருக்கும் ஒருவன் உரிய காலத்தில் அதை ராஜாவிடம்



ஸமர்ப்பிப்பதுபோல் இவ்விடத்திலும் பொருந்தும். மேலும், அவனுடையதான வஸ்துவை அவனுக்குக் கொடுப்பதில் சிறிது அநுபபத்தியுள்ளது என்று அறிந்தே முற்கூறியவாறு ஆத்மஸமர்ப்பணம் செய்த ஆழ்வாரும், ஆளவந்தாரும்;

"எனதாவியாவியும் நீ பொழிலேழுமுண்ட எந்தாய்!
எனதாவியார்? யானார்? தந்த நீ கொண்டாக்கினையே"

என்றும்,

"மம நாத$_2$ யத$_3$ஸ்தி யோऽஸ்ம்யஹம்
ஸகலம் தத்$_3$தி$_4$ தவைவ மாத$_4$வ।
நிகி$_2$லஸ்வமிதி ப்ரபு$_3$த்$_3$த$_4$தீ$_4$:
அத$_2$வா கிந்நு ஸமர்ப்பயாமி தே॥"

[எம்பிரானே! யானும், என்னுடைமையும் ஆகிய எல்லாம் உன்னுடையதேயன்றோ. எல்லாம் உன்னுடையது என்று அறிந்த நான் உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன்?] என்றும் அவ்வாத்ம ஸமர்ப்பணத்தினாலேற்பட்ட தோஷத்தையும் க்ஷமிக்கும்படி வேண்டினார்கள். ஸம்ஸாரத்திற்கு பயந்து ஆத்மஸமர்ப்பணம் செய்கையும், அதிலுள்ள அநுபபத்தியைக் கண்டு அதற்கு அநுஶயிக்கையும் யாவதாத்மபாவி முமுக்ஷுவுக்கு அவச்யாபேக்ஷிதம் என்று ஆசார்யச்ரேஷ்டர்கள் அறுதியிட்டிருக்கிறார்கள். (ஸ்வாஹா) (என்னை) ஸ்வம்மாக—(அதாவது உடைமையாக)—வஹித்துக்கொள்ளும் என்றபடி. பஹ்வ்ருசஸம்ஹிதையில் "காமமூர்ச்சி$_2$தா" என்றிருக்கவேண்டிய பதம், "காமமூதா" என்று இடைக் குறையாயிருப்பது போலவும், தமிழ்மறையிலும் "ஒண் சங்குகதைவாள்" என்பதை "ஒண்சங்கதைவாள்" என்று படித்தாப்போலவும் இங்கும் நடுவில் வகாரத்திற்கு லோபம் வந்துள்ளது. (ஸ்வாஹா) ஸு—நன்றாக, வா—நிர்பந்தித்து, ஆஹூதி:—கூப்பிடுதல் என்றும் பொருள் கொள்ளலாம். "யத$_3$ாஹுதிர் தே$_3$வாந் யஜமாநாயாஹ்வயதி தத$_3$ாஹுதீ

நாமாஹூதித்வம்” [ஆஹூதியானது தேவர்களை யஜமானனுக்காகக் கூப்பிடுகிறதாகையால் ஆஹூதியெனப்படுகிறது.] என்று பஹ்வ்ருசப்ராஹ்மணத்திலும் சொல்லப்பட்டது. இத்தால்

“கூராராழி வெண்சங்கேந்திக்கொடியேன் பால்
வாராய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே”

என்ற நம்மாழ்வாரைப்போலே எம்பெருமானைக்காணவேணுமென்று கூப்பிடுதலே ஸ்வாஹாஶப்தார்த்தம் என்றதாகிறது. அன்றிக்கே ‘ஸ்வாஹா’ என்பது தானத்தைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். அப்போது ‘ஜூஹோமி’ என்பதை அனுஷ்டானபர்யந்தமாக்கிக் காட்டுகிறது. இது காலை வேளையில் அநுஸந்திக்கவேண்டிய மந்திரம். இம்மந்திரத்தைப் படித்துச் சுளகிதமாயுள்ள கையிலிருக்கும் ஜலத்தைப் பருகவேண்டும். இனி மத்யாஹ்ன வேளையில் படிக்க வேண்டிய ஜ்லப்ராஶன மந்திரத்தை விவரிப்போம்.

आपः पुनन्तु पृथिवीं। पृथिवी पूता पुनातु मां। पुनन्तु ब्रह्मणस्पतिः।
ब्रह्मपूता पुनातु मां। यदुच्छिष्टमभोज्यं। यद्वा दुश्चरितं मम।
सर्वं पुनन्तु मामापः। असतां च प्रतिग्रहँ स्वाहा॥

ஆப: புநந்து ப்ருதி$_2$வீம்। ப்ருதி$_2$வீ பூதா புநாது மாம்।
புநந்து ப்$_3$ரஹ்மணஸ்பதி:। ப்$_3$ரஹ்மபூதா புநாது மாம்।
யது$_3$ச்சி$_2$ஷ்டமபோ$_4$ஜ்யம்। யத்$_3$வா து$_3$ஶ்சரிதம் மம।
ஸர்வம் புநந்து மாமாப:। அஸதாம் ச ப்ரதிக்$_3$ரஹம் ஸ்வாஹா ॥

‘ஆப: புநந்து’ என்ற இம்மந்திரத்திற்கு ஜலங்கள் ரிஷிகள்; அனுஷ்டுப் சந்தஸ்ஸு; ப்ரஹ்மணஸ்பதி தேவதை. ஜலத்தை அருந்துவதில் விநியோகம்.

(ஆப:) எம்பெருமானுக்கு இருப்பிடமாய் இப்போது என் கையில் இருப்பவையான ஜலங்கள். (ப்ருதிவீம் புநந்து) ப்ருதிவீ முதலான பஞ்சபூதங்களாலான இந்த



என் தேஹத்தைப் பரிசுத்தப்படுத்தட்டும். இங்கு ப்ருதிவீ என்ற பதம் பஞ்சபூதங்களுக்கும் உபலக்ஷணமாய், அவற்றாலான தேஹத்தைக்காட்டுகிறது. தேஹத்தில் ப்ருதிவீ பாகமே ப்ரதானமாயிருப்பதால் ப்ருதிவீ என்று தேஹம் சொல்லப்படுகிறது (ப்ருதிவீ) என்னுடைய இந்த சரீரமானது (பூதா) ஜலத்தாலே பரிசுத்தப்படுத்தப் பட்டதாய்க்கொண்டு. (மாம் புநாது) என்னைப் பரிசுத்தப்படுத்தட்டும். “அபாம் பரமாத்மநோ விஶேஷாயதநத்வாத். ப்ருதி$_2$வ்யாஶ்ச அபி$_4$மதவல்லப$_4$ாத்வாத் உப$_4$யோ: பாவநத்வமுச்யதே” [ஜலம் பரமாத்மாவுக்கு விஶேஷமான இருப்பிடமானதாகையாலும். பூமியானது (அவனுக்கு) இஷ்டபத்னியாகையாலும் இரண்டுக்கும் பரிசுத்தப்படுத்தும் தன்மை சொல்லப்படுகிறது.] என்றார் நாராயணமுனிவர். (புநந்து) ‘ஆப:’ என்று சேர்த்துக்கொள்வது; ‘மாம்’ என்பது தீபதேஹளீ ந்யாயத்தாலே இரண்டு பக்கமும் அந்வயிக்கும். முன் ‘ஆப: புநந்து ப்ருதிவீம்’ என்கையாலே. ஜலம் தேஹத்தைப் பரிசுத்தப்படுத்தட்டுமென்று வேண்டிக்கொள்ளப்பட்டது. இங்கு ‘(ஆப:) மாம் புநந்து’ என்று ஜலம் என்னையும் நேராகப் பரிசுத்தப்படுத்தட்டும் என்று பிரார்த்திக்கப்படுகிறது. இங்கு ‘ஆப;’ ‘ப்ருதிவீ’ முதலான சப்தங்கள் அவற்றுக்கு அந்தர்யாமியான அநந்தனைக் குறிக்கின்றன, அவனுடைய ஸம்பந்தத்தாலேயன்றோ கங்காஜலம் முதலானவையும் பாவனங்களாகப் படிக்கப்படுகின்றன. இப்படி சரீரத்தையிட்டு அவனைச் சொன்னதில் திருப்தியுறாமல், அடுத்தபடியாக அவனை ஸாக்ஷாத்தாகவே பிரார்த்திக்கிறது “ப்ரஹ்மணஸ்பதி:ப்ரஹ்மபூதா புநாது, மாம்” என்னுமத்தாலே (ப்$_3$ரஹ்மணஸ்பதி:) ப்ரஹ்ம சப்தத்தாலே சொல்லப்பட்ட வேதத்திற்கு ஸ்வாமியாயிருப்பவன். அதை ஆதியில் ஸ்ருஷ்டிக்கையாலும். அதன் தலையிலே விளங்கும் திருவடிகளை உடையவனாயிருக்கையாலும் நிலமகள் நாயகனே வேதத்திற்குப் பதியெனத்தகுந்தவன்.

**''யோ ப்3ரஹ்மாணம் வித3த்4ாதி பூர்வம்**
**யோ வை வேத3ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை''**

*[எவனொருவன் பிரமனை முதலில் படைத்து, அவனுக்கு வேதங்களை உபதேசித்தனனோ....]* என்று வேதத்திலும் **''வேதை3ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்3ய:'' ''நாராயணபரா வேத3ா:'' ''ஸர்வே வேத3ா: க்ருஷ்ண:''** என்று இதிஹாஸ புராணங்களிலும். **''யந்மூர்த்4நி மே ஶ்ருதிஶிரஸ்ஸு ச ப4ாதி....தத் பாத3ாரவிந்த3மரவிந்த3விலோசநஸ்ய''** *[என்னுடைய தலைகளிலும், வேதங்களின் தலைகளிலும் விளங்கும் தாமரைக்கண்ணனின் திருவடித்தாமரைகளைத் துதிக்கிறேன்.]* என்று ஆளவந்தாராலும் இவ்விஷயம் கீர்த்திக்கப்பட்டதன்றோ. அன்றிக்கே 'ப்3ரஹ்மணஸ்பதி:' என்கையாலே சதுர்முகப்ரஹ்மாவுக்குப் பதியான நாராயணன் என்று சொல்லுவதாகவும் கொள்ளலாம். **''யோ ப்3ரஹ்மாணம் வித3த்4ாதி பூர்வம்'' ''நாராயணாத் ப்3ரஹ்மா ஜாயதே'' ''நான்முகனை நாராயணன் படைத்தான்''** முதலானவிடங்கள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன. (ப்3ரஹ்மபூதா) வேதங்களுக்கு ஏற்படும் தோஷங்களை நீக்கி அவற்றைப் பரிசுத்தப்படுத்துமவன். 'பாவிதா' என்றிருக்க வேண்டியது வேதமாகையாலே 'பூதா' என்றிருக்கிறது. அநாதியான வேதங்களுக்கு தோஷமுண்டோவெனில்:

**''கபாலஸ்த2ம் யத2ா தோயம் ஶ்வத்3ருதௌ ச யத2ா பய:।**
**து3ஷ்டம் ஸ்யாத் ஸ்த2ாநதோ3ஷேண வ்ருத்தஹீநே தத2ா ச்ருதம்॥''**

*[மண்டையோட்டிலிருக்கிற ஜலத்தைப்போலவும், நாய்த்தோலிலுள்ள பாலைப்போலவும், நல்லொழுக்கமற்றவனிடமுள்ள வேதமும் ஸ்தான தோஷத்தினால் தோஷமுடையதாகிறது.]* என்கிறபடியே அத்யயனம் செய்பவனுடைய தோஷத்தினால் வேதத்துக்கு வருவதொரு தோஷமுண்டு. ப்ரளயகாலத்தில் தன் திருவயிற்றிலே வைத்து அந்த தோஷத்தைப் போக்குகிறபடியால் 'ப்ரஹ்மபூதா' எனப்படுகிறான் பத்மநாபன். (ப்ரஹ்மணஸ்பதி: ப்ரஹ்மபூதா புநாது மாம்)



வேதத்துக்கு ஸ்வாமியாகவும், அதைப்பரிசுத்தப்படுத்துமவனாகவுமுள்ள பகவான் என்னைப்பவித்திரனாக்கட்டும். அன்றிக்கே, ப்ரஹ்மசப்தத்தாலே சேதனர்களைச் சொல்லுவதும் உண்டாகையாலே 'சேதனர்க்கு ஸ்வாமியும், அவர்களைப் பரிசுத்தப்படுத்துமவனுமான ஸர்வேச்வரன் (அவர்களிலே ஒருவனான) என்னையும் பரிசுத்தனாக்கட்டும்' என்றும் பொருள் கொள்ளலாம். '**ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி** முதலானவிடங்களில் ஸர்வேஶ்வரனே ஜீவனுடைய ஸர்வபாபங்களையும் போக்கி அவனைப் பரிசுத்தப்படுத்துகிறான் என்னுமர்த்தம் சொல்லப்பட்டதன்றோ. அன்றிக்கே, மற்றொருவகையாகவும் பொருள் கொள்ளலாம்: (புநந்து ப்3ரஹ்மணஸ்பதி:) ப்ரஹ்மசப்தத்தினால் சொல்லப்படும் வேதத்திற்கு ஸாரமான ப்ரணவத்தால் சொல்லப்படுமவனான பகவான் என்தேஹத்தைப் பரிசுத்தப்படுத்தட்டும்; 'புநந்து' என்பது சா2ந்தஸம். 'ப்ருதி2வீம்' என்பதைக் கூட்டிக்கொள்ளவேண்டும் (ப்3ரஹ்மபூதா புநாது மாம்) ப்ரஹ்மசப்தவாச்யனான நாராயணனால் பரிசுத்தியடைந்த என் தேஹம் என்னைப் பரிசுத்தனாக்கட்டும். அன்றிக்கே, 'ப்3ரஹ்மத்தினால் பரிசுத்தமான ஜலங்கள் என்னை சுத்தியடையச்செய்யட்டும் என்றும் கொள்ளலாம். அப்போது 'புநாது' என்றது சா2ந்தஸம். இவ்விரண்டு வாக்கியங்களுக்கும் வேறொரு வகையாகவும் பொருள் கூறலாம்: (புநந்து ப்3ரஹ்மணஸ்பதி:) (என்னால் அத்யயனம் செய்யப்பட்ட) வேதத்திற்கு ஸ்வாமியான என் ஆசாரியனை (ஜலங்கள்) சுத்தராக்கட்டும். 'ஸுபாம் ஸுலுக்' என்னும் ஸூத்ரத்தினால் 'பதிம்' என்பது 'பதி:' என்றிருக்கிறது. (ப்3ரஹ்ம பூதா புநாது மாம்) பரிசுத்தரும், ப்3ராஹ்மணோத்தமருமான அவ்வாசாரியர் என்னை சுத்தனாக்கட்டும். ப்ரஹ்மத்தையும், வேதத்தையும் அறிந்தவராகையால் ஆசாரியன் 'ப்3ரஹ்ம' எனப்படுகிறார். **''ஆசார்யோ வை ப்3ரஹ்ம''** என்றார் போதாயனரும். **''கு3ருவே பரம் ப்3ரஹ்ம''** என்றும் சொல்லப்பட்டது.

(யது$_3$ச்சி$_2$ஷ்டமபே$_4$ாஜ்யம்) புசிக்கத்தகாத யாதொரு உச்சிஷ்டத்தை (நான்புசித்தேனே). 'ஸர்வம் புநந்து' (அது எல்லாவற்றையும் பரிசுத்தப்படுத்தட்டும்.) என்பதோடே அந்வயம். இங்கு புசிக்கத்தகாத உச்சிஷ்டம் என்றதினால், புசிக்கத்தக்க உச்சிஷ்டங்களும் (சேஷங்களும்) உண்டென்று தோற்றுகிறது. அவையாவன:— "உடுத்துக் கலத்ததுண்டு' என்றும், "த்வதீ$_3$யபு$_4$க்தோஜ்ஜி$_4$தஶேஷபே$_4$ாஜிநா" என்றும் சொல்லப்பட்ட பகவானுடைய உச்சிஷ்டமும், "தது$_3$ச்சி$_2$ஷ்டம் ஸுபாவநம்" [பகவத்பக்தன் உண்டு மிகுந்தது மிகபரிசுத்தமானது.] என்றும் "போனகம் செய்தசேடம் தருவரேல் புனிதமன்றே' என்றும், சொல்லப்பட்ட பாகவதஶேஷமும். இங்கு 'யது$_3$ச்சி$_2$ஷ்டமபே$_4$ாஜ்யம்' என்றதால் பகவத்பாகவதர்களைத் தவிர மற்றையோருடைய உச்சிஷ்டம் சொல்லப்படுகிறது. 'யது$_3$ச்சி$_2$ஷ்டமபே$_4$ாஜ்யம்' என்றதற்குப்பிறகு 'மயா பு$_4$க்தம்' [என்னால் சாப்பிடப்பட்டதோ] என்று சேர்த்துக்கொள்ள வேண்டும். 'யது$_3$ச்சி$_2$ஷ்டம் யத$_3$பே$_4$ாஜ்யம்' என்றும் பாடமுண்டு. அப்போது, உச்சிஷ்டம் என்னும் ஸாமாந்ய சப்தம் புசிக்கத்தகாத உச்சிஷ்டத்தைக் காட்டுகிறது. 'யதபோஜ்யம்' என்றது மயிர்ச்சோறு, புழுச்சோறு முதலானவைகளைச் சொல்லுகிறது. இவ்விடத்தில் **ஸ்ரீ வேதாந்ததேசிகர்** அருளிச்செய்த ஆஹாரநியமம் என்னும் தமிழ்ப் பிரபந்தத்தை அவசியம் அனுஸந்திக்கவேண்டும். ஸ்ரீ வைஷ்ணவர்கள் விலக்கவேண்டிய ஆஹாரங்கள் எவையென்பதை அப்பிரபந்தத்தில் மிகத்தெளிவாகக்காட்டியிருக்கிறார் தூப்புல்பிள்ளை. (யத$_3$பே$_4$ாஜ்யம்) ஜாதியினாலும், ஆச்ரயத்தினாலும், காலத்தினாலும், க்ரியையினாலும், ஸம்ஸர்க்கத்தினாலும் தோஷமுடையனவாகவுள்ள எல்லா ஆஹாரங்களும்இங்கு சொல்லப்படுகின்றன. (யத்$_3$ வா து$_3$ஶ்சரிதம் மம) (என்னுடைய இந்திரியங்களைக்கொண்டு) என்னால் யாவை சிலகெட்ட காரியங்கள் செய்யப்பட்டனவோ அவற்றையும். 'வா' என்பது 'ச' [உம்] என்ற பொருளையுடையது. (அஸ



தாம்ச ப்ரதிக்$_3$ரஹம்) கெட்டவஸ்துக்களுடைய தானம் என்றும், கெட்டவர்களிடமிருந்து வாங்கிய தானம் என்றும் இரண்டு விதமாகவும் பொருள் கொள்ளலாம். இந்த அஸத்ப்ரதிக்ரஹம் கொடுக்கிறவனுக்கும், வாங்குகிறவனுக்கும் அநர்த்தத்தைக் கொடுக்கிறதென்பது

**"அத$_2$வா த்வநதீ$_4$யாந: ப்ரதிக்$_3$ரஹ பரோ த்$_3$விஜ:।**
**அம்ப$_4$ஸ்யஶ்மப்லவேநேவ ஸஹ தேநைவ மஜ்ஜதி ॥"**

[வேதாத்யயனம் செய்யாமல் தானம் வாங்குவதையே தொழிலாக உடையவனான ப்ராஹ்மணன், கல்லை ஓடமாக கொண்டு ஜலத்திலே விழுந்தவனைப்போல், கொடுத்த அவனுடன் கூடவே முழுகுகிறான்.] என்றும்,

**"த்ரிஷ்வப்யேதேஷு யத்$_3$த$_3$த்தம் விதி$_4$நாப்யார்ஜிதம் த$_4$நம்।**
**த$_3$ாதுர்ப$_4$வத்யநர்த்த$_2$ாய பரத்ராத$_3$ாதுரேவ ச ॥**
**யத$_2$ா ப்லவேநோபலேந நிமஜ்ஜத்யுத$_3$கே நர:।**
**தத$_2$ா நிமஜ்ஜதோऽத$_4$ஸ்தாத் அஜ்ஞௌ**
**த$_3$ாத்ருப்ரதீச்ச$_2$கௌ ॥"**

[இம்மூன்று துஷ்டர்களிடமும் கொடுக்கப்பட்ட தனம், முறைப்படி ஸம்பாதிக்கப்பட்டதாயிருப்பினும், கொடுப்பவனுக்கும், வாங்குமவனுக்கும் மேலுலகிலும் அநர்த்தத்தைத் தருகிறது. எப்படிக்கல்லோடத்துடன் கூடிய மனிதன் நீரில் முழுகுகிறானோ, அப்படியே அறிவிலிகளான கொடுக்கிறவனும், வாங்குகிறவனும் கீழே விழுகிறார்கள்.] என்றும் மனுவினால் சொல்லப்பட்டது.

**"வித்$_3$யாதபோவிஹீநேந ந து க்$_3$ராஹ்ய: ப்ரதிக்$_3$ரஹ:।**
**க்$_3$ருஹ்ணன் ப்ரத$_3$ாதாரமதோ$_4$ நயத்யாத்மாநமேவ ச ॥"**

[ஞானமும், அனுஷ்டானமுமற்றவன் தானம் வாங்கக்கூடாது. வாங்கினால் கொடுப்பவனையும் தன்னையும் கீழ் லோகங்களில் தள்ளுகிறான்.] என்று வேறொரு ஸ்ம்ருதியிலும் சொல்லப்பட்டது. (ஸர்வம் புநந்து மாமாப:) இவை

யெல்லாவற்றினாலும் ஏற்பட்ட பாபத்தைப்போக்கி, ஜலாந்தர்யாமியான பகவான் என்னை பரிசுத்தப்படுத்தட்டும். 'ஸ்வாஹா' என்பதின் பொருள் முன்போல்.

இனி ஸாயங்காலம் படிக்கவேண்டிய ஜலப்ராஶநமந்திரத்தை விளக்குவோம்.

अग्निश्च मा मन्युश्च मन्युपतयश्च मन्युकृतेभ्यः।
पापेभ्यो रक्षन्तां। यदह्ना पापमकार्षम्। मनसा वाचा हस्ताभ्यां।
पद्भ्यामुदरेण शिश्ना। अहस्तदवलुम्पतु यत्किञ्च दुरितं मयि।
इदमहं माममृतयोनौ सत्ये ज्योतिषि जुहोमि स्वाहा॥

அக்$_3$நிஶ்ச மா மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச மந்யுக்ருதேப்$_4$ய:।
பாபேப்$_4$யோ ரக்ஷந்தாம்। யத$_3$ஹ்நா பாபமகார்ஷம்।
மநஸா வாசா ஹஸ்தாப்$_4$யாம்। பத்$_3$ப்$_4$யாமுத$_3$ரேண ஶிஶ்நா।
அஹஸ்தத$_3$வலும்பது। யத் கிஞ்ச து$_3$ரிதம் மயி।
இத$_3$மஹம் மாம்
அம்ருதயோநௌ ஸத்யே ஜ்யோதிஷி ஜு$^{\text{ஜு}}$ஹோமி ஸ்வாஹா॥

இம்மந்திரத்திற்கு ஸூர்யன் ருஷி; காயத்ரீ ச$_2$ந்தஸ்ஸு அக்நி தேவதை. 'அக்நி' 'அஹஸ்' 'ஸத்யம்' என்னும் மூன்று பதங்களைத்தவிர மற்றவையெல்லாம் "ஸூர்யஶ்ச" என்னும் மந்திரத்தைப்போலவே பொருள் கொள்ள வேண்டும். இம்மந்திரம் அக்நியை தெய்வமாக உடையது. ஸூர்யனால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டது. ஆகையால் இதை ஸூர்யன் மறையும் தறுவாயில். அக்நிக்கு ப்ராதாந்யம் உள்ள இரவு வருவதற்கு முன் அனுஸந்திப்பது பொருத்த முடையதாகிறது. அக்நியை ருஷியாகவும், ஸூர்யனை தெய்வமாகவும்கொண்ட "ஸூர்யஶ்ச" என்னும் முன் மந்திரத்தையும், அக்நிக்கு ஒளி குறைந்து, ஸூர்யன் உதிக்கப் போகும் காலைவேளையில் அநுஸந்திப்பது பொருந்தியுள்ளது.

(அக்$_3$நிஶ்ச) 'அக' என்னும் தாது நடப்பது என்னும் பொருளை உடையதாகையால், 'அக்$_3$நி' என்னும் பதம்



'நடப்பவன்' என்னும் அர்த்தத்தையுடையது. யாகம் செய்பவனால் கொடுக்கப்படும் ஹவிர்ப$_4$ாகத்தை தேவதையிடமும், அந்த தேவதையுடைய அநுக்ரஹத்தை யாகம் செய்பவனிடமும் சென்று கொடுப்பவனாகையால் அக்நி எனப்படுகிறான். "ஹவ்யவாஹம் அரதிம் மாநுஷாணாம்" [மனிதர்களுடைய ஹவிஸ்ஸை வஹித்துச்செல்பவனும், ஓய்வில்லாமலிருப்பவனுமான அக்னியை.] என்று ஓர் வேத மந்திரத்திலும் உரைக்கப்பட்டது. 'மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச' என்பதற்கு, முன்சொல்லப்பட்ட பொருளைத்தவிர மற்றுமோர் அர்த்தமும் சொல்வதுண்டு. அதாவது:—'மந்யு' என்று கோபமும், 'மந்யுபதய:' என்று கோபத்தைத் தலைவனாகக் கொண்ட காமம், மதம், மாத்ஸர்யம் முதலான துர்க்குணங்களும் சொல்லப்படுகின்றன. இவைகள் பாபங்களிலிருந்து இச்சேதனனை ரக்ஷிக்கையாவதென்? என்னில்: காமக்ரோத$_4$ாதி$_3$களான நீங்கள் என்னிடம் ஆவிர்ப்பவிக்காமல் இருப்பதன் மூலம் என்னைப் பாபங்களிலிருந்து காப்பாற்றுங்கள் என்று பிரார்த்திப்பதாகக் கொள்ளவேண்டும். இவ்வர்த்தத்தைக் காட்டிலும், முன் காட்டப்பட்டதும், சுருதப்ரகாசிகாசாரியரால் ஆதரிக்கப்பட்டதுமான அர்த்தமே சிறந்தது. (யத் அஹ்நா பாபமகார்ஷம்.......அஹஸ்தத் அவலும்பது) பகலில் செய்த பாபத்தை, பகலுக்கு நிர்வாஹகனான பகவான் ரக்ஷிக்கட்டும். 'கங்குலைப் பகலை' என்றார் திருமங்கையாழ்வார். இங்கு பகலைச் சொன்னதினால் இது பகலின்முடிவில் அனுஸந்திக்கவேண்டிய மந்திரமென்றும், 'ஸூர்யஶ்ச' என்னும் மந்திரத்தில் இரவைச் சொன்னபடியால், அது இரவின் முடிவில் படிக்கவேண்டிய மந்திரமென்றும் தோற்றுகிறது. (ஸத்யே ஜ்யோதிஷி) ஸத்ய ஶப்தத்தினால் சொல்லப்படும் சோதியிடம். தைத்திரீய உபநிஷத்தில், "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்$_3$ரஹ்ம" என்று ஸத்யஶப்தத்தினால் சொல்லப்படுமவன் அநந்தனே, என்று காட்டி, "நாராயணபரோ ஜ்யோதி:" என்று ஜ்யோதிஶ்

ஶப்தவாச்யனும் நாராயணனே என்று நிலைநாட்டியிருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (ஸத்யே) ஸ்வரூபத்திலும், ஸ்வபா4வத்திலும் விகாரமற்றவனை பகவானிடத்தில். "ஸத்யஸ்ய ஸத்யம்" என்று புகழப்படும் பரமனிடத்தில். மற்ற விசேஷார்த்தங்களை "ஸூர்யஶ்ச" என்னும் மந்திரத்தின்படியே கண்டுகொள்வது.

அடுத்தபடியாக பின்வரும் மந்திரத்தை மூன்று வேளைகளிலும் ஜபித்து, ஜலத்தைத் தலை முதலான இடங்களில் ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும்.

**दधिक्राव्णो अकारिषं जिष्णोरश्वस्य वाजिनः। सुरभि नो मुखाकरत्। प्रण आयूँषि तारिषत्। आपो हि ष्ठा....आपो जनयथा च नः॥**

**த3தி4க்ராவ்ணோ அகார்ஷம் ஜிஷ்ணோரஶ்வஸ்ய வாஜிந:।**
**ஸுரபி4 நோ முக2ாகரத் ப்ரண ஆயூம்ஷி தாரிஷத்॥**
**ஆபோஹிஷ்டா2....ஆபோ ஜநயதா2 ச ந:॥**

'த3தி4க்ராவ்ண:' என்று தொடங்கும் இந்த மந்திரத்திற்கு வாமதேவர் ருஷி; அநுஷ்டுப் சந்தஸ்ஸு; ஜலங்கள் தேவதை என்று சில ஆசாரியர்களும், த3தி4க்ராவா தேவதை என்று சில ஆசாரியர்களும் சொல்லுவர். ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்வதில் விநியோகம். 'ஆயூம்ஷி தாரிஷத்' என்று இந்த மந்திரத்தை முடித்தவுடன், "ஆபோ ஹி ஷ்டா2" என்னும் மந்திரம் முழுவதையும் படித்து ப்ரோக்ஷித்துக்கொள்ளவேண்டும். இவ்விடத்தில் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது: இம்மந்திரத்திற்குச் சந்தஸ்ஸு அநுஷ்டுப் என்று சொல்லப்பட்டது. "**த்3வாத்ரிம்ஶத3க்ஷரா அநுஷ்டுப்**" [முப்பத்திரண்டு அக்ஷரங்களையுடையது அநுஷ்டுப்] என்ற லக்ஷணப்படி முப்பத்திரண்டு அக்ஷரங்கள் இருக்கவேண்டியிருக்க, முப்பத்தொரு அக்ஷரங்களே இம்மந்திரத்தில் இருக்கின்றனவே; இது எப்படிப் பொருந்தும் என்பது அந்த ஆக்ஷேபம். இதற்கு சுருதப்ரகாசிகா



சாரியருடைய ஸமாதானம் பின்வருமாறு:— "**ந ஹ்யேகாக்ஷரேண ச2ந்த3ாம்ஸி வியந்தி ந த்3வாப்4யாம்**" [ஒரு எழுத்தினாலாவது, இரண்டு எழுத்துக்களினாலாவது சந்தஸ்ஸுகள் மாறுகிறதில்லை.] என்று பஹ்வ்ருச மந்திரத்தில் சொல்லப்பட்டிருப்பதனாலும், "**ஏகதே3ஶவிக்ருதம் அநந்யவத்3 ப4வதி**" [ஒருபாகம் மாறியிருந்தாலும் அது வேறுபடுவதில்லை.] என்று நியாயம் இருப்பதனாலும் ஓர் அக்ஷரம் குறைந்தாலும் அநுஷ்டுப் சந்தஸ்ஸு என்னக் குறையில்லை. "**ஊநாதி4கேந ஏகேந நிச்ருத்3பூ4ரிஜௌ**" [ஓர் அக்ஷரம் குறைந்தால் நிச்ருத் என்றும், ஓர் அக்ஷரம் அதிகமானால் பூ4ரிஜம் என்றும் சொல்லப்படுகின்றன.] என்று ருக்வேத பரிபாஷையில் சொல்லப்பட்டபடியே இது 'நிச்ருத்' என்னும் வகையில் சேர்ந்ததாகிறது. மற்றும் சிலர் 'அகாரிஷம்' என்று பாடம் கொள்ளுகிறார்கள். அப்பாடத்தைக்கொள்ளும்போது முப்பத்திரண்டு அக்ஷரங்களுள்ளதால் இந்த விசாரத்திற்கு இடமில்லை. இனி, இம்மந்திரத்தின் சப்தார்த்தங்களைச்சிந்திப்போம்.

(த3தி4க்ராவ்ண:) சுருதப்ரகாசிகாசாரியர், இப்பதங்களெல்லாம் ஜலத்தைக் குறிக்கிறதென்று ஒரு பொருளுரைப்பர்: 'ஆபோஹிஷ்டா2' என்னும் மந்திரம் ஜலங்களைக் குறித்துச் சொல்லுகிறதாகையால், அத்துடன் சேர்த்துப் படிக்கப்படும் இம்மந்திரமும் ஜலத்தை நோக்கிச் சொல்லப் படுகிறது என்று சொல்வதில் ஔசித்யமுண்டு. (ததிக்ராவ்ண:) இவ்விடத்தில் 'ண்' என்னும் ஒரு எழுத்து அதி4கம். 'த3தி4க்ராவ்ண:' என்றபடி. இப்படி அதி4கமான எழுத்தைப் படிப்பது முதலானவை வேதத்திற்கே அஸாதா4ரணமாயுள்ளதொரு ஸ்வாதந்த்ர்யம். சில இடங்களில் உள்ள எழுத்தை விட்டும் ஓதும். சில இடங்களில் ஓர் எழுத்தைக் கொண்டு ஒரு பதத்தைக் காட்டும். உதாரணம்: பஹ்வ்ருசஸம்ஹிதையில், '**மஶரஶார:**' என்னும் ஒரு பதம் ராஜாவுக்கு விசேஷணமாக ஓதப்பட்டது. இதற்கு பாஷ்யம்

செய்தவர்கள் "மஶாகாநிவ ஶத்ரூந் ஶ்ருணாதி" [கொசுக்களைப்போலே சத்ருக்களைக் கொல்லுகிறான்.] என்று பொருளுரைத்தார்கள். 'ம' என்னும் எழுத்தால் மஶகத்தைச் சொல்லுகிறது. 'ஶ' என்னும் எழுத்தால் ஶத்ருவைச் சொல்லுகிறது. 'ர' என்னும் எழுத்து அதிகம். "ஶ்ரு—ஹிம்ஸாயாம்" என்கிற தாதுவிலிருந்து உண்டான 'ஶார' என்னும் பதம் ஹிம்ஸிப்பவன் என்று பொருள் படுகிறது. ஆக 'சத்ருக்களைக் கொசுவைப்போல் கொல்லும் அரசன்' என்றதாகிறது. இப்படிப் பல இடங்களுண்டு. அது போலவே இங்கும் 'ண்' அதிகம். (த$_3$தி$_4$க்ராவ்ண:) என்பது 'த$_3$தி$_4$க்ராவா' என்பதின் ஆறுவது வேற்றுமை. 'த$_3$தி$_4$க்ராவா' என்னும் சப்தம் எப்படி ஜலத்தைக் குறிக்கும் என்னில்: 'த$_3$தி$_4$ க்ரீணாதி இதி த$_3$தி$_4$க்ராவா' [தயிரை விற்பதற்கும் வாங்குவதற்கும் காரணமாயிருப்பது.] என்பது வ்யுத்பத்தி. 'டு$_3$க்ரீஞ் த்$_3$ரவ்யவிநிமயே' என்று தாதுவாகையாலே 'க்ரீணாதி' என்று கொடுக்கல் வாங்கலைச் சொல்லுகிறது. ஜலமே பசுக்களுக்கு ஆஹாரமான புல் முதலியவற்றை விருத்தியடையச்செய்வதன் மூலமும், பசுக்களால் குடிக்கப்படுவதாலும், பால், தயிர் முதலியவற்றுக்குக் காரணமாயிருந்து கொண்டு அவைகளின் விநிமயத்துக்கும் (கொடுக்கல் வாங்கலுக்கும்) காரணமாகிற தாகையால், இங்கு 'த$_3$தி$_4$க்ராவா' எனப்படுகிறது. 'த$_3$தி$_4$க்ராவா' என்னும் பதம் தயிரை விற்பவனாகிய கர்த்தாவைக் குறித்தே பெரும்பாலும் பிரயோகிக்கப்பட்டபோதிலும், தயிரைக் கொடுக்கவும் வாங்கவுமாம்படி ஆக்கிவைக்கும் உபகரணமான நீரைக் குறித்தும் பிரயோகிக்க வியாகரணசாஸ்திரப்படி இடமுண்டு. இங்கு 'த$_3$தி$_4$' என்று தயிரைச்சொன்னது பாலுக்கும், அதனாலுண்டாகும் மோர், வெண்ணெய் முதலான எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். (ஜிஷ்ணோ:) ஜயிப்பதை ஸ்வபா$_4$வமாக உடைய. அதாவது: தன்னைத் தவிர்ந்த மற்ற நாலு பூதங்களையும் தன் குணங்களாலும் ப்ராதா$_4$ந்யத்தாலும் ஜயித்திருக்கிற ஜலம். ஜல



மில்லாவிடில் ஜகத்து ஜீவிக்கமுடியாதாகையாலும், பகவானுக்கு ஜலமே விஶேஷமான இருப்பிடமாகையாலும் 'ஜிஷ்ணோ:' எனப்படுகிறது. (அஶ்வஸ்ய) எல்லாவற்றையும் வியாபித்திருக்கிற. 'அஶூ வ்யாப்தௌ' என்று தாது. ஜலம் ஸகலதத்வங்களையும் வியாபித்து நிற்கிறதென்பது ப்ரத்யக்ஷஸித்தம். (வாஜிந:) வாஜமாவது, அந்நம். அந்நத்தைத் தன்னுள் கொண்ட ஜலம் 'வாஜீ' எனப்படுகிறது. அந்நத்தைத் தன்னுள் கொண்டிருப்பதாலே உயிர்களுக்கு உணவூட்டி உய்விப்பது இந்த ஜலமேயன்றோ என்று பா$_4$வம். இங்கு 'த$_3$தி$_4$க்ராவ்ண:' என்று தொடங்கி 'வாஜிந:' என்பது வரை படித்த விஶேஷணபதங்களால் தழுவப்பட்டு நிற்கும் விஶேஷ்யபதம் சொல்லப்படவில்லையாகையால் "அம்ப$_4$ஸ:" [தண்ணீரினுடைய] என்ற பதத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

இவ்விடத்தில் ப்ராஸங்கி$_3$கமாக, 'அம்ப$_4$:' என்னும் சப்தத்தின் வ்யுத்பத்தி நிரூபிக்கப்படுகிறது. "அயநம் ப$_4$வதி இதி அம்ப$_4$:" [(நாராயணனுக்கு) அயநமாகிறதாகையால் 'அம்ப$_4$:' எனப்படுகிறது.] என்பது இதன் சப்தார்த்தம். 'அஹோராத்ரம்' என்னும் பதத்தில் முதலெழுத்தும், கடையெழுத்தும் விடப்பட்டு "ஹோரா" என்று வழங்குகிறாப்போலே 'யந' என்னும் எழுத்துகள் விடப்பட்டு 'அம்ப$_4$:' என்று வழங்குகிறது. அன்றியிலே, "அகாரோ வை விஷ்ணு:" "அக்ஷராணாம் அகாரோऽஸ்மி" என்கிறபடியே அகாரம் விஷ்ணுவைச் சொல்லுகிறது; "அம் பி$_3$ப$_4$ர்த்தி" [அகாரவாச்யனான விஷ்ணுவைத் தாங்குகிறது.] என்கிறபடியே 'அம்ப$_4$:' என்னும் சப்தம் ஶேஷஶயனனான எம்பெருமானைத் தாங்கி நிற்கும் ஜலத்தைச் சொல்லுகிறது என்றும் கொள்ளலாம். "ஆபோ நாரா இதி ப்ரோக்தா........:" முதலான ப்ரமாணவாக்யங்கள் இவ்விடத்திலும் அநுஸந்திக்கத்தக்கன.

(த$_3$தி$_4$க்ராவ்ண: ஜிஷ்ணோ: அஶ்வஸ்ய வாஜிந: (அம்ப$_4$ஸ: ப்ரோக்ஷணம்) அகார்ஷம்) (ப்ராணிகளுக்கு

அவஶ்யாபேக்ஷிதமான) தயிர் முதலியவற்றுக்குக் காரணமாய். (ஸர்வப்ராணிகளுக்கும் உபகரிக்கும் விஷயத்தில்) மற்றபூதங்களையும் வெல்லுமதாய். (ஸர்வப்ராணிகளையும்) வியாபித்து நிற்பதாய். (ப்ராணிகளுக்கு) அந்நத்தை அளிப்பதான ஜலத்தினுடைய ப்ரோக்ஷணத்தைச் செய்துகொள்ளுகிறேன். "**ச$_2$ந்த$_3$ஸி லுங் லங் லிட்**" என்று சொல்லியிருப்பதனால் நிகழ்காலப்பொருளில். 'அகார்ஷம்' [செய்துகொண்டேன்] என்று இறந்தகாலமாகப்படிக்கப்பட்டுள்ளது. (ந:) என்னுடைய. '**வ்யத்யயோ ப$_3$ஹுளம்**' என்கிற நியாயத்தினால் ஒருமைக்கு பதிலாகப் பன்மை பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. அன்றிக்கே. தன்னுடன் ஸம்பந்தம் பெற்றவர்களையும் சேர்த்துக்கொள்வதாகவும் சொள்ளலாம். அன்றிக்கே, பகவதஸம்பந்தத்தால் வந்த பெருமைதோற்றச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (முக$_2$ா) முகங்களை. '**ஶேச்ச$_2$ந்த$_3$ஸி**" என்னும் ஸூத்ரத்தினால் 'முக$_2$ா' என்றிருக்கிறது. 'முகங்களை' என்று பன்மையாகப் படித்தது முகத்துடன் கூடிய மற்ற அங்கங்களையும் கூட்டிக்கொள்வதற்காக. (ஸுரபி$_4$) நல்ல 'வாஸனையுடையவைகளாக. பரிசுத்தங்களாக என்றபடி. '**ஸுபாம்ஸுலுக்**' என்னும் ஸூத்ரத்தினால் பஹுவசனம் லோபித்துக் கிடக்கிறது. (கரத்) 'குர்யாத்' [செய்யட்டும்] என்றபடி. மேலும், (ந:) எங்களுடைய. (ஆயூம்ஷி) "ஶதாயுர்வை புருஷ:" "வேதநூற் பிராயம் நூறு" எனப்படும் ஆயுஸ்ஸுகளை. (ப்ரதாரிஷத்) விருத்திசெய்யட்டும். "**வ்யவஹிதாச்ச**" என்கிற நியாயத்தாலே 'ப்ரண' என்பதிலுள்ள 'ப்ர' என்னும் உபஸர்க்கம், 'தாரிஷத்' என்னும் வினைச்சொல்லோடே சேருகிறது. ஆக, இத்தால். பகவானுடைய திருமேனிஸம்பந்தத்தால் பெருமையை உடைய ஜலம் என் தேஹத்தில் பட்டமாத்திரத்தில் எனக்கு பகவானை அடையக்கூடிய யோக்யதையையும். இவ்வுலகிலும் அவ்வுலகிலும் ஸகலஸம்பத்துக்களையும் கொடுக்கட்டும் என்றதாகிறது.



**"த்வயோபபு$_4$க்த ஸ்ரக்$_3$க$_3$ந்த$_4$ மாலாலங்காரசர்ச்சிதா:।**
**தரேமஹி... .... ........................................**

[உம்மால் அனுபவிக்கப்பட்ட புஷ்பம், சந்தனம், மாலை முதலிய அலங்காரங்களினால் அலங்கரிக்கப்பெற்றவர்களாய். (ஸம்ஸாரத்தைத்) தாண்டக்கடவோம்.] என்றும்.

**"உடுத்துக் களைந்த நின் பீதகவாடை உடுத்துக்கலத்ததுண்டு**
**தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன**
**சூடுமித்தொண்டர்களோம்"** என்றும்,

**"அகாலம்ருத்யுஹரணம் ஸர்வவ்யாதி$_4$விநாஶநம்।**
**விஷ்ணுபாதோ$_3$த$_3$கம் தி$_3$வ்யம் ஶிரஸா த$_4$ாரயாம்யஹம்॥"**

[அகாலத்தில் வரும் மரணத்தைப் போக்கடிப்பதாயும், எல்லா வியாதிகளையும் போக்கடிப்பதாயும், திவ்யமாயுமுள்ள விஷ்ணுவினுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை நான் தலையிலே தரிக்கிறேன்.] என்றும். பகவத்ஸம்பந்தம் பெற்ற தீர்த்தம் முதலானவை ஸகலபலங்களையும் அளிக்கவல்லவை என்றும், ஸ்வயம் ப்ரயோஜனமாயிருப்பவையென்றும் பெரியோர்களால் பேசப்பட்டதன்றோ.

கீழே ஸுத$_3$ர்சநபட்டர் என்னும் சுருதப்ரகாசிகாசாரியருடைய பாஷ்யரீதியில் பொருள் விளக்கப்பட்டது. நாராயணயதீந்த்ரர். 'ததிக்ராவ்ண்ண:' முதலான பதங்கள் நாராயணனையே குறிப்பதாகக்கொண்டு பின்வருமாறு பொருளுரைப்பர்:—(த$_3$தி$_4$க்ராவ்ண்ண:) "(ஜக$_3$ந்தி) த$_3$த$_4$ாதி க்ராமதீதி த$_3$தி$_4$க்ராவா" [(உலகங்களை) தரிப்பதும், அளப்பதும் செய்கிறானாகையால் த$_3$தி$_4$க்ராவா என்று சொல்லப்படுகிறான்.] என்று பொருள். '**த$_4$ாதா—நாராயண:**" [நாராயணனே (உலகங்களை) தரிப்பவன்] என்றும், "**ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கா$_3$ர்க்கி$_3$ ஸூர்யா சந்த்$_3$ரமஸௌ வித்$_4$ருதௌ திஷ்ட$_2$த:**" [இந்த அக்ஷரபுருஷனுடைய ஆஜ்ஞையாலேயே ஸூர்யசந்திரர்கள் தரித்து நிற்கப்படுகிறார்கள்.] என்றும், "**ஸ தா$_3$த$_4$ார ப்ருதி$_2$வீம்**

த்3யாமுதேமாம்" [அந்த பகவான் கீழுலகங்களையும் மேலுலங்களையும் தரித்து நிற்கிறான்.] என்றும், "இத3ம் விஷ்ணுர் விசக்ரமே" "த்ரீணி பத3ா விசக்ரமே" "விசக்ரமே ப்ருதி2வீமேஷ ஏதாம் க்ஷேத்ராய விஷ்ணு:" "த்ரிர் தே3வ: ப்ருதி2வீமிதி ப்ரவிஷ்ணு:" "ஶம் நோ விஷ்ணுருருக்ரம:" "விஷ்ணுக்ராந்தே வஸுந்த4ரே" என்றும் உலகங்களை தரிப்பவனும் அளப்பவனும் நாராயணனே என்பதை வேதங்கள் விளங்கவைத்தன. இவ்வர்த்தத்தையே ரிஷிகளும், ஆழ்வார்களும் அநேகமான இடங்களில் அருளிச்செய்தனர். (ஜிஷ்ணோ:) உலகங்களை அளந்து பலி நமுசி முதலியவர்களை ஜயித்தவனுடைய. "விஷ்ணும் ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும்" என்று ஸஹஸ்ரநாமத்தில் இது பகவானுடைய நாமங்களில் ஒன்றாகப்படிக்கப்பட்டது. "நாவிஜித்ய நிவர்த்ததே" [ஜயிக்காமல் திரும்பமாட்டான்]. "தம் மந்யே ராக4வம் வீரம்" "சென்று கொன்று வென்றி கொண்ட வீரனே" "அங்கு3ள்யக்3ரேண தாந் ஹந்யாம்" [என் விரல் நுனியாலே எதிரிகள் அனைவரையும் ஒழித்துவிடுவேன்.] முதலான வசனங்கள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன. (அஶ்வஸ்ய) ஸர்வவ்யாபியானவனுடைய. "அந்தர் ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த:" முதலான ப்ரமாணங்களைப் படிப்பது. (வாஜிந:) வேகத்தையுடையவனுடைய "அபாணிபாதோ3 ஜவந:" [கால் கைகளற்றவனாயினும், வெகு வேகமாகச் செல்பவன்.] "அநேஜதே3கம் மநஸோ ஜவீய:" [அசையாததொன்றாயினும், மனஸ்ஸைக் காட்டிலும் வேகமாகச் செல்வது.] என்று உபநிஷத்துக்கள் உரைத்தன. அன்றிக்கே, பக்தர்களுடைய கூக்குரல் செவிப்பட்டவுடன் அவர்களைக் காக்கமிகுந்த வேகத்துடன் வருபவன் என்றும் கொள்ளலாம்.

"அதந்த்ரித சமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருத
ப்ரணீதமணிபாது3கம் கிமிதி சாகுலாந்த:புரம்।
அவாஹநபரிஷ்க்ரியம் பதக3ராஜமாரோஹத:
கரிப்ரவரப்3ரும்ஹிதே ப4க3வதஸ் த்வராயை நம:॥"



[கஜேந்திராழ்வான் கூக்குரலிட்டவுடன், விஷ்வக்ஸேநருடைய கைலாகைக் கவனியாதவராய், கொண்டுவரப்பட்ட மணிபாதுகையை ஏற்றுக் கொள்ளாதவராய், அந்த:புரம் முழுவதையும் 'என் வந்தது?' என்று கலங்கச் செய்பவராய், வாஹனலங்காரங்களற்ற கருடாழ்வானைச் சடக்கென ஏறியருளாநிற்பவரான பகவானுடைய வேகத்துக்கு நமஸ்காரம்] என்றார் பட்டர். (வாஜிந: அகார்ஷம்) இப்படிப்பட்ட பகவானுடைய ஸ்தோத்ரத்தைச் செய்கிறேன். மற்றவைகளுக்கு முன்போலவே பொருள் கொள்வது.

ஆசார்யஶ்ரேஷ்டரான ஸுதர்ஶநபட்டர் "த3தி4க்ராவ்ண்ண:" என்னும் இம்மந்திரத்திற்கு மற்றொரு விதமாகவும் பொருளுரைப்பர். அதற்குப் பின்வருமாறு அழகாக ஓர் அவதாரிகையும் இட்டருளுவர்:

"ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத:।
ததஸ் ஸ வாஸுதே3வேதி வித்3வத்3பி4: பரிபட்2யதே॥"

[இவன் எல்லாவற்றிலும் வஸிக்கையாலும், எல்லாமும் இவனிடம் வஸிக்கையாலும், இவன் வித்வான்களால் வாஸுதேவனென்று சொல்லப்படுகிறான்.]

"தே3வதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா ப4க3வாந் ஹரி:।
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்3யதே பரம்॥"

[மைத்ரேயரே! தேவர், திர்யக், மநுஷ்யர் ஆகிய இவற்றில், ஆணாயிருப்பது பகவான் ஹரியாகவும், பெண்ணாயிருப்பது லக்ஷ்மீதேவியாகவும் உள்ளனர். இவ்விருவர்க்கும் மேலான தொன்றுமில்லை.] என்று பராசரர் முதலானோர் அருளிய ஶ்ருத்யநுஸாரிகளான புராணங்களில் பகவானே எல்லாவற்றிற்கும் ஆத்மா என்பதும், எல்லாப் பதங்களாலும் சொல்லப்படுமவன் என்பதும் ஸித்தாந்தம் செய்யப்பட்டது. அப்படியிருந்தபோதிலும் லோகவ்யுத்பத்தியினால் அப்படிப்

பட்ட ஸாவகாசத்தைப் பொறுக்காதவர்களும், பகவானைத் தவிர மற்றவர்களிடத்திலிருந்து எல்லா விதத்திலும் நிவ்ருத்தியையடைந்த வாக்கையும் மனத்தையுமுடையவர்களும், அபர்யவஸாந வ்ருத்தியினால் பகவானையே சொல்லுகின்றன வானாலும், சப்தங்கள் பெரிய புருஷார்த்தத்தை உண்டாக்காது என்று நினைத்துக்கொண்டிருப்பவர்களும், ஸ்கந்த முகுந்த3பதங்களைச் சொன்னாலும் ஒரே பொருளே தோற்றுகிறது என்று ஒப்புக்கொள்ளுமவர்களுமாகிய சிலர் தங்களுடைய மநஸ்ஸந்துஷ்டிக்காகப் பின்வருமாறு பொருள் கொள்ளுகிறார்கள்; அப்படியே

**"யந்நாம கீர்த்தநம் ப4க்த்யா விலாயநமநுத்தமம் |**
**மைத்ரேயாகி2லபாபாநாம் தா4தூநாமிவ பாவக: ||"**

[மைத்ரேயரே! எவனுடைய நாமத்தை பக்தியுடன் கீர்த்தனம் செய்வது, எல்லாப்பாபங்களையும், தாதுக்களைக் கொளுத்தும் நெருப்புபோலே நசிக்கச்செய்கிறதோ....] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும்.

**"ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச ஸ்தோப4ம் ஹேளநமேவ வா |**
**வைகுண்ட2நாமக்3ரஹணம் அஶேஷாக4ஹரம் விது3: ||"**

[ஸங்கேதத்திற்காகவாவது, பரிஹாஸத்திற்காகவாவது, அர்த்தமில்லாமலாவது, சிரிப்பு மூட்டுவதற்காகவாவது பகவானுடைய திருநாமத்தைச் சொல்லுவது எல்லாப் பாபங்களையும் போக்கடிக்குமென்று அறிகிறார்கள்.] என்றும்.

**"அயம் ஹி க்ருதநிர்வேஶோ ஜந்மகோட்யம்ஹஸாமபி |**
**யத்3வ்யாஜஹார விவஶோ நாம ஸ்வஸ்த்யயநம் ஹரே: ||"**

[ஹரியினுடைய மங்களகரமான நாமத்தை இவன் பரவசனாகச் சொன்ன காரணத்தினால் கோடிக்கணக்கான பிறப்புகளில் செய்த பாபங்களுக்கும் இவன் ப்ராயச்சித்தம் செய்தவனானான்.] என்றும் ஸ்ரீபாகவதத்திலும்.



**"நாமஸங்கீர்த்தநாத்3 யஸ்ய பாபமந்யைருபத்3ருதை: |**
**ஶமம் விநாஶமாயாந்தி தே3வ: கோப்4யதி4கஸ் தத: ||**

[எவனுடைய திருநாமத்தைச் சொல்லுவதினாலேயே எல்லா உபத்ரவங்களும் பாபங்களும் ஒரே காலத்தில் விநாசத்தை அடைகின்றனவோ, அவனைக்காட்டிலும் மேலான தேவன் யார்?]

**"நூநம் தத் கண்ட2ஶாலூகம் அத2வாப்யுபஜிஹ்விகா |**
**ரோகோ3 வாந்யோ ந ஸா ஜிஹ்வா யா ந வக்தி ஹரேர்கு3ணாந் ||"**

[எந்த நாக்கு ஹரியினுடைய குணங்களைச் சொல்லுவதில்லையோ, அது கழுத்தில் முளைத்ததோர் மாம்ஸபிண்டமாகவோ, உள்நாக்கைப்போன்றதொரு (பயனற்ற) வஸ்துவாகவோ, வியாதியாகவோ கொள்ளத்தக்கது.]

**"ஸக்ருது3ச்சரிதம் யேந ஹரிரித்யக்ஷரத்3வயம் |**
**ப3த்3த4: பரிகரஸ்தேந மோக்ஷாய க3மநம் ப்ரதி ||"**

[எவனால் 'ஹரி' என்னும் இவ்விரண்டெழுத்துக்களும் ஒரு தடவை உச்சரிக்கப்பட்டதோ, அவன் மோக்ஷத்தை அடைவதற்கு ஸாதனங்களைச் செய்துவிட்டான்.]

**"க்ருஷ்ண க்ருஷ்ணேதி க்ருஷ்ணேதி யோ மாம் ஸ்மரதி நித்யஶ: |**
**ஜலம் பி4த்வா யதா2 பத்3மம் நரகாது3த்3த4ராம்யஹம் ||"**

[க்ருஷ்ணா! க்ருஷ்ணா! என்று எவனொருவன் என்னை எப்போதும் நினைக்கிறானோ அவனை, ஜலத்தைப் பிளந்து கொண்டு தாமரையை எடுப்பதுபோல் நான் நரகத்திலிருந்து தூக்கிவிடுகிறேன்.] என்று ஸ்ரீ விஷ்ணுதர்மத்திலும் சொல்லப்படுகின்றது. ஆகையால், இம்மந்திரத்தின் அக்ஷரங்கள் பகவானையே முக்யமாகச் சொல்லுகின்றன என்று கொண்டு மந்த்ராக்ஷரங்களை வியாக்கியானம் செய்கிறோம்.

(த3தி4க்ராவ்ண்ண:) தயிர் வெண்ணை முதலியவைகளுக்காகத் தன்னைக்கொடுப்பவனுக்கு என்று பொருள்.

**"சூட்டு நன்மாலைகள் தூயனவேந்திவிண்ணோர்கள் நன்னீர்**
**ஆட்டி அந்தூபம் தராநிற்கவே அங்கோர் மாயையினால்**
**ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்து"**

என்கிறபடியே நித்யஸூரிகளுடன் என்றும் அனுபவித்துக் கொண்டிருக்கும் அநுபவத்தையும் ஒரு பொருட்டாக மதியாமல், ஆய்ச்சிகள் வைத்திருக்கும் வெண்ணையை விழுங்குவதற்கன்றோ அவன் இங்கு அவதரித்தது. "**இமையோர் தமக்கும்—நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணையூண் என்னும் ஈனச்சொல்லே**" என்று நித்யஸூரிகளும் மயங்கும் இச்செயலிலே வேதபுருஷன் ஈடுபடுகிறான். (த3தி4க்ராவ்ண்ண;) "**டு3க்ரீங்—த்3ரவ்யவிநிமயே**" என்கிற தாதுவிலே நிஷ்பன்னமான 'த3தி4க்ராவா' என்னும் சப்தம் தன்னை ஆய்ச்சியருக்கு அநுபவிக்கக் கொடுத்து, அவர்களுடைய தயிரை வாங்குபவன் என்று பொருள்படுகிறது. இங்கு தயிரைச் சொன்னது வெண்ணெய், முதலான எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்.

**(வாஜிந: அஶ்வஸ்ய ஜிஷ்ணோ:)** வேகத்தையுடைய குதிரை உருவாக வந்த அஸுரனை ஜயித்தவனுக்கு (வாஜிந:) மிகுந்த வேகத்தையுடையவன். கம்ஸனால் ஏவப்பட்டுக் கண்ணனைக் கொல்வதற்காகக் குதிரையுருவங்கொண்டு மனோவேகத்துடன் வந்தானன்றோ இவன்.

**"கேஶீ து கம்ஸப்ரஹித: கு2ரைர் மஹீம்**
**மநோஜவோ நிர்ஜரயந் மஹாஹய: |**
**ஸடாவதூ4தாப்4ர விமாநஸங்குலம்**
**குர்வந்நபோ4 ஹேஷிதபீ4ஷிதாகி2ல: ||"**

[கம்ஸனால் அனுப்பப்பட்ட கேசி என்னும் அஸுரன் பெரிய குதிரை வடிவங்கொண்டவனாய், **மனோவேகத்தையுடையவனாய்**, குளம்புகளால் பூமியைப் பிளப்பவனாய், பிடரிமயிரை ஆகாசத்திலுள்ள மேகங்களும், தேவவிமானங்களும் நிலைகுலையும்படி உதறுமவனாய், யாவரும் பயமடையும்படிக் கனைப்பவனாய்த் தோன்றினான்.] என்றும்,



**"ஸ தம் நிஶம்யாபி4முகோ2 முகே2ந க2ம்**
**பிப3ந்நிவாப்4யத்3ரவத3த்யமர்ஷண: |**
**ஜக4ாந பத்3ப்4யாம் அரவிந்த3லோசநம்**
**து3ராஸத3ஶ் சண்ட3ஜவோ து3ரத்யய: ||"**

[அப்படிக் கண்ணன் கர்ஜித்ததைக் கேட்ட அவ்வஸுரன், ஆகாயத்தை விழுங்கிவிடுபவன்போல் வாயைப்பிளந்து கொண்டு, மிகக்கோபத்துடன் எதிர்த்து ஓடினான். **மிகுந்த வேகத்தை உடையவனாய்**, ஒருவராலும் ஜயிக்கமுடியாதவனை அவ்வஸுரன் தாமரைக் கண்ணனைக் **கால்களாலே உதைத்தான்.**] என்றும் ஸ்ரீபாகவதத்திலும்.

**"ஸ கு2ரக்ஷதபூ4ப்ருஷ்ட2ஸ் ஸடாக்ஷேபது4தாம்பு3த3: |**
**த்3ருதவிக்ராந்த சந்த்3ரார்க்கமார்க்3ர**
**கோ3பாநுபாத்3ரவத் ||"**

[அவ்வஸுரன் தன் குளம்புகளால் பூமிப்பரப்பைப் பிளந்து கொண்டும், பிடரிமயிரை உயர்த்துவதால் மேகங்களைக் கலைத்துக்கொண்டும், **தன் வேகத்தால் சந்த்ரஸூர்யர்களுடைய மார்க்கத்தை அளந்து கொண்டும்,** இடையர்களை நோக்கி ஓடிவந்தான்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் இவனுடைய வேகம் சொல்லப்பட்டது. திருமங்கையாழ்வாரும் "பதமிகுபரி" என்றும், "ஆடல் நன்மாவுடைத்து" என்றும் அருளிச்செய்தார். (அஶ்வஸ்ய ஜிஷ்ணோ:) குதிரையுருவங்கொண்டு வாயைப் பிளந்து வந்த அவன் வாயிலே தன் கையை நுழைத்து, அவனுடைய வாயைக் கிழியச் செய்து அவனை அழித்தவனுக்கு.

"ஸமேத4மாநேந ஸ க்ருஷ்ணபா3ஹுநா
நிருத்3த4வாயுஸ் சரணம்ச விக்ஷிபந் |
ப்ரஸ்விந்நகா3த்ர: பரிவ்ருத்தலோசந:
பபாத லம்ப3ம் விஸ்ருஜந் க்ஷிதௌ வ்யஸு: ||"

[கிருஷ்ணனுடைய வளர்ந்துகொண்டுவரும் கையினுல் மூச்சடங்கப்பெற்றவனுய். கால்களை உதைத்துக்கொண்டு உடல் வியர்த்துக் கண்கள் பிதுங்கப்பெற்றவனுய். மலங் கழித்துக்கொண்டு பூமியில் உயிர்நீங்கி விழுந்தான்] என்று ஸ்ரீபாகவதத்தில் இவனை அழித்த வழி சொல்லப்பட்டது. (ஜிஷ்ணோ:) ஜயசீலனுனவனுக்கு. "விஷ்ணும் ஜிஷ்ணும்" என்று இந்நாமம் விஷ்ணுவையே குறிக்கிறதென்பதை விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வியாஸர் விளக்கியருளினுர். கேசியை ஜயித்து. அச்செயலாலே கோ3கோ3பகோ3பிகளை எழுதிக்கொண்டிருப்பவனன்றோ இவன்.

"யஸ்மாத் த்வயைவ து3ஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்த்த3ந |
தஸ்மாத் கேஶவநாம்நா த்வம் லோகே க்2யாதோ ப4விஷ்யஸி||"

[ஜநார்த்தனனே! துஷ்டனுன கேசி உன்னுலேயே கொல்லப்பட்டானுகையால் நீ கேசவன் என்னும் பெயரால், உலகில் கியாதியடையப்போகிறுய்.] என்று நாரதர் சொன்னபடியே கேசவநாமத்திற்கு இதுவும் ஒரு பொருளன்றே. "த3தி4க்ராவ்ண:" என்கையால், ஆஶ்ரிதர்களுடைய த்ரவ்யத்தையே தா4ரகமாகக் கொண்டிருக்கும் தன்மையும், "ஜிஷ்ணோரஶ்வஸ்ய" என்கையால் அவர்களுடைய விரோதிகளை நிரஸிக்கும் தன்மையும் சொல்லப்படுகின்றன. (அகார்ஷம்) அவனிடம் ஆத்மஸமர்ப்பணம் செய்தேன். மற்றவை முன்போல்.

## அர்க்4ய ப்ரதா3நம்

அடுத்தபடியாக, இரண்டு கைகளிலும் ஜலத்தை எடுத்துக்கொண்டு. "ஓம் பூ4ர் பு4வஸ் ஸுவ:....தி4யோ யோ ந: ப்ரசோத3யாத்" என்னும் காயத்ரீமந்த்ரத்தை உச்சரித்



துக்கொண்டு. ஸூர்யனை நோக்கி ஜலத்தை உயர எறிய வேண்டும். இந்த அர்க்4யப்ரதானத்தைப்பற்றி ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ஓர் இதிஹாஸமுண்டு. மந்தேஹர் என்னும் பெயர் கொண்ட ராக்ஷஸர் சிலர் ஸந்த்யாகாலத்திலே ஸூர்யனுடைய ரதத்தைச் சுற்றிக்கொண்டு. அவனுேடே பெருத்த யுத்தம் பண்ணி அவனைக் கொல்ல முயற்சிப்பார்கள். அப்போது காயத்ரியினுல் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தை ப்ராஹ்மணர்கள் அர்க்யரூபமாக உயர எறிவார்கள். அந்த அர்க்ய சக்தியாலே ஆதித்ய மண்டலத்திலே ஓர் அக்னியானது ஜ்வலித்துக்கொண்டு தோன்றும். மந்தேஹர்கள் அவ்வக்கனியிலே விழுந்து அழிந்துபோவர்கள். இந்த அர்க்யஜலமே வஜ்ரமாய் நின்று அந்த ராக்ஷஸர்களை அழியச்செய்யும் என்றும் சொல்லுவர்கள். இவ்விருத்தாந்தம்.

"தது3ஹ வா ஏதே ப்3ரஹ்மவாதி3ந: பூர்வாபி4முகா2: ஸந்த்4யாயாம்
கா3யத்ர்யபி4மந்த்ரிதா ஆப ஊர்த்4வம் விக்ஷிபந்தி | தா ஏதா ஆபோ
வஜ்ரீபூ4த்வா தாநி ரக்ஷாம்ஸி மந்தே3ஹாருணே த்வீபே ப்ரக்ஷிபந்தி ||"

[இந்த ப்ரஹ்மவாதிகள் கிழக்கு திக்கை நோக்கி நின்று, ஸந்த்யாகாலத்தில் காயத்ரியினுல் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தை உயர எறிகிறுர்கள். அந்த ஜலம் வஜ்ரமாக ஆகி அந்த ராக்ஷஸர்களை மந்தேஹாருணம் என்னும் தீவில் எறிந்து விடும்.] என்று வேதத்தில் உத்கோஷிக்கப்பட்டது.

"ஸந்த்3யாகாலே து ஸம்ப்ராப்தே ரௌத்3ரே பரமதா3ருணே |
மந்தே3ஹா ராக்ஷஸா கோ4ராஸ் ஸூர்யமிச்ச2ந்தி கா2தி3தும்||
ப்ரஜாபதிக்ருத: ஶாபஸ் தேஷாம் மைத்ரேய ரக்ஷஸாம் |
அக்ஷயத்வம் ஶரீராணம் மரணஞ்ச தி3நே தி3நே ||
ததஸ் ஸூர்யஸ்ய தேஷாம் வை யுத்3த4மாஸீத் ஸுதா3ருணம் |
ததோ த்3விஜோத்தமாஸ் தோயமுத்க்ஷிபந்தி மஹாமுநே ||

ஓங்கார ப்3ரஹ்மஸம்யுக்தம் கா3யத்ர்யா சாபி4மந்த்ரிதம் |
தேந த3ஹ்யந்தி தே பாபா வஜ்ரபூ4தேந வாரிணா ||
ஓங்காரோ ப4க3வாந் விஷ்ணுஸ் த்ரிதா4மா வசஸாம் பதி: |
தது3ச்சாரணதஸ் தேது விநாஶம் யாந்தி ராக்ஷஸா: ||
வைஷ்ணவோऽம்ஶ: பரஸ் ஸூர்யோ யோऽந்தர்ஜ்யோதி ரஸம்ப்லவம் |
அபி4தா4யக ஓங்காரஸ் தஸ்ய தத்ப்ரேரக: பர: |
தேந ஸம்ப்ரேரிதம் ஜ்யோதிரோங்காரேணாத2 தீ3ப்திமத் ||
த3ஹத்யஶேஷரக்ஷாம்ஸி மந்தே3ஹாக்2யாந்யகா4நி வை |
தஸ்மாந்நோல்லங்க4நம் கார்யம் ஸந்த்4யோபாஸநகர்மண: |
ஸ ஹந்தி ஸூர்யம் ஸந்த்4யாயா நோபாஸ்திம் குருதே து ய: ||
தத: ப்ரயாதி ப4க3வாந் ப்3ராஹ்மணைரபி4ரக்ஷித: |
வாலகி2ல்யாதி3பி4ஶ்சைவ ஜக3த: பாலநோத்3யத: ||"

[மிகவும் பயங்கரமான ஸந்த்யாகாலம் வந்தவுடன், கோர ரூபர்களான மந்தேஹரென்னும் ராக்ஷஸர்கள் ஸூர்யனை விழுங்க விரும்புகின்றனர். மைத்ரேயரே! அந்த ராக்ஷஸர்களுடைய சரீரங்கள் அழியாதவையென்றும், தினந்தோறும் அவர்களுக்கு மரணமுண்டாகுமென்றும் ப்ரஹ்மாவால் ஒரு சாபம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸூர்யனுக்கும் அவர்களுக்கும் மிகவும் பயங்கரமான யுத்தம் உண்டாகிறது. மஹாமுனிவரே! அவ்வேளையில் த்3விஜஶ்ரேஷ்டர்கள் ஓங்காரத்துடனும் வ்யாஹ்ருதி ப்ரஹ்மத்துடனும் கூடிய காயத்ரியினால் அபிமந்த்ரணம் செய்யப்பட்டதான ஜலத்தை உயர வெறிகிறார்கள். வஜ்ரமாக மாறின அந்த ஜலத்தால் அந்தப் பாபிகள் தஹிக்கப்படுகிறார்கள். "பூ4ர்பு4வஸ்ஸுவ:" என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளையும் இருப்பிடமாகக் கொண்டவரும், வேதத்துக்கு ப்ரதிபாத்3யரும் ஓங்காரஸ்வரூபியுமாயிருப்பவர் பகவான் விஷ்ணு. அதை உச்சரிப்பதால் அந்த ராக்ஷஸர்கள் விநாசத்தை அடைகிறார்கள். ஸூர்யனுக்குள்ளிருக்கும் நிர்விகாரமான சோதியைச் சொல்லுவது ஓங்காரம். அது அந்த ஸூர்யனை (பலிஷ்டனாகும்படி) தூண்டுகிறது. அந்த ஓங்காரத்தினால் தூண்டப்பட்ட ஸூர்யனாகிற சோதி மிகவும் பிரகாசத்தையுடையதாய், மந்தேஹரென்னும் பெயர்கொண்ட பாபிகளான அரக்கர் அனைவரையும் எரித்துவிடுகிறது. ஆகையால் ஸந்த்4யோபாஸனகர்மத்தை விடக்கூடாது. எவனொருவன் ஸந்த்4யோபாஸனம் செய்யவில்லையோ, அவன் ஸூர்யனைக் கொன்றவனாகிறான். (இம்மாதிரியாக ப்ராஹ்மணர்களாலும், வாலகில்யர்கள் முதலான மஹர்ஷிகளாலும் ரக்ஷிக்கப்பட்ட ஸூர்யன், உலகத்தைக்காப்பாற்றுவதில் முயற்சியுடையவனாய்ச் செல்கின்றான்.] என்று விஷ்ணுபுராணத்திலும் (2—8) இவ்விருத்தாந்தம் விரிவாக வர்ணிக்கப்பட்டது. "ப்ரஜாபதிக்ருத: ஶாப:" என்று இங்கு சொல்லப்பட்ட சாபம்,

"ரக்ஷாம்ஸி வா புரோऽநுவாகே தபோக்3ரமதிஷ்ட2ந்த | தாந் ப்ரஜாபதிர் வரேணோபாமந்த்ரயத | தாநி வரமவ்ருணீதா-தி3த்யோ நோ யோத்3தா4 இதி | தாந் ப்ரஜாபதிரப்3ரவீத்3 யோத4யத்4வம் ||"

[ராக்ஷஸர்கள் சிலர் உக்ரமான தபஸ்ஸைச்செய்தனர். அவர்களைப் பிரமன் வரம் வேண்டும்படி கேட்டார். அவர்கள் "ஆதித்யன் எங்களுடன் சண்டை செய்யவேண்டும்" எனனும் வரத்தை வரித்தனர். ப்ரஜாபதியும் "அப்படியே ஆதித்யனுடன் சண்டை செய்யுங்கள்" என்று கூறினர்.] என்று வேதத்தில் சொல்லப்பட்டது. வரமாகக்கொடுக்கப்பட்டபோதிலும் துக்கரூபமாயிருப்பதால் பராசரர் இதை சாபமென்றார்.

"எரிகொள் செந்நாயிறிரண்டுடனே உதயம் மலைவாய்
விரிகின்ற வண்ணத்த எம்பெருமான் கண்கள் மீண்டவற்றுள்
எரிகொள் செந்தீ வீழ் அசுரரைப் போல" என்னும்

திருவிருத்தப் பாட்டிலே வேதம் தமிழ் செய்த மாறனும் மந்தேஹவ்ருத்தாந்தத்தை உணர்த்தியருளினார். ஶ்ருதி

ஸ்ம்ருதிகளில் மந்தேஹர்களை ராக்ஷஸர்கள் என்று சொல்லி யிருக்க, ஆழ்வார், "செந்தீ வீழசுரர்" என்று அவர்களை அசுரர்களாகச் சொல்லலாமோவெனில்; "ஆஸுரீம் யோநி மாபந்நா:" என்று ப₄க₃வத்₃விமுக₂ர்கள் அனைவரையும் அஸுரர்கள் என்று சொல்லும் கணக்கிலே இங்கு ஆழ்வார் அருளியதாகக் கொள்ளலாம்.

"தானவனாகம் தரணியில் புரளத்
தடஞ்சிலை குனித்த எம் தலைவன்" என்றும்,
"தையலாள் மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன்"

என்றும் திருமங்கையாழ்வாரும் ராக்ஷஸனான ராவணனைக் குறித்து அஸுரபத₃பர்யாயமான தா₃நவசப்தத்தைப் பிரயோகித்தாரன்றோ. நிற்க; காலையிலும், மாலையிலும் மூன்று தடவையும், மத்₄யாஹ்நத்தில் இரண்டு தடவையும் அர்க்₄யப்ரதா₃னம் செய்வது வழக்கம். காலங்கடந்து ஸந்த்₄யாவந்தநம் செய்தால், அதற்கு ப்ராயஶ்சித்தமாக ப்ராணாயாம பூர்வகமாக ஒரு அர்க்யப்ரதாநம் செய்ய வேண்டும்.

அதற்குப் பிறகு "ஓம் பூ₄ர்பு₄வஸ் ஸுவ:" என்று ஜலத்தைக்கைக்கொண்டு தன் தலையை ப்ரதக்ஷிணமாகச் சுற்றி, "அஸாவாதி₃த்யோ ப்₃ரஹ்ம" [ஆதித்யாந்தர்யாமியா யிருக்கும் இவனே ப்ரஹ்மம்] என்று தன் ஹ்ருதயப்ர தேசத்தில் இரண்டு கைகளையும் வைத்துக்கொண்டு கூறி, "கேஶவம் தர்ப்பயாமி, நாராயணம் தர்ப்பயாமி, மாத₄வம் தர்ப்ப யாமி, கோ₃விந்த₃ம் தர்ப்பயாமி, விஷ்ணும் தர்ப்பயாமி, மது₄ஸூத₃நம் தர்ப்பயாமி, த்ரிவிக்ரமம் தர்ப்பயாமி, வாமநம் தர்ப்பயாமி, ஸ்ரீத₄ரம் தர்ப்பயாமி, ஹ்ருஷீகேஶம் தர்ப்பயாமி, பத்₃மநாப₄ம் தர்ப்பயாமி, தா₃மோத₃ரம் தர்ப்பயாமி" என்று த்வாதசாதித்யர் களுக்கும் அந்தர்யாமியான அச்யுதனுக்குத் தண்ணீரால் தர்ப்பணம் செய்யவேண்டும். இந்த த்வாதசநாமங்களின் பொருட்பெருமைகளை முன்னமே மிக விஸ்தாரமாக விவரித் திருக்கிறோம். இப்படித் தர்ப்பணம் செய்து, ஆசமனம் பண்ணி, "ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து" என்று பகவதர்ப்பணம் செய்யவேண்டும். இதுவரையில் செய்தது ஜலபாகமாகும். இனி ஜபபாகத்தை விவரிப்போம்.



## ஜபம் செய்யும் முறை

"பூர்வாம் ஸந்த்₄யாம் ஜபம்ஸ்திஷ்ட்டேத்
ஸாவித்ரீமார்க்கத₃ர்ஶநாத் |
பஶ்சிமாம் து ஸமாஸீந: ஸம்யக்ருக்ஷவிபா₄வநாத் ||"
[மநு 2-101]

[ஸூர்யனைக் காணும் வரையில் காலை ஸந்த்யையில் நின்று கொண்டே ஜபம் செய்யவேண்டும்; மாலை ஸந்த்யையில் நக்ஷத்திரங்களைக் காணும் வரையில் உட்கார்ந்துகொண்டே ஜபம் செய்யவேண்டியது.] என்கிற மநுவசனத்தின்படி ஜனநெருக்கமற்ற ஏகாந்தமான இடத்திலே காலையில் நின்று கொண்டும், மாலையில் உட்கார்ந்து கொண்டும் ஜபம் செய்யவேண்டும். மாத்யாஹ்நிகத்தில் வெட்டவெளியில் ஜபம் செய்தால் நின்றுகொண்டும், இல்லாவிடில் உட்கார்ந்து கொண்டும் ஜபம் செய்யவேண்டும். பகவத்ஸந்நிதியில் ஜபம் செய்வது விசேஷமானது. இப்படி இருந்து கொண்டு மூன்று ப்ராணாயாமங்கள் செய்யவேண்டும், அதாவது: "ஓம் பூ₄: ஓம் பு₄வ:... அம்ருதம் ப்₃ரஹ்ம பூ₄ர்பு₄வஸ் ஸுவரோம்" என்னும் மந்திரத்தை ரேசகம், பூரகம் கும்ப₄கம் [காற்றை வெளிவிடுவது, உள்ளிழுப்பது, உள்ளே நிறுத்துவது] ஆகிய விதிகளுடன் செய்யவேண்டும். இந்த ப்ராணாயாம மந்திரத்தின் அர்த்தத்தை முன்னமே விவரித்திருக்கிறோம். இம்மந்திரத்தின் ருஷி, சந்தஸ், தேவதைகளைப் பின் வருமாறு அநுஸந்தித்துக்கொண்டு பிறகு ப்ராணாயாமம் செய்யவேண்டும்.

ப்ரணவஸ்ய ரிஷிர் ப்₃ரஹ்மா, தே₃வீ கா₃யத்ரீ ச₂ந்த₃:, பரமாத்மா தே₃வதா பூ₄ராதி₃ ஸப்த வ்யாஹ்ருதீநாம்

**அத்ரி ப்4ருகு3 குத்ஸ வஸிஷ்ட2 கௌ3தம காஶ்யபாங்கி3ரஸ ரிஷய: கா3யத்ரீ உஷ்ணிக் அநுஷ்டுப் ப்3ருஹதீ பங்க்தித்ரிஷ்டுப் ஜக3த்ய: ச2ந்த3ாம்ஸி. அக்3நிர் வாயவர்க்க வாகீ3ஶ வருணேந்த்3ர விஶ்வேதே3வா தே3வதா: । கா3யத்ர்யா: விஶ்வாமித்ர ரிஷி: தே3வீ கா3யத்ரீ ச2ந்த3: ஸவிதா தே3வதா । கா3யத்ரீஶிரஸ: ப்3ரஹ்மா ரிஷி:, அநுஷ்டுப் ச2ந்த3: பரமாத்மா தே3வதா ॥**

*[ப்ரணவத்திற்கு ரிஷி ப்ரஹ்மா; காயத்ரீ சந்தஸ்; பரமாத்மா தேவதை. பூ: பு4வ: முதலிய ஏழு வியாஹ்ருதிகளுக்கும் முறையே அத்ரி, ப்ருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காஶ்யபர், ஆங்கிரஸ் ஆகிய இவர்கள் ரிஷிகள்; காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்3ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜக3தீ ஆகிய இவைகள் சநதஸ்ஸுகள்; அக்நி, வாயு, ஸூர்யன், ப்ருஹஸ்பதி, வருணன், இந்திரன், விஶ்வேதேவர்கள் தேவதைகள். காயத்ரிக்கு விஶ்வாமித்ரர் ரிஷி; காயத்ரீ சந்தஸ்ஸு; ஸவிதா தேவதை. காயத்ரீசிரஸ்ஸுக்கு ப்ரஹ்மா ரிஷி; அநுஷ்டுப்சந்தஸ்; பரமாத்மா தேவதை.]*

ஶ்ருதப்ரகாஶிகாசார்யர், பூ4ராதி3ஸப்தவ்யாஹ்ருதிகளுக்கும் வாமதேவர் ரிஷி, காயத்ரீ சந்தஸ்ஸு, ப்ரஹ்மா தேவதை என்றும் சிலருடைய அபிப்ராயமாக அருளிச்செய்வர். ரிஷியைத் தலையிலும், சந்தஸ்ஸை முகத்திலும், தேவதையை ஹ்ருதயத்திலும் தொட்டு தியானிக்கவேண்டும். பிறகு முற்கூறியவாறு மூன்று ப்ராணாயாமம் செய்து மறுபடியும், "ஓம் பூ4:" என்று தொடங்கி ப்ராணாயாம மந்திரத்தைப்படித்து, "**ப4கவதா3ஜ்ஞயா ப4க3வத்கைங்கர்ய ரூபம் கா3யத்ரீமஹாமந்த்ரஜபம் கரிஷ்யே**" *[பகவானுடைய ஆஜ்ஞையால், பகவானுக்குக் கைங்கர்யரூபமாயிருக்கும் காயத்ரீமஹாமந்த்ர ஜபத்தைச் செய்கிறேன்.]* என்று ஸங்கல்பித்துக்கொண்டு பின்வரும் மந்திரங்களால் ஸ்ரீமந் நாராயணனை அழைப்பதற்காக காயத்ரீ தேவியை அழைக்க வேண்டும்:



**आयातु वरदा देव्यक्षरं ब्रह्मसंमितम्। गायत्रीं छन्दसां मातेदं ब्रह्म जुषस्व नः॥ ओजोऽसि सहोऽसि बलमसि भ्राजोऽसि देवानां धाम नामासि। विश्वमसि विश्वायुः सर्वमसि सर्वायुः अभिभूरोम् गायत्रीमावाहयामि॥**

**ஆயாது வரத3ா தே3வீ அக்ஷரம் ப்3ரஹ்மஸம்மிதம் । கா3யத்ரீம் ச2ந்த3ஸாம் மாதேத3ம் ப்3ரஹ்ம ஜூஷஸ்வ ந: ॥ ஓஜோஸி ஸஹோஸி ப3லமஸி ப்4ராஜோஸி தே3வாநாம் த4ாம நாமாஸி । விஶ்வமஸி விஶ்வாயு: ஸர்வமஸி ஸர்வாயுரபி4பூ4ரோம் கா3யத்ரீமாவாஹயாமி ॥**

*"ஆயாது" என்று தொடங்கி "ஜூஷஸ்வ ந:" என்று முடியும் மந்திரத்திற்கு வாமதேவர் ரிஷி; அநுஷ்டுப் சந்தஸ்ஸு; லக்ஷ்மீநாராயணனுவது காயத்ரியாவது தேவதை. "ஓஜோऽஸி" என்கிற மந்திரத்திற்கு ப்ரஜாபதி ரிஷி; பங்க்தி ச2ந்த3ஸ்ஸு; பரப்3ரஹ்மம் தேவதை. இவ்விரண்டு மந்திரங்களுக்கும் காயத்ரியையும், ஸ்ரீமந்நாராயணனையும் அழைப்பதில் விநியோகம்.*

*முதல் மந்திரத்தினல் "காயத்ரி!" என்று காயத்ரீ தேவியைக் கூப்பிட்டு லக்ஷ்மியுடன் கூடிய பரப்ரஹ்மமாகிய நாராயணனை இங்கு என்னை ரக்ஷிக்கும்பொருட்டு வரவழைப்பாயாக என்று வேண்டுகிறான்.*

**கா3யத்ரி**–*காயத்ரீதேவியே!* **வரத3ா**—*வரத்தை அளிப்பவளும்,* **தே3வீ**—*தேவனுகிற நாராயணனுக்குப்பத்னியுமான ஸ்ரீதேவி,* **ஆயாது**—*(இங்கு) வரட்டும்;* **அக்ஷரம்**—*விகாரமற்றவனும்,* **ஸம்மிதம்**—*(சாஸ்திரங்களால்) நன்கு அறியப்பட்டவனும்,* **ப்3ரஹ்ம**—*ப்ரஹ்ம சப்தத்தால் சொல்லப்படுபவனுமான நாராயணனும்,* **ஆயாது**—*(இங்கு) வரட்டும்;* **ச2ந்த3ஸாம் மாதா**—*சந்தஸ்ஸுக்களுக்குத்தாயாயிருக்கும் நீ* **ஈம்**–*லக்ஷ்மீதேவியையும்,* **இத3ம் ப்3ரஹ்ம**–*ப்3ரஹ்மஶப்3த3வாச்யனை இவனையும்,* **ந:**—*எங்களுக்காக,* **ஜூஷஸ்வ**—*(இங்கு) அடைவிப்பாயாக.*

முதல் மந்திரத்திற்குப் பதவுரை மேலே காட்டப் பட்டது. இனி விரிவுரை எழுதப்படுகிறது. (ஆயாது) இங்கு வரட்டும்; யாரெனில்: (வரத₃ா தே₃வீ) வரமளிப்பவ ளான தேவி. எம்பெருமானை வசீகரித்து இச்சேதனனுக்கு வேண்டியதையெல்லாம் அளிக்கச் செய்யும் ஸ்ரீதேவியே இங்கு 'வரத₃ா தே₃வீ' எனப்படுகிறாள். (வரத₃ா) "வரம் த₃த₃ாதி இதி வரத₃ா" [வரத்தைக் கொடுப்பவளாகையால் வரத₃ா] என்று வ்யுத்பத்தி. "காமவத்ஸா அம்ருதம் து₃ஹாநா" [தன்னடியார் காமத்தையே கன்றாகக்கொண்டு மோக்ஷத்தையும் கறக்கும் பசுவாயிருப்பவள்.] "யஸ்யாம் ப்ரபூ₄தம் க₃ாவோ தா₃ஸ்யோ஽ஸ்வாந் விந்தே₃யம் புருஷா நஹம்" [எந்த லக்ஷ்மியிடமிருந்து மிகுந்த பொன், பசுக்கள், தாஸிகள், குதிரைகள், தாஸர்கள் ஆகிய இவர்களை நான் அடைவேனோ..............] என்று வேதத்திலும்.

"ஐஹிகாமுஷ்மிகாம் ஸித்₃தி₄ம் லப₄தே ஸ்ரீப்ரஸாத₃த: |
தா₃ரித்₃ர்யம் நஸ்யதே தஸ்ய ஸர்வபாபாத் ப்ரமுச்யதே ||"

[ஸ்ரீதேவியின் அருளால் இவ்வுலகிலும் மறுவுலகிலுமுள்ள ஸித்திகளை அடைகிறான். அவனுடைய ஏழ்மை அழிந்து விடுகிறது. எல்லாப் பாபங்களினின்றும் அவன் விடுபடு கிறான்.] என்று பாத்மபுராணத்திலும்.

"பத்₃மயோநிரித₃ம் ப்ராப்ய பட₂ந் ஸூக்தம் தத: க்ரமாத் |
தி₃வ்யம் சாஷ்டகு₃ணைஸ்வர்யம் தத்ப்ரஸாதா₃ச்ச லப்₃த₄வாந் ||"

[பிரமன் இந்த ஸூக்தத்தை (உபதேசமூலமாக) அடைந்து அநுஸந்தித்து, கிரமமாக அஷ்டவிதமான திவ்யைஸ்வர்யங் களையும் லக்ஷ்மீப்ரஸாதத்தால் அடைந்தான்.] என்று ஸநத்குமார ஸம்ஹிதையிலும்.

"ஸர்வகாமப்ரத₃ாம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் |
க்ஷிப்ரப்ரஸாதி₃நீம் லக்ஷ்மீம் ஸரண்யாமநுசிந்தயேத் ||"



[எல்லா விருப்பங்களையும் அளிப்பவளும், அழகியவளும், ஸம்ஸாரமாகிற கடலைத் தாண்டுவிப்பவளும், வெகு விரைவில் அருள் செய்பவளும் சரணமடையத்தகுந்தவளுமான லக்ஷ்மி யை தியானிக்க வேண்டும்.] என்று ஸ்வாயம்புவத்திலும்

"தா₃ரா: புத்ராஸ் தத₂ாக₃ார ஸுஹ்ருத்₃ தா₄ந்யத₄நாதி₃கம் |
ப₄வத்யேதந் மஹாபா₄கே₃ நித்யம் த்வத்₃ வீக்ஷணாந் ந்ருணாம் ||
ஸரீராரோக்₃யமைஸ்வர்யமரிபக்ஷக்ஷயஸ் ஸுக₂ம் |
தே₃வி த்வத்₃ருஷ்டித்₃ருஷ்டாநாம் புருஷாணாம் ந து₃ர்லப₄ம் ||"

[மனைவி, மக்கள், மனை, தாந்யம், தனம் முதலியவை உன்னு டைய கடாக்ஷத்தாலேயே மனிதர்களுக்கு என்றும் உண்டா கின்றன. சரீராரோக்யம், செல்வம், எதிரிகளின் நாசம், ஸுகம் ஆகியவை உன் திருக்கண்ணால் பார்க்கப்பட்ட மனிதர்களுக்கு துர்லபமல்ல.] என்று விஷ்ணு புராணத்திலும்,

"தரும் அவ்வரும்பயனாய திருமகளார்" என்றும்.

"வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே" என்றும் ஆழ்வாராலும்.

"ஸ்ரேயோ ந ஹ்யரவிந்த₃லோசநமந:காந்தாப்ரஸாத₃ாத்₃ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்₄வஸு ந்ருணாம் ஸம்பா₄வ்யதே கர்ஹிசித் ||

[தாமரைக்கண்ணனின் மனத்திற்கினியவளான தேவியின் அருளில்லாவிடில் ஸம்ஸாரம், கைவல்யம், பரமபதம் ஆகிய இவற்றினுள் ஒரு பெருமையும் ஒருபோதும் மனிதர்களுக்கு உண்டாகாது.] என்று ஆளவந்தாராலும்.

"ஐஸ்வர்யமக்ஷரக₃திம் பரமம் பத₃ம் வா
கஸ்மைசித₃ஞ்ஜலிப₄ரம் வஹதே விதீர்ய |
அஸ்மை ந கிஞ்சிது₃சிதம் க்ருதமித்யத₂ாம்ப₃
த்வம் லஜ்ஜஸே கத₂ய கோயமுதா₃ரபா₄வ: ||"

[இவ்வுலகச் செல்வத்தையாவது, கைவல்யமோக்ஷத்தை யாவது, பரமபதத்தையாவது ஒரு அஞ்சலிச்சுமையைச் சுமப்பவனுக்கு அருளியும். "இவனுக்குத் தகுதியானதொன்றையும் நாம் செய்யவில்லையே" என்று நீ வெட்கப்படுகிறாய். அம்மா! இது என்ன ஔதார்யம்! நீயே சொல்லு.] என்று பட்டராலும் ஸ்ரீதேவி எல்லா வரங்களையும் அளிப்பவள் என்னும் அர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றோ. (வரத$_3$ாதே$_3$வீ) "வரத$_3$ா யதி$_3$ மே தே$_3$வி" என்று விஷ்ணுபுராணத்தில் இந்திரஸ்தோத்ரத்தில் "வரத$_3$ா தே$_3$வீ" என்னும் பதங்கள் ஸ்ரீதேவி விஷயமாகப் படிக்கப்பட்டனவன்றோ. (தே$_3$வீ) "தி$_3$வ்யோ தே$_3$வ ஏகோ நாராயண:" "தம: பரே தே$_3$வ ஏகீப$_4$வதி" ஏஷ ஹி தே$_3$வ:" முதலான வேதவாக்யங்களில் தேவனென்று படிக்கப்பட்டவனுடைய பத்னி. "பும்யோக$_3$ா த$_3$ாக்$_2$யாயாம' என்கிற ஸூத்ரப்படி 'தேவ' சப்தத்தின் மேல் 'ங்கீஷ்' என்னும் ப்ரத்யயம் வந்து "தேவீ" என்றாகிறது. தேவபத்னியென்றபடி. அன்றிக்கே. "தி$_3$வுக்ரீட$_3$ா விஜிகீ$_3$ஷா......" என்னும் த$_4$ாத்வர்த்த$_2$ங்கள் எம்பெருமானுக்குப் போலே இவளுக்கும் பொருந்தியிருக்கையால் தேவி எனப்படுவதாகவும் கொள்ளலாம். ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளை இவளுடைய முகோல்லாஸத்திற்காகவே எம்பெருமான் செய்கின்றானுகையால், "ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளை லீலையாக உடையவள்" என்னும் பொருளும். "ஹிரண்யவர்ணாம்" எனப்படும் அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தை உடைத்தாயிருக்கையாலே "காந்தியை உடையவள்" என்னும் பொருளும் இவளிடம் பொருந்தியிருக்கின்றன. மற்றுமுள்ள பொருள்களையும் கண்டுகொள்வது.

இப்படிப் புருஷகாரபூ$_4$தையான பிராட்டியின் வரவைப் பிரார்த்தித்தபிறகு, ப$_2$லப்ரத$_3$னான பகவானின் ஆகமனத்தைப் பிரார்த்திக்கிறது. (அக்ஷரம்) "ந க்ஷரதீதி அக்ஷரம்" [அழிவற்றவனாயிருக்கையால் அக்ஷரம்] ஸ்வரூபஸ்வப$_4$ாவங்களில் மாறுபாடற்றவனாயிருப்பவன். ஆஸ்ரிதஸம்ரக்ஷணமாகிற ஸ்வபாவத்தில் மாறுபாடற்றவனாயிருக்கும் தன்மை இங்கு அக்ஷரசப்தத்தால் விசேஷித்துச் சொல்லப்படுகிறது. "ஆயாது வரத$_3$ா தே$_3$வீ" என்று பிராட்டியை முன்னிட்டிருக்கையாலே. இவன் அநுக்ரஹத்தையல்லது நிக்ரஹத்தை அறியான் என்று தாத்பர்யம். (ப்$_3$ரஹ்ம) அடியார்களைத் தனக்கு ஸமானமாக ஆகும்படி ப்$_3$ரும்ஹணம் செய்பவன். "ப்$_3$ருஹத்வாத் ப்$_3$ரும்ஹணத்வாச்ச தத் ப்$_3$ரஹ்மேத்யபி$_4$தீ$_4$யதே" [பெரிதாயிருக்கையாலும். (பிறவஸ்துக்களைப்) பெரிதாகச் செய்கையாலும் அது ப்ரஹ்மமெனப்படுகிறது.] என்பதல்லவோ ப்ரஹ்மசப்தார்த்தம். "பரமம் ஸாம்யமுபைதி" [ப்ரஹ்மத்துடன் மேலான ஒற்றுமையை அடைகிறான்.] என்று சுருதியிலும். 'மம ஸாத$_4$ர்ம்யமாக$_3$தா:" [என்னுடன் ஸமானகுணத்தை உடையவர்களாகி] என்று கீதையிலும். "தம்மையே ஒக்க அருள் செய்வர்" என்று ஆழ்வாராலும் இவன் ஆஸ்ரிதர்களை ப்ரும்ஹணம் செய்யும் ப்ரகாரம் பேசப்பட்டதன்றோ. (ப்$_3$ரஹ்ம) "நாராயண பரம் ப்$_3$ரஹ்ம" முதலான வேதவாக்யங்களில் சொல்லப்பட்ட நாராயணனே இங்கு அழைக்கப்படுபவன் என்று தெளிவாகிறது. இப்படி ஆஸ்ரிதஸம்ரக்ஷணஸ்வப$_4$ாவத்தையும், த$_3$ாஸபூ$_4$தர்களுக்குத் தன்னையே ஒக்க அருள்செய்யவல்ல சக்தியையும் உடையவனாயிருந்தாலும் ஒருவராலும் அறியவொண்ணாதவனாயிருந்தால் இந்த குணங்கள் காட்டிலெரித்த நிலவு போலே ப்ரயோஜனமற்றதாகுமன்றோ என்னும் ஸந்தேஹம் எழ. (ஸம்மிதம்) என்கிறது. வேதாந்தங்களிலே நன்கு அறியப்படுமவன்—"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம" "விஜ்ஞாநமாநந்த$_3$ம் ப்$_3$ரஹ்ம" "நாராயண பரம் ப்$_3$ரஹ்ம" முதலானவாக்யங்களால் இவனுடைய ஸ்வரூபமும். "ஆதி$_3$த்ய வர்ணம்" "வித்$_3$யுத: புருஷாத்" "நீலதோயத$_3$மத்$_4$யஸ்த$_2$ா" "ஹிரண்மய: புருஷ:" என்று இவனுடைய ரூபமும்,

''ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:'' முதலான வாக்யங்களால் இவனுடைய குணங்களும், ''தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்'' ''பரமே வ்யோமந்'' ''அம்ப₄ஸ்யபாரே பு₄வநஸ்ய மத்₄யே நாகஸ்ய ப்ருஷ்டே₂'' முதலான வாக்யங்களால் இவனுடைய விபூ₄திகளும் வேதத்தில் தெளிவாகத் தெரிவிக்கப்படுகின்றன வன்றோ. (கா₃யத்ரி) ''கா₃யந்தம் த்ராயதே'' [தன்னைப் பாடுமவனைக் காப்பாற்றுகிறது] என்னும் பெயர் பெற்றுள்ள நீ எங்களைக் காப்பாற்றவேண்டாவோ? 'கா₃யத்ரீம்' என்பதை கா₃யத்ரி ஈம் என்று பிரித்துக்கொள்ளவேண்டும். (ச₂ந்த₃ஸாம் மாதா) வேதங்களுக்கு மாதாவாயிருக்கும் நீ. 'த்வம்' (நீ) என்னும் பதத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். (ச₂ந்த₃ஸாம் மாதா) ''மாதாபித்ரு ஸஹஸ்ரேப்₄யோऽபி வத்ஸலதரம்'' [ஆயிரம் தாய் தந்தையரைக்காட்டிலும் வாத்ஸல்யம் மிகுந்தது வேதம்.] எனப்படும் வேதத்திற்கும் தாயாயிருக்கும் நீ எங்களை நோக்க வேண்டாவோ? வேதத்திற்கு ஸாரபூ₄தமாயிருப்பதால் வேதத்திற்குத் தாய் எனப்படுகிறது காயத்ரீ மந்திரம். அன்றிக்கே, அநுஷ்டுப் முதலிய மற்ற சந்தஸ்ஸுக்களுக்குத் தாய் போல் தலைவியாயிருப்பவள் காயத்ரீ என்றும் பொருள் கொள்ளலாம். ''கா₃யத்ரீ ச₂ந்த₃ஸாமஹம்'' [சந்தஸ்ஸுக்களுள் நான் காயத்ரியாகிறேன்] என்றான் கீதாசார்யன்.

(ஈம்) ''அகாரேணோச்யதே விஷ்ணு:'' [அகாரத்தினால் சொல்லப்படுமவன் விஷ்ணு.] ''அக்ஷராணாம் அகாரோऽஸ்மி'' [எழுத்துக்களுள் நான் அகாரமாகிறேன்.] என்கிறபடியே அகாரத்தினால் சொல்லப்படுபவன் விஷ்ணு. அவ்வகாரத்தின் மேல் ''பும்யோகா₃தா₃க்₂யாயாம்'' என்கிற ஸூத்ரப்படி 'ஙீஷ்' என்னும் ப்ரத்யயம் வந்து நிஷ்பன்னமான 'ஈ' என்னும் எழுத்து அகாரவாச்யனான விஷ்ணுவின் பத்தினியாகிற லக்ஷ்மீ தேவியைக் குறிக்கிறது. 'ஈம்' என்பது இரண்டாவது வேற்றுமை ஒருமையாகையால் 'லக்ஷ்மீ



தேவியை'' என்று பொருள்படுகிறது. 'தே₃வ:' என்பது விஷ்ணுவையும், 'தே₃வீ' என்பது லக்ஷ்மியையும் குறித்தாப்போல், அகாரம் விஷ்ணுவையும், ஈகாரம் லக்ஷ்மியையும் குறிக்கத்தட்டில்லையன்றோ. (இத₃ம் ப்₃ரஹ்ம) 'அக்ஷரம் ப்₃ரஹ்ம' என்று என்னால் சொல்லப்பட்ட இந்த நாராயணனையும். ''ஸதே₃வ ஸோம்ய இத₃ம்'' என்றாற்போலே இவ்வுலகை 'இத₃ம்' [இது] என்று காட்டி அதற்கு அந்தர்யாமியான நாராயணனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். அன்றிக்கே, தன் ஹ்ருதயத்திலிருக்கும் பகவானை 'இத₃ம்' என்பதாகவும் கொள்ளலாம். (ந:) எங்களுக்காக; எங்களுடைய உஜ்ஜீவனத்திற்காக. (ஜுஷஸ்வ) ஸ்ரீதேவியையும் நாராயணனையும் அடைவிப்பாயாக. 'ணிச்'என்னும் ப்ரத்யயத்தை உள்ளடக்கியிருக்கையால், 'அடைவாயாக' என்று பொருள்படும் இப்பதம் இங்கு 'அடைவிப்பாயாக' என்று பொருள்படுகிறது. 'ஜுஷி' என்கிற தாது ப்ரீதியையும் சொல்லுமாகையால், 'ப்ரீதியடையச்செய்வாயாக' என்றும் இப்பதத்திற்குப் பொருள் கொள்ளலாம். ஆக, இம்மந்திரத்தால் ஸ்ரீமந்நாராயணனை அடைவிக்கும்படி காயத்ரியை நோக்கிப் பிரார்த்திக்கப்பட்டதாயிற்று.

இப்படி காயத்ரியைப் பிரார்த்தித்தவுடன்காயத்ரியினால் ப்ரீதியடையச்செய்யப்பட்ட ஸ்ரீமந்நாராயணன் ப்ரஸந்நனாக, அவனைத் துதிக்கிறான் அடுத்த மந்திரத்தாலே: (ஓஜோऽஸி) இங்கு குணத்தைக் குறிக்கும் ஓஜ:, ஸஹ:, ப₃லம், ப்₄ராஜ: முதலான பதங்கள் அந்தந்த குணத்தையுடைய வஸ்துவை உணர்த்துகின்றன. குணங்கள் குணியைவிட்டுத் தனித்து நில்லாவன்றோ. (ஓஜோऽஸி) ''யஸ்யாயுதாயுதாம்ஸாம்ஸே விஸ்வஸக்திரியம் ஸ்தி₂தா'' [எவனுடைய பலகோடியில் ஒருபாகமான அம்சத்தில் இந்த உலகசக்தி நிலைநிற்கிறதோ....] ''மேரோரிவாணுர் யஸ்யைதத்'' [இவ்வண்டமெல்லாம் எவனுக்கு மேருமலைக்கு அணுபோலாகின்றதோ....] என்கிறபடியே எல்லாவுலகையும் தன் ஏகாம்சத்தினாலே தரித்து

நிற்கும் சக்தி 'ஓஜஸ்' எனப்படுகிறது. அப்படிப்பட்ட சக்தியை உடையவனாகிறாய் என்று பொருள். (ஸஹோऽஸி) அயலாரை அடக்கக்கூடிய சக்தியை உடையவனாகிறாய். வேகத்தை உடையவனாகிறாய் என்றுமாம். "மநஸோ ஜவீய:" [மனஸ்ஸைக் காட்டிலும் வேகமாகச் செல்லும் வஸ்து] எனப்பட்டவனன்றோ. (ப$_3$லமஸி) பலத்தையுடைய வஸ்துக்களுக்கும் பலத்தைக்கொடுப்பவனாயிருக்கிறாய். "ப$_3$லம் ப$_3$லவதாம் சாஹம்" [பலத்தையுடையவர்களுடைய் பலம் நானே] என்றானன்றோ கீதாசார்யன். (ப்$_4$ராஜோஸி) தேஜஸ்ஸை உடையவனாயிருக்கிறாய்; தேஜஸ் என்று திருமேனியின் காந்தி சொல்லப்படுகிறது. "தமேவ பா$_4$ந்தமநுபா$_4$தி ஸர்வம்" என்று வேதத்திலும் இவனுடைய தேஜஸ்ஸாலேயே ஸூர்யாதிகளும் பிரகாசிக்கின்றனர் என்பது சொல்லப்பட்டது. "தேஜஸ் தேஜஸ்விநாமஹம்" என்றும், "ப்ரபா$_4$ऽஸ்மி ஶஶிஸூர்யயோ:" [ஸூர்யசந்திரர்களின் ஒளி நானே] என்றும் கீதாசார்யனாலும் கீர்த்திக்கப்பட்டது. (தே$_3$வாநாம் தா$_4$ம அஸி) தேவர்களுக்கு இருப்பிடமாயிருக்கிறாய். அதாவது: அவர்களுக்கு ஆத்மாவாயிருக்கிறாய் என்று பாவம். அன்றிக்கே அந்த தேவர்களுடைய போ$_4$க$_3$ஸ்தா$_2$னமான ஸ்வர்க்கமாயிருப்பவனும் நீயே என்றுமாம். "இனிய நல் வான்சுவர்க்கங்களுமாய்" என்றும், "ஊனமில் சுவர்க்கமென்கோ?" என்றும் அருளிச்செய்தாரன்றோ ஆழ்வார். (தே$_3$வாநாம் நாம அஸி) தேவர்களுடைய பெயராகவும் ஆகிறாய். அதாவது அவர்களுடைய பெயரும் உன்னைக் குறிக்கும்படி அவர்களுக்கு அந்தர்யாமியாயிருக்கிறாய். (தே$_3$வாநாம் தா$_4$ம நாமாஸி) சேதநர்களுடைய ரூபமாகவும் நாமமாகவும் இருக்கிறாய் 'என்றும் பொருள் கொள்ளலாம். அவர்களுக்கு நாமரூபங்களைக் கொடுத்தவனாகிறாய் என்று தாத்பர்யம். "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ$_4$ர: நாமாநி க்ருத்வாபி$_4$வத$_3$ந் யதா$_3$ஸ்தே" [எவனொருவன் எல்லாச் சேதனர்க்கும் நாமரூபங்களைக் கொடுத்து அவற்றை



உச்சரிக்கிறானோ.......] என்றும், "அநேந ஜீவேந ஆத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி" [எனக்குச் சரீரபூதனான இந்த ஜீவனைக்கொண்டு அசித்தை வியாபித்து நாமரூபங்களைக் கொடுக்கிறேன்.] என்றும் வேதத்தில் சொல்லப்பட்டது.

"நாமரூபஞ்ச பூ$_4$தாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் |
வேத$_3$ஶப்$_3$தே$_3$ப்$_4$ய ஏவாதௌ$_3$ தே$_3$வாதீ$_3$நாம் சகார ஸ: ||

[தேவர், மனுஷ்யர், திர்யக், ஸ்தாவரம் என்னும் நால் வகைப் பிராணிகளுக்கு நாமரூபங்களையும், செய்தொழில்களின் விவரத்தையும், கல்பாதியில் அவர் வேதத்திலுள்ள சப்தங்களிலிருந்தே செய்தார்] என்று விஷ்ணு புராணத்திலும் விளக்கப்பட்டது. (தே$_3$வாநாம் தா$_4$ம அஸி நாம) என்று கூட்டி 'தேவர்களின் இருப்பிடமாக இருக்கிறாயல்லவா' என்றும் பொருள் கொள்ளலாம். 'நாம' என்னும் பதம் ப்ரஸித்தியைக் குறிக்கிறது. தா$_4$மசப்தம் தேஜஸ்ஸையும் சொல்லுமாகையால் "தேவர்களின் தேஜஸ்ஸாயிருப்பவனும் நீயேயன்றோ" என்றும் பொருள் கொள்ளலாம்.

"தஸ்ய பா$_4$ஸா ஸர்வமித$_3$ம் விபா$_4$தி"
"யதா$_3$தி$_3$த்யக$_3$தம் தேஜோ ஜக$_3$த்$_3$பா$_4$ஸயதேऽகி$_2$லம் |
யச்சந்த்$_3$ரமஸி யச்சாக்$_3$நௌ தத்தேஜோ வித்$_3$தி$_4$ மாமகம் ||"

[உலகையெல்லாம் ஒளிவிடச்செய்யும் ஆதித்யனின் தேஜஸ்ஸும், சந்திரனின் ஒளியும், அக்னியின் பிரகாசமும் என்னுடையவையே என்றறிவாயாக.] என்று வேதகீதாதிகளில் சொல்லப்பட்டதன்றோ.

(விஶ்வமஸி) "விஶதீதி விஶ்வம்" என்கிறபடியே ஸர்வவ்யாபியாயிருக்கையால் விஶ்வமெனப்படுகிறாய். "விஶ்வம் நாராயணம்" என்று வேதத்திலும், "விஶ்வம் விஷ்ணு:" என்று ஸஹஸ்ரநாமத்திலும் இது விஷ்ணுவின் நாமமாகப்

படிக்கப்பட்டது. இங்கு "விஶ்வம்" என்று முதல் நாமத்தைப்படித்தது பகவானுக்குள்ள ஆயிரம் நாமங்களுக்கும் உபலக்ஷணம். "தே$_3$வோ நாமஸஹஸ்ரவாந்" [ஆயிரம் பெயரையுடைய தேவன்] "ஸஹஸ்ரநாம்நே புருஷாய" என்று ஸ்ம்ருதிகளிலும்,

"ஓராயிரமாயுலகேழளிக்கும்
பேராயிரம் கொண்டதோர் பீடுடையன்"
"பேருமோராயிரம் பிறபல உடையவெம்பெருமான்"
என்று ஆழ்வாராலும் புகழப்பட்டவனன்றோ இவன்.

(விஶ்வாயு:) "விஶ்யதே" என்னும் வ்யுத்பத்தியால் எம்பெருமானால் வியாபிக்கப்பட்டு விளங்கும் உலகத்தைச் சொல்லுகிறது விஶ்வபதம். அதற்கு அயனமாயிருப்பவன் விஶ்வாயு: எனப்படுகிறான். (விஶ்வமஸி விஶ்வாயு:) "விஶ்வம் நாராயணம்" என்றதை அடியொற்றுகிறது. (விஶ்வாயு:) நாரங்களாகிற விஶ்வத்திற்கு இருப்பிடமாகவும், ப்ராப்ய ப்ராபகங்களாகவுமாகிறாய். நாராயணபத வியாக்கியானத்தின்போது எழுதப்பட்ட விஷயங்களை இங்கும் படிப்பது.

(ஸர்வமஸி) "ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:" [எல்லாவற்றையும் வியாபித்திருக்கையால் எல்லாமுமாகிறாய்.] என்று சொன்ன கணக்கிலே எல்லா வஸ்துகளுமாகிறாய். "புருஷ ஏவேத$_3$ம் ஸர்வம்" முதலான வேதவாக்கியங்கள் இவ்வர்த்தத்தைப் புருஷோத்தமன் விஷயமாகப் படித்தன. (ஸர்வாயு: அஸி) ஸர்வ வஸ்துக்கட்கும் ஜீவனமாயிருக்கிறாய். ஆயு:— ஜீவனம். "தத்$_3$ விஶ்வமுபஜீவதி" [உலகெல்லாம் இவனாலேயே ஜீவிக்கிறது.] என்ற நாராயண ஸூக்தவாக்யத்தின் பொருளை அநுஸந்திக்கிறது. பகவான் ஸர்வ ஜீவர்க்கும் ஜீவனமாயிருக்கையாவது: அவர்க்கு ஜீவன ஸாத$_4$னமானவற்றை அளிக்கையேயாகும். (ஸர்வமஸி) "வாஸுதே$_3$வஸ் ஸர்வம்" என்கிறபடியே அடியார்க்கு,



தா$_4$ரகபோஷக போ$_4$க்$_3$யங்களாகிறாய். (ஸர்வாயு:) அவர்களுடைய ஆயுளை விருத்தி செய்கிறாய் என்றும் கொள்ளலாம். (அபி$_4$பூ$_4$: அஸி) உனக்கும் உன்னடியார்க்கும் விரோதியாயிருப்பவர்களை நலிந்து தோல்வியடையச்செய்கிறாய். "அபி$_4$யாதா ப்ரஹர்த்தா ச" [ராமபிரான் எதிரிகளைத் தானே படையெடுத்துச்சென்று சண்டையிடுவார்.] "சென்று கொன்று வென்றிகொண்ட வீரன்" "செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா" "அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா" முதலான ப்ரமாணங்களை அநுஸந்திப்பது. நின்ற நிலையைக் கண்டே எதிரிகள் மண்ணுண்ணும்படியிருப்பவனன்றோ இவன். "ஸுக$_2$ஸுப்த: பரந்தப:" என்று இவன் தூங்கும்போது கண்டாலும் எதிரிகள் நெஞ்சிடிந்துபோவார்கள் என்றாளன்றோ பிராட்டி.

"ஶத்ரோ: ப்ரக்$_2$யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:"
"தம் மந்யே ராக$_4$வம் வீரம் நாராயணமநாமயம்"

[வீரரான ராகவனை அழிவற்ற நாராயணனென்றே அறிகிறேன்.] என்று எதிரிகளும் கொண்டாடும்படியானதன்றோ இவனுடைய பராபி$_4$ப$_4$வன ஸாமர்த்$_2$யம். (அபி$_4$பூ$_4$:) ஜபத்திற்குத் தடை செய்யும் பாபம் முதலியவற்றைப் போக்கடிக்கிறாய் என்றும் பொருள் கொள்ளலாம்.

(ஓம்) இப்படிப்பட்ட அகாரவாச்யனை அனந்தனுக்கே அடிமையான நான். (க$_3$ாயத்ரீம்) உம்மை உகப்பிப்பதற்குக் காரணமான க$_3$ாயத்ரியை. (ஆவாஹயாமி) என்னருகில் வரவழைக்கிறேன். ஸ்ரீமந் நாராயணனே நீர் அதை அனுமதிப்பீராக. இதன் பிறகு "ஸாவித்ரீமாவாஹயாமி" "ஸரஸ்வதீமாவாஹயாமி" என்றும் சொல்லுவார்கள்.

"ஆயாது" "ஓஜோऽஸி" என்னும் மந்திரங்கள் முழுவதையும் காயத்ரீபரமாகக் கொண்டு வியாக்கியானம் செய்வாருமுண்டு. அதாவது:—(ஆயாது வரதா$_3$ தே$_3$வீ)

தன்னை அடைந்தவர்களுக்கு இஷ்டப்பட்டதையெல்லாம் அளிப்பவளான காயத்ரீ தேவி இங்கு வரட்டும். அவள் எப்படிப்பட்டவளெனில்: (அக்ஷரம்) அழிவற்றவள்; நித்ய மானவள் என்றபடி. லிங்க மாறுபாடு சா$_2$ந்த$_3$ஸம். அழி வற்றவளென்பதற்குக் காரணமென்னென்னில்: (ப்$_3$ரஹ்ம ஸம்மிதம்) வேதத்திற்குள் மேலானதாகச் சொல்லப் பட்டவள். வேதமே அழிவற்றதாயிருக்கும்போது வேத$_3$ஸார பூதமான இதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ என்று பாவம். (ப்$_3$ரஹ்ம ஸம்மிதம்) வேதத்திற்கு ஒப்பானது என்றும் பொருள் கொள்ளலாம். ப்ரஹ்மசப்தம் வேதத்தைச் சொல்லும். காயத்ரியானது ஸகலவேத துல்யமானது, ஸகல வேதத்தினுள்ளும் உயர்ந்தது என்னுமர்த்தம் ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் ப்ரஸித்தம். (ப்$_3$ரஹ்ம ஸம்மிதம்) ப்ரஹ்மத்தை ஒத்தவள் என்றும் கொள்ளலாம். ஸர்வ வஸ்துக்களுக்கும் காரணமான ப்ரஹ்மத்தைப்போல், ஸர்வ வாக்குக்களுக்கும் மூலமான வேதத்துக்குக் காரணமாயிருப்பவள் என்கிறபடி. (ப்$_3$ரஹ்ம ஸம்மிதம்) **"ஓமித்யேகாக்ஷரம் ப்$_3$ரஹ்ம"** என்று கீதையில் சொல்லியபடியே ப்ரஹ்ம சப்தம் ஓங்காரத்தையும் சொல்லும். 'ப்ரஹ்ம ஸம்மிதம்' என்கையால் ஓங்கார துல்யையாயிருப்பவள் எனப்படுகிறது. ஓங்காரம்போல் ஸர்வார்த்தங்களுக்கும் ஸங்க்$_3$ரஹமாயிருப்பது க$_3$ாயத்ரி என்றபடி. (க$_3$ாயத்ரீம்) காயத்ரீ தேவதை. முதல் வேற்றுமையாகக் கொள்ள வேண்டும். (சா$_2$ந்த$_3$ஸாம் மாதா) வேதங்களுக்குத் தாயாயிருப்பவள். அதாவது: வேத மந்திரங்களுள் ப்ரத$_4$ானமாயிருப்பது என்றபடி. த்ரிஷ்டுப் முதலிய சந்தஸ்ஸுக்களுள் முக்கியமானவள் என்றும் பொருள் கொள்ளலாம். (ந:) எங்களுடைய. (இத$_3$ம் ப்$_3$ரஹ்ம) இந்த ஸ்தோத்திரரூபமான வாக்கை. (ஜுஷஸ்வ) அங்கீகரிப்பாயாக.

அடுத்தபடியாக. பரமாத்மாவை காயத்ரீ மந்திரத்தால் ஸ்தோத்ரம் செய்வதற்குத் தகுந்தசக்தி முதலானவற்றையும், ப்ரதிப$_3$ந்த$_4$கமான பாப நிவ்ருத்தியையும் செய்பவள் நீயே என்று காயத்ரியைத் துதிக்கிறான்: (ஓஜோ஽ஸி) பரம புருஷனைத் துதிக்கைக்கு உறுப்பான எங்களுடைய இந்திரியங்களுடைய சக்தியாயிருப்பவளும் நீயே. அதாவது: நீயே இந்திரியங்களுக்கு சக்தியைத் தருபவள் என்று பா$_4$வம். (ஸஹோ஽ஸி) ஸ்தோத்திரம் செய்யும் வாக்கிற்கு வேகத்தைத் தருபவளும் நீயே. (ப$_3$லமஸி) அவற்றுக்கு பலத்தைத் தருபவளும் நீயே. ஸ்தோத்திரம் செய்ய அவசியமான சரீர பலத்தைத் தருபவளும் நீயே என்றும் கொள்ளலாம். (ப்$_4$ராஜோ஽ஸி) ஸ்தோத்ரம் செய்வதனால் வரும் சரீர காந்தியும் நீயே. (தே$_3$வாநாம் த$_4$ாம நாமாஸி) தேவர்களின் தேஜஸ்ஸும் உன்னால் ஏற்பட்டதேயன்றோ. 'நாம' என்பது பிரஸித்தியைக் குறிக்கிறது.

(விஶ்வமஸி) ஸர்வவேதத்திலும் வியாபித்திருக்கிறாய். அன்றிக்கே 'விஶ்வம்' என்று விஷ்ணுவைச் சொல்லுவதாய், விஷ்ணுவைப்போல எல்லோரையும் ஆக்ரமிக்கிறாய் என்றும் கொள்ளலாம். (விஶ்வாயு:) உன்னை அனுஸந்திக்கும் அனைவர்க்கும் ஆயுளை வளரச் செய்கிறாய். (ஸர்வமஸி) உன்னை அடைந்தவர்களுக்கு த$_4$ாரகபோஷகபோ$_4$க்$_3$யங்கள் எல்லாமுமாகிறாய். உன்னை அடைந்தவர் அனைவர்க்கும் நிர்வாஹிகையாயிருக்கிறாய் என்றும் கொள்ளலாம். (ஸர்வாயு:) எல்லாருக்கும் ப்ராப்யப்ராபகங்களாகிறாய். (அபி$_4$பூ$_4$:) பரமாத்ம ப்ராப்தி விரோதி$_4$ பாபங்களைப் போக்கடிப்பவள் நீயே. (ஓம் க$_3$ாயத்ரீம் ஆவாஹயாமி) இப்படிப்பட்ட காயத்ரீ தேவியான உன்னை "ஓம்" என்னும் மந்திரத்தினால் அழைக்கிறேன். ஓங்கார ரூபிணியான உன்னை அழைக்கிறேன் என்றும் கொள்ளலாம்.

ஆக இப்படி இரு வகையாக. "ஆயாது" "ஓஜோ஽ஸி" என்னும் மந்திரங்களுக்குப் பொருள் காட்டப்பட்டபோதி

லும், ஸ்ரீமந்நாராயணனை அழைப்பதாக விவரித்திருக்கும் முதல் வழியே சிறந்தது. அதுவே ஸுதர்சன பட்டரால் ஆதரிக்கப்பட்டது. பல பதங்களை 'ச$_2$ாந்த$_3$ஸம்' என்று சொல்லவேண்டிய கிலேசங்களற்றது.' இந்த மந்திரங்களைப் படித்தபின்பு, "க$_3$ாயத்ர்யா: விஸ்வாமித்ர ருஷி: தே$_3$வீ க$_3$ாயத்ரீ ச$_2$ந்த$_3$: ஸவிதா தே$_3$வதா" என்று காயத்ரியின் ரிஷி சந்தஸ் தேவதைகளை அநுஸந்தித்துக்கொண்டு நூற்றெட்டு தடவை (அசக்தர்களானால் இருபத்தெட்டு தடவைக்குக் குறையாமல்) காயத்ரீ மந்திரத்தை ஜபம் செய்யவேண்டும்.

**"ஓம்। பூ$_4$ர் பு$_4$வஸ் ஸுவ:। தத் ஸவிதுர் வரேண்(ணி)யம்।**
**ப$_4$ர்க்கே$_3$ா தே$_3$வஸ்ய தீ$_4$மஹி। தி$_4$யோ யோ ந:**
**ப்ரசோத$_3$யாத் ॥"**

என்பதே காயத்ரீ மந்த்ரம். இதன் பொருளை இனிச் சிந்திப்போம்.

## காயத்ரியின் அர்த்தவிசாரம்

(ஓம் பூ$_4$ர்பு$_4$வஸ் ஸுவ:) இதன் பொருளை ப்ராணாயாமத்தின் அர்த்தத்தை எழுதும்போது விளக்கியிருக்கிறோம். அங்கு கண்டுகொள்வது.

(ஸவிது: தே$_3$வஸ்ய வரேண்யம் தத் ப$_4$ர்க்க$_3$; தீ$_4$மஹி) தேவனாகிற ஸூர்யனுக்குள்ளிருப்பதாய், ஸர்வராலும் விரும்பப்படுவதாயிருக்கும் அந்தத் தேஜஸ்ஸை தியானிக்கிறோம். (தே$_3$வஸ்ய) பிரகாசியாநிற்கும்படியான; ஸ்தோத்ரம் செய்யத் தகுந்தவனாகிய என்றும் பொருள் கொள்ளலாம். ஆயிரம் கிரணங்களையுடையவனாகிய என்றும் கொள்ளலாம். (ஸவிது:) ஸூர்யனுடைய. ஸூர்ய மண்டலத்திலுள்ள என்றபடி. (வரேண்யம் தத் ப$_4$ர்க்க$_3$:) உபாஸிக்கத்தகுந்த அந்தத் தேஜஸ். (தத்) பல ஸ்ருதிகளில் படிக்கப்பட்டிருக்கும் ப்ரஸித்தியை நினைக்கிறது.



**"ய ஏஷ: அந்தராதி$_3$த்யே ஹிரண்மய: புருஷோ**
**த்$_3$ருஸ்யதே। ஹிரண்ய ஸ்மஸ்ருர் ஹிரண்யகேஸ ஆப்ர**
**ணக$_2$ாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:। தஸ்ய யத$_2$ா கப்யாஸம்**
**புண்ட$_3$ரீகமேவமக்ஷிணீ"**

[ஸூர்யனுக்கு நடுவில் பொன்மயனாய், பொன்போன்ற மீசையை உடையவனாய், பொன்போன்ற திருக்குழற் கற்றையை உடையவனாய், நகம் வரையில் எல்லாமே பொன்னாயிருக்குமவனான யாவனொரு புருஷன் காணப்படுகிறானோ அவனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரைபோன்ற இரு கண்கள் உள.] என்று சாந்தோக்யத்தில் படிக்கப்பட்ட புண்டரீகாக்ஷனாகிய தேஜஸ்ஸே இங்கு சொல்லப்படுமவன் என்று விளங்குகிறது. இப்படி ஆதி$_3$த்ய மண்டலத்தின் நடுவில் எழுந்தருளியிருப்பவன் பரமபுருஷனே என்பதை விவரிக்கும் ஸ்ம்ருதிகளைக் காட்டுவோம் இனி.

**"ஈஸ்வரம் புருஷாக்$_2$யம் து ஸத்யத$_4$ர்மாணமச்யுதம்।**
**ப$_4$ர்க்க$_3$ாக்$_2$யம் விஷ்ணுஸம்ஜ்ஞம் து த்$_4$யாத்வாऽம்ருத**
**முபாஸ்நுதே ॥**
**ஹ்ருத்$_3$வ்யோம்நி தபதி ஹ்யேஷ ப$_3$ாஹ்யே ஸூர்யஸ்ய**
**சாந்தரே।**
**அக்$_3$நாவதூ$_4$மகேऽப்யேஷ ஜ்யோதிஸ் சித்ரதரோ ஹ்யயம் ॥**
**ஸவிதுஸ் தத்$_3$ வரேண்யந்து ஸத்யத$_4$ர்மாணமீஸ்வரம்।**
**ஹிரண்யவர்ணம் புருஷம் வ்யோம தத்$_3$ விஷ்ணுஸம்ஜ்ஞிதம் ॥**
**ஸூர்யமத்$_4$யே ஸ்தி$_2$தஸ் ஸோமஸ் தஸ்ய மத்$_4$யே ஹுதாஸந:।**
**தேஜோமத்$_4$யே ஸ்தி$_2$தம் ஸத்வம் ஸத்வமத்$_4$யே**
**ஸ்தி$_2$தோऽச்யுத: ॥"**

[ஈஸ்வரனாய், புருஷனென்று பெயரை உடையவனாய், (ஸரணாகத ரக்ஷணமாகிற) ஸத்யமான தர்மத்தை உடையவனாய், ஆச்ரிதர்களை நழுவவிடாத அச்சுதனாய், ப$_4$ர்க்க$_3$ம் (ஒளி) எனப்படுமவனாய், விஷ்ணுவென்னும் திருநாமத்தையுடையவனான புருஷனை தியானித்து மோக்ஷத்தை அடைகிறான். (ஜீவனுக்குள்ளிருக்கும்) ஹ்ருதயாகாசத்திலும், வெளியி

லுள்ள ஸூர்யமண்டலத்தின் நடுவிலும், புகையற்ற அக்னியிலும் இந்த ஒளியானது மிக விசித்திரமாகப் பிரகாசிக்கிறது. அதுவே ஸூர்யனுக்குள்ளிருக்கும் விரும்பத் தக்க வஸ்து. அதுவே ஸத்யமான த$_4$ர்மத்தையுடைய நியந்தா. அதுவே ஹிரண்யவர்ணனான புருஷன்; விஷ்ணுவென்னும் பெயரையுடைய அதுவே ஆகாசம். ஸூர்ய மத்தியில் ஸோமன் இருக்கிறான்; அவனுக்கு நடுவில் அக்னி இருக்கிறான். அக்னிக்கு நடுவில் சுத்த ஸத்வமிருக்கிறது. சுத்தஸத்வத்தின் நடுவில் அச்யுதனிருக்கிறான்.] என்று யோகயாஜ்ஞவல்க்யரால் சொல்லப்படுகிறது.

"ரவிமத்$_4$யே ஸ்தி$_2$தஸ் ஸோமஸ் தஸ்ய மத்$_4$யே ஹுதாஶந:|
தேஜோமத்$_4$யே ஸ்தி$_2$தம் ஸத்வம ஸத்வமத்$_4$யே ஸ்தி$_2$தோச்யுத:||
ஏஷ வை புருஷோ விஷ்ணுர் வ்யக்தாவ்யக்தஸ் ஸநாதந:||"

[ஸூர்யன் நடுவில் ஸோமனிருக்கிறான்; அவனுக்கு நடுவில் அக்னியிருக்கிறான். அக்னியின் நடுவில் சுத்தஸத்வமயமான திருமேனியுள்ளது; அத்திருமேனியினுள் அச்சுதன் எழுந்தருளியிருக்கிறான். இவனே ஸ்தூலஸூக்ஷ்மப்ரபஞ்சமாயும், பழமையானவனாகவும், புருஷன் என்னும் பெயரையுடையவனாகவுமுள்ள விஷ்ணு.] என்று யமஸ்ம்ருதியிலும், ஶங்க$_2$ஸ்ம்ருதியிலும் உணர்த்தப்பட்டது.

"யோऽஸௌ விஷ்ண்வாக்$_2$ய ஆதி$_3$த்யே புருஷோऽந்தர் ஹ்ருதி$_3$ஸ்தி$_2$த:|
ஸோऽஹம் நாராயணோ தே$_3$வ: புருஷோ லோகப$_4$ாவந:||"

[ஹ்ருதயத்தின் நடுவிலிருப்பவனாய், ஆதித்யனுக்கு நடுவிலுள்ளவனாய், விஷ்ணுவென்னும் திருநாமத்தை உடையவனான யாதொரு புருஷனிருக்கிறானோ, அவன் தேவனாய், புருஷனாய், லோகஸ்ரஷ்டாவாயிருக்கும் நாராயணனான நானே.] என்று தத்தாத்ரேய ஸ்ம்ருதியிலும் உரைக்கப்பட்டது.

"வித்$_3$யாஸஹாயவந்தம் மாமாதி$_3$த்யஸ்த$_2$ம் ஸநாதநம்|
கபிலம் ப்ராஹுராசார்யாஸ் ஸாங்க்$_2$யா நிஶ்சிதநிஶ்சயா:||"



[த்$_3$ருட$_4$மான அத்$_4$யவஸாயத்தையுடைய ஸாங்க்$_2$யாசார்யர்கள், பழமையானவனான என்னை, ஸூர்யமண்டலத்தின் நடுவில், வித்யையுடன் கூடின கபிலனாகச் சொல்லுகிறார்கள்.] என்று மஹாபாரதம் மோக்ஷ தர்மத்திலும் சொல்லப்பட்டது. ஆக்நேய நாரஸிம்ஹ புராணங்களில்

"த்$_4$யேயஸ் ஸதா$_3$ ஸவித்ருமண்ட$_3$லமத்$_4$யவர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:|
கேயூரவாந் மகரகுண்ட$_3$லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்$_4$ருதஶங்க$_2$சக்ர:||"

[ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவனாய், கமலாஸனத்தில் எழுந்தருளியிருப்பவனாய், தோள்வளை, மகரகுண்டலம், கிரீடம், ஹாரம் ஆகியவற்றை உடையவனாய், ஸுவர்ணமயமான திருமேனியை உடையவனாய், ஶங்கசக்கரங்களை தரித்திருப்பவனான நாராயணன் எப்போதும் தியானிக்கத் தக்கவன்.] என்று படிக்கப்படும் வசனம் பண்டிதர்களுக்கும், பாமரர்களுக்கும் ப்ரஸித்தமானது.

"ஸைஷா ஶக்தி: பரா விஷ்ணோ: ருக்$_3$யஜுஸ்ஸாமஸம்ஜ்ஞிதா|
ஸைஷா த்ரயீ தபத்யம்ஹோ ஜக$_3$தஶ்ச ஹிநஸ்தி யா||
ஏஷ விஷ்ணு: ஸ்தி$_2$த: ஸ்தி$_2$த்யாம் ஜக$_3$த: பாலநோத்$_3$யத:|
ருக்$_3$யஜுஸ்ஸாமபூ$_4$தோऽந்தஸ் ஸவிதுர் த்$_3$விஜ திஷ்ட$_2$தி||
மாஸி மாஸி ரவிர் யோ யஸ் தத்ர தத்ர ஹி ஸா பரா|
த்ரயீமயீ விஷ்ணுஶக்திரவஸ்தா$_2$நம் கரோதி வை||
விஷ்ணுஶக்திரவஸ்தா$_2$நம் ஸதா$_3$தி$_3$த்யே கரோதி வை|
ஏவம் ஸா ஸாத்விகீ ஶக்திர் வைஷ்ணவ்யேஷா த்ரயீமயீ||
ஆத்மஸப்தக$_3$ணஸ்த$_2$ம் தம் ப$_4$ாஸ்வந்தமதி$_4$திஷ்ட$_2$தி|
தயா சாதி$_4$ஷ்டி$_2$தஸ் ஸோயம் ஜாஜ்வலீதி ஸ்வரஶ்மிபி$_4$:||
தமஸ்ஸமஸ்தம் ஜக$_3$தாம் நாஶம் நயதி சாகி$_2$லம்|
ஏவம் ஸா வைஷ்ணவீ ஶக்திர் நைவாபைதி ததோ த்$_3$விஜ|
மாஸாநுமாஸம் ப$_4$ாஸ்வந்தம் அத்$_4$யாஸ்தே தத்ர ஸம்ஸ்தி$_2$தா||"

[ருக், யஜுஸ், ஸாமம் என்னும் இந்த த்ரயீ (மூன்று வேதங்கள்) விஷ்ணுவினுடைய மேலான சக்தியாகும். இது பிரகாசியாநின்றுகொண்டு, உலகிலுள்ள பாபங்களைப் போக்கடிக்கிறது. இவ்வுலகின் ரக்ஷணத்திலேயே நிலைநிற்பவனாய், அதிலேயே முயற்சியுடையவனாய், ருக் யஜுஸ்ஸாம ரூபியாயிருக்கும் இந்த விஷ்ணு ஸூர்யனுக்குள் நிற்கிறான். மாதந்தோறும் தோன்றும் ஸூர்யர்களுக்குள் த்ரயீமயமான அந்த மேலான விஷ்ணுசக்தியானது நிலைநிற்கிறது. த்ரயீமயமான இந்த விஷ்ணுசக்தியானது சுத்தஸத்வரூபமானது. தன்னுடைய சரீரமான ஏழு வஸ்துக்களுள் ஒன்றான ஸூர்யனை வியாபித்து நிற்கிறது. அந்த விஷ்ணுசக்தியினால் வியாபிக்கப்பட்ட இந்த ஸூர்யன் தன் கிரணங்களாலே ஜ்வலிக்கிறான். உலகிலுள்ள இருள் முழுவதையும் நாசமடையச் செய்கிறான். இம்மாதிரியாக, இந்த விஷ்ணுசக்தியானது ஒருபோதும் நாசமடைவதில்லை. மாதந்தோறும், ஸூர்யமண்டலத்திலிருந்துகொண்டு, அவனை வியாபித்து நிற்கிறது.] என்று பராசரபகவான் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் (2—11) விரிவாக விளக்கியருளினார். ஆகையால் ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவன் பகவான் நாராயணனே என்பதே ஶ்ருதிஸ்ம்ருதிகளின் ஒருமிடரான முடிவு என்று நிர்ணயிக்கப்பட்டது.

(தத்$_3$ ப$_4$ர்க்க$_3$:) ஸூர்யமண்டலத்தினுள்ளிருக்கும் அந்தத் தேஜஸ்ஸை. நபும்ஸகலிங்கங்களான "தத்$_3$ வரேண்யம்" என்னும் இருசொற்களாலே தழுவப்பட்டு நிற்கும் 'பர்க்க' ஶப்தமும் நபும்ஸக லிங்கமாகவே இருக்க வேண்டுமாகையால், இது 'ஒளி' என்னும் பொருளையுடைய ஸகாராந்த நபும்ஸகலிங்க பதம் என்று நிர்ணயிக்கப்படுகிறது. இக் காரணத்தாலேயே சிவனைப் பொருளாகக் கொண்ட அகாராந்த பும்லிங்க பதமன்று என்பதும் தெளிவாகிறது. ஆகையால் காயத்ரியை சிவபரமாக்குவதற்காக சைவர்கள் செய்யும் முயற்ச்சி வியாகரணமறிந்தவர்



கள் கோஷ்டியில் விலை செல்லாது என்றதாயிற்று. மேலும், மேலே எடுத்த "**ப$_4$ர்க்க$_3$ாக்$_2$யம் விஷ்ணுஸம்ஜ்ஞம்....ஸவிதுஸ்தத்$_3$ வரேண்யந்து**" முதலான ஸ்ம்ருதிகளும் இங்கு சொல்லப்படுபவன் விஷ்ணுவே என்பதை விவரித்தன. இருபத்துநாலாயிரப்படியான ஸ்ரீ ராமாயணம் முழுவதும் இருபத்துநாலு அக்ஷரங்கொண்ட காயத்ரியை விவரிக்கிறதென்று ஸர்வலோகப்ரஸித்தம். இதனாலும் ஸ்ரீராமாயணத்தில் ப்ரதிபாதிக்கப்படும் பரம்பொருளான நாராயணனே, இங்கும் சொல்லப்படுபவனென்று விளங்குகிறது. ஆகையால் இங்கு 'ப$_4$ர்க்க$_3$:' என்று ஒளியாகச் சொல்லப்படுமவன் "**நாராயணபரோ ஜ்யோதி:**" "**ஆதி$_3$த்ய வர்ணம்**" "**வித்$_3$யுத: புருஷாத$_3$தி$_4$**" முதலான பல வேத வாக்யங்களில் ஒளிமயமான திருமேனியை உடையவனாகச் சொல்லப்பட்ட நாராயணனேயாவான். இவை எல்லாவற்றையும் திருவுள்ளத்திற்கொண்டு ஸ்ரீபராசரபட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்,

**"தேஜ: பரம் தத் ஸவிதுர் வரேண்யம்**
**த$_4$ாம்நா பரேணப்ரணக$_2$ாத் ஸுவர்ணம் ।**
**த்வாம் புண்ட$_3$ரீகேக்ஷணமாமநந்தி**
**ஸ்ரீ ரங்க$_3$நாத$_2$ம் தமுபாஸிஷீய ॥"**

[ஸூர்யமண்டலத்திலுள்ளவனாய், விரும்பத்தக்கவனாய், மேலான அப்ராக்ருத ஶரீரத்தாலே நகத்திலிருந்து தலைவரை ஸுவர்ணமயமானவனாய், மேலான தேஜஸ்ஸாய், புண்டரீகாக்ஷனாயிருப்பவனாக உன்னை வேதங்கள் விளம்புகின்றன. அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாதனை உன்னை உபாஸிக்கக் கடவேன்.] என்று காயத்ரியின் பொருளைக் காட்டியருளினார்.

(வரேண்யம் ப$_4$ர்க்க$_3$:) விரும்பத்தக்கதான தேஜஸ். "வரணீயம்" என்பது 'வரேண்யம்' என்றாயிருக்கிறது. (ப$_4$ர்க்க$_3$:) எல்லாராலும் பஜனம் செய்யத்தக்கவன் என்றும், ஸர்வரையும் ப$_4$ரிப்பவன் (தாங்குபவன்) என்றும், ஸர்வ

பாபங்களையும் பாகம் செய்கிறவன் (அழிப்பவன்) என்றும் பல விதமாக பர்க்கஶப்தத்திற்குப் பொருள் கொள்ளலாம். (தீ$_4$மஹி) அந்தத் தேஜஸ்ஸை தியானிக்கக்கடவோம். "நாராயணாய வித்$_3$மஹே வாஸுதே$_3$வாய தீ$_4$மஹி" "நாராயணம் மஹா ஜ்ஞேயம்" முதலான வேதாந்த வாக்யங்களை அநுஸந்திப்பது.

(வரேண்யம்) ஶ்ரேஷ்டமானது என்றும் பொருள் கொள்ளலாம். (ஸவிது: வரேண்யம்) 'ஸூர்யனைக்காட்டிலும் ஶ்ரேஷ்டமானது' 'ஸூர்யனாலும் விரும்பத்தக்கது' என்றும் பொருள் கொள்ளலாம். ஸூர்யனுக்கும் தேஜஸ்ஸைக் கொடுப்பவன் தானே என்பதை "யதா$_3$தி$_3$த்யக$_3$தம் தேஜ: ஜக$_3$த்$_3$ப$_4$ாஸயதேऽகி$_2$லம்| ....தத் தேஜோ வித்$_3$தி$_4$ மாமகம்" [ஆதித்யனுக்குள்ளிருந்து உலகத்தையெல்லாம் ஒளிவிடச் செய்யும் தேஜஸ் என்னுடையதே என்றறி.] என்று கீதையில் அவனே அருளிச்செய்தானன்றோ.

(ய:) 'யத் ப$_4$ர்க்க$_3$:' என்கிறபடி. முன் சொல்லப்பட்ட தேஜஸ்ஸாகிய எந்த பகவான்; (ந: தி$_4$ய: ப்ரசோத$_3$யாத்) நம்முடைய புத்திகளைத் தன் விஷயத்தில் ஈடுபடும்படி தூண்டுகிறானே; (தத்$_3$ ப$_4$ர்க்க$_3$: தீ$_4$மஹி) அந்தத் தேஜஸ்ஸை தியானிப்போம் என்று அந்வயம். (ய: ந: தி$_4$ய: ப்ரசோத$_3$யாத்) நம்முடைய (தூங்கும்படியான) ஞானேந்திரியங்களை எவன் தூண்டுகிறானே என்றும் பொருள்கொள்ளலாம்.

"யோऽந்த: ப்ரவிஶ்ய மம வாசமிமாம் ப்ரஸுப்தாம்|
ஸஞ்ஜீவயத்யகி$_2$ல ஶக்தித$_4$ரஸ் ஸ்வதா$_4$ம்நா|
அந்யாம்ஶ்ச ஹஸ்தசரணஶ்ரவணத்வகா$_3$தீ$_3$ந்
ப்ராணாந்நமோ ப$_4$க$_3$வதே புருஷாய தஸ்மை||"

[ஸகல சக்திகளையும் தரிக்கும் எவனொருவன் உள் நுழைந்து நின்று என்னுடைய தூங்கும்படியான வாகிந்திரியத்தையும், மற்றுமுள்ள கை கால், காது, தோல் முதலிய இந்திரியங்களையும், ப்ராணனையும் தன் தேஜஸ்ஸால் தூண்டுகிறானே. அப்படிப்பட்ட அந்தப் புருஷனுக்கு நமஸ்காரம்.] என்று இவ்வாக்யம் பகவத்பரமாக பாகவதத்தில் உபப்ரும்ஹணம் செய்யப்பட்டது.



இவ்விடத்தில் 'சிவதத்வ விவேககாரரான அப்பய்ய தீக்ஷிதர் மற்றும் சில பூர்வபக்ஷங்களைச் செய்கிறார். அதாவது: 'தத்' என்ற நபும்ஸகலிங்க பதத்தினால் தழுவப்படும் 'ப$_4$ர்க்க$_3$' ஶப்தம் ஸகாராந்த நபும்ஸகலிங்கமாயிருக்கவேண்டுமாகையாலே சிவ வாசகமன்று என்று சொல்லுவது பொருந்காது; 'தத்' என்பதைச் சாந்தஸமாகக் கொள்ளலாமாகையாலே; உங்கள் பக்ஷத்திலும் 'ய:' என்பதைச் சாந்தஸமாகக் கொள்ளவேண்டியிருக்கையாலே இருவருக்கும் துல்யமான தோஷமே என்கிறார். இது சரியன்று. உபக்ரமத்திற்கு அனுகுணமாகவே உபஸம்ஹாரத்திற்குப் பொருள் கொள்ள வேண்டுமென்று மீமாம்ஸாநியாயமிருப்பதால் உபக்ரமத்தில் (ஆரம்பத்தில்) படிக்கப்பட்ட தச்சப்தத்திற்கு அனுகுணமாக (முடிவில்) உபஸம்ஹாரத்தில் படிக்கப்படும் 'ய:' என்னும் சப்தத்துக்குப் பொருள் கொள்வதே பொருந்தியதாகையால் நம்முடைய பக்ஷமே பலம் பொருந்தியதாகும்.

இதற்குமேல் மற்றொரு வாதம்: 'தத்' என்னும் பதம் ப்ரஹ்ம வாசகமாக கீதாதிகளில் ப்ரஸித்தமாகையால் "ஸவிது: வரேண்யம் தத்$_3$ தீ$_4$மஹி| ய: ப$_4$ர்க்க: ந: தி$_4$ய: ப்ரசோத$_3$யாத்" என்று கூட்டிப்பொருள்கொண்டால் ஒரு பதத்தையும் சாந்தஸமென்று சொல்லாமல் நிர்வஹிக்கலாம்; 'ய: ப$_4$ர்க்க$_3$:' என்று அகாராந்த புல்லிங்கமே தேறுவதால் சிவவாசகமாகிறது என்று. இப்படிப் பொருள்கொள்வதிலும் பல தோஷங்களுண்டு. இரண்டாவது அடியிலிருக்கும் பர்கஶப்தத்தை மூன்றாவது அடியிலிருக்கும் யச்சப்தத்தோடு சேர்ப்பதால் தூராந்வயம் என்னும் தோஷம் வரும். மேலும், "யத்ததோ$_3$ர் நித்யஸம்ப$_3$ந்த$_4$:" என்கிற

நியாயப்படி யச்சப்தமும் தச்சப்தமும் சேர்ந்தே வரும். மேலே சொன்னபடி தச்சப்தத்தை விசேஷ்யபதமாக்கிப் பொருள் கொண்டால் யச்சப்தம் தனியாகவே நிற்கும். அதற்காக ஒரு தச்சப்தத்தை அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டும். ஆகையால், இப்படி பஹுதோஷ து3ஷ்டமான இந்த அன்வயம் அநாதரிக்கத்தக்கது.

மேலும், ஸூர்யமண்டலாந்தர்வர்த்தியான புருஷன் புண்டரீகாக்ஷனே என்பதைச் சாந்தோக்யஶ்ருதி அதிஸ்பஷ்டமாக அறிவித்திருப்பதை மேலே காட்டினோம். மைத்ராணீயோபனிஷத்திலும் இவ்விஷயமே உத்கோஷிக்கப்பட்டிருப்பதை இனி விளக்குவோம்.

**"அத்ர ஹி ஸௌம்யாக்3நேய ஸாதவிகமண்ட3லானி பி4த்வா தத: ஶுத்3த4ஸத்வாந்தராவஸ்தி2தம் அசலம் அமரம் அச்யுதம் த்4ருவம் விஷ்ணுஸம்ஜ்ஞம் ஸர்வாத4ாரம் தா4ம ஸத்ய காமஸர்வஜ்ஞத்வ ஸம்யுக்தம் ஸ்வதந்த்ரசைதந்யம் ஸ்வே மஹிம்நி திஷ்ட2மாநம் பஶ்யதி"**

[இந்த ஸூர்யமண்டலத்தினுள்ளிருக்கும் ஸோமனுடையவும், அக்னியினுடையவும், ஸாத்விகமானதுமான மண்டலங்களை பேதித்து, அதனுள்ளிருக்கும் சுத்தஸத்வத்தினுள் எழுந்தருளியிருப்பதாய், அசையாததாய், மரணமற்றதாய், (அடியார்களை) நழுவவிடாததாய், நிலையானதாய், **விஷ்ணுவென்னும்** பெயரையுடையதாய், ஸர்வர்க்கும் ஆதாரமாயுள்ளதாய், ஸத்யகாமத்வம், ஸர்வஜ்ஞத்வம் முதலான குணங்களுடன் கூடியதாய், ஸ்வதந்த்ரமானதாய், ஞான ஸ்வரூபமானதாய், தன் மஹிமையிலேயே நிலைநிற்பதான தேஜஸ்ஸைப் பார்க்கிறான்.] என்று மைத்ராயணீய உபனிஷத்தின் ஆறுவது ப்ரபாடகத்தில் காயத்ர்யர்த்த விசாரப்ரகரணத்தில் படிக்கப்பட்டது. 'அச்யுதம்' என்றும், 'விஷ்ணுஸம்ஜ்ஞம்' என்றும் படித்திருப்பதனால் இது பரமபுருஷபரமே என்பது கையிலங்கு நெல்லிக்கனியாய் விளங்குகிறது.



**"ஸூர்யமத்4யே ஸ்தி2தஸ் ஸோமஸ் தஸ்ய மத்4யே ஹுதாஶந:|**
**தேஜோமத்4யே ஸ்தி2தம் ஸத்வம் ஸத்வமத்4யே ஸ்தி2தோऽச்யுத: ||**
**ஏஷ வை புருஷோ விஷ்ணுர் வ்யக்தாவ்யக்தஸ் ஸநாதந: ||"**

[ஸூர்யனுக்கு நடுவிலே ஸோமனிருக்கிறான்; அவனுக்கு நடுவில் அக்னியிருக்கிறான்; அக்னியின் நடுவில் சுத்தஸத்வமிருக்கிறது; அதன் மத்தியில் அச்சுதனிருக்கிறான்; இவனே ஸ்தூலஸூக்ஷ்ம ப்ரபஞ்சமாயும், பழமையானவனாகவும், புருஷன் என்னும் பெயரையுடையவனாகவுமுள்ள விஷ்ணு] என்று யோக யாஜ்ஞவல்க்ய யமாங்கஸ்ம்ருதிகளிலும்,

**"ஸந்த்4யே த்3வே ஸம்ஸ்தி2தஸ் ஸூர்யஸ தஸ்ய மத்4யே ஸ்தி2த: ஶஶீ|**
**சந்த்3ரமத்4யே ஹுதாஶஸ்து ஸர்வதேஜோமயோ ஹரி: ||**
**அங்கு3ஷ்ட2மாத்ர: புருஷஸ் தஸ்ய மத்4யே மயோதி3த:**
**ஶங்கரேண தத2ாऽத்3ருஶ்யஸ் ஸத்ப்ரகாரோऽதிதேஜஸா ||**
**ஸ விஷ்ணுர் பு4வநாத4ாரோ யஸ்யேத3ம் ஸகலம் ஜக3த் ||"**

[ஸூர்யன் இரண்டு ஸந்த்யா காலங்களையும் அடைந்திருக்கும்போது சந்திரன் அவனுக்கு நடுவிலிருக்கிறான். சந்திரன் நடுவில் அக்னி. அவனுக்கு நடுவில் அங்குஷ்டமாத்ரனாய், புருஷஶப்தவாச்யனாய், ஸர்வதேஜோமயனான ஹரி எழுந்தருளியிருப்பதாக என்னால் சொல்லப்பட்டான். அவன் சங்கரனாலும் காணப்படாதவன்; 'ஸத்' எனப்படும் சித்வஸ்துவை ப்ரகாரமாகக் கொண்டவன்; மிகுந்த தேஜஸ்ஸுடன் கூடியவன்; அந்த விஷ்ணுவே ஸகல பு4வனங்களுக்கும் ஆத4ாரன்; அவனுக்கு ஶேஷபூ4தமானது ஸகலஜகத்தும்.] என்று ஆக்நேய புராணத்திலும் இந்த ஶ்ருதிவாக்யம் விஷ்ணுபரமாக விவரிக்கப்பட்டது.

நிற்க, மேலே எடுக்கப்பட்ட வாக்யத்தில் ஆதித்ய மண்டலத்திலுள்ளவன் விஷ்ணுஸம்ஜ்ஞனான அச்யுதனே என்று நிர்ணயித்து மேலே **"தத் ஸவிதுர் வரேண்யம்"** என்று இவனே காயத்ரியில் உபாஸிக்கப்படுபவன் என்பது

சொல்லப்பட்டது. இங்கு "விஷ்ணு ஸம்ஜ்ஞும்" என்றும் "அச்யுதம்" என்றும் இரண்டு நாமங்கள் படிக்கப்பட்டிருக்கின்றன. அப்படியிருக்க "**ப$_4$ர்க்கே$_3$ா ப$_4$ர்ஜயதீதி வைஷப$_4$ர்க்க$_3$ இதிருத்$_3$ர:**" என்னும் வாக்யத்தில் பர்க்கஶப்தத்தால் சொல்லப்படுபவன் ருத்ரன் என்று இவ்வுபநிஷத்தில் படிக்கப்படுகையால் காயத்ரீ ருத்ரபரமே என்று வாதிக்கிறார் அப்பய்யதீக்ஷிதர் மேலே கண்ட வாக்யத்தில் இரண்டு இதி சப்தங்கள் படிக்கப்பட்டிருப்பதை நோக்கவேண்டும். இதன் உண்மைப் பொருளாவது:–" 'பர்க்க:' -(பாபங்களை) அழிக்கிறுகையால் இவன் பர்க்கனுகிறுன் என்று ருத்ரன் சொன்னுர்" என்பதே. ஆகையால் இதைக்கொண்டு ருத்ரபரத்வம் ஸாதிக்க முடியாது. அன்றிக்கே பர்க்கசப்தத்தால் சொல்லப்படுபவன் ருத்ரன் எனப்படுபவன் என்றே இவ்வாக்கியத்திற்குப் பொருள் கொண்டாலும், மேலே எடுக்கப்பட்ட விஷ்ணு, அச்யுதன் என்னும் இரண்டுநாமங்களுக்கு அனுகுணமாக ருத்ர பதமும் விஷ்ணுவையே குறிக்கிறதென்று கொள்ளவேண்டும். "**ருத்$_3$ரோ ப$_3$ஹுஶிரா ப$_3$ப்$_4$ரு:**" முதலான இடங்களில் இது விஷ்ணு நாமமாகப் படிக்கப்பட்டதன்றே. "**விஷ்ணு ஸம்ஜ்ஞும்**" என்று விஷ்ணு நாமத்தை ஸம்ஜ்ஞையாகச் சொல்லியிருக்க. அதற்கு விரோதமாக ருத்ரநாமத்திற்குப் பொருள்கொள்வது நியாயவிருத்தமாகும். ஆகவே இவ்வாக்கியங்கள் விஷ்ணுபரமே என்பது வஜ்ரலேபாயிதமாயிற்று. நிற்க, "விஷ்ணு ஸம்ஜ்ஞும்" என்று மேலே எடுக்கப்பட்ட மைத்ராயணீய ஶ்ருதி அப்பய்யதீக்ஷிதராலும் சிவதத்துவ விவேகத்தில் எடுக்கப்பட்டிருக்கிறது. அவருடைய நூலுக்குக் கண்டனமாக எழுதப்பட்ட வேதாந்த கௌஸ்துபத்திலும் பூர்ணமாக உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க *ஸ்மார்த்தர்களால் அச்சிடப்பட்டிருக்கும் மைத்ராயண்யுபனிஷத்தில் இது காணப்படவில்லை. இது உபநிஷத்துக்களைக் காப்பாற்றுவதில் ஸ்ரீவைஷ்ணவர்களின் அநாதரவைக் காட்டுகிறது.

* கி. பி. 1870ல் லண்டனின் E. B. Cowell M. A. என்னும் ஆங்கிலேயரின் ஆங்கில மொழிபெயர்ப்புடன், அத்வைதியொருவரின் வடமொழியுரையுடன் கூடியதாக பெங்கால் ஏஷியாடிக் ஸொஸைஸடியாரால் வெளியிடப்பட்டுள்ள மைத்ராயணீய உபநிஷத் புஸ்தகத்தில் இவ்வாக்யம் உள்ளதைப் பிற்காலத்தில் கண்டு விஷ்ணுசித்தவிஜயத்தில் வெளியிட்டுள்ளோம்.



தலவகாரஶ்ருதியில் "**தஸ்யா ஏஷ த்ருதீய: பாத$_3$: தி$_4$யோ யோ ந: ப்ரசோத$_3$யாதி$_3$தி யஜ்ஞோ வை ப்ரசோத$_3$யாத்**" [அந்த காயத்ரிக்கு மூன்றுவதுபாதம் 'தி$_4$யோ யோ ந: ப்ரசோத$_3$யாத்' என்பது. யஜ்ஞ புருஷனன்றே (நம் புத்திகளைத்) தூண்டுபவன்.] என்றொரு வாக்யம் உள்ளது. "**யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா**" என்று ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் ஸ்ரீ பாகவதாதி புராணங்களில் பல்லாயிரக்கணக்கானவிடங்களிலும் யஜ்ஞ ஶப்தம் விஷ்ணு நாமங்களில் ஒன்றாகப் படிக்கப்பட்டதாகையால் இதனாலும் காயத்ரீ பகவத்பரமே என்று நிர்ணயிக்கப்படுகிறது. பகவத்பரமாக விவரித்திருக்கும் பல உபப்ரும்ஹண வாக்யங்களையும் மேலே காட்டியிருக்கிறோம். மற்றும் சில உபப்ரும்ஹண வாக்யங்களையும் இங்கு காட்டுவோம்.

**"ஸந்த்$_4$யயோருப$_4$யோ: காலே த்$_4$யாத்வா விஷ்ணும் ஸநாதநம் |**
**நிர்மலாத்மார்க்கஸந்த$_3$ர்ஶீ கா$_3$யத்ரீமாரபே$_4$த் பு$_3$த$_4$: ||"**

[இரண்டு ஸந்த்யா காலங்களிலும் ஸநாதனனை விஷ்ணுவை தியானம் செய்து அழுக்கற்ற மனத்தையுடையவனாய், ஸூர்யனையே பார்த்துக்கொண்டு புத்திமானயிருப்பவன் காயத்ரியை ஆரம்பிக்க வேண்டும்.] என்று யோக யாஜ்ஞவல்க்யரால் மற்றோரிடத்தில் சொல்லப்பட்டது. ஜாபாலிஸ்ம்ருதியிலும் இவ்வசனம் படிக்கப்படுகிறது.

**"ரஶ்மிஜ்வாலாஸஹஸ்ராட்$_4$யம் அமலம் விபுலம் ரவே: |**
**தத$_3$ந்த: ஶீதளாப$_4$ம் து ஸௌம்யம் ஸோமஸ்ய மண்ட$_3$லம் ||**
**ஸ்பு$_2$ரத்ஸ்பு$_2$லிங்க$_3$மநலஜ்வாலாமாலா ஸமாகுலம் |**
**தஸ்ய மத்$_4$யே ஸுக$_2$ாஸீநம் தப்தஹாடகஸந்நிப$_4$ம் ||**
**சதுரங்கு$_3$லமாத்ரந்து ஶுகபத்ரநிப$_4$ாம்ப$_3$ரம் |**
**ரக்தநேத்ரம் ஹரிம் ரக்தபாணிபாத$_3$நக$_2$ாம்ஶுகம் ||**

**ஶங்க$_{2}$சக்ரக$_{3}$த$_{3}$ாபாணிம் ஶ்ரீ வத்ஸாங்கிதவக்ஷஸம் ।**
**ஏவம் த்$_{4}$யாத்வா ஜபேந் மந்த்ரம் ஸாவித்ரம் நியதஶ்ஶுசி: ॥**

[ஆயிரக்கணக்கான கிரணஜ்வாலைகள் பொருந்தியதாய், அழுக்கற்றதாய். மிகப்பெரிதாய் விளங்குகிறது ஸூர்ய மண்டலம்; அதனுள் குளிர்ந்த ஒளியை உடையதாய். இனிதாய் விளங்குகிறது சந்திரனுடைய மண்டலம்; அதன் நடுவில் நெருப்புப்பொறிகள் வீசுவதாய், நெருப்பு ஜ்வாலா மாலைகள் சூழப்பெற்றதாய். உருக்கின பொன்போன்ற தாய். நான்கு அங்குலம் பரிமாணமுள்ளதாய், கிளி யின் இறக்கையைப்போன்ற பீதாமபரத்தை உடுத்தின தாய். சிவந்த திருக்கண்களை உடையதாய் சிவந்த திருக்கை. கால்கள். நகங்கள் முதலானவற்றையுடையதாய். சங்கசக்ர கதைகளைக் கையில் தரித்ததாய். ஸ்ரீவத்ஸமாகிற மறுவால் அடையாளம் செய்யப்பெற்ற திருமார்பையுடைய தான திருமேனியுடன் கூடியவனான ஹரியை இம்மாதிரி தியானம் செய்து. நியமத்துடன் கூடியவனாய் பரிசுத்தனாய் காயத்ரீ மந்திரத்தை தியானிக்கக் கடவன்.] என்று ஸனக ஸ்ம்ருதியிலும் அதிஸ்பஷ்டமாக அறிவிக்கப்பட்டது.

**"அர்ச்சந்தி முநயோ நித்யம் ஜலேந ரவிமண்ட$_{3}$லே ।**
**ஆதி$_{3}$த்யமண்ட$_{3}$லே நித்யம் தே$_{3}$வதே$_{3}$வமநாமயம் ॥**
**ஶங்க$_{2}$சக்ரக$_{3}$த$_{3}$ாபாணிம் த்$_{4}$யாத்வா விஷ்ணுமுபாஸதே ।**

[முனிவர்கள் தினந்தோறும ஸூர்யமண்டலத்தில் பகவானை (அர்க்$_{4}$ய) ஜலத்தினால் ஆராதிக்கிறார்கள். ஆதித்யமண்டலத்தில் தேவதேவனாய். வியாதியற்றவனாய். சங்கசக்ரகதைகளைக் கையிலே தரித்தவனான விஷ்ணுவை தினந்தோறும் தியானித்து உபாஸிக்கிறார்கள்.] என்று தொடங்கி "**த்$_{4}$யேயஸ் ஸதா$_{3}$**" முதலான சுலோகங்களையும் நாரஸிம்ஹ புராணம் நவில்றது. மஹாபாரதம் ஆஶ்வமேதி$_{4}$க பர்வத்தில்.

**"ஊர்த்$_{4}$வபா$_{3}$ஹுஸ் ததோ பூ$_{4}$த்வா ஸூர்யமீக்ஷேத் ஸமாஹித: ।**
**தந்மண்ட$_{3}$லஸ்த$_{2}$ம் மாம் த்$_{4}$யாயேத் தேஜோ மூர்த்திம**
**சதுர்பு$_{4}$ஜம் ॥**



**உது$_{3}$த்யஞ்ச ஜபேந்மந்த்ரம் சித்ரம் தச்சக்ஷுரித்யபி ।**
**ஸாவித்ரீஞ்ச யத$_{2}$ாஶக்தி ஜப்த்வா ஸூக்தஞ்ச மாமகம் ॥"**

[கையை உயரத்தூக்கினவனாய், சாந்தனாய், நின்று ஸூர்யனைக் காணக்கடவன்; அந்த ஸூர்யமண்டலத்தி லிருப்பவனாய். தேஜோமூர்த்தியாய். நான்கு கைகளை யுடையவனான என்னை தியானிக்கக்கடவன்; "உது$_{3}$த்யம்" "சித்ரம்" "தச்சக்ஷு:" என்று தொடங்கும் மந்திரங்களை யும் ஜபிக்கக்கடவன். இயன்றவரையில் காயத்ரியையும் என்னுடையதான புருஷஸூக்தத்தையும் ஜபித்து...] என்று தர்மபுத்ரனைக் குறித்துச்சொல்லப்படும் க்ருஷ்ண வசனமும். காயத்ரீ கேசவபரமே என்பதைக் காட்டித் தருகிறது. ஸாத்விக சாஸ்திரங்களில் இவ்வளவு உபப்ரும்ஹணங்களிருக்கும்போது இலிங்கத்திட்ட புராணம் முதலிய தாமஸ நூல்களிலிருந்து ஒன்றிரண்டு வசனங்களைக் காட்டி இக் காயத்ரியை சிவபரமாக்க முயல்வது வீணனதே என்பது சொல்லாமலே விளங்கும்.

நிற்க; மேலே சொன்ன யோஜனையிலிருந்து "யாதொரு தேஜஸ்ஸானது நம்முடைய புத்தியைத் (தன் விஷயமாகத்) தூண்டுகிறதோ, ஸூர்யனுக்குள்ளிருக்கும் விரும்பத்தக்க அந்தத் தேஜஸ்ஸை தியானிப்போமாக" என்னும் பொருள் தேறிநிற்கிறது. இந்தப் பொருளே சாந்தோக்யாதி$_{3}$ஶ்ருதி வாக்யங்களுக்கும் மேலே எடுத்த புராணவசனங்களுக்கும் "தேஜ: பரம்" என்ற பட்டர் ஸ்ரீ ஸூக்திக்கும் பொருந்தியது. ஆனால் இந்த யோஜனையில் "**தி$_{4}$யோ யோ ந:**" என்றவிடத்திலுள்ள 'ய:' என்னும் பதத்தைச் சாந்தஸ மாகக் கொள்ளவேண்டியதொரு குறையுண்டு. மேலும். காயத்ரிக்கு ஸவிதாதேவதை என்று படிக்கப்படுகிறது. காயத்ரீப்ரதிபாத$_{3}$யன் பரமாத்மாவே என்பது பல ப்ர மாணங்களில் படிக்கப்படுவதால் இந்த ஸவித்ருசப்தம் பரமாத்ம வாசகமேயாகவேண்டும். அப்படியிருக்க காயத்ரீ சரீரத்தினுள்ளிருக்கும் ஸவித்ருரூபத்தைப் பரமாத்மபர

மாகக் கொள்ளாமல் ஸூர்யபரமாகக் கொள்ளவேண்டிய தொரு குறையுமுண்டு முந்தின யோஜனையில். இவ்விரண்டு குறைகளுமில்லாதபடி புராணங்களிலும். ஆசாரியர்களாலும் மற்றுமொரு யோஜனை காட்டப்பட்டிருக்கிறது.

அதாவது:—ய:-எந்த தேவன், ந: தி4ய: ப்ரசோத3யாத்—நம் புத்தியைத் தூண்டுகிறானோ. (தஸ்ய) தே2வஸ்ய ஸவிது:—அந்த தேவனை 'ஸவிதா' எனப்படும் பரமாத்மா வினுடைய வரேண்யம் தத் ப4ர்க்க3:—விரும்பத்தக்க அந்த ஒளிமயமான ஸ்வரூபத்தை (அல்லது குணங்களை.) தீ4மஹி—தியானம் செய்யக்கடவோம் என்றபடி. அந்த யோஜனையில் 'ய:' என்பதைச் சாந்தஸமாகக் கொள்ளவேண்டாம்; ஸவித்ருரூபத்தமும் பரமாத்மபரமாகும்.

''யோ தே3வஸ் ஸவிதாऽஸ்மாகம் தி4யோ த4ர்மாதி3கோ3சரா:।
ப்ரேரயேத் தஸ்ய யத்3 ப4ர்க்க3ஸ் தத்3
வரேண்யமுபாஸ்மஹே ॥''

[(ஸ்ருஷ்டிகர்த்தாவாகையால்) 'ஸவிதா' என்று பெயர் கொண்ட யாவனொரு தேவன் நம்முடைய புத்திகளை த4ர்மார்த்த2காம மோக்ஷங்களில் செல்லும்படி தூண்டுகிறானோ. அவனுடையவையான விரும்பத்தக்க குணங்களை உபாஸிக்கக்கடவோம்.] என்று அகஸ்திய ஸ்ம்ருதியிலும்.

''தே2வஸ்ய ஸவிதுஸ்தஸ்ய தி4யோ யோ ந: ப்ரசோத3யாத்।
ப4ர்க்கோ3 வரேண்யம் தத்3 ப்3ரஹ்ம தீ4மஹீத்யர்த்த2
உச்யதே ॥''

[எவனொருவன் நம் புத்திகளைத் தூண்டுகிறானோ, அந்த தேவனாகிய ஸவிதாவினுடையதாய். ஞானஒளியாயிருப்பதாய். விரும்பத்தக்கதாய். ப்ரஹ்மசப்தவாச்யமான அந்த ஸ்வரூபத்தை தியானிக்கக்கடவோம்.] என்று காயத்ரியை ஸாக்ஷாத்கரித்த விஶ்வாமித்ரருடைய ஸ்ம்ருதியிலும் ஸவித்ருரூபத்தைப் பரமாத்மபரமாகக்கொண்டு மேலே கண்டவாறு பொருளுரைக்கப்பட்டிருக்கிறது. ஶ்ருதப்ர



காசிகாசாரியரும் இவ்வர்த்தத்தை ஆதரித்திருக்கிறார். மேற்கண்ட இரண்டு ஸ்ம்ருதி வசனங்களையும் காயத்ரீ ஜபத்திற்கு முன் பலர் அநுஸந்தித்து வருகிறார்கள். இனி இப்பொருளை விளக்குவோம்.

(ஸவிது:) ஸவிதாவினுடைய. ''ஷூஞ்-ப்ராணிப்ரஸவே'' என்று த4ாதுவாகையாலே ஸர்வலோகஸ்ரஷ்டாவான பகவான் ஸவிதா எனப்படுகிறான். இங்கு ஸ்ருஷ்டியைச் சொன்னது ஸ்தி2தி ஸம்ஹாரங்களுக்கும் உபலக்ஷணம். ஸர்வஜகத்தையும் படைத்து. அழிப்பது இவனுக்கு மிகவும் ஆயாஸ ஸாத்4யமாயிருக்குமோ? என்றும். இதைச் செய்வதனால் இவனுக்கு என்ன ப்ரயோஜனம்? என்றும் ஸந்தேஹமெழ. அதை நிவர்த்திக்கிறது அடுத்தபடியாக: (தே3வஸ்ய) ஸ்ருஷ்ட்யாதி3களை விளையாட்டாகச் செய்பவனுடைய: ''தி3வுக்ரீட3ா'' என்றல்லவோ த4ாது. இவ்வர்த்தத்தை,

''க்ரீட3ா ஹரேரித3ம் ஸர்வம் க்ஷரமித்யவத4ார்யதாம்''
[அழிகின்றவையான இவையெல்லாம் ஹரியினுடைய விளையாட்டு என்று அறியப்படட்டும்.] என்றும்.

''க்ரீட3தோ ப3ாலகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிஶாமய''
''மோத3தே ப4க3வாந் பூ4தைர் ப3ால: க்ரீட3நகைரிவ''
[சிறுவன் விளையாட்டுப் பொருள்களைக்கொண்டு ஆநந்திப்பதுபோல், பகவான் பூதங்களைக்கொண்டு ஆநந்திக்கிறான்.] என்றும் ரிஷிகளும். ''லோகவத்து லீலாகைவல்யம்'' [உலகத்தில் (அரசன் முதலானோர்க்குப்) போலவே பகவானுக்கும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் கேவலலீலையைப் பலனாகவுடையவை.] என்று பாதராயணரும். ''அகி2லபு4வந ஜந்மஸ்தே2மப4ங்க3ாதி3லீலே'' [எல்லா உலகையும் படைத்து அளித்து அழிப்பதையே லீலையாக உடையவனிடத்தில்] என்று பாஷ்யகாரரும், ''நாட்டைப்படையென்றயன் முதலாத்தந்த நளிர்மாமலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும் விமலன்''

என்று ஆண்டாளும், "இன்புறு மிவ் விளையாட்டுடையான்" என்று ஆழ்வாரும், "உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடையார்" என்று கம்பரும் அநுஸந்தித்தார்கள். (தே3வஸ்ய) 'தி3வுக்ரீடா3 விஜிகீ3ஷா வ்யவஹார த்3யுதிஸ்துதி மோத3 மத3 ஸ்வப்ந காந்தி க3திஷு' என்கிறபடியே திவு தாது பல பொருள்களைக்கொண்டது. அவையெல்லாம் இவனிடமே பொருந்தியுள்ளனவாகையால் இவனே நிருபாதி4க தே3வனுவான். "தி3வ்யோ தே3வ ஏகோ நாராயண:" என்று வேதமும், "ப4வாந் நாராயணோ தே3வ:" என்றும், "ஸாக்ஷாத் தே3வ: புராணோஸௌ" என்றும் ரிஷிகளும், "சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவனுவான்" என்று ஆழ்வாரும் இவ்வர்த்தத்தை அறுதியிட்டார்கள். இனி தேவசப்தார்த்தங்கள் இவனிடமே பொருந்தியிருக்கிறபடியைக் காட்டுவோம்.

"தி3வுக்ரீடா3" என்னும் பொருள் மேலே விவரிக்கப்பட்டது. 'தி3வு—விஜிகீ3ஷா' ஜயிப்பதில் இச்சையை உடையவன் தேவன்; அதாவது, சேதனரை "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" "தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" என்னப்பண்ணுவதைப் பெரும்பேறாக நினைத்திருக்குமவன் என்றபடி. "ஸத்யேந லோகாந் ஜயதி" [ராகவன் ஸத்யத்தினுலே லோகங்களை ஜயிக்கிறுர்.] "ஜிதம் ப4க3வதா ஜக3த்" [பகவானுலே உலகெல்லாம் [ஜயிக்கப்பட்டது] "நாவிஜித்ய நிவர்த்ததே" [ஜயிக்காமல் திரும்பமாட்டான் ராமபிரான்.] "சென்று கொன்று வென்றி கொண்ட வீரன்" முதலான விடங்களில் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டது.

(தே3வஸ்ய) 'தி3வு-வ்யவஹார:' வேதம் முதலான வாக்குகளை வ்யவஹரிப்பவன் தேவன் என்றபடி.

"யோ ப்3ரஹ்மாணம் வித3தா4தி பூர்வம் யோ வை
வேதா3ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"



[எவனொருவன் முன்னொருநாள் பிரமனைப் படைத்து, அவனுக்கு வேதங்களை உபதேசித்தானே....] என்றும்.

"பாஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்" [பாஞ்சராத்ரம் முழுவதையும் உரைத்தவன் ஸாக்ஷாத் நாராயணனுவான்.] என்றும், "பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி" "இன்கவி பாடிய ஈசன்" "திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை" "மறையுரைத்த திருமால்" "அன்னமாய் அன்றங்கு அருமறை பயந்தான்" என்றும் சொல்லுகிறபடியே வேதம் முதலான உத்க்ருஷ்ட வாக்குகளை உரைத்தவனன்றோ இவன். அன்றிக்கே 'வ்யவஹாரம்' என்னும் சொல் வழக்குப் பேசுவதையும் குறிக்குமாகையால், தேவசப்தத்துக்கு வழக்குப்பேசுமவன் என்றும் ஓர் பொருள் கொள்ளலாம். அதாவது:— சேதனன் 'நான் எனக்கு' என்றால் 'நீ எனக்கு' என்று வழக்குப் பேசி அவனை ஆட்கொள்ள முயலுமவன் என்றபடி. இவன் வழக்குரைக்கும் வழியை

"த்வம் மே஽ஹம் மே குதஸ் தத் தத3பி குத இத3ம்
வேத3மூல ப்ரமாணாத்
ஏதச்சாநாதி3ஸித்3தா4த3நுப4வவிப4வாத் ஸோ஽பி
ஸாக்ரோஶ ஏவ।
க்வாக்ரோஶ: கஸ்ய கீ3தாதி3ஷு மம விதி3த: கோபி
ஸாக்ஷீ ஸுதீ4: ஸ்யாத்
ஹந்த! த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்3ய
மத்4யஸ்த2வத் த்வம்॥"

[பகவான்:—ஜீவனே! நீ என்னைச்சேர்ந்தவன்; ஜீவன்:—அன்று; நான் எனக்கே உரிமையானவன்; பகவான்:—அதெப்படி? ஜீவன்:—நீர் சொல்லுவதுதான் எப்படி? பகவான்:— நான் சொல்லுவது வேதம் என்னும் மூலப்ரமாணத்தை ஆதாரமாகக் கொண்டது; ஜீவன்:—நான் சொல்லுவது அநாதியாயிருக்கும் அநுபோக பாத்தியத்தை அடிப்படையாகக்கொண்டது. பகவான்:–நீ சொல்லும் அநுபோக

உரிமை ஆக்ஷேபம் செய்யப்பட்டிருக்கிறது; **ஜீவன்:**—எங்கு ஆக்ஷேபம் செய்யப்பட்டிருக்கிறது? யார் ஆக்ஷேபம் செய்திருக்கிறார்கள்? **பகவான்:**—கீதை முதலான நூல்களில் என்றால் ஆக்ஷேபம் செய்யப்பட்டிருப்பது பிரஸித்தம். **ஜீவன்:**-இதற்கு யார் ஸாக்ஷி; **பகவான்:**—ஞானியே ஸாக்ஷி; **ஜீவன்:**—ஐயோ! அவன் உன்னைச் சேர்ந்தவனன்றோ என்று இப்படி ஜீவனுடன் ஏற்பட்ட விவாதத்தில் (வேறு வழியில்லாமல்) ப்ரமாணம் செய்து தன் கட்சியை ஸாதித்துக்கொள்ளும் நிலையிலே இருக்கிறீர்.] என்று பட்டர் துளசிமாலையணிந்து திருமஞ்சனம் செய்துகொண்டிருக்கும் தசையிலுள்ள பெருமாளைப் பார்த்து அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத் தக்கது. [துளசிமாலையணிந்து நீராடிப்ரமாணம் செய்து தம் கட்சியை ஸாதித்துக்கொள்ளும் பழங்கால வழக்கத்தை உட்கொண்டு கடைசி அடியை அருளிச்செய்துள்ளார் பட்டர்.]

(தே$_3$வஸ்ய) '**தி$_3$வு–த்$_3$யுதி:**' பிரகாசியா நிற்பவன் தேவன்.

**"தமேவ ப$_4$ாந்தமநுப$_4$ாதி ஸர்வம் தஸ்ய ப$_4$ாஸா**
**ஸர்வமித$_3$ம் விப$_4$ாதி"**

*[பிரகாசியா நிற்கும் அவனை அனுஸரித்தே எல்லா வஸ்துக்களும் பிரகாசிக்கின்றன; அவனுடைய ஒளியாலே இவையனைத்தும் ஒளிவிடுகின்றன.]* என்றும்.

**"அத$_2$ யத$_3$த: பரோதி$_3$வோ ஜ்யோதிர் தீ$_3$ப்யதே"**

*[பரமபதத்தின்மேல் யாதொரு சோதி பிரகாசிக்கிறதோ....]* என்றும். **"நாராயணபரோ ஜ்யோதி:"** என்றும், **"பரஞ்சோதி நீ பரமாய்" "நிறைந்தசோதி வெள்ளஞ்சூழ்ந்த" "சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு"** என்றும் சொல்லுகிறபடியே எல்லையற்ற தேஜஸ்ஸை உடையவன் என்கை.

(தே$_3$வஸ்ய) '**தி$_3$வு—ஸ்துதி:**' துதிக்கப்படுமவன் தேவனாகிறான். **"ததோ தே$_3$வா ஊர்த்$_4$வபா$_3$ஹவ: ஸ்துவந்தி"** *[அதன் பிறகு தேவர்கள் கையை உயரத்தூக்கிக்கொண்டு துதிக்கிறார்கள்.]* என்றும். **"தஸ்ய ருக் ச ஸாம ச கே$_3$ஷ்ணௌ"** *[ருக்வேதமும் ஸாமவேதமும் அவனைத் துதிப்பவை]* என்றும். **"ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:"** *[துதிக்கத்தக்கவன்; துதியில் பிரியமுள்ளவன்.]* என்றும், **"ஸமபி$_4$ஷ்டுய ஸங்ந$_3$தா:"** *[நன்கு துதித்துத் தலை வணங்கினார்கள்]* என்றும் **"ஸங்கை$_4$ஸ் ஸுராணாம்....ஸ்துத:"** *[திரிவிக்கிமாவதார காலத்தில்) தேவர்களின் கூட்டங்களாலும்... துதிக்கப்பட்டான்]* என்றும், **"ஏத்த ஏழுலகும்" "யானுமேத்தி ஏழுலகும் முற்றுமேத்திப் பின்னையும் தானும் ஏத்திலும் தன்னை ஏத்தவேத்த எங்கெய்தும்"** என்றும் சொல்லுகிறபடியே ஸர்வசாஸ்திரங்களாலும், ஸர்வ சேதனராலும் துதிக்கப்படுமவன் என்றதாயிற்று.



(தே$_3$வஸ்ய) '**தி$_3$வு—மோத$_3$:**' ஆனந்தத்தையுடையவன் தேவனாகிறான். **"விஜ்ஞாநமாநந்த$_3$ம் ப்$_3$ரஹ்ம" "யதே$_3$ஷ ஆகாஸோ ஆநந்தே$_3$ா ந ஸ்யாத்" "ஆநந்த$_3$ம் ப்$_3$ரஹ்மேதி வ்யஜாநாத்" "இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்தாள்கின்ற எங்கள் பிரான்"** என்கிறபடியே ஆநந்தத்தையே ஸ்வரூபமாக உடையவனாயிருப்பவன் என்றதாகிறது. (தே$_3$வஸ்ய) '**தி$_3$வு–மத$_3$:**' அவாப்தஸமஸ்தகாமனாகையாலே ஒருவரையும் கணிசியாதிருக்கையாகிற மதத்தையுடையவன் தேவன். **"அவாக்யநாத$_3$ர:"** *[ஒருவருடனும் வார்த்தை சொல்லாமலிருப்பவன்; விருப்பற்றவன்.]* என்னும் நிலையைச் சொல்லுகிறது. (தே$_3$வஸ்ய) '**தி$_3$வுகாந்தி:**' கண்ணுக்கினிய காந்தியை உடையவன் தேவன் **"வித்$_3$யுத: புருஷாத்" "நீலதோயத$_3$ மத்$_4$யஸ்த$_2$ா வித்$_3$யுல்லேகே$_2$வ ப$_4$ாஸ்வரா" "ப்ரஸந்நாதி$_3$த்ய வர்ச்சஸம்" "சந்த்$_3$ரப$_4$ாஸ்கர வர்ச்சஸம்"** *[குளிர்ச்சியிலே சந்திரன் போன்றதாய், ஒளியிலே ஸூர்யன் போன்றதான காந்தியை உடையவன்]* '**முளைக் கதிரை**' **"கதிர் மதியம் போல் முகத்தான்"** என்ற தேஹ காந்தியை உடையவன் தேவன் என்றதாயிற்று. (தே$_3$வஸ்ய) '**தி$_3$வு–க$_3$தி:**' ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருப்பவன் தேவனாவான். **"புருஷாந் ந பரம் கிஞ்சித் ஸா காஷ்ட$_2$ா ஸா பரா க$_3$தி:"**

"ஶரணம் க$_3$திர் நாராயண:" "நாராயணம் பராயணம்" "க$_3$திர் க$_3$ம்யஶ்சாஸௌ ஹரி:" [ப்ராப்யப்ராபகமாகவிருப்பவன் ஹரி] "நெறிமையால் நினையவல்லார் கதியினை" "பதியே பரவித்தொழும் தொண்டர்தமக்குக்கதியே" என்கிறபடியே மேலான உபாயமாகவும், உபேயமாகவுமிருப்பவன் தேவன் என்றதாயிற்று. ஆக இவற்றால் தேவசப்தத்திற்குள்ள அர்த்தங்களெல்லாம் நாராயணனுக்கே பொருந்தும் என்று நிர்ணயிக்கப்பட்டது.

(தத் வரேண்யம் ப$_4$ர்க்க$_3$:) விரும்பத்தக்கதாய், வேதாந்தங்களில் ப்ரஸித்தமானதான குணங்களை. (தத்) "தஸ்மிந்யத$_3$ந்தஸ் தத$_3$ந்வேஷ்டவ்யம் தத்$_3$ வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம்" [பரமாத்மாவினிடத்திலுள்ள அந்த குண ஸமூஹம் தேடத்தக்கது; அது அறியத்தக்கது.] என்னும் ஶ்ருதி ப்ரஸித்தியை நினைப்பது. (வரேண்யம்) ஸர்வராலும் ஆதரிக்கத்தக்கது. புஷ்பத்திற்கு மணம்போலவும், தேனுக்குச் சுவைபோலவும், ஸூர்யனுக்கு ஒளிபோலவுமிருந்துகொண்டு பகவானுக்கும் பெருமையைத் தருபவையன்றோ இவை. "ஸோ஽ஶ்நுதே ஸர்வாந் காமாந்" என்று மோக்ஷப்ராப்யமாகவும் சொல்லப்பட்டன அவனுடைய குணங்கள், "உனது பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்" "செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்" "ஈர்கின்ற குணங்களையுடையாய்" "நின்றெனதாவியை ஈர்கின்ற சீலமே" "கோவிந்தன் குணம் பாடி ஆவிகாத்திருப்பேனே" என்று ஆழ்வார்கள் ஆழங்காற்பட்டதும் இக்குணங்களிலேயேயன்றோ.

(ப$_4$ர்க்க$_3$:) குணஸமூஹத்தை; 'ர்' என்னும் எழுத்து இங்கு அதிகமாகப் படிக்கப்பட்டிருக்கிறது. 'ப$_4$க$_3$:' என்றபடி. இப்படியே யஜுர்வேதத்தில் "அபஸ்ஸிஷாஸங் ஸுவரப்ரதித்த:" என்றவிடத்தில் "அப்ரதீத:" [அறியப்படாதவன்] என்பதற்கு பதிலாக "அப்ரதீத்த:" என்றதன்றோ. ப$_4$க$_3$ஶப்தம் குணங்களுக்கு வாசகமானபடியென் என்னில்:



"ஐஶ்வர்யஸ்ய ஸமக்$_3$ரஸ்ய வீர்யஸ்ய யஶஸ: ஶ்ரிய: |
ஜ்ஞாநவைராக்$_3$யயோஶ்சைவ ஷண்ணாம் ப$_4$க இதீரணா ||"

[பூர்ணமான ஐஶ்வர்யம், வீர்யம், கீர்த்தி, செல்வம், ஞானம், வைராக்யம் என்னும் ஆறு குணங்களுக்கும் வாசகம் ப$_4$க$_3$ஶப்தம்.] என்று விஷ்ணுபுராணத்தில் ப$_4$க$_3$ஶப்தம் குணங்களைச் சொல்லுவதென்று காட்டப்பட்டது. 'தத்' என்பதற்குச் சேர இந்த ப$_4$க$_3$ஶப்தத்தை ஸகாராந்த நபும்ஸகலிங்கபதமாகக் கொள்ளவேண்டும். அகாராந்தமாகவே கொண்டால் இரண்டாவது வேற்றுமையின் அர்த்தத்தில் முதல் வேற்றுமை படிக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளவேண்டும். இங்கு ஆறு குணங்களை ப$_4$க$_3$ஶப்தத்துக்குப் பொருளாகச் சொன்னது, "வஶீ வதா$_3$ந்ய:" முதலானவிடங்களில் சொன்ன ஸமஸ்தகல்யாண குணங்களுக்கும் உபலக்ஷணம். "ப$_4$ஜ்யதே இதி ப$_4$க$_3$:" [ப$_4$ஜனம் செய்யப்படுகிறதாகையால் குணஸமூஹம் பகமெனப்படுகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலும் ப$_4$க$_3$ஶப்தம் குணவாசகமாகிறபடியைக் காணலாம். (தீ$_4$மஹி) மேலே சொன்ன குண ஸமூஹத்தை தியானம் செய்யக்கடவோம். "த்$_4$யை சிந்தாயாம்" என்று தா$_4$து.

(வரேண்யம் தத்$_3$ ப$_4$ர்க்க$_3$:) 'எல்லாராலும் ஆதரிக்கத்தக்கதாய், வேதாந்த ப்ரஸித்தமான பகவத்ஸ்வரூபத்தை' என்றும் பொருள் கொள்ளலாம். (வரேண்யம்) ஜ்ஞானாநந்தமயமாகையினாலே ஸர்வசேதனராலும் விரும்பத்தக்கது. 'ந ச ஸீதா த்வயா ஹீநா' [உன்னைப் பிரிந்த ஸீதை ஸத்தையை இழப்பாள்.] என்றும், "நின்னலால் இலேன் காண்" "நானுன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே" என்றும் சொல்லுகிறபடியே பிரியில் தரியாதபடியன்றோ இவனுடைய ஸ்வரூபமிருப்பது. (தத்) "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம" "விஜ்ஞாநமாநந்த$_3$ம் ப்$_3$ரஹ்ம" "தத் விஜிஜ்ஞாஸஸ்வ தத்$_3$ ப்$_3$ரஹ்மேதி" முதலான வேதாந்த

வாக்யங்களில் ப்ரஸித்திபெற்றதன்றோ இவனுடைய தி3வ்யாத்மஸ்வரூபம்.

(ப4ர்க்க3:)பகவத்ஸ்வரூபத்தை. ப4ர்க்க3ஶப்தம் ஸ்வரூப வாசகமானபடியென் என்னில்:

**''ப4ாபி4: க3திரஸ்ய ஹீதி ப4ர்க்கோ3 ப4ர்ஜயதீதி வைஷ ப4ர்க்க3:....ப4ாஸயதீமாந் லோகாநிதி. ரஞ்ஜயதீமாநி பூ4தாநி. க3ச்ச2த இதி க3ச்ச2த்யஸ்மிந் ஆக3ச்ச2த்யஸ்மா இமா: ப்ரஜாஸ் தஸ்மாத் ப4ாரக3த்வாத்3 ப4ர்க்க3:**

[தன்னுடைய த4ர்மபூ4தஜ்ஞான ஒளிகளாலேயே இந்த ஸ்வரூபத்திற்கு கமனமிருப்பதனால் இது பர்க்கம் எனப் படுகிறது. (பாபங்களைப்) பொசுக்குவதாலும் இது ப4ர்க்க3 மாகிறது. இந்த லோகங்களை ப4ாஸிக்கச் (பிரகாசிக்கச்) செய்வதனால் ப4காரத்திற்குப் பொருளாகவும், இந்த ஜீவ ராசிகளை ரஞ்ஜிக்கச்செய்வதினால் ரகாரவாச்யமாகவும். இவன் செல்லும்போது இவை செல்வதாலும், இவனைக் குறித்து இந்த ப்ரஜைகள் செல்வதாலும் க3காரவாச்யமாக வும் ஆகிறபடியால் ப4ர்க்க3மெனப்படுகிறது.] என்று மைத்ராயணீய உபனிஷத்திலும்.

**“ஸம்ப4ர்த்தேதி தத2ா ப4ர்த்தா ப4காரோऽர்த்த2த்3வயாந்வித: | நேதா க3மயிதா ஸ்ரஷ்டா க3காரார்த்த2ஸ்தத2ா முநே ||**

[முனிவரே! ‘(ப்ரக்ருதியைக்) கார்யதசையை அடையச் செய்பவன்’. ‘ஸ்வாமி’ என்னும் இரண்டு அர்த்தங்களுடன் கூடியது ப4காரம்; அப்படியே ரக்ஷிப்பவன், ஸம்ஹரிப்பவன், ஸ்ருஷ்டிப்பவன், என்பது க3காரத்தின் அர்த்தம்.] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் ப4ர்க்க3ஶப்தம் பகவத் ஸ்வரூபத்தைச் சொல்லும் வழிகள் விரிவாக உரைக்கப் பட்டன. (ஸவிது: ப4ர்க்க3:) பரமாத்மாவினுடைய ஸ்வரூபம்; ராஹுவே ஶிர:(தலை)ஸ்வரூபமாயிருக்க, ராஹுவினுடைய சிரஸ்ஸு என்று பிரயோகிப்பதைப் போன்றது இந்தப் பிரயோகமும்.



இந்த யோஜனையிலும் ‘ப4ர்க்க3: தீ4மஹி’ என்பதற்கு பகவானுடைய ஒளிமயமான திவ்யமங்கள விக்ரஹத்தை தியானிக்கக்கடவோம் என்று பொருள்கொள்ளலாம். ஸ்வரூபாதிகளை தியானிப்பது சிரமஸாத்தியம். திவ்யமங்கள விக்ரஹத்தை தியானிப்பது ஸுலபம். இதனாலேயே இந்த திவ்யமங்கள விக்ரஹம் ஶுபா4ஶ்ரயமென்று கீர்த்தி பெற்றிருக்கிறது.

ஆக. இவ்வளவால், “தேவனாகிய ஸூர்யனுக்குள் இருக்கும் விரும்பத்தக்க அந்தத் தேஜஸ்ஸை தியானிக்கக்கடவோம்” என்றும். ''ஸர்வலோகஸ்ரஷ்டாவான தேவனுடைய விரும்பத்தக்க அந்த ஸ்வரூபத்தை (அல்லது குணங்களை) (அல்லது திருமேனியை) தியானிக்கக்கடவோம்’ என்றும் இரு பொருள்கள் விளக்கப்பட்டன. ‘‘தி4யோ யோ ந: ப்ரசோத3யாத்’’ என்னும் பகுதிக்கு முதலர்த்தத்தில் ''யாதொரு தேஜஸ் நம் புத்திகளைத் தூண்டுகிறதோ'' என்றும், இரண்டாமர்த்தத்தில் 'யாவனொரு தேவன் நம் புத்திகளைத் தூண்டுகிறானோ'' என்றும் பொருளாகிறது. இவ்விரண்டு அர்த்தங்களே ஶ்ருதிஸ்ம்ருதிகளாலும். ஆசார்யர்களாலும் ஆதரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு விருத்தமாகப் பலர் பலவிதமாக காயத்ரீ மந்திரத்திற்குப் பொருளுரைக்கின்றனர். அவைகள் வைதிகர்களால் அநாதரிக்கத்தக்கவை. பர்க்கசப்தத்திற்குச் சிவனைப் பொருளாகக்கொள்வதும் தவறு. பட்டபாஸ்கரர், வித்யாரண்யர். ஸாரதீபகாரர், நிர்ணயகல்பவல்லீகாரர். வரதராஜர். , கிருஷ்ணபட்டர் முதலான பல பாஷ்யகாரர்கள் அப்பொருளை அநாதரித்திருக்கிறார்கள்*.

---

* காயத்ரிக்குப் பொருளாயிருப்பவன் நாராயணனே என்பது எமது விஷ்ணுசித்தவிஜயத்திலும் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. விரிவு வேண்டுவார் அங்கு காணலாம்.

## காயத்ரியின் பெருமையும் ஜபம் செய்யும் முறையும்

"கா3யந்தம் த்ராயதே—இதி கா3யத்ரீ" [தன்னைப் பாடுமவனை (ஸம்ஸாரபயத்தினின்றும்) காப்பாற்றுகிறதாகையால் காயத்ரியெனப்படுகிறது] என்னும் காயத்ரீசப்தத்தின் பொருளே இதினுடைய பெருமையைக் காட்டுகிறது. மஹாபாரதம், ஆஶ்வமேதி4கபர்வம், தொண்ணூற்றொன்பதாவது அத்தியாயத்தில்,

"ஸாயம் ப்ராதஸ்து யே ஸந்த்4யாம் ஸம்யங்நித்யமுபாஸதே।
நாவம் வேத3மயீம் க்ருத்வா தரந்தே தாரயந்தி ச॥
யோ ஜபேத் பாவநீம் தே3வீம் கா3யத்ரீம் வேத3மாதரம்।
ந ஸீதே3த் ப்ரதிக்3ருஹ்ணந: ப்ருதி2வீம் ச ஸஸாக3ராம்॥
யே சாஸ்ய து3:ஸ்தி2தா: கேசித் க்3ரஹா:
ஸூர்யாத3யோ தி3வி।
தே சாஸ்ய ஸௌம்யா ஜாயந்தே ஶிவா: ஶுப4கராஸ் தத2ா॥
யத்ர யத்ர ஸ்தி2தாஶ்சைவ தா3ருணா: பிஶிதாஶநா:।
கோ4ரரூபா மஹாகாயா த4ர்ஷயந்தி ந தம் த்3விஜம்॥
புநந்தீஹ ப்ருதி2வ்யாம் ச சீர்ணவேத3வ்ரதா நரா:।
சதுர்ணாமபி வேதா3நாம் ஸா ஹி ராஜந் க3ரீயஸீ॥
அசீர்ணவ்ரதவேதா3 யே விகர்மப2லமாஶ்ரிதா:।
ப்3ராஹ்மணா நாமமாத்ரேண தேऽபி பூஜ்யா யுதி4ஷ்டி2ர॥
கிம் புநர் யஸ்து ஸந்த்4யே த்3வே நித்யமேவோபதிஷ்ட2தே।
பூ4ர்பு4வஸ்வரிதி ப்3ரஹ்ம யோ வேத3நிரதோ த்3விஜ:।
ஸ்வதா3ரநிரதோ தா3ந்தஸ் ஸ வித்3வாந் ஸ ச பூ4ஸுர:॥
ஸந்த்4யாமுபாஸதே யே வை நித்யமேவ த்3விஜோத்தமா:।
தே யாந்தி நரஶார்தூ3ல ப்3ரஹ்மலோகம் ந ஸம்ஶய:॥
ஸாவித்ரீமாத்ரஸாரோऽபி வரோ விப்ரஸ் ஸுயந்த்ரித:।
நாயந்த்ரிதஶ் சதுர்வேதீ3 ஸர்வாஶீ ஸர்வவிக்ரயீ॥
ஸாவித்ரீம் சைவ வேதா3ம்ஶ்ச துலயாऽதோலயந் புரா।
ஸதே3வர்ஷிக3ணாஶ்சைவ ஸர்வே ப்3ரஹ்மபுரஸ்ஸரா:॥
சதுர்ணாமபி வேதா3நாம் ஸா ஹி ராஜந் க3ரீயஸீ॥



யதா2 விகஸிதே புஷ்பே மது4 க்3ருஹ்ணந்தி ஷட்பதா3:।
ஏவம் க்3ருஹீதா ஸாவித்ரீ ஸர்வவேதே3 ச பாண்ட3வ॥
தஸ்மாத்து ஸர்வவேதா3நாம் ஸாவித்ரீ ப்ராண உச்யதே।
நிர்ஜீவா ஹீதரே வேதா3 விநா ஸாவித்ரியா ந்ருப।
ஸஹஸ்ரபரமாம் தே3வீம் ஶதமத்4யாம் த3ஶாவராம்॥
ஸாவித்ரீம் ஜப கௌந்தேய ஸர்வபாபப்ரணாஶிநீம்॥

[எவர்கள் தினந்தோறும் காலையிலும் மாலையிலும், நன்றாக ஸந்த்யாவந்தனத்தை அநுஷ்டிக்கிறார்களோ, அவர்கள் வேதமயமான படகைச்செய்து (ஸம்ஸாரக் கடலைத்) தாண்டுகிறார்கள்; (பிறரையும்) தாண்டுவிக்கிறார்கள். பரிசுத்தப்படுத்துபவளும், வேதத்திற்குத் தாயாயிருப்பவளுமான காயத்ரீதேவியை எவனொருவன் ஜபிக்கிறானோ, அவன் கடல்சூழ்ந்த மண்ணுலகம் முழுவதையும் தானம் வாங்கினாலும் துன்புறமாட்டான். ஸூர்யன் முதலான கிரஹங்களில் எவை இவனுக்குக் கெட்ட இடத்திலிருக்கின்றனவோ, அவையும் இவனுக்கு மங்களகரமாயும், நன்மைபயப்பவையாகவும் ஆகின்றன. பயங்கரமானவையாய், மாம்ஸத்தை உண்பவையாய். கோ4ரமான உருவுடையவையான ராக்ஷஸாதிகளும், அந்த இருபிறப்பாளனைப் பயமுறுத்தமாட்டா. வேத விரதப்படி நடக்கும் மனிதர்கள் இவ்வுலகில் வஸ்துக்களைப் பரிசுத்தப்படுத்துகிறார்கள். நான்கு வேதங்களுள்ளும் காயத்ரியே மேலானது. வேதவிரதப்படி நடக்காதவர்களாய், விருத்தமான கர்மபலத்தை ஆஶ்ரயித்திருப்பவர்களாய். பெயருக்குமட்டும் ப்ராஹ்மணர்களாயிருப்பவர்களும் பூஜிக்கத்தக்கவர்களே. எந்த ப்ராஹ்மணர்கள் இரண்டு ஸந்த்யைகளையும் உபாஸிக்கிறார்களோ, அவர்கள் பூஜிக்கத்தக்கவர்களென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? 'பூ4ர்பு4வஸ்ஸுவ:' என்பதே வேதமாகும்; இந்த வேதத்தில் ஈடுபட்டிருப்பவனும், தன் மனைவியிடமே ஈடுபட்டிருப்பவனும், இந்திரியங்களை அடக்கியவனுமான த்விஜனே வித்வானாகவும், பூ4ஸுரனாகவும் ஆகிறான். எந்த த்3விஜஶ்ரேஷ்டர்கள் தினந்தோறும்

ஸந்த்4யையை உபாஸிக்கிறார்களோ அவர்கள் ப்ரஹ்மத்தின் உலகை அடைகிறார்கள் என்பதில் ஸந்தேஹமில்லை. நியமங்களுடன் கூடி காயத்ரியைமட்டும் அநுஸந்திக்கும் விப்ரன், நியமமற்றவனாய், எதையும் உண்பவனாய், எதையும் விற்பவனான சதுர்வேதியைக்காட்டிலும் மேலானவன். ப்ரஹ்மாவை முன்னிட்ட தேவரிஷிகணங்கள் யாவரும் ஸாவித்ரியையும் மற்ற வேதபாகங்களையும் தராசிலிட்டு நிறுத்தனர் முன்னொருநாள். (நிறுத்தவுடன்) நான்கு வேதங்களைக்காட்டிலும் காயத்ரியே மேலானதென்று அறிந்தனர். மலர்ந்த புஷ்பத்திலே வண்டுகள் மதுவை அருந்துகின்றதுபோல், எல்லா வேதங்களிலும் ஸாவித்ரியானது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகையால் எல்லா வேதங்களுக்கும் ப்ராணனாகச் சொல்லப்படுகிறது காயத்ரி. காயத்ரியற்ற மற்றவேதங்கள் உயிரற்ற உடல்போன்றவை. ஆகையால் ஆயிரம்தடவை ஜபிப்பதை உத்தமமாகவும், நூறு முறை ஜபிப்பதை மத்திமமாகவும், பத்துதடவை ஜபிப்பதை அத4மமாகவும் கொண்டதாய், ஸர்வ பாபங்களையும் போக்கடிப்பதான இந்த காயத்ரீ மந்திரத்தை ஜபிப்பாயாக.] என்று பகவான் கிருஷ்ணனாலேயே காயத்ரியின் பெருமைகள் விரிவாக விளக்கப்பட்டன. மநுஸ்ம்ருதி இரண்டாவது அத்தியாயத்தில்.

**''அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:।**
**வேத3த்ரயாந் நிரப்3ருஹத் பூ4ர்பு4வஸ் ஸ்வரிதீதி ச॥**
**த்ரிப்4ய ஏவ து வேதே3ப்4ய: பாத3ம் பாத3முதூ3து3ஹத்।**
**ததி3த்யருசோऽஸ்யாஸ் ஸாவித்ர்யா: பரமேஷ்டீ2 ப்ரஜாபதி:॥**
**ஏதத3க்ஷரமேதாஞ்ச ஜபந் வ்யாஹ்ருதிபூ4ர்விகாம்।**
**ஸந்த்4யயோர் வேத3வித்3 விப்ரோ வேத3புண்யேந யுஜ்யதே॥**
**ஸஹஸ்ரக்ருத்வஸ் த்வப்4யஸ்ய ப3ஹிரேதத் த்ரிகம் த்3விஜ:।**
**மஹதோப்யேநஸோ மாஸாத் த்வசேவாஹிர் விமுச்யதே॥**
**ஏதயர்ச்சா விஸம்யுக்த: காலே ச க்ரியயா ஸ்வயா।**
**ப்3ரஹ்மக்ஷத்ரியவிட்3யோநிர் க3ர்ஹணம் யாதி ஸாது4ஷு॥**



**ஓங்காரபூர்விகாஸ் திஸ்ரோ மஹாவ்யாஹ்ருதயோऽவ்யயா:।**
**த்ரிபதா3 சைவ ஸாவித்ரீ விஜ்ஞேயம் ப்3ரஹ்மணோ முக2ம்॥**
**யோऽதீ4தேऽஹந்யஹந்யேதாம் த்ரீணி வர்ஷாண்யதந்த்3ரித:।**
**ஸ ப்3ரஹ்ம பரமப்4யேதி வாயுபூ4த: க2மூர்த்திமாந்॥**
**ஏகாக்ஷரம் பரம் ப்3ரஹ்ம ப்ராணாயாம: பரம் தப:।**
**ஸாவித்ர்யாஸ்து பரம் நாஸ்தி மௌநாத் ஸத்யம்**
**விஶிஷ்யதே॥''**

[ப்ரஜாபதியானவர், அகாரத்தையும், உகாரத்தையும், மகாரத்தையும், பூ4ர், பு4வஸ், ஸுவ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளையும் (முறையே) ருக், யஜுஸ், ஸாமம் என்னும் மூன்று வேதங்களிலிருந்து எடுத்தார். பரமேஷ்டியான ப்ரஜாபதி இந்த மூன்று வேதங்களிலிருந்தே ''தத் ஸவிதுர்வரேண்யம்'' என்று தொடங்கும் காயத்ரீயின் மூன்று பாதங்களையும் முறையே உத்3த4ரித்தார். ஓங்காரமாயிருக்கிற இந்த அக்ஷரத்தையும் வ்யாஹ்ருதிகளை முன்னிட்ட இந்த காயத்ரியையும் இரண்டு ஸந்த்யைகளிலும் ஜபிக்கும் வேதவித்தான விப்ரன் மூன்று வேதங்களையும் அத்4யயனம் செய்த புண்ணியத்தைப் பெறுகிறான். இம்மூன்றையும் (நதிக்கரை முதலான) வெளி ப்ரதேசங்களில் ஆயிரம்தடவை அப்யஸிக்கும் த்விஜன், தோலைவிடும் பாம்புபோல் ஒருமாத காலத்தில் பெரும் பாபத்திலிருந்து விடுபடுகிறான். இந்த காயத்ரியை அதற்குரிய காலங்களில் அநுஸந்தியாத ப்ராஹ்மண க்ஷத்ரியவைஶ்யர்கள் ஸாதுக்களால் நிந்திக்கப்படுகின்றனர். ஓங்காரத்தை முன்னிட்ட மூன்று வியாஹ்ருதிகளும், மூன்று பாதமுள்ள காயத்ரியும் ப்ரஹ்மத்தின் முகம் என்று அறியத்தக்கவை. எவன் இதை மூன்று வருஷ காலங்கள் சோம்பலில்லாமல் தினந்தோறும் அநுஸந்திக்கிறானோ, அவன் பரப்ரஹ்மத்தை அடைகிறான். வாயுவைப்போல் இஷ்டப்படி ஸஞ்சரிப்பவனாகிறான். ஆகாசம்போல் தோஷமற்றவனாகிறான். ஓரக்ஷரமான ஓங்காரமே பரப்ரஹ்மம். ப்ராணாயாமமே மேலான தவம். ஸாவித்ரியைக்காட்டிலும் மேலானதில்லை. மௌன

மாகப் பரமாத்மாவை தியானிப்பதைக்காட்டிலும், ஸத்ய ஶப்தத்தினல் சொல்லப்படும் ஜபத்தினல் தியானிப்பது மேலானது.] என்று காயத்ரீப்ரபாவம் விளக்கப்பட்டது.

"கா3யத்ர்யா ந பரம் ஜப்யம் கா3யத்ர்யா ந பரம் தப:।
கா3யத்ர்யா ந பரம் த்4யேயம் கா3யத்ர்யா ந பரம் ஹுதம்॥"

[காயத்ரியைக்காட்டிலும் ஜபிக்கத்தக்கது வேறென்றில்லை; காயத்ரியைக்காட்டிலும் மேலான தவமொன்றுமில்லை. தியானிக்கத்தக்க வஸ்துக்களில் காயத்ரியைக்காட்டிலும் மேலானதில்லை. காயத்ரியைக்காட்டிலும் மேலான ஹோமமுமில்லை] என்று ஶங்க2ஸ்ம்ருதியிலும்.

"த3ஶக்ருத்வ: ப்ரஜப்தா ஸா த்ரியஹாத் யத் க்ருதம் லகு4।
தத் பாபம் ப்ரணுத3த்யாஶு நாத்ர கார்யா விசாரணா॥
ஶதம் ஜப்தா து ஸா தே3வீ பாபௌக4ஶமநா ஸ்ம்ருதா।
ஸஹஸ்ரஜப்தா ஸா தே3வீ உபபாதகநாஶிநீ॥
கோடிஜபேந கா3யத்ர்யா யதி3ச்ச2தி தத3ாப்நுயாத்।
யக்ஷவித்3யாத4ரத்வம் வா கா3ந்த4ர்வத்வமத2ாபி வா॥
தே3வத்வமத2வா ராஜ்யம் பூ4லோகம் வாப்யகண்டகம்॥".

[பத்துதடவை ஜபிக்கப்பட்ட காயத்ரி மூன்றுநாளில் செய்யப்பட்ட பாபத்தைப் போக்கடிக்கிறது. இதில் ஸந்தேஹம் வேண்டாம். நூறு தடவை ஜபித்தால் பாப ஸமூஹத்தையே சமிக்கச்செய்கிறது. ஆயிரம்தடவை ஜபித்தால் உபபாதகம் முழுவதையும் அழிக்கிறது. கோடிமுறை ஜபித்தால், யக்ஷர், வித்யாதரர், கந்தர்வர், தேவர் ஆகிய இவர்களுடைய தன்மையென்ன, ராஜ்யமென்ன, எதிரிகளற்ற பூமி முழுவதுமென்ன ஆகிய இவற்றில் எதை விரும்புகிருனே அதை அடைவான்.] என்று வியாஸ ஸ்ம்ருதியிலும்,

"ஐஹிகாமுஷ்மிகம் பாபம் ஸர்வம் நிரவஶேஷத:।
பஞ்சராத்ரேண கா3யத்ரீ ஜப்யமாநா வ்யபோஹதி॥



கா3யத்ர்யாஸ்து பரம் நாஸ்தி ஶோத4நம் பாபகர்மணாம்।
ப்3ரஹ்மசாரீ மிதாஹாரஸ் ஸர்வபூ4தாநுகம்பந:॥
கா3யத்ர்யா லக்ஷஜாபேந ஸர்வபாபை: ப்ரமுச்யதே॥
அயாஜ்யயாஜநம் க்ருத்வா பு4க்த்வா சாந்நம் விக3ர்ஹிதம்।
கா3யத்ர்யஷ்டஸஹஸ்ரந்து ஜபம் க்ருத்வா விஶுத்3த்4யதி॥"

[ஐந்து தினங்கள் காயத்ரீஜபம் செய்தால், இவ்வுலகிலும் எவ்வுலகிலும் செய்த எல்லாப் பாபங்களும் அழிந்துவிடும். பாபகர்மங்களைப் போக்கடிப்பதில் காயத்ரியைக்காட்டிலும் மேலானதொரு மந்திரமில்லை. ப்ரஹ்மசாரியாய், அளவுடன் ஆகாரமுண்பவனும், ஸர்வப்ராணிகளிடமும் தயையுள்ளவனை ஒருவன், காயத்ரியை லக்ஷம்தடவை ஜபித்தானுகில் ஸர்வபாபங்களையும் போக்கிவிடுவான். யாகம் செய்விக்கத்தகாதவனுக்கு யாகம் செய்வித்தும், நிந்திக்கப்படும் அன்னத்தை உண்டும் எண்ணுயிரம்தடவை காயத்ரியை ஜபித்தானுகில் பரிசுத்தியடைகிருன்.] என்று ஸம்வர்த்த ஸ்ம்ருதியிலும்,

"ப்ரணவே நித்யயுக்தஸ்ய வ்யாஹ்ருதீஷு ச ஸப்தஸு।
த்ரிபத3ாயாஞ்ச கா3யத்ர்யாம் ந ப4யம் வித்3யதே க்வசித்॥
கா3யத்ர்யாஸ்து ஸமோ நாஸ்தி மந்த்ரோ வேத3சதுஷ்டயே।
ஸர்வே வேத3ாஶ்ச யஜ்ஞாஶ்ச த3ாநாநி ச தபாம்ஸி ச॥
ஸமாநி கலயா ப்ராஹுர் முநயோ ந தத்3த்3ய்ருச:॥
பரிஹாப்யாபி வேத3ாம்ஸ்த்ரீந் கர்மாணி விவித4ாநி ச।
ஸாவித்ரீமாத்ரமாஶ்ரித்ய த்3விஜோ ப4வதி நிர்ப்ப4ய:॥"

[ப்ரணவத்திலும், ஏழு வ்யாஹ்ருதிகளிலும், மூன்று பாதங்கொண்ட காயத்ரியிலும் மண்டியிருப்பவனுக்கு எங்கும் பயமில்லை; நான்கு வேதங்களிலும் காயத்ரிக்கு ஸமமான மந்திரம் கிடையாது. எல்லா வேதங்களும், யஜ்ஞங்களும், தானங்களும், தபஸ்ஸுகளும், 'தத்ஸவிது:' என்று தொடங்கும் மந்திரத்தின் ஒரு பகுதிக்கும் ஈடாகமாட்டா என்று முனிவர்கள் உரைக்கின்றனர். மூன்று வேதங்களையும்

பலவிதமான கர்மங்களையும் விட்டவனாகிலும், காயத்ரியை மட்டுமாவது பற்றியிருந்தானாகில், அந்த த்விஜன் நிர்ப்பயனாகிறான்.] என்று விஶ்வாமித்ரஸ்ம்ருதியிலும்,

"வாயுப4க்ஷோ தி3நம் ஸ்தி2த்வா ராத்ரிம் நீத்வா து ஸூர்யத்3ருக் |
ஜப்த்வா ஸஹஸ்ரம் கா3யத்ர்யா: ஶுசிர் ப்3ரஹ்மவதா4த்3ருதே ||
ஸாயம் ப்ராதஸ்து யஸ்ஸந்த்4யாமஸ்கந்நாமுபதிஷ்ட2தே |
ஜபந் வை பாவநீம் தே3வீம் பவித்ராம் வேத3மாதரம் ||
ஸ தயா பாவிதோ தே3வ்யா ப்3ராஹ்மணோ தூ4தகல்மஷ: |
ந ஸீதே3த் ப்ரதிக்3ருஹ்ணந் ப்ருதி2வீஞ்ச ஸஸாக3ராம் ||
சதுர்ணாமபி வேதா3நாம் கா3யத்ரீ ஜநநீ ப4வேத் |
தாமுபாஸ்தே து யோ நித்யம் ஸ விப்ர: பங்க்திபாவந: ||"

[காற்றை மட்டும் ஆகாரமாகக்கொண்டு ஒரு பகல் இருந்து, இரவைக் கழித்து (பொழுது விடிந்ததும்) ஸூர்யனைப் பார்த்துக்கொண்டு, ஆயிரம் முறை காயத்ரியை ஜபித்தால் ப்ரஹ்மஹத்தியைத் தவிர மற்ற பாபங்களிலிருந்து சுத்தியடைகிறான். காலையிலும் மாலையிலும் சரியான காலத்தில் எந்த ப்ராஹ்மணன் ஸந்த்யையை உபாஸிக்கிறானோ, அவன் பரிசுத்தையாய், பரிசுத்தம் செய்பவளாய், வேதமாதாவான தேவீ காயத்ரியை ஜபிப்பதினால் பாபம் நீங்கப்பெற்று, கடல் சூழ்ந்த மண்ணுலகம் முழுவதையும் தானம் வாங்கினபோதிலும் துன்புறமாட்டான். காயத்ரியை லக்ஷம்முறை ஜபித்தால் பல பாபங்களிலிருந்து விடுபடுகிறான். நான்கு வேதங்களுக்கும் காயத்ரி தாயாகிறாள். அந்த காயத்ரியை எவனொருவன் உபாஸிக்கிறானோ அவனே ப்ராஹ்மணனாகவும், பங்க்திபாவனனாகவுமாகிறான்.] என்று யோக யாஜ்ஞவல்க்யத்திலும் காயத்ரியின் பெருமைகள் பலபடியாகப் பேசப்பட்டன. மற்றும் பலபல ஸ்ம்ருதிகளிலும் இம்மாதிரியான பல வசனங்களுள்ளன. அவற்றை விரிவிற்கஞ்சி விடுத்தோம்.



இனி, ஜபம் செய்யும் முறையைச் சிறிது விளக்குவோம். விசுத்தமான இடத்தில் ஜபம் செய்யவேண்டும்; "அநந்தம் விஷ்ணுஸாந்நிதௌ4" என்கிறபடியே பகவத்ஸந்நிதியில் ஜபிப்பது அநந்தபலத்தைத் தரவல்லது.

"க்ரியாயஜ்ஞாத் த3ஶகு3ணோ ஜபயஜ்ஞ: ப்ரகீர்த்தித: |
உச்சாத் ஶதகு3ணோ ஜ்ஞேய உபாம்ஶுஶ்சேத் ஸ்ம்ருதஸ் ததா2 |
உபாம்ஶோர் மாநஸ: ப்ரோக்தஸ் ஸஹஸ்ரகு3ணதோऽதி4க: ||"

[கிரியையினால் பகவானை ஆராதிப்பதைக்காட்டிலும், ஜபத்தினால் ஆராதிப்பது சிரேஷ்டமானது. உரக்க ஜபிப்பதைக்காட்டிலும், வாயினால் மெதுவாக ஜபிப்பது நூறு மடங்கு உயர்ந்தது; அதைக் காட்டிலும், மனத்திலேயே ஜபிப்பது ஆயிரம்மடங்கு சிறந்தது] என்று போதாயநருடைய அஷ்டாக்ஷரவிதியில் சொல்லப்பட்டபடியே மனத்தினுள்ளே அர்த்தசிந்தனத்துடன் ஜபிப்பது மேலானது.

"கநிஷ்டா2மூலமாரப்4ய ப்ராத3க்ஷிண்யக்ரமேண து |
அநாமிகாந்தம் தே3வேஶ ஜபேத்.... ||"

[சிறுவிரலின் அடியிலுள்ள ரேகையிலிருந்து தொடங்கி, (சிறு விரலின் மேலிரண்டு ரேகைகள், மோதிர விரலின் மேல் ரேகை, நடுவிரலின் மேல் ரேகை, ஆள்காட்டி விரலின் மேலிருந்து கீழ்வரையிலுள்ள மூன்று ரேகைகள், நடுவிரலின் கீழ்ரேகை, மோதிர விரலின் கீழ்ரேகை என்னும் கிரமத்தில்) ப்ரதக்ஷிணமாக, மோதிர விரலின் அடி ரேகைவரையில்எண்ணிக்கொண்டு ஜபிக்கவேண்டும்]என்று எண்ணும் முறையும் அறிவிக்கப்பட்டது. துளஸிமாலை, தாமரைமணிமாலை இவற்றைக்கொண்டு எண்ணலாம் என்றும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டது.

"மத்3ப4க்தா யே நரஶ்ரேஷ்ட2 மத்3க3தா மத்பராயணா: |
மத்3யாஜிநோ மந்நிபுமாஸ் தாந் ப்ரயத்நேந பூஜயேத் ||
தேஷாம் து பாவநாயாஹம் நித்யமேவ யுதி4ஷ்டி2ர |
உபே4 ஸந்த்4யேऽதி4திஷ்டா2மி ஹ்யஸ்கந்நம் தத்3 வ்ரதம் மம |
தஸ்மாத3ஷ்டாக்ஷரம் மந்த்ரம் மத்3ப4க்தைர் வீதகல்மஷை: |
ஸந்த்4யாகாலேஷு ஜப்தவ்யம் ஸததம் சாத்மஶுத்3த4யே ||"

[நரோத்தமனே! என்னுடைய பக்தர்களாய், என்னையே அடைந்தவர்களாய், என்னையே பராயணமாகக் கொண்டவர்களாய், என்னையே ஆராதிப்பவர்களாய் என்னையும் நியமிக்க வல்லவர்களான பெரியோர்களை முயற்சிசெய்து பூஜிக்க வேண்டும். அவர்களைப் பரிசுத்தப்படுத்துவதற்காக நான் எப்போதும் இரண்டு ஸந்த்யைகளையும் அதிஷ்டித்து நிற்கிறேன். இப்படி நிற்கை எனக்கு (என்றும்) மாறாத விரதமாகும். ஆகையால் (என்னுடையதான) அஷ்டாக்ஷரமந்திரம், தோஷமற்றவர்களான என்னுடைய பக்தர்களால், தங்களுடைய ஆத்மசுத்தியின் பொருட்டு ஸந்தியாகாலங்களில் எப்போதும் ஜபிக்கப்படவேண்டும்.] என்று ஸ்ரீவைஷ்ணவ தர்மஶாஸ்திரத்தில் பகவானாலேயே விதிக்கப்பட்ட அஷ்டாக்ஷர ஜபமும் காயத்ரீஜபத்திற்குப் பிறகு யதா2ஶக்தி செய்யப்பட வேண்டும்.

"அஷ்டாக்ஷராந்தபாதா3 ச கா3யத்ரீ ப்ரணவோஜ்ஜ்வலா |
ப்ரயோக்தவ்யேதி ப4க3வாநாஹ நாராயணோ முநி: ||"

[ப்ரணவத்தோடு விளங்குவதாய், அஷ்டாக்ஷரத்தைக் கடைசிப் பாதமாக உடையதாக காயத்ரியானது பிரயோகிக்கப்படவேண்டும் என்று பகவான் நாராயணமுனி அருளிச் செய்தார்.] என்று ஸநாதநதர்மதீபிகா என்னும் மதாந்தர கிரந்தத்திலும் எடுக்கப்பட்டது. வேதாந்ததேசிகரும் பாஞ்சராத்ர ரக்ஷையில், ஸந்தியாவந்தனத்தின்போது அஷ்டாக்ஷர மந்திரஜபம் செய்யவேண்டுமென்பதை ஸ்தாபித்திருக்கிறார். "இத்தை ஜபஹோமாதிமுகத்தாலே காரியங்கொண்டு போருவர் புறம்புள்ளார்; நம் முதலிகள் இதனுடைய அர்த்தானுஸந்தானத்திலே ஊன்றியிருப்பர்கள்' என்னும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியை அனுஸரித்து, அர்த்தானுஸந்தானத்துடன் ஸ்வயம்ப்ரயோஜனமாக அஷ்டாக்ஷர ஜபம் செய்வது மிகச் சிறந்ததே



"ஆதி3த்யமண்ட3லே த்4யாயேத் பரமாத்மாநமவ்யயம் |
விஷ்ணும் சதுர்பு4ஜம் ரக்தபங்கஜாஸநமத்4யக3ம் ||
கிரீட ஹார கேயூர கடகாதி3 விபூ4ஷிதம் |
ஸ்ரீவத்ஸ வநமாலா ஸ்ரீதுளஸீ கௌஸ்துபோ4ஜ்ஜ்வலம் ||
ஹரிம் பீதாம்ப3ரத4ரம் ஶங்க2சக்ரக3தா3த4ரம் |
ப்ரஸந்நவத3நம் ரத்நகுண்ட3லைர் மண்டி3தாநநம் ||
ஸர்வரத்ந ஸமாயுக்த ஸர்வாப4ரண பூ4ஷிதம் ||
அர்க்கமண்ட3ல மத்4யஸ்த2ம் ஸூர்யகோடிஸமப்ரப4ம் |
ப்3ரஹ்மாதி3 ஸேவ்யபாத3ாப்3ஜம் நௌமி ப்3ரஹ்ம
ரமாஸக2ம் ||"

[ஆதித்யமண்டலத்தில், பரமாத்மாவாய், அழிவற்றவராய், நான்கு கைகளையுடையவராய், செந்தாமரை நடுவில் வீற்றிருப்பவராய், கிரீடம், ஹாரம், கேயூரம், கடகம், ஸ்ரீவத்ஸம், வநமாலை, துளவமாலை, கௌஸ்துபம், பீதாம்பரம், சங்கசக்ரகதைகள், ரத்நகுண்டலங்கள், ஸர்வரத்நமயமான பல ஆபரணங்கள் ஆகிய இவற்றுடன் கூடியவராய், அழகிய திருமுகமண்டலத்தை உடையவராய், கோடி ஸூர்ய பிரகாசமுள்ளவராய், பிரமன் முதலானோர் வணங்கும் திருவடித் தாமரையை உடையவராய், ஸர்வவ்யாபகராய், ஸர்வஸம்ஹாரகராய் ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவரான ஸ்ரிய:பதியை தியானிக்கிறேன்] என்கிறபடியே பகவானைத் தியானித்துக்கொண்டு காயத்ரீ ஜபம் செய்யவேண்டும்.

"கஸ்மாத்3 ப்3ராஹ்மணஸ் ஸாயமாஸீநஸ் ஸந்த்4யாமுபாஸ்தே ப்ராதஸ் திஷ்ட2ந் யத் ஸாயமாஸீநஸ் ஸந்த்4யாமுபாஸ்தே தயா வீரஸ்த2ாநம் ஜயதி| யத் ப்ராதஸ் திஷ்ட2ந் தயா ஸ்வர்க்க3ம் லோகம் ஜயதி"

[ப்ராஹ்மணன் மாலைவேளையில் உட்கார்ந்துகொண்டும், காலைவேளையில் நின்றுகொண்டும் ஏன் ஸந்த்யையை உபாஸிக்கிறான்? சாயங்காலம் உட்கார்ந்துகொண்டு ஸந்த்யோபாஸனம் செய்வதால் வீரர்கள் செல்லும் லோகத்தை ஜயிக்கிறான். காலையில் நின்றுகொண்டு உபாஸிப்பதால் ஸ்வர்க்க லோகத்தை ஜயிக்கிறான்.] என்று சாந்தோக்யஶ்ருதியிலும்,

"பூர்வாம் ஸந்த்4யாம் ஜபம்ஸ்திஷ்டே2த்
கா3யத்ரீமார்க்கத3ர்ஶநாத் ।
பஶ்சிமாந்து ஸமாஸீநஸ் ஸம்யக்3ருக்ஷவிபா4வநாத் ॥"

[ஸூர்யனைக் காணும்வரையில் காயத்ரீமந்திரத்தை ஜபித்துக்கொண்டு நின்றுகொண்டு காலையில் ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டும்; நக்ஷத்திரங்களை நன்ருகக் காணும்வரையில் உட்கார்ந்துகொண்டு மாலையில் ஸந்த்யாவந்தனம் செய்ய வேண்டும்.] என்று மநுஸ்ம்ருதியிலும் (2-101), மற்றும் பற்பல ஸ்ம்ருதிவாக்யங்களிலும் காயத்ரியை ஜபிக்கவேண்டிய முறையும், காலமும் கூறப்பட்டன. மாத்யாஹ்நிகத்தில் வெட்டவெளியில் நின்றுகொண்டும், அல்லாதவிடங்களில் உட்கார்ந்துகொண்டும் ஜபிக்கவேண்டும் என்றும் விதிக்கப்பட்டுள்ளது. ஜபிக்கும்போது மௌனமாயிருக்க வேண்டும். மௌனத்திற்கு பங்கம் ஏற்பட்டால், "தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம்। ஸதா3 பஶ்யந்தி ஸூரய:। தி3வீவ சக்ஷுராததம்। தத்3 விப்ராஸோ விபந்யவோ ஜாக்3ருவாம்ஸஸ் ஸமிந்த4தே। விஷ்ணோர் யத் பரமம் பத3ம்" [விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிருர்கள். ஆகாயத்திலிருக்கும் லோகசக்ஷுஸ்ஸான ஸூர்யனைப்போல் விளங்குவது அப்பரமபதம். அப்பரமபதத்தில் ஸர்வஜ்ஞர்களும், துதிப்பதையே தொழிலாகக் கொண்டவர்களுமான நித்யஸூரிகள் விழிப்புடன் விளங்குகிருர்கள்.]என்னும் மந்திரத்தை உச்சரிக்கவேண்டும்.

"யதி3 வாக்3யமலோபஸ் ஸ்யாத் ஜபாதி3ஷு கதா3சந।
வ்யாஹரேத்3 வைஷ்ணவம் மந்த்ரம் ஸ்மரேத்3வா
விஷ்ணுமவ்யயம் ॥
தத்3விஷ்ணோரிதி மந்த்ரோऽயம் ஸ்மர்த்தவ்யஸ் ஸர்வகர்மஸு।
கா3யத்ரீ வைஷ்ணவீ ஹ்யேஷா ப்ரோக்தேத3ம்
விஷ்ணுரித்யபி ॥"

[ஜபம் முதலியவைகளில் எப்போதாவது மௌனபங்கம் நேரிட்டதாகில் விஷ்ணுவினுடையதான "தத்3விஷ்ணோ:"



என்று தொடங்கும் மந்திரத்தையாவது சொல்லவேண்டியது; அழிவற்றவரான விஷ்ணுவையாவது நினைக்கவேண்டியது. "தத்3விஷ்ணோ:" என்னும் இந்த மந்திரம் எல்லாக் கருமங்களிலும் நினைக்கத்தக்கது. இந்த காயத்ரியும் 'இத3ம் விஷ்ணுர் விசக்ரமே' என்று தொடங்கும் மந்திரமும் விஷ்ணுவினுடையனவன்ரே] என்று யோகயாஜ்ஞவல்க்யர் இவ்வர்த்தத்தை விதித்தார்.

"ப்ரமாதா3த் குர்வதாம் கர்ம ப்ரச்யவத்யத்4வரேஷு யத்।
ஸ்மரணாதே3வ தத்3 விஷ்ணோ: ஸம்பூர்ணம் ஸ்யாதி3தி
ஶ்ருதி: ॥"

[ஜபம் முதலான யஜ்ஞங்களில், மறதியால் ஏற்படும் குற்றம் குறைகள் விஷ்ணுவினுடைய ஸ்மரணத்தாலேயே நீங்கப் பெற்றுக் கர்மம் பூர்ணமாகிறது என்பது வேத முடிவு] என்று ப்ரஜாபதியும் விதித்தார். ஜபகாலத்தில் சிகையை முடிந்திருக்கவேண்டும். கச்சம் தரித்திருக்கவேண்டும். படுத்துக்கொண்டும், நடந்துகொண்டும், பாதரக்ஷையணிந்துகொண்டும், காலை நீட்டிக்கொண்டும், தொங்கவிட்டுக்கொண்டும் ஜபம் செய்யக்கூடாது. ஜபகாலத்தில் நாபிக்குக் கீழான அவயவங்களைத் தொடலாகாது. சிரித்துக்கொண்டும், பேசிக்கொண்டும் செய்யப்படும் ஜபம் வீணுகும். காயத்ரியின் மூன்று பாதங்களையும் தனித்தனியாகப் பிரித்து உச்சரிக்க வேண்டும். அசுத்தனைகவும், கைகளை மூடிக்கொள்ளாமலும், தலையை மூடிக்கொண்டும் ஜபம் செய்யலாகாது. மற்றுமுள்ள நியமங்களை சிஷ்டாசாரத்திலிருந்தும், ஸ்ம்ருதிகளிலிருந்தும், கண்டுகொள்வது. இவற்றுக்கு பங்கம் நேரிட்டால் பகவான் நாராயணனை ஸ்மரிப்பதே மேலான ப்ராயச்சித்தம் என்பது ஸ்ம்ருதிகளின் ஒருமிடருன முடிவு. "தே3வகீ புத்ராய க்ருஷ்ணயோக்த்வா" என்று வேதத்திலும், "க்ருஷ்ணனுஸ்மரணம்பரம்" என்று விஷ்ணுபுராணத்திலும், "ஸ்மரேத்3வா விஷ்ணுமவ்யயம்" என்று யோகயாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியிலும் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டது. ஆக, இதுவரையில், காயத்ரீ ஜபத்தின் பெருமையும், ஜபம் செய்யும் முறையும்

விவரிக்கப்பட்டன. இப்படி காயத்ரீ ஜபத்தைச் செய்து முடித்தபிறகு. ப்ராணயாமம் செய்து. "ப4க3வதா2ஜ்ஞயா ப4க3வத் கைங்கர்யரூபம் உபஸ்தா2நம் கரிஷ்யே" என்று ஸங்கல் பித்துக்கொண்டு எழுந்து பின்வரும் மந்திரத்தால் காயத்ரியை வழியனுப்பவேண்டும்.

**उत्तमे शिखरे देवि! भूम्यां पर्वतमूर्धनि।**
**ब्राह्मणेभ्यो ह्यनुज्ञानं गच्छ देवि! यथासुखम्॥**

**உத்தமே ஶிக2ரே தே3வி பூ4ம்யாம் பர்வதமூர்த்த4நி।**
**ப்3ராஹ்மணேப்4யோ ஹ்யநுஜ்ஞாநம் க3ச்ச2 தே3வி**
**யதா2ஸுக2ம்॥**

"உத்தமே ஶிக2ரே" என்னும் இந்த மந்திரத்திற்கு. வாமதேவர் ரிஷி. அநுஷ்டுப் சந்தஸ்ஸு. காயத்ரீ தேவதை. காயத்ரியை உத்3வாஸனம் செய்வதில் (வழியனுப்புவதில்) வினியோகம்; காயத்ரியும் லக்ஷ்மியும் தேவதைகள் என்று ஸுதர்ஶனபட்டர் உரைப்பர்.

(தே3வி) பிரகாசம். தானம் முதலான குணங்களை யுடைய காயத்ரீதேவியே! "வரதா3 தே3வீ" என்று அழைக் கப்பட்ட ஸ்ரீதேவியே! (ப்3ராஹ்மணேப்4ய:) ப்ரஹ்மத்தை அத்யயனம் செய்யும் ப்ராஹ்மணர்களுக்கு. 'ப்3ரஹ்ம' ஶப்3த2ம் மந்திரத்தைச் சொல்லுமாகையால். ப்ராஹ்மண ஶப்தம் 'காயத்ரீ மந்திரத்தை ஜபம் செய்பவர்கள்' என்று பொருள்படுகிறது. ப்ரஹ்மஶப்தத்துக்கு வேதம், பரமாத்மா. யஜ்ஞம். அக்நி. தவம் முதலிய பல பொருள்களும் உண்டாகையால், அவற்றுக்குச் சேர. பரமாத்மஜ்ஞானிகள். யஜ்ஞம் செய்பவர்கள். அக்நிஸம்பந்தமுள்ளவர்கள், தபஸ்விகள் முதலான பல அர்த்தங்களும் ப்ராஹ்மண சப்தத்துக்கு உண்டு.

**"மந்த்ரஸ் ஸ்வாத்4யாய யஜ்ஞாக்3நி முநி மோக்ஷ பிதாமஹா:।**
**தபோ விஷ்ணவர்க்கருத்3ராஶ்ச சந்த்3ரஶ்ச**
**ப்3ரஹ்மஸம்ஜ்ஞிதா:॥"**



[மந்திரம். வேதம். யஜ்ஞம், அக்நி. முனி. மோக்ஷம். பிதாமஹன், தவம், விஷ்ணு. ஸூர்யன், ருத்ரன். சந்திரன் ஆகிய இவை ப்ரஹ்ம சப்தத்தால் சொல்லப்படும்.] என்னும் நிகண்டுவை அநுஸந்திப்பது. [ப்3ராஹ்மணேப்4ய: அநுஜ்ஞாநம் (த3த3ாஸி) ஹி] ப்ராஹ்மணர்களாகிய எங்களுக்கு உன்னுடைய அநுக்ரஹத்தினால் வரும் ஞானத்தைத் தருகிறாயன்றோ நீ. 'த3த3ாஸி' [தருகிறாய்] என்னும் பதத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். (உத்தமே) மிகவும் உயர்ந்த (பர்வதமூர்த்த4நி ஶிக2ரே) மேரு பர்வதம், சித்ரகூடம். வேங்கடாசலம், ரைவதகம். கோவர்த்தநம் முதலிய பெயர்களைக் கொண்டவையாய், பகவானுலே அந்தந்த அவதாரங்களிலே ஆதரிக்கப்பட்டவையான மலைகளின் சிகரங்களிலே. (யதா2ஸுக2ம்) இஷ்டப்படி விளையாடுவதற்காக. (தே3வி) ஹே தே3வீ கா3யத்ரியே! ஸ்ரீதேவியே! (க3ச்ச2) செல்வாயாக. 'க3ச்ச2தே3வீம்' என்று பாடமானபோது **தே3வி** – காயத்ரீதேவியே! **ஈம்**—ஸ்ரீதேவி யிடம் விடைபெற்றுக்கொண்டு. **க3ச்ச2**—செல்வாயாக. என்றுவது ஸ்ரீதேவியையும் வழியனுப்பிவிட்டுச்செல்வாயாக என்றுவது பொருள்கொள்ளலாம். இது ஸுதர்சனபட்டர் வியாக்கியானக்ரமம்.

**ஹே தே3வி**—காயத்ரீதேவியே!. **ப்3ராஹ்மணேப்4ய:**—ப்ராஹ்மணர்களை. **அநுஜ்ஞாநம்**—அநுக்ரஹித்து. **பூ4ம்யாம்**—பூமியிலோ, **பர்வதமூர்த்த4நி**—பர்வதஶிகரத்திலோ, **உத்தமே ஶிக2ரே**—மேலான சிகரத்திலோ. (இவற்றில் முன் எங்கிருந்தாயோ அங்கு) **யதா2ஸுக2ம்**-வந்தபடியே ஸௌக்ய மாக, **க3ச்ச2**—போகக்கடவாயாக. இது நாராயணமுனிவர் பாஷ்யக்ரமம்.

**தே3வி**—காயத்ரீதேவியே! **பர்வதமூர்த்த4நி**—மேரு முதலியவைகளுக்கும் மேலே. **உத்தமே ஶிக2ரே**—உயர்ந்த சிகரத்திலேயுள்ள. **பூ4ம்யாம்**—(தகுந்த) ஸ்தலங்களிலே.

க3ச்ச2-போகக்கடவாய்; ப்3ராஹ்மணேப்4ய:—(உன்னை உபாஸித்த)ப்ராஹ்மணர்களானஎங்களால்,அநுஜ்ஞாநம்ஹி-அநுமதி கொடுக்கப்பட்டதன்றோ. இது ரங்கராமாநுஜ பாஷ்யக்ரமம்.

தே3வி—காயத்ரீதேவியே! பூ4ம்யம்—பூமிக்கு வந்த நீ. ப்3ராஹ்மணேப்4ய:-ப்ராஹ்மணர்களாகிய எங்களுக்கு, அநுஜ்ஞாநம் (க்ருத்வா)—(எங்களுடைய தேஹயாத்ரையை நடத்திக்கொள்ளும்படி) அநுமதிசெய்து. உத்தமே—பெருமைபெற்றதும். ஶிக2ரே—உயர்ந்ததுமான. பர்வத மூர்த்த4நி—ஸுமேருவின்சிகரத்தில் (உன்னுடைய ஸ்தானமாகிய ப்ரஹ்மலோகத்தில்) யதா2ஸுக2ம்—வந்தபடியே ஸுகமாக, க3ச்ச2-போகக்கடவாய். இது வைத்யநாததீக்ஷிதருடைய வியாக்கியான க்ரமம். இவற்றில் ஸுதர்சனஸூரியின் பாஷ்யக்ரமம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உபாதேயம். மற்றுள்ளார் இவைகளுக்குள் ஏதாவதொரு க்ரமத்தைக் கொள்வது.

இனி. ஸூர்யனை நோக்கி நின்றுகொண்டு பரமபுருஷனைக் குறித்துச் செய்யப்படும் ஸ்தோத்ரரூபமான உபஸ்தா2ன மந்திரங்களின் பொருளை விவரிப்போம். அவற்றில் காலையில் அநுஸந்திக்கப்படும் மந்திரம் பின்வருமாறு:—

मित्रस्य चर्षणीधृतः। श्रवो देवस्य सानसिं। सत्यं चित्रश्रवस्तमम्॥
मित्रो जनान् यातयति प्रजानन् मित्रो दाधार पृथिवीमुत द्याम।
मित्रः कृष्टीरनिमिषाऽभिचष्टे सत्याय हव्यं घृतवद्विधेम॥
प्र स मित्र मर्तो अस्तु प्रयस्वान् यस्त आदित्य शिक्षति व्रतेन।
न हन्यते न जीयते त्वोतो नैनमंहो अश्नोत्यन्तितो न दूरात्॥

மித்ரஸ்ய சர்ஷணீத்4ருத:। ஶ்ரவோ தே3வஸ்ய ஸாநஸிம்।
ஸத்யம் சித்ரஶ்ரவஸ்தமம் ॥
மித்ரோ ஜநாந் யாதயதி ப்ரஜாநந்
மித்ரோ தா3தா4ர ப்ருதி2வீமுத த்3யாம்।
மித்ர: க்ருஷ்டீரநிமிஷாऽபி4சஷ்டே
ஸத்யாய ஹவ்யம் க்4ருதவத்3 விதே4ம ॥



ப்ர ஸ மித்ர மர்த்தோ அஸ்து ப்ரயஸ்வாந்
யஸ் த ஆதி3த்ய ஶிக்ஷதி வ்ரதேந।
ந ஹந்யதே ந ஜீயதே த்வோதோ
நைநமம்ஹோ அஶ்நோத்யந்திதோ ந தூ3ராத் ॥

"மித்ரஸ்ய" "மித்ரோ ஜநாந்" "ப்ரஸ மித்ர" என்று தொடங்கும் இந்த மூன்றுக்கும் ரிஷி விச்வாமித்ரர்; முதல் மந்திரத்திற்கு காயத்ரீ சந்தஸ்ஸு; மற்றையிரண்டுக்கும் த்ரிஷ்டுப் சந்தஸ்ஸு. ஸூர்யனுக்கு அந்தர்யாமியாகவும் நேரே மித்ரஶப்தவாச்யனுகவுமிருப்பதால் "மித்ரன்" எனப்படும் பரமாத்மா தேவதை. ப்ராதருபஸ்தானத்தில் விநியோகம்.

"மித்ரஸ்யேதி த்ருசஸ்யேஹ விஶ்வாமித்ரோ ரிஷிஸ் ஸ்ம்ருத:।
ஹிருக் (பீ4ருட்?) கா3யத்ரமாதி3ஸ்து த்ரிஷ்டுப4ாவத2
பஶ்சிமௌ ॥
தே3வதா சைவ மித்ர: ஸ்யாத் இத்யுவாச ப்3ருஹஸ்பதி: ॥
ஏதாபி4: ப்ராஞ்ஜலிஸ் ஸம்யக் உபதிஷ்டே2த மண்ட3லம்।
ஸஹஸ்ராமஶும் ப4க3வந்தம் உபதிஷ்டே2த ப4ாஸ்கரம் ॥"

["மித்ரஸ்ய முதலான மூன்று ரிக்குகளுக்கும் விஶ்வாமித்ரர் ரிஷியாகச் சொல்லப்படுகிறார். ஹிருக் (பீருட்?) காயத்ரி முதல் மந்திரத்திற்குச் சந்தஸ்; மற்ற இரண்டுக்கும் த்ரிஷ்டுப் சந்தஸ். மூன்றுக்கும் தேவதை மித்ரன்" என்று ப்ருஹஸ்பதி சொன்னார். கைகூப்பியவனாய் ஸூர்யமண்டலத்தின் முன் நின்று, ஸஹஸ்ரகிரணனை ஸூர்யனை உபஸ்தானம் செய்யக்கடவன்.] என்னும் பிதாமஹ வசனம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

(மித்ரஸ்ய) மித்ரசப்தத்தினால் சொல்லப்படும் ஸூர்யனுக்கு அந்தர்யாமியாயிருப்பவனுக்கு, (மித்ரஸ்ய) மித்ரஶப்தத்தால் ஸாக்ஷாத்தாகவே சொல்லப்படுமவனுக்கு என்றும் கொள்ளலாம். 'த்ர' என்னும் பதம் த்ரிலோகங்

களைக் குறிக்கும். 'மி' என்பது அவற்றை அளந்தவன் என்னும் பொருளைக் காட்டுகிறது. ஆக, 'மித்ரன்' என்னும் பதம் மூவுலகங்களையும் தன் திருவடிகளால் அளந்த திரிவிக்ரமனைச் சொல்லுகிறது. **(மித்ரஸ்ய)** மகாரவாச்யரான ஸர்வஜீவர்களையும் காப்பாற்றுமவனுகையாலே மித்ரன் எனப்படுவதாகவும் கொள்ளலாம். "மாதா பிதா ப்4ராதா நிவாஸ: ஶரணம் **ஸுஹ்ருத்3** க3திர் நாராயண:" [நாராயணனே தாய், தந்தை, ஸஹோதரன், இருப்பிடம், உபாயம், **நண்பன்**, உபேயம் ஆகிய எல்லாமாயிருப்பவன்] என்று ஸுபாலோபநிஷத்திலும் "யஸ்ய மந்த்ரீ ச **கோ3பத்தா ஸுஹ்ருச்சைவ** ஜநார்த்த3ந:" [எவனுக்கு, மந்திரியாகவும், ரக்ஷகனுகவும், நண்பனுகவும் ஜனுர்த்தனன் விளங்குகிருனே] என்று மஹாபாரதத்திலும் படிக்கப்பட்டதை நினைப்பது.

(சர்ஷணீத்4ருத:) உலகங்களை தரித்து நிற்பவனுகிற தேவனுடைய. 'சர்ஷணீ' என்னும் பதம் ஸஞ்சரிப்பதை ஸ்வபா4வமாகவுடைய ஜங்கமங்களைக் குறிக்கும். இது ஸ்த2ாவரங்களுக்கும் உபலக்ஷணம். "**ச2த்ரிணோ க3ச்ச2ந்தி**" [குடையை உடையவர்கள் போகின்றனர்.] என்னும் பிரயோகத்தில் 'குடையையுடையவர்கள் என்னும் பொருளையுடைய ச2த்ரிபதத்தால் குடையற்றவர்களாய் குடையுடையவனேடு கூடியிருப்பவர்களும் கிரஹிக்கப்படுவதைப்போன்றது இந்தப் பிரயோகமும். ஆக, ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஜகத்தை தரித்து நிற்பவன் 'சர்ஷணீத்4ருத்' என்றுரைக்கப்படுகிருன். இப் பெருமை பரம்பொருளான நாராயணனுக்கே பொருந்துமேயொழிய, அல்பஶக்தியை உடையவர்களான ஸூர்யன் முதலானுர்க்குப் பொருந்தாதாகையால் இங்கு சொல்லப்படும் மித்ரன், ஆதித்யன் முதலான சப்தங்கள் ஸூர்யனைமட்டும் குறிக்கமாட்டா; அவனுக்கு அந்தர்யாமியாயுள்ள நாராயணனையும் சொல்லும். "தத் ஸ்ருஷ்ட்வா ததே3வாநுப்ராவிஶத்" [இவ்



வுலகங்களை ஸ்ருஷ்டித்து அவற்றை வியாபித்தது பரம்பொருள்.] "**ஈஶா வாஸ்யமித3ம் ஸர்வம் யத் கிஞ்ச ஜக3த்யாம் ஜக3த்**" [உலகிலுள்ள (ஸ்த2ாவர) ஜங்கமப் பொருள்களெல்லாம் ஸர்வநியந்தாவான பகவானுலே வியாபிக்கப்பட்டுள்ளது] "**அந்தர் ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த:**" [அவையெல்லாவற்றையும், உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிருன் நாராயணன்.] '**தா4தா நாராயண:**" [எல்லாவற்றையும் தரித்து நிற்பவன் நாராயணன்.] முதலான வேதவாக்யங்களையும், "**யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி2தா**" [எவனுடைய பல்லாயிரத்தில் ஒருபகுதி அம்சத்தில் இந்த விச்வசக்தியானது தரிக்கப்பட்டு விளங்குகிறதோ...] "**மேரோரிவாணுர் யஸ்யைதத்**" [இவ்வுலகமெல்லாம் எவனிடத்தில் மேருமலையிலுள்ள அணு போல் விளங்குகிறதோ....] முதலான விஷ்ணுபுராணுதி ஸாத்விகஶாஸ்த்ர வசனங்களையும் இங்கு அநுஸந்திப்பது.

(தே3வஸ்ய) தானம செய்டவன் தேவனுகிருன். அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு, அவர்களுடைய விருப்பத்திற்கு அனுகுணமாக, இவ்வுலக இன்பங்கள், கைவல்யமோக்ஷம், பரமபதம் முதலான பொருள்களைத் தருபவன்; தன்னையே விரும்புமவர்களுத்குத் தன்னை தூளிதானம் செய்பவன் தேவனுகிருன். "ய ஆத்மதா3 ப3லதா3:" [எவன் தன்னையும் அளித்துத் (தன்னை அனுபவிக்கலாம்படியான) ப3லத்தையும் அளிக்கிருனே....] "எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" "**ஸகலப2ல ப்ரதே3ா ஹி விஷ்ணு:**" [எல்லாப் பலன்களையும் அளிப்பவன் விஷ்ணுவேயன்றே.] '**த3தா3தி த்4யாயிநாம் நித்யம் அபவர்க்க3 ப்ரதே3ா ஹரி:**' [மோக்ஷத்தையே என்றும் அளிக்கும் ஹரிதன்னை (வேறு பலன்களுக்காக) தியானிப்பவர்களுக்கு அவற்றையும் அளிக்கிருன்.] "**உதாம்ருதத்வஸ்யேஶாந:**" [மோக்ஷத்திற்கும் ப்ரபுவாயிருப்பவன் நாராயணனே] முதலான ப்ரமாணங்களைப் படிப்பது.

(தே$_3$வஸ்ய) 'தி$_3$வு-க்ரீட$_3$ா....' என்னும் த$_4$ாது பாடத்தை அநுஸரித்து காயத்ரீ விவரணத்தின்போது தேவ சப்தத்திற்குச் சொல்லப்பட்ட பொருள்களையெல்லாம் இங்கும் அநுஸந்திப்பது.

அடுத்தபடியாக, (ஶ்ரவ:, ஸாநஸிம், ஸத்யம், சித்ரஶ்ர வஸ்தமம்) என்று இப்படிப்பட்ட பகவானுடைய ரக்ஷணத்தை நான் விரும்புகிறேன் என்று சொல்லப்படு கிறது. அந்த ரக்ஷணம் எப்படிப்பட்டது என்பதை மேலே எடுத்த நான்கு பதங்களும் விவரிக்கின்றன. (ஶ்ரவ: ) "ஶ்ரு-ஹிம்ஸாயாம்" என்கிற தாது பாடத்தின்படியே "ஶ்ரு' என்னும் பதம் பரம ஹிம்ஸகமான ஸம்ஸாரதுக் கத்தைச் சொல்லுகிறது. "அவ-ரக்ஷணே" என்னும் தாது பாடத்தின்படியே 'அவ' என்னும் பதம் ரக்ஷணத்தைச் சொல்லுகிறது. ஆக, ஶ்ரவபதத்தால் ஸம்ஸாரரக்ஷணம் சொல்லப்பட்டதாகிறது. அந்த ஸம்ஸாரரக்ஷணம் எப்படிப் பட்டது என்பதை மற்ற மூன்று பதங்களும் விளக்குகின்றன. (ஸாநஸிம்) "வணஷண ஸம்ப$_4$க்தௌ' என்கிறபடியே 'ஸந' என்னும் பதம் பக்தியைக் குறிக்கிறதாகையால், பக்தி செய்யத்தகுந்தது என்று பொருள்படுகிறது. அதாவது: பரமபுருஷனுடைய ரக்ஷணம் ஸர்வசேதனராலும் விரும்பத் தக்கது என்றதாகிறது. (ஸத்யம்) உண்மையானது. அதா வது: மற்றவர்களுடைய ரக்ஷணத்தைப்போல் நிலையற்றதா யிராமல், நிலைநின்ற ரக்ஷணமாயிருக்கை. (சித்ர-ஶ்ரவ ஸ்தமம்) "ஶ்ரூயதே இதி ஶ்ரவ:" [(ஜனங்களால்) கேட்கப் படுகிறதாகையால் ஶ்ரவம்] என்கிற வ்யுத்பத்தியின்படி 'ஶ்ரவ:' என்னும் பதம் கீர்த்தியைச் சொல்லுகிறது. 'சித்ரஶ்ரவ:' என்பது விசித்ரகீர்த்தி என்னும் பொருளை யுடையது. சித்ரஶ்ரவஸ்தமம்' என்கையால் விசித்ர கீர்த்தியை உடையவைகளுக்குள் மேலானது என்றதாகிறது. "சாயூ பூஜாயாம்" என்கிற தாது பாடத்தை அநுஸரித்து. 'சித்ர' ஶப்தத்திக்குப் பூஜிக்கப்படுவது என்றும் பொருள்



கொள்வர். ஆக, இவ்வளவால், "விரும்பத்தக்கதாய், நிலை நின்றதாய், விசித்ரமானதாய் (பூஜிக்கத்தக்கதாய்), மிக வுயர்ந்த கீர்த்தியை உடையதான பகவானுடைய ஸம் ஸாரரக்ஷணத்தை விரும்புகிறேன் என்றதாயிற்று. இவ் விடத்தில் "ந ஹி பாலநஸாமர்த்$_2$யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்" [ரக்ஷணஸாமர்த்யம் ஸர்வேஶ்வரனான ஹரியைத் தவிர வேறொருவனிடம் கிடையாது]. "யத்ர யோகே$_3$ஶ்வர: க்ருஷ்ண:....தத்ர ஶ்ரீர் விஜயோ பூ$_4$தி:" [எங்கு யோகேஶ்வர னான கிருஷ்ணனிருக்கிறானோ அங்கேயே செல்வமும், விஜயமும், பெருமையும் உள்ளது.] முதலான ப்ரமாணங் களை அநுஸந்திப்பது.

"மித்ரஸ்ய" என்று தொடங்கும் மந்திரத்திற்கு வேறு வகையாகவும் பின்வருமாறு பொருள் கொள்ளலாம்:— (மித்ரஸ்ய) மிதிரஹிதனுடைய; அதாவது, உத்க்ருஷ்ட ஜ்ஞானவான்களான ப்ரஹ்மருத்ர ஸநகாதிகளாலும், இவர் களுக்கும் ஞானமளிக்கும் வேதபுருஷனாலும், அவ்வேதத்தை யும் ப்ரவர்த்திப்பித்த அவன்றன்னாலும், அவனையும் தன் உள்ளத்தினுள்ளே அடக்கும் ஆழ்வார்களாலும் அளவிட வொண்ணாதவனாயிருக்கை. 'விதி$_4$ஶிவ ஸநகாத்$_3$யைர் த்$_4$யாது மத்யந்த தூ$_3$ரம்" [ப்ரஹ்மருத்ர ஸநகாதிகளாலும் தியானிக்க அரியனாயிருப்பவன்] "வானுளாரறியலாகா வானவா" "யஸ்யாமதம் தஸ்ய மதம்" [எவனுக்குப் பரம்பொருள் (அளவிட்டு) அறியப்பட்டதல்லவோ, அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது.] "யதோ வாசோ நிவர்த்தந்தே" [எவனிடமிருந்து வாக்குகள் திரும்புகின்றனவோ....] "ஸோ அங்க$_3$ வேத$_3$ யதி$_3$ வா ந வேத$_3$" [அவனே அவன் பெருமையை அறிவனோ அறியானோ?] "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" "யவர்க்கும் சிந்தைக்கும் கோசர மல்லன்" "யானுமேத்தி ஏழுலகும் முற்றுமேத்திப் பின்னை யும் தானுமேத்திலும் தன்னை ஏத்த ஏத்த எங்கெய்தும்? முதலான நூற்றுக்கணக்கான ப்ரமாணங்களைப் படிப்பது.

(சர்ஷணீத்$_{4}$ருத:) சர்ஷணீஶப்தம் ஞானம் என்னும் பொருளேயுடையது. அது இங்கு ஞானத்தையுடைய சேதனரைக் குறிக்கிறது. ஸகலசேதனரையும் தரிப்பவன் சர்ஷணீத்$_{4}$ருத் ஆகிருன். இவற்றை எதற்காக தரிக்கிருனென்னில்; (தே$_{3}$வஸ்ய) தன்னுடைய விளேயாட்டுக்காகவே தரிக்கிருன் என்றபடி. (**ஶ்ரவ:**) "**ஶ்ரூயதே இதி ஶ்ரவ:**" [எல்லாராலும் கேட்கப்படுகிறதாகையால் (கீர்த்தியானது) '**ஶ்ரவ:**' எனப்படுகிறது.] என்கிற வ்யுத்பத்தியின்படியே கீர்த்தி என்னும் பொருளேயுடையது "**ஶ்ரவ:**" என்னும் ஶப்தம். "கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ" என்று ஞானிகளால் கொண்டாடப்படும் கீர்த்தியன்ரு இங்கு சொல்லப்படுகிறது. (மித்ரஸ்ய **ஶ்ரவ:**) அளவிடவொண்ணுதவனுடைய கீர்த்தியாகையாலே அநந்தகீர்த்தியாயிருக்கும். (சர்ஷணீத்$_{4}$ருத: **ஶ்ரவ:**) சேதனரை தரித்துநிற்பவனின் கீர்த்தியாகையாலே சேதனருள்ள விடமெல்லாம் பரவியிருக்கும். (தே$_{3}$வஸ்ய **ஶ்ரவ:**) தேவனுடைய கீர்த்தியாகையாலேதிவ்யலோகங்களிலும் வியாபித்திருக்கும். (ஸாநஸிம்) நன்ருக பக்தி செய்யத்தகுந்த கீர்த்தி. செவிக்கினிதை கீர்த்தியாருடைய கீர்த்தியன்றே இது. (ஸா ஸம்யக் நஸிம் நமஸ்கார்யம்) நன்ருக வணங்கத்தக்க கீர்த்தியாயிருக்கை. (ஸத்யம்) எக்காலத்திலும் அழியாத கீர்த்தி; அழிவில் கீர்த்தியென்றும் அநந்தகீர்த்தியென்றும் கொண்டாடப்படுபவன் கீர்த்தியன்ரு. யசஸ்ஸுக்கு ஓர் இருப்பிடமாயிருப்பவன் கீர்த்தியல்லவா. (சித்ரஶ்ரவஸ்தமம்) ஆச்சரியகரமாயும் கேட்கத்தக்கவைகளுள் உயர்ந்ததாயும் இருக்கும் கீர்த்தி. "**ஸம்ஶ்ரவே மது$_{4}$ரம்**" [கேட்க இனிதாயிருப்பது] "செவிக்கினிய செஞ்சொல்" என்ருப்போலேயிருக்கை. (சித்ர) கேட்பாரை "எத்திறம்!" என்று மோஹிக்கச் செய்கை. (**ஶ்ரவஸ்தமம்**) "பேய்முலைநஞ்சுணுகவுண்டான் பேரல்லால் கேளா செவி" "யாம் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" "**செவிகளா**லார நின் **கீர்த்திக்கனி** என்னும் கவிகளே காலப்பண்



தேனுறைப்பத் துற்று" என்கிறபடியே செவிபடைத்த பலன் இதைக் கேட்பதே என்னும்படியிருக்கை. இப்படிப்பட்ட பகவத்கீர்த்தியைத் துதிக்கப்போகிறேன்—என்று கூட்டிக்கொண்டு பொருள்கொள்ளவேண்டும்.

ஆக, முதல் மந்திரத்தினுல் மஹாமஹிமஶாலியான பரமபுருஷனைத் துதிக்கப்போகிறேன் என்றதாயிற்று. இனி அடுத்த இரண்டு மந்திரங்களும் பகவத்ஸ்தோத்ர ரூபமாயிருக்கின்றன. அதில் "மித்ரோ ஜநாந்" என்னும் மந்திரத்தால், தன்னை அடைந்தார்க்கு ஸர்வபலங்களையும் கொடுக்கக்கூடிய ஜ்ஞான ஶக்திகள் அந்தப் பரமாத்மாவிடம் இருப்பதை அநுஸந்தித்துக்கொண்டு அவனிடத்தில் ஆத்மஸமர்ப்பண ஸங்கல்பம் செய்யப்படுகிறது. த்$_{3}$வயார்த்தாநுஸந்தானரூபமாயிருக்கிறது இம்மந்திரம்.

(ப்ரஜாநந்) ஸர்வஜ்ஞன்; "இவன் நம்மிடம் இன்ன இன்ன காரியத்தை அபேக்ஷிக்கிருன்; அதை, இம்மாதிரியாக, இன்ன காலத்தில் முடித்துக்கொடுக்கலாம்" என்று அறிவதற்கு ஸர்வஜ்ஞனுகவேணுமாகையால், அக்குணத்தைச் சொல்லுகிறது. (மித்ர:) ரக்ஷகன்; இத்தால் இயற்கையாகவே இவர்களுக்கு ரக்ஷகனுயிருக்கும்படியான ஸ்வாமித்வம் சொல்லப்படுகிறது. (ஜநாந்) தன்னிடமிருந்து பிறந்தவர்களான ப்ராணிகளை. இத்தால் இவனுக்குத் தாங்கள் பிள்ளைபோல் ஸம்பந்தமுள்ளவர்கள் என்பது காட்டப்படுகிறது. (மித்ர:ஜநாந்) அவன் தகப்பனுகவும், நாங்கள் பிள்ளைகளாகவுமிருக்கும்போது எங்கள் காரியத்தை அவன் செய்யாமலிருக்கமுடியுமோ? என்கை. (ப்ரஜாநந் மித்ர:) அவன் எங்களுடைய நன்மையை அறியாத அஜ்ஞனுயிருந்தாலன்ரு நாங்கள் இழக்கலாவது. (ஜநாந் யாதயதி) ஜனங்களைத் தங்கள் காரியங்களைச் செய்யும்படி ஒவ்வொரு கணமும் தூண்டுபவன் அவனே. இதுவரையில் எங்கள் காரியங்களை நாங்களே ஸ்வதந்த்ரராகச் செய்து

வந்தோமோ, இனி எங்கள் காரியத்தை நாங்கள் நோக்கிக் கொள்ளுகைக்கு என்கை.

''ஏஷ ஹ்யேவைநம் ஸாது₄ கர்ம காரயதி
தம் யமேப்₄யோ லோகேப்₄ய உந்நிநீஷதி।
ஏஷ ஹ்யேவாஸாது₄ கர்ம காரயதி யமதோ₄ நிநீஷதி ॥''

[எந்த ஜீவனை (அண்டத்தினுள்ளிருக்கும்) இந்த லோகங்களிலிருந்து மேலே (பரமபதத்திற்கு) அழைத்துச் செல்ல விரும்புகிறனோ. அவனை இந்தப் பரமாத்மாவே நல்ல கர்மங்களைப் பண்ணும்படி செய்கிறன்; எவனைக் கீழே தள்ள விரும்புகிறனோ. அவனை இப்பரமாத்மாவே கெட்ட கர்மங்களைப் பண்ணும்படி செய்கிறன்.] என்று கௌஷீதக்யுபநிஷத்திலும். ''கர்த்தா காரயிதா ச ஸ:'' [செய்பவனும், செய்விப்பவனும் அவனே] என்று ஸ்ரீ ராமாயணத்திலும். ''செங்கண்மால் கண்டாய் அறம் பாவமென்றிரண்டுமாவான்'' என்று பொய்கைப் பிரானுலும் காட்டப்பட்ட காரயித்ருத்வத்தை அநுஸந்திக்கிறது.

இச்சேதனன் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் அவன் தானாகச் செய்வதில்லை; பரமாத்மாவால் தூண்டப் பட்டே செய்கிறன் என்பது வேதாந்திகளின் கொள்கை. அப்படியாகில். அவனால் தூண்டப்பட்டு இவன் செய்யும் கருமங்களுக்கு இவன் பலன் அநுபவிக்கை பொருந்தாதே என்னும் கேள்வி ஏற்படுகிறது. அதாவது:—லோகத்தில் ஒருவன் திருடுகிறன்; மற்றொருவன் அவனைத் திருடும்படி தூண்டுகிறன். லோகத்தில் இவர்கள் இருவருமே குற்றவாளிகளாகக் கருதப்பட்டு இருவரும் தண்டிக்கப்படுகிறர்கள். இங்கோவெனில். கருமங்களைச் செய்யும் ஜீவன் அப்படிச் செய்யும்படி தூண்டும் பரமாத்மாவினுல் தண்டிக் கப்படுகிறன். இது நியாயத்திற்கு முரணானதாக இருக்கிறது. பரமாத்மா மிகவும் தயையற்றவன் என்றும் தோன்றுகிறது; ஒருவனை நற்கருமங்களையும். மற்றொரு



வனை துஷ்கருமங்களையும் செய்யும்படி தூண்டும் பரம புருஷன் மிகவும் பக்ஷபாதமுள்ளவன் என்றும் வெளியாகிறது; ஆக. 'இப்படிக் காரயித்ருத்வத்தை ஒப்புக் கொண்டால். வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் [பக்ஷபாதம். தயையின்மை] ஆகிய பெரியதோஷங்கள் ஏற்படுகின்றனவே' என்னும் வலிதான ஆக்ஷேபம் எழுகிறது.

இதற்கு வேதாந்திகள் சொல்லும் ஸமாதானம் பின் வருமாறு:— பூர்வகர்மங்களை அநுஸரித்தே பகவான் இவனை உத்தர கர்மங்களில் தூண்டுகிறனுகையாலே வைஷம்ய நைர்க்₄ருண்யங்கள் வாரா; பகவான இவனைக் கர்மங்களில் ப்ரேரணம் செய்யும்போது முன் செய்திருக்கும் புண்ய பாபகர்மாநுகுணமாகவே தூண்டுகிறனுகையால் மேலே சொன்ன தோஷங்கள் வருவதில்லை என்பது வேதாந்திகள் சொல்லும் ஸமாதானம். ''வைஷம்ய நைர்க்₄ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்' [(பூர்வகர்மங்களை) எதிர்பார்த்திருப்பதால் இவனுக்கு வைஷம்யநைர்க்ருண்யங்களில்லை.] என்று ஸூத்ரகாரரும் அருளினர். இதற்குமேல், மற்றொரு கேள்வி எழுகிறது: இவனுடைய பூர்வகர்மங்களும் பகவானுடைய தூண்டுதலினலேயே செய்யப்பட்டனவாகையால். பூர்வ கர்மஸாபேக்ஷனுய் இவன் ப்ரேரணம் செய்தாலும் வைஷம்ய நைர்க்ருண்ய தோஷம் வந்தே தீரும். ஆகையால் பகவானுக்குக் காரயித்ருத்வம் உண்டு என்பதையாவது கைவிட வேண்டும். அல்லது. வைஷம்யநைர்க்₄ருண்யங்கள் அவனுக்கு உண்டு என்பதையாவது ஒப்புக்கொள்ள வேண்டும்-என்னும் பூர்வபக்ஷம் உண்டாகிறது. இதற்குச் சொல்லும் பதிலாவது:—ஒவ்வொரு காரியத்தையும் இச் சேதனன் செய்ய ஆரம்பிக்கும்போது. ப்ரதமப்ரவ்ருத்தியில் பகவான் இவனைத் தூண்டாமல் உதாஸீனனுயிருக்கிறன். ப்ரதமப்ரவ்ருத்தியில் இவன் ஒருவிதமாகக் கர்மத்தைச்

செய்ய முற்பட்டவுடன், பூர்வகர்மத்தை அனுஸரித்து மேன்மேலும் இவனைத் தூண்டுகிறான். ஆகையால் வைஷம்யநைர்க்$_4$ருண்யங்களில்லை என்றபடி.

அப்படியாகில். ப்ரதமப்ரவ்ருத்தி தசையில் காரயித்ருத்வம் இல்லையென்றாகிவிட்டதே எனில்: ஆகாது; காரயித்ருத்வமானது ஸாமாந்யகாரயித்ருத்வம் என்றும். விஶேஷகாரயித்ருத்வம் என்றும் இருவகைப்படும். கரணகளேபர$_3$ராதி$_3$களைக் கொடுத்து. அவற்றுக்கு வேலைசெய்ய சக்தியையும் கொடுத்து நிற்கும் நிலை ஸாமாந்யகாரயித்ருத்வம். இந்த ஸாமாந்யகாரயித்ருத்வம் ப்ரதமப்ரவ்ருத்தி தசையையுள்ளிட்ட ஸர்வ தசைகளிலும் உள்ளது. பூர்வ கர்மாநுகுணமாகச் சிற்சில கர்மங்களிலே ப்ரேரணம் செய்வதாகிற விசேஷகாரயித்ருத்வம் ப்ரதம ப்ரவ்ருத்தி தசையையொழிந்த மற்ற தசைகளில் உள்ளது. ஆகையால் காரயித்ருத்வத்திற்கும் ஹானியில்லை; வைஷமய நைர்க்ருண்ய தோஷங்களும் வரமாட்டா என்னும் ஶாஸ்த்ரார்த்தம் நிரூபிக்கப்பட்டதாயிற்று.

"ப்ரஜாநந்" என்று ஸர்வஜ்ஞத்வம் சொல்லப்பட்டது; இப்படி ஸர்வஜ்ஞனாயிருந்தபோதிலும் நொண்டியைப்போல் அஶக்தனாயிருந்தானாகில் ஆச்ரிதர் காரியம் செய்யமுடியாதாகையால். இவனுடைய ஸர்வஶக்தித்வம் அடுத்தபடியாக அநுஸந்திக்கப்படுகிறது: (மித்ரோ த$_3$ாத$_4$ார ப்ருதி$_2$வீமுத த்$_3$யாம்) மித்ரஶப்தவாச்யனான இவனே பூமியையும், தேவலோகத்தையும் தாங்குகிறான். "த$_4$ாதா-நாராயண:" என்னும் வேதார்த்தம் சொல்லுகிறது. ஆதாரமாயிருப்பது, ஶேஷியாயிருப்பது, ஸ்ருஷ்டிப்பது. இஷ்டபலங்களைக் கொடுப்பது. ரக்ஷிப்பது முதலான செயல்களால் இவற்றை இவனே தரிக்கச்செய்கிறான் என்றபடி. 'ப்ருதி$_2$வீம்' 'த்$_3$யாம்' என்னும் ஶப்தங்கள் அவற்றிலுள்ள சேதனரைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். "**ஸ த$_3$ாத$_4$ார ப்ருதி$_2$வீம் த்$_3$யா**



**முதேமாம்**" என்று நாராயணவல்லியில் படிக்கப்படும் மந்த்ரகண்டத்தை இங்கு படிப்பதிலிருந்து நாராயணனே இங்கு மித்ரஶப்தத்தால் சொல்லப்படுபவன் என்று விளங்குகிறது. (மித்ரோ த$_3$ாத$_4$ார ப்ருதி$_2$வீம்) "**உத்$_3$த்$_4$ருதாஸி வராஹேண க்ருஷ்ணேந**" என்கிறபடியே வராஹாவதார காலத்தில் இப்பூமியைக் குத்தியெடுத்துத் தாங்கி நின்றபடியைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். பூமியை மட்டுமோ தாங்கியது எனில்; (உத த்$_3$யாம்) ஸ்வர்க்காதி லோகங்களையும் ஸர்வகாலங்களிலும் தாங்கி நிற்பவன் இவனே என்கிறது.இங்கு இரண்டு லோகங்களைச் சொன்னது ஸர்வலோகங்களுக்கும் உபலக்ஷணம். 'ப்ருதி$_2$வீம்' என்று லீலாவிபூதியையும், 'த்$_3$யாம்' என்று நித்யவிபூதியையும் தாங்கி நிற்கிறபடியைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

'ப்ரஜாநந்' என்று சொன்ன ஸர்வஜ்ஞத்வத்தை விவரிக்கிறது அடுத்தபடியாக: (மித்ர:) மேலே சொல்லப்பட்ட பகவான்; (க்ருஷ்டீ:) க்ருஷியினாலே ஜீவிக்கும் ப்ராணிகளை. (அநிமிஷாऽபி$_4$சஷ்டே) கண் கொட்டாமல் கண்டுகொண்டிருக்கிறான். (அபி$_4$சஷ்டே) உள்ளும், புறமுமாகிய ஸர்வதேசங்களிலும் பார்க்கிறான். (அநிமிஷா:) ஸர்வ காலங்களிலும் பார்க்கிறான். (அநிமிஷாऽபி$_4$சஷ்டே) "**அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:**" [எல்லா வஸ்துக்களின் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்] என்று சொல்லப்பட்டவனன்றோ இவன். 'அநிமிஷா:' என்றதால் உதிப்பதும், அஸ்தமிப்பதுமாய்ப்போருகிற ஸூர்யனல்லன் இவன் என்று உணர்த்தப்படுகிறது. "ஜநாந் யாதயதி" என்னுமிடத்தில் சொல்லப்பட்ட காரயித்ருத்வமும். "மித்ரோ த$_3$ாத$_4$ார" என்ற விடத்தில் சொல்லப்படும் ஸர்வாத$_4$ாரத்வமும், அடுத்த மந்திரத்தில் சொல்லப்படும் ஹேயப்ரத்யநீகத்வமும் ப்ரஸித்தஸூர்யனுக்குப் பொருந்தாவாகையால். மித்ராதிஶப்தங்கள் பரமாத்மபரமேயாகும்.

மித்ரஶப்தத்தினல் ஸ்வாமித்வமும். "ப்ரஜாநந்" "மித்ர:க்ருஷ்டீரநிமிஷாऽபி₄சஷ்டே" என்று ஸர்வஜ்ஞத்வமும். "மித்ரோ தா₃தா₄ர" என்று ஸர்வஶக்தித்வமும் அறிவிக்கப்பட்டன. இக் குணங்களிருந்தாலும், இவன் பூர்ணனுயில்லாவிடில் கைம்மாறு கருதாமல் ஆஶ்ரித காரியம் செய்யமாட்டானுகையால் பூர்த்தியாகிற குணத்தையும் ஆத்மஸமர்ப்பணஸ்தலத்திலே அநுஸந்திக்கவேண்டும். இவையிவ்வளவுமிருந்தாலும் தயையில்லாவிடில் இக் குணங்கள் கார்யகரமாக மாட்டா; ஆகையால் தயையையும் அநுஸந்திக்கவேணும்; ஆஶ்ரயண ஸௌகர்யாபாத₃கமான ஸௌலப்₄ய ஸௌஶீல்ய வாத்ஸல்யங்களாகிற குணங்களையும் அநுஸந்திக்கவேண்டும். இக் குணங்கள் மாறுபடுமவையானல் அநர்த்தஹேதுவாகவும் முடியும். ஆகையால் இக் குணஸமூஹங்கள் மாறுபாடற்றவை என்பதையும் அநுஸந்திக்கவேணும். இப்படிப்பட்ட இக்குணங்களையும், இவைகளின் மாறுபாடற்ற தன்மையையும் அநுஸந்திக்கிறது (ஸத்யாய) என்னும் பதம். த்வயத்தின் பூர்வோத்தர கண்டங்களில் நாராயணஶப்தார்த்தத்தையும், "ஆய" ஶப்தத்தின் பொருளையும் இங்கே ஸ்மரிப்பது. (ஸத்யாய) "**ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்₃ரஹ்ம**" என்று படிக்கப்பட்ட அநந்தனை ப்ரஹ்மத்துக்கு என்றும் கொள்ளலாம். (ஹவ்யம்) "**மாம் ஜுஹோமி ஸ்வாஹா**" என்கிறபடியே ப்ரஹ்மாக்னியில் ஹோமம்பண்ணத்தகுந்ததாகிய ஆத்மவஸ்துவை. (க்₄ருதவத்) நெய்யுடன் கூடியதான ஹவ்யத்தை; இங்கு நெய் என்கிறது அநந்தனிடத்திலேயுள்ள அன்பை. அன்பு நிறைந்ததான ஆத்மவஸ்துவை என்றபடி. "அன்பிலன்றி ஆழியானை யாவர் காணவல்லரே" "பத்துடையடியவர்க்கெளியவன்", "**ப₄க்திக்ரீதோ ஜநார்த்த₃ந:**" முதலான ப்ரமாணங்களைப் படிப்பது.

"**ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம் |**
**ரக்ஷிஷ்யதீதி விஸ்வாஸோ கோ₃ப்த்ருத்வவரணம் ததா₂ ||**
**ஆத்மநிக்ஷேப கார்ப்பண்யே ஷட்₃வித₄ா ஶரணாக₃தி: ||**"



[பகவானுக்கு அநுகூலனுயிருக்கிறேன் என்னும் ஸங்கல்பம், ப்ரதிகூலபா₄வத்தை விடுதல்; 'அவன் நம்மைக் காப்பாற்றுவான்' என்னும் விஸ்வாஸம்; 'காப்பாற்றவேணும்' என்று வரிப்பது; ஆத்மாவை அவனிடம் வைத்தல்; தன்னிடம் ஒரு கைம்முதலற்றவனுயிருக்கை என்று ஆறுவிதமாயிருப்பது ஶரணாகதி.] என்று ஶாஸ்த்ரங்களிலே சொல்லப்பட்ட ஸம்பா₄வித ஸ்வபா₄வங்களை நெய்யாகச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (விதே₄ம) இப்படிப்பட்ட ஆத்மவஸ்துவைப் பரமாத்மாவின் பொருட்டு ஹோமம் செய்கிறேன். (ஹவ்யம் க்₄ருதவத் விதே₄ம) நெய்யுடன் சேர்ந்த ஹவ்யத்தை பரமாத்மாவின் பொருட்டு (அக்னியில்) ஹோமம் செய்யக் கடவோம் என்று யஜ்ஞாஶ்ருதமாகவும் அர்த்தம் கொள்ளலாம். முன் விவரித்தது ஸ்வாபதே₃ஶார்த்தம் (உள்ளுறை பொருள்) 'மித்ரஸ்யசர்ஷணீ ...' என்று வாகிந்திரியமும் "மித்ரோ ஜநாந்...." என்று மனஸ்ஸும். 'ஸத்யாய ஹவ்யம் ....விதே₄ம' என்று உடம்பும் பகவத்விஷயத்திலே ஈடுபட்டிருக்கும்படியைப் பேசுகிறது என்றும் கொள்வர்.

இப்படி ஆத்மஸமர்ப்பணம் செய்ததினல் பகவான் ப்ரஸன்னனுய், பக்தன் முன் தோன்ற, அவனை நோக்கிச் சேதனன் கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பதையும், விரோதியானது தன்னடையே கழியும் என்று நிர்ப்பரனுயிருப்பதையும் விவரிக்கிறது அடுத்தமந்திரம். (மித்ர) ஸர்வரக்ஷகனே! (ஆதித்ய) அதிதியின் பிள்ளையான உபேந்திரனுய்ப் பிறந்தவனே! இத்தால், இவன் அடியார்க்குப் பிள்ளையாகவும், தம்பியாகவும், தூதனுகவும், நண்பனுகவும் இப்படிப் பலபடியாகவும் பிறந்து ரக்ஷித்தருள்வான் என்று உணர்த்தப்படுகிறது. (ஆதி₃த்ய) "ஆதௌ₃ த்ய:" [ஆதிகாலத்தில் தனியாயிருந்தவன்] என்றும் பொருள் கொள்ளலாம். "**ஆநீத₃வாதம் ஸ்வத₄யா ததே₃கம் தஸ்மாத்₃தா₄ந்யம் ந பர: கிஞ்சநாஸ**" [ஸ்வதா₄ஶப்த வாச்யையான பிராட்டியுடன் கூடிய பகவான் ஒருவனே இருந்தான்; அவனைத்தவிர

வேறொருவருமில்லை.] என்றும் "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" [நாராயணன் ஒருவனே இருந்தான்] என்றும் வேதங்களிலும், "யாவகையுலகமும் யாவருமில்லா மேல் வரும் பெரும்பாழ்காலத்து இரும்பொருட்கெல்லாம் அரும் பெறல் தனிவித்து ஒருதானாகி" என்று ஆழ்வாராலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை அநுஸந்திக்கிறது. (ஆதி3த்ய) "அத்தா சராசரக்3ரஹணாத்" என்ற ஸூத்ரத்திலும், "யஸ்ய ப்3ரஹ்ம ச க்ஷத்ரம்" என்ற ஶ்ருதியிலும் சொல்லிய படியே ஸகலசராசரங்களையும் ப்ரளயகாலத்தில் உண்பவன் என்றும் பொருள் கொள்வர்.

(ய: மர்த்த:) மரணத்தையே இயற்கையாகக் கொண்ட என்னைப்போன்ற யாவனொரு புருஷன்; (தே வ்ரதேந ஶிக்ஷதி) உன்விஷயமான ஆத்மஸமர்ப்பணவ்ரதத்தினாலே தன்னை இதரவிஷயங்களில் செல்லாமல் அடக்கிக்கொள்ளுகிறானோ. உன்னைக் குறித்துச் செய்யப்படும் ஜபஹோமாதி வ்ரதங்களினால் தன்னை ஶிக்ஷித்துக்கொள்கிறானோ என்றும் கொள்ளலாம்.

"ஸக்ருதே3வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப4யம் ஸர்வபூ4தேப்4யோ த3தா3ம்யேதத்3 வ்ரதம் மம ||"

[ஒரு தடவை சரணமடைந்தவனுக்கும், 'உனக்கு அடியேனாயிருக்கிறேன்' என்று யாசிப்பவனுக்கும், எல்லா பூதங்களிடமிருந்தும் அபயமளிக்கிறேன். இது என் விரதம்] என்கிற உன்னுடைய விரதத்தை அனுஸந்தித்து எவன் தன்னைத் தேற்றிக் கொண்டிருக்கின்றானோ என்றும் கொள்ளலாம். (ஸ:) அந்த மனிதன். (ப்ர) அதிகமாக; (ப்ரயஸ்வாந் அஸ்து) அந்நத்தை உடையவனாக ஆகட்டும், 'ப்ரய:' என்று அந்நத்திற்குப் பெயர். "அஹமந்நாத3: அந்நமத3ந்தமத்3மி" [நான் அந்நத்தைப் புசிப்பவன்; அந்நமாகிற என்னை அநுபவிக்கும் பரமாத்மாவை நான் அநுபவிக்கிறேன்.] "வாரிக்கொண்டுன்னை விழுங்குவன்" என்று சொல்லப்



பட்ட பகவதநுபவம் இங்கு அந்நமாகச்சொல்லப்படுகிறது. (ப்ரயஸ்வாநஸ்து) உன்னுடைய ஆராதனமாயிருக்கும் வைஶ்வதேவ பஞ்சமஹா யஜ்ஞாதிகளுக்கு உபயுக்தமான அன்னத்தை உடையவனாகட்டும் என்பதாகவும் கொள்வர்.

(யஸ் தே ஶிக்ஷதி வ்ரதேந) எவன் உமக்காக வ்ரதத்துடன் கூடியவனாய் யஜ்ஞம் செய்கிறானோ என்றும் பொருள்கொள்ளலாம். தே என்பது தாத3ர்த்2யே சதுர்த்தி2. ப3ஹ்வ்ருச ப்3ராஹ்மணத்திலும் "ஶிக்ஷமாணஸ்ய தேவதி ஶிக்ஷதே வா ஏஷ யோ யஜதே" என்று யாகம் செய்பவன் விஷயத்தில் 'ஶிக்ஷிக்கிறவன்' என்னும் பதம் பிரயோகிக்கப் பட்டதை நினைப்பது.

(த்வோத:) "த்வயா ஊத:" உன்னால் ரக்ஷிக்கப் பட்ட அந்தச் சேதனன் 'த்வதூ3த:' என்று இருக்க வேண்டிய பதத்தில் வேதமாகையாலே தகாரத்திற்கு லோபம் வந்துள்ளது. "யதே2ந்த்3ரஸ் த்வோத: ஸாஸஹ்யா நப்ருதந்யத:" என்கிற வேதவாக்யத்திலும் இப்படியே உள்ளதைக் காண்க. (ந ஹந்யதே ந ஜீயதே) இவ்வுலகிலும் வியாதி முதலானவற்றால் பீடிக்கப் படுவதில்லை; இறந்தபின்பும் யமபடர்களால் ஜயிக்கப் படுவதில்லை. "ந க2லு பா4க3வதா யமவிஷயம் க3ச்ச2ந்தி" [பாகவதர்கள் யமனுடைய தேசத்தை அடைவதில்லை யன்றோ] என்று வேதத்திலும்.

"ஸ்வபுருஷமபி4வீக்ஷ்ய பாஶஹஸ்தம்
வத3தி யம: கில தஸ்ய கர்ணமூலே।
பரிஹர மது4ஸூத3ந ப்ரபந்நாந்
ப்ரபு4ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம் ||....
ஹரி கு3ருவஶகே3ாஸ்மி ந ஸ்வதந்த்ர:
ப்ரப4வதி ஸம்யமநே மமாபி விஷ்ணு: ||....
ஹரிமமரவரார்ச்சிதாங்க்4ரிபத்3மம்
ப்ரணமதி ய: பரமார்த்த2தோ ஹி மர்த்ய:।

தமபக₃தஸமஸ்தபாபப₃ந்த₄ம்
வ்ரஜ பரிஹ்ருத்ய யதா₂க்₃நிமாஜ்யஸிக்தம் ||...
யமநியம விதூ₄தகல்மஷாணும்
அநுதி₃நமச்யுத ஸக்தமாநஸாநாம் ||
அபக₃த மத₃ மாந மத்ஸராணும்
த்யஜ ப₄ட தூ₃ரதரேண மாநவாநாம் ||
ஸகலமித₃மஹஞ்ச வாஸுதே₃வ:
பரமபுமாந் பரமேஶ்வரஸ் ஸ ஏக: |
இதி மதிரசலா ப₄வத்யநந்தே
ஹ்ருத₃யக₃தே வ்ரஜ தாந் விஹாய தூ₃ராத் ||
கமலநயந வாஸுதே₃வ விஷ்ணோ
த₄ரணித₄ராச்யுத ஶங்க₂சக்ரபாணே |
ப₄வ ஶரணமிதீரயந்தி யே வை
த்யஜ ப₄ட தூ₃ரதரேண தாநபாபாந் ||
வஸதி மநஸி யஸ்ய ஸோऽவ்யயாத்மா
புருஷவரஸ்ய ந தஸ்ய த்₃ருஷ்டிபாதே |
தவ க₃திரத₂வா மமாஸ்தி சக்ர-
ப்ரதிஹத வீர்ய ப₃லஸ்ய ஸோऽந்யலோக்ய: ||''

[பாசத்தைக் கையில் கொண்ட தன்னுடைய ப₄டனை ஸம்ஜ்ஞைசெய்து (அருகிலழைத்து) யமனானவன் அவனுடைய காதினுள் பின்வருமாறு சொல்லுகிறான்:— "மதுஸூதனை சரணமடைந்தவர்களை நீ தொடாதே. நான் மற்ற மனிதர்களுக்கே ப்ரபுவேயொழிய வைஷ்ணவர்களுக்கல்ல. நான் மஹாபுருஷரான ஹரிக்கு வசப்பட்டவன். ஸ்வதந்த்ரனல்லன்; (யமனைகிற) என்னையும் நியமிக்கவல்லவர் விஷ்ணுவே. தேவச்ரேஷ்டர்களாலும் அர்ச்சிக்கப்பட்ட திருவடித்தாமரைகளையுடையவரான ஹரியை எந்த மனிதன் உண்மையான பக்தியுடன் வணங்குகிறானே, எல்லாப்பாபபந்தங்களும் நீங்கப்பெற்றவனான அவனை, நெய்விடப்பெற்ற ஹோமாக்நியை அணுகாமல் விலகிச்செல்வதுபோல் விலகிச்செல்வாயாக. யமம், நியம் முதலான



ஸாதனங்களால் எல்லாப் பாபங்களும் போகப்பெற்றவர்களாய், தினந்தோறும் அச்யுதனிடத்தில் ஈடுபட்டிருக்கும் மனத்தையுடையவர்களாய், மத₃மும் அபி₄மானமும், மாத்ஸர்யமும் அற்றவர்களான மனிதர்களைக் (கண்டால்) வெகுதூரத்தில் விலகிச்செல்வாயாக. 'நானும், இவ்வுலகெல்லாமும் வாஸுதேவனே; பரமபுருஷனும், பரமேச்வரனுமாயுள்ளவன் அவன் ஒருவனே' என்னும் அசையாத புத்தி உண்டாயிற்றாகில், அநந்தனானவன் அவர்களுடைய மனத்தில் இருந்தானாகில் அவர்களைவிட்டு, வெகு தூரத்திலே விலகிச்செல்வாயாக. தாமரைக்கண்ணனே! வாசுதேவனே! விஷ்ணுவே! பூமியை தரிப்பவனே! அச்யுதனே! சங்கசக்ரபாணியே! நீயே எனக்கு உபாயமாவாயாக என்று எவர்கள் சொல்லுகிறார்களோ, பாபமற்றவர்களான அவர்களைக் கண்டால் வெகுதூரத்தில் விலகிச்செல்வாயாக. எவனுடைய மனத்தில் அழிவற்ற உருவையுடைய அச்யுதன் எழுந்தருளியிருக்கிறானோ, அந்தப் புருஷஶ்ரேஷ்டனுடைய கண்வீச்சினுள், வைஷ்ணவ ஸுதர்சனத்தின் தேஜஸ்ஸாலே மழுங்கிய வீர்யபலங்களையுடைய எனக்கோ உனக்கோ செல்ல சக்தியில்லை. அவன் அந்ய லோகத்தைச் சேர்ந்தவன்.] என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் யமனும்,

"அவன்தம ரெவ்வினையராகிலும் எங்கோன்
அவன்தமரே என்றொழிவதல்லால்—நமன் தமரால்
ஆராயப் பட்டறியார் கண்டீர் அரவணைமேல்
பேராயற் காட்பட்டார் பேர்"

"திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்க ளென்றான் நமனும்தன்
'தூதுவரைக் கூவிச் செவிக்கு"

"கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்"

"நாவலிட் டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே"
"நமன்தமர் என்தமரை வினவப்பெறுவாரலரென்னும்
"வள்ளலே! உன் தமர்க்கென்றும் நமன்தமர் கள்ளர்போல்"

என்று ஆழ்வார்களாலும் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றோ. (த்வோதோ ந ஹந்யதே ந ஜீயதே) காக்குமியல் வினனை உன்னால் ரக்ஷிக்கப்படுபவன் ஒருவராலும் ஹிம்ஸிக்கப்படுவதுமில்லை; ஜயிக்கப்படுவதுமில்லை என்றும் கொள்ளலாம். ஆக, இவ்வளவால் இவனுக்கு இவ்வுலகிலும், 'மறுவுலகிலுமுள்ள பீடைகளில்லையென்று சொல்லப்பட்டது. அடுத்தபடியாக, இப்பீடைகளுக்குக் காரணமான பாபமும் அவனையணுகாது என்று அறிவிக்கப்படுகிறது: (நைநம் அம்ஹோ அஸ்நோதி) இவனைப் பாபம் அணுகாது. (அந்திகே ந தூ$_3$ராத்) அருகிலுள்ள இந்த ஜந்மத்திலும் இவனைப் பாபம் அணுகாது: இவன் ஜந்மாந்தரங்களெடுத்தாலும் அந்த ஜந்மங்களிலும் இவனைப் பாபமடையாது என்கை. இவனுக்கு வெகுதூரத்திலும் பாபங்கள் அணுகமாட்டா; அப்படியிருக்க அருகில வர மாட்டா என்பதைச் சொல்லவும் வேணுமோ என்றும் கொள்ளலாம். "அஸ்வ இவ ரோமாணி விதூ$_4$ய பாபம்" [குதிரை மயிரை விடுவதுபோல் முக்தன் பாபங்களை விடுகிறான்]

"தத்$_3$ யதா$_2$ இஷீகதூலமக்$_3$னௌ ப்ரோதம் ப்ரதூ$_3$யேத।
ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ$_3$யந்தே ||"

[அக்னியில் இட்ட பஞ்சு எப்படிக் கொளுத்தப்படுகிறதோ அப்படியே இவனுடைய எல்லாப் பாபங்களும் தஹிக்கப்படுகின்றன.]

"தத்$_3$ யதா$_2$ புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்தே।
ஏவம் ஏவம்விதி$_3$ பாபம் கர்ம ந ஶ்லிஷ்யதே ||"

[எப்படித் தாமரையிலையில் தண்ணீர் ஒட்டுவதில்லையோ, அப்படியே இம்மாதிரி அறிபவனிடத்தில் பாபகர்மம் ஒட்டாது.] என்று வேதங்களிலும். "தத$_3$தி$_4$க$_3$ம உத்தர



பூர்வாக$_4$யோரஶ்லேஷவிநாஶௌ" [ப்ரஹ்ம வித்யையைத் தொடங்கியவுடன் உத்தராகங்கள் ஒட்டமாட்டா; பூர்வாகங்கள் நசித்துவிடும்.] என்று பாதராயணராலும்.

"ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:||"

[எல்லா தர்மங்களையும் வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே ஶரணமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; வருந்தாதே] என்று பகவானாலும்,

'தத$_3$க$_4$மக$_4$விக$_4$ாதகர்த்ருபி$_4$ந்நம் ப$_4$வதி கத$_2$ம் ஸதி
சாந்த$_4$காரமர்க்கே"

[பாபங்களைப் போக்கடிக்கும் பகவானால் பிளக்கப்பட்ட அப்பாபங்கள் எப்படி உயிர்வாழும்? ஸூர்யனிருக்கும்போது எப்படி இருளிருக்கமுடியும்?] என்று விஷ்ணுபுராணத்திலும்,

"மாடே வரப்பெறுவராமென்றே வல்வினையார்
காடானும் ஆதானும் கைக்கொள்ளார்"

"வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ
கானே ஒருங்கிற்று கண்டிலமால்—ஆனீன்ற
கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம்
வன்துயரை ஆவா மருங்கு."

"இங்கில்லை பண்டுபோல் வீற்றிருத்தல் என்னுடைய
செங்கண்மால் சீர்க்கும் சிறிதுள்ளம்—அங்கே
மடியடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் மீண்டு
அடியெடுப்ப தன்றோ அழகு"

"யானுமென் நெஞ்சும் இசைந்தொழிந்தோம் வல்வினையைக்
கானும் மலையும் புகக் கடிவான்—தானோர்
இருளன்ன மாமேனி எம்மிறையார் தந்த
அருளென்னும் தண்டால் அடித்து"

''நம்மன்போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம்
சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே''
''இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளீ இ'வேகின்றதால்''
'போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
,தீயினில் தூசாகும் செப்பேலோரெம்பாவாய்''

*என்று ஆழ்வார்களும் இந்த வாக்யத்தில் சொன்ன அர்த்தத்தை விவரித்தார்கள். ''ஸத்யாய ஹவ்யம் க்4ருதவத் விதே4ம''என்று த்3வயத்தில் பூர்வக2ண்ட3ார்த்த2மும்,''அஸ்து ப்ரயஸ்வாந்''என்று உத்தரக2ண்ட3ார்த்த2மும்,''ந ஹந்யதே'' என்று சரமஶ்லோகார்த்த2மும் இம் மந்திரத்தில் அநுஸந்திக்கப்பட்டன. இனி மத்4யாஹ்நத்தில் அநுஸந்திக்கவேண்டிய உபஸ்த2ானமந்திரத்தைப் பார்ப்போம்.*

आ सत्येन रजसा वर्तमानो निवेशयन्नमृतं मर्त्यञ्च।
हिरण्ययेन सविता रथेनादेवो याति भुवना विपश्यन्॥
उद्वयं तमसस्परि पश्यन्तो ज्योतिरुत्तरम्।
देवं देवत्रा सूर्यमगन्म ज्योतिरुत्तमम्॥
उदुत्यं जातवेदसं देवं वहन्ति केतवः।
दृशे विश्वाय सूर्यम्॥
चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः।
आप्रा द्यावापृथिवी अन्तरिक्षं सूर्य आत्मा जगतस्तस्थुषश्च॥
तच्चक्षुर्देवहितं पुरस्ताच्छुक्रमुच्चरत्। पश्येम शरदश्शतम्। जीवेम शरदश्शतम्। नन्दाम शरदश्शतम्। मोदाम शरदश्शतम्। भवाम शरदश्शतम्। शृणवाम शरदश्शतम्। प्रब्रवाम शरदश्शतम्। अजीताःस्याम शरदश्शतम्। ज्योक्च सूर्यं दृशे॥
य उदगान्महतोऽर्णवाद्विभ्राजमानस्सरिरस्य मध्यात्।
स मा वृषभो रोहिताक्षस्सूर्यो विपश्चिन्मनसा पुनातु॥

ஆஸத்யேந ரஜஸா வர்த்தமானோ நிவேஶயந்
அம்ருதம் மர்த்யஞ்ச।
ஹிரண்யயேந ஸவிதா ரதே2நாதே3வோ யாதி
பு4வநா விபஶ்யந்॥
உத்3வயம் தமஸஸ்பரி பஶ்யந்தோ ஜ்யோதிருத்தரம்।
தே3வம் தே3வத்ரா ஸூர்யமக3ந்ம ஜ்யோதிருத்தமம்॥



உது3த்யம் ஜாதவேத3ஸம் தே3வம் வஹந்தி கேதவ:।
த்3ருஶே விஶ்வாய ஸூர்யம்॥
சித்ரம் தே3வாநாமுத3கா3த3நீகம்
சக்ஷுர் மித்ரஸ்ய வருணஸ்யாக்3நே:।
ஆப்ரா த்3யாவா ப்ருதி2வீ அந்தரிக்ஷம்
ஸூர்ய ஆத்மா ஜக3தஸ் தஸ்து2ஷஶ்ச॥
தச்சக்ஷுர் தே3வஹிதம் புரஸ்தாச் சுக்ரமுச்சரத்।
பஶ்யேம ஶரத3ஶ் ஶதம். ஜீவேம ஶரத3ஶ் ஶதம், நந்த3ாம ஶரத3ஶ்ஶதம். மோத3ாம ஶரத3ஶ் ஶதம், ப4வாம ஶரத3ஶ் ஶதம் ஶ்ருணவாம, ஶரத3ஶ்ஶதம் ப்ரப்3ரவாம ஶரத3ஶ் ஶதம். அஜீதாஸ் ஸ்யாம ஶரத3ஶ் ஶதம். ஜ்யோக் ச ஸூர்யம் த்3ருஶே॥
ய உத3க3ாந் மஹதோऽர்ணவாத்3 விப்4ராஜமாநஸ்
ஸரிரஸ்ய மத்4யாத்।
ஸ மா வ்ருஷபே4ா ரோஹிதாக்ஷஸ் ஸூர்யோ
விபஶ்சிந் மநஸா புநாது॥

*''ஆஸத்யேந'' என்று தொடங்கும் மாத்4யாஹ்நிக உபஸ்த2ாந மந்திரத்தின் எட்டு ரிக்குகளுக்கும் ஹிரண்ய கர்ப்பர் ரிஷி. தேவதை ஸூர்யஶப்தவாச்யனான பரமாத்மா. முதலாவது ரிக்குக்கு த்ரிஷ்டுப் சந்தஸ்; இரண்டாவது, ஐந்தாவது, ஆறாவது, எட்டாவது ரிக்குகளுக்கு உஷ்ணிக் சந்தஸ்; மூன்றாவது ரிக்குக்கு காயத்ரீ சந்தஸ்; நான்காவது ரிக்குக்கு ஜகதீ சந்தஸ்; ஏழாவது ரிக்குக்கு ப்3ருஹதீ சந்தஸ் என்று சொல்லுகிறார்கள். சிலர் ''தச்சக்ஷு:'' என்பது முதல் ஒரே மந்திரமாகையால் உஷ்ணிக் சந்தஸ் என்று சொல்லுகிறார்கள். இவற்றை ஆறு மந்திரங்களாகக் கொள்வதும், ஹிரண்யஸ்தூபர், விச்வாமித்ரர், குத்ஸர், வஸிஷ்டர் ஆகியவர்களை ரிஷிகளாகக்கொள்வதுமுண்டு.*

'',ஆஸத்யேநோத்3வயந்தமுது3த்யம் சித்ரமித்யபி।
தச்சக்ஷுர் தே3வ இதி ஹம்ஸ: ஶுசிஷதி3த்யபி॥
ஏதஜ்ஜபேதூ3ர்த்4வபா3ஹுஸ் ஸூர்யம் பஶ்யந் ஸமாஹித:॥'

['ஆஸத்யேந' 'உத்3வயம்' 'உதுத்3யம்' 'சித்ரம்' 'தச்சக்ஷுர் தே3வ' 'ஹம்ஸ: ஶுசிஷத்' என்னும் மந்திரங்களைக் கையை உயரத் தூக்கிக்கொண்டும், ஸூர்யனைப் பார்த்துக்கொண்டும் மநஸ் ஸமாதானமுடையவனாய் ஜபிக்கக்கடவன்] என்று நாராயணரும்.

"மத்4யாஹ்நே மண்ட3லம் பஶ்யந் உபதிஷ்டே2த பூ4ஸ்கரம் |
க்ருதாஞ்ஜலி: படே2த் ஸூக்தமுது3த்யம் ஜாதவேத3ஸம் ||
ஏவமாதீ3நி ஸௌர்யாணி ஜபந்நீக்ஷேத பூ4ஸ்கரம் ||"

[மத்யாஹ்ந வேளையில் ஸூர்யமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு ஸூர்யனை உபஸ்தாநம் செய்யவேண்டியது; கை கூப்பியவனாய் நின்றுகொண்டு "உது3த்யம் ஜாதவேத3ஸம்" என்னும் ஸூக்தத்தைப் படிப்பது. இம்மாதிரியான ஸூர்ய மந்திரங்களை ஜபித்துக்கொண்டே பாஸ்கரனைப் பார்க்க வேண்டியது.] என்று சௌனகரும் விதித்தனர். "பஶ்யேம ஶரத3: ஶதம்" என்று தொடங்கி "ஜ்யோக் ச ஸூர்யம் த்3ருஶே" என்பதுவரையில் வ்யோமமுத்ரையால் ஸூர்யனைப் பார்த்துக்கொண்டும், மற்ற மந்திரங்களைக் கைகூப்பிக்கொண்டும் ஜபிப்பது. இனி இம் மந்திரங்களின் பொருளை விவரிப்போம்.

(ஸத்யேந ரஜஸா) பொய்யற்றதான லோகத்தில்; அழிவற்றதான பரமபதத்தில் என்றபடி. 'ரஜ:' என்னும் ஶப்தம் லோகம் என்னும் பொருளையுடையது. 'ரஜஸா' என்று ஏழாவது வேற்றுமைப் பொருளில் மூன்றாவது வேற்றுமை படிக்கப்படுகிறது. காலத்தினால் மாறுபாட்டையும் இவ்வுலகத்தைப்போலல்லாமல், கால க்ருத பரிணாமமில்லாத தேசமாகையாலே ஸத்யஶப்தத்தால் சொல்லப்படுகிறது பரமபதம்.

"காலம் ஸ பசதே யத்ர ந காலஸ் தத்ர வை ப்ரபு4:"

[எந்தப் பரமபதத்திலிருந்துகொண்டு காலத்தை அப் பரம புருஷன் பரிணாமமடையச்செய்கிறானோ, அங்கு காலமானது (விகாரத்தையுண்டுபண்ண) சக்தியுள்ளதன்று.] என்று



ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் படிக்கப்பட்டதை அநுஸந்திப்பது. (மர்த்யம் ச) மரணத்தையே இயற்கையாகக் கொண்ட ஸம்ஸாரியையும். (அம்ருதம் நிவேஶயந்) மோக்ஷத்தை அடைவிக்கவேண்டுமென்னும் ஆசையையுடையவனாய்க் கொண்டு. "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" [ரக்ஷிக்கப்படுபவனின் அபேக்ஷையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான் பகவான்.] "ஆள்பார்த்துழிதருவாய்" "அத்யர்த்த2ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்3த்4வா" [தனக்கு மிகவினியனான ஞானியை அடைந்து] என்கிறபடியே சேதனலாபத்தைத் தன் பேறாக நினைத்துத் தன்னைக் கொள்வாருமுண்டோ என்று ஆசைப்பட்டுக்கிடப்பவனன்றோ இவன். (பு4வநா விபஶ்யந்) உலகம் முழுவதையும் நன்றாகப் பார்த்துக்கொண்டு. இழந்த மாணிக்கத்தைத் தேடுவாரைப்போலே, தனக்கு ஸ்ரீகௌஸ்துபம்போலே இனியனான இச்சேதனனை உலகம் முழுவதும் தேடிக்கொண்டு திரிகிறான் பரமசேதனன். (ஆ வர்த்தமாந:) மணலிலே தவறவிட்ட பொருளைச் சல்லடையால் சலித்துப் பெறப் பார்ப்பாரைப்போலே ஒவ்வொரு அணுவிலும் சூழ்ந்திருந்து தேடுகிறான். வ்யாப்தியும் சேதனலாபத்திற்காகவே என்கை. (ஸவிதா) ஸர்வலோகங்களையும் ஸ்ருஷ்டித்தவன். ஸ்ருஷ்டியும் சேதனலாபத்திற்காகவே என்கை.

"அசித3விஶேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத:
கரணகளேப3ரைர் க4டயிதும் த3யமாநமநா: |

[அசித்தைக்காட்டிலும் வாசியற்றவராய் ப்ரளயகாலத்திலே உழலும் ஸம்ஸாரிகளைக் கண்டு இரங்கி தேஹேந்திரியங்களைக் கொடுப்பதற்காக மூலப்ரக்ருதியைப் படைத்தீர்.] என்று பட்டரும்,

"அசித3விஶிஷ்டாந் ப்ரளயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேத3ா |
கரணகளேப3ரயோக3ம் விதரஸி வ்ருஷஶைலநாத2கருணே
த்வம் ||"

[வேங்கடாசலநாதனுடைய கருணையே! அசேதனஸமமாக ப்ரளயத்திலுழலும் சேதனரைப் பார்த்துத் துன்புற்று, நீயேயன்றோ அவர்களுக்கு தேஹேந்திரியங்களை அளிக்கிறாய்] என்று வேதாந்ததேசிகரும் அருளிச்செய்தனரன்றோ. இவர்கள் இப்படி அருளிச்செய்ததுக்கும் மூலமாயுள்ளது "**ஆதுமில்காலத்தெந்தை அச்சுதன்**" என்னும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியே. (தே$_3$வ:) ஒளிவிடாநிற்பவன்; உயர்ந்த ஸ்தானத்திலேயுள்ளவன் இவ்விருள்சூழ்ந்த மண்ணுலகுக்கு வந்தால் அவன் ஒளி குன்றுமோ எனில்: இங்கு வந்த பின்பே ஒளி விஞ்சியிருக்கிறான் என்கிறது. "**விஜாயதே**" [விசேஷமாகப் பிறக்கிறான்] என்று வேதபுருஷனும், "பலபிறப்பாய் ஒளிவரும் முழுநலம்" என்று ஆழ்வாரும், "தோன்று மணிவிளக்கை" 'தோற்றமாய் நின்ற சுடரே' என்று ஆண்டாளும், "ஜந்ம கர்ம ச மே தி$_3$வ்யம்" என்று அவன்தானும் அருளிச்செய்தனரன்றோ. (ஆயாதி) ஸம்ஸாரியைத் தேடி அப் பரமபுருஷன் இங்கு வருகிறான். 'எதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கேயருள்கள் செய்ய" "ஆனான் ஆனாயன், மீனோடேனமும்தானானான் என்னில் தானாய சங்கே" என்கிறபடியே வருகிறான். (ஸத்யேந ரஜஸா மர்த்யம் அம்ருதம் நிவேஶயந் ஆயாதி) அழிவற்ற பரமபதத்திலே இந்த ஸம்ஸாரிக்கு மோக்ஷ ஸுகத்தை அளிக்கவேணுமென்று ஆசைகொண்டு இங்கு வருகிறான் பகவான். (ஸத்யேந ரஜஸா வர்த்தமாந: தே$_3$வ: மர்த்யம் ஆயாதி) பரமபதத்திலே விளங்கும் தேவன் பாபத்திற்கோர் உறைவிடமான இச்சேதனனை நோக்கி வருகிறான். "அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யானார் எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்" என்கை. ஞானிகளாலும் காண்பரிய அவன் இங்கு வந்தாலும் அவனை இந்த ஸம்ஸாரி எப்படிக் காணமுடியும்? எனில் (ஹிரண்யயேந ரதே$_2$ந ஆயாதி) "அந்தராதி$_3$த்யே **ஹிரண்மய:** புருஷ:" என்று சொல்லப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்துடன் இவனுக்குக் காட்சி



யளிக்க வருகிறான். "ப$_4$க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே" [பக்தர்களுக்காக நீ புருஷாகாரனாய் விளங்குகிறாய்] என்றதன்றோ. (ஹிரண்யயேந) ஹிதமாயும் ரமணீயமாயுமிருக்கை. ரதஶப்தத்தினால் ஸ்வரூபத்திற்கு உறைவிடமான விக்ரஹம் சொல்லப்படுகிறது. அன்றிக்கே, "புள்ளூர்ந்து தோன்றினையே" என்றாற்போலே கருடனை "ஹிரண்யயேந ரதே$_2$ந" என்பதாகவும் கொள்ளலாம். "அருளாழிப்புட்கடவீர்" என்றன்றோ இவனும் ஆசைப்படுவது. "ஹிரண்மயேந" என்றிருக்கவேண்டியது வேதமாசையாலே 'ஹிரண்யயேந' என்று கிடக்கிறது.

"ஆஸத்யேந" என்னும் மந்திரத்திற்கு மற்றொரு விதமாகவும் பொருள் கொள்ளலாம். (ஸத்யேந) விகாரமற்றதாய், சுத்தஸத்வமயமான ஸ்ரீ வைகுண்டத்துடனும்; (ரஜஸா) ப்ராக்ருத ஸத்வரஜஸ்தமோ குணங்கள் நிறைந்த இந்த லீலாவிபூதியோடும். இங்கு 'ரஜ:' என்னும் பதம், ஸத்வதமோ குணங்களுக்கும் உபலக்ஷகமாய், அக்குணங்கள் நிறைந்த லீலாவிபூதியைக் காட்டுகிறது. "**க்ஷயந்தமஸ்ய ரஜஸ:** பராகே" "**தமஸ:** பரஸ்தாத்" என்றவிடங்களிற் போலே. (ஸத்யேந ரஜஸா வர்த்தமாந:) உபயவிபூதிச் செல்வத்துடன் கூடியவனாய் வீற்றிருக்கும் பரமாத்மா. "**அகல்விசும்பும் நிலனும் செங்கோல் நடாவுதிர்**" என்றார் ஆழ்வார். (ஸவிதா) ஸர்வலோகஸ்ரஷ்டா. (அம்ருதம்) மோக்ஷஸுகத்தையும். (மர்த்யம்) இவ்வுலக ஐஶ்வர்யங்களையும். (நிவேஶயந்) நித்யமுக்தர்களுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஸம்பாதித்துக் கொடுத்துக்கொண்டு, (ஹிரண்யயேந) ஹிரண்மயமான; அழகிய. (ரதே$_2$ந) "**ஸுபர்ணோ஽ஸி க$_3$ருத்மாந்**" என்று வேதத்திலும் ஸுப்ரஸித்தமான வாகனத்தில். (ஆயாதி) வருகிறான். எங்கும் ஸஞ்சரிக்கிறான் என்றும் கொள்ளலாம். (ஹிரண்யயேந ரதே$_2$ந ஆயாதி) மிகச்சிறந்த ரதமாகிய ப்ரணவத்தில் ஏறி வருகிறான் என்றும் பொருள்கொள்வர். "**ஓங்காரரத$_2$மாஸ்த$_2$ாய ஸ்தி$_2$த:**

**புருஷஸத்தம:"** [ஓங்காரமாகிற ரதத்தில் ஏறி விளங்குகிறான் புருஷோத்தமன்] என்று பரமபுருஷனுக்கு ரதமாகச் சொல்லப்பட்டதன்றோ ஓங்காரம். **"ஓங்காரரத$_2$மாருஹ்ய"** என்றும் உண்டு. பார்த்தன் தன் தேரைப்போலே அகாரவாச்யனான நாராயணனுக்கும், மகாரவாச்யனான நரனுக்கும் ஏகரதமாய் விளங்குவதன்றோ ஓங்காரம். என்னசெய்துகொண்டு இவன் ரதத்திலே ஸஞ்சரிக்கிறான்? எனில்: (பு$_4$வநா விபஶ்யந்) தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஜீவராசிகளைத் தங்கள் தங்கள் கர்மானுகுணமாக நியமிப்பதற்காக ரதத்திலேறி வருகிறான். இவ்விருபொருள்களுள் ஸுதர்சனபட்டர் அருளிய முந்திய பொருள் ரஸவத்தரமானது.

**"ஆஸத்யேந"** என்னும் மந்திரத்தில் ஸர்வஸ்மாத்பரனான பரமபுருஷன் சேதனலாபத்திற்காக இங்கு வந்தான் என்றது. "உத்$_3$வயம்" என்னும் அடுத்த மந்திரத்தில் அப்பரஞ்சோதியை நாங்கள் ஶரணமடைந்தோம் என்கிறது. (உத்) மேலானதாய்; (தமஸ:) தமஶ்ஶப்தவாச்யையான மூலப்ரக்ருதிக்கு. (உத்தரம்) மேலான பரமபதத்தில் விளங்கும்; (ஜ்யோதி:) **"நாராயணபரோ ஜ்யோதி:"** முதலான விடங்களிலே சோதியுருவனாகச் சொல்லப்பட்டவன். (தே$_3$வம்) தானம் செய்வது, ப்ரகாஶம் முதலான குணங்களையுடைய வாஸுதேவன். அப்படியாகில், இவன் ப்ரஹ்மருத்ரேந்த்ராதி தேவர்களில் ஒருவன்தானோ? என்னில்: (தே$_3$வத்ரா) அந்த ப்ரஹ்மருத்ராதிகளையும் காப்பாற்றுபவனன்றோ இவன் என்கிறது. சில எழுத்துக்களுக்கு லோபம் வந்துள்ளது. அன்றிக்கே, **"தே$_3$வாந் த்ராயத இதி தே$_3$வத்ர:"** [தேவர்களைப் பரித்ராணம் (ரக்ஷணம்) செய்கிறானாகையால் தேவத்ரன்] என்றாகி, 'ஸுபாம்ஸுலுக்', என்னும் நியாயத்தால் 'ஸ' என்னும் ஆதேஶம் வந்திருப்பதாகவும் கொள்வர். தேவர்களையும் ரக்ஷிக்கும் தேவாதிதேவன் இவன் என்றபடி. **"தம் தே$_3$வதாநாம் பரமஞ்ச தை$_3$வதம்"** [தேவதைகளுக்கும் மேலான தேவதையான அவனை.] "மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ"



**"வேதா$_3$பஹார கு$_3$ருபாதக தைத்$_3$யபீடா$_3$த்$_3$-**
**யாபத்$_3$விமோசந மஹிஷ்ட$_2$ப$_2$ல ப்ரதா$_3$நை:।**
**கோந்ய: ப்ரஜாபஶுபதீ பரிபாதி கஸ்ய**
**பாதோ$_3$த$_3$கேந ஸ ஶிவ: ஸ்வஶிரோத்$_4$ருதேந॥"**

[வேதங்களை அபஹரித்தது, தகப்பன் தலையைக்கிள்ளின பாபம், அஸுரர்களாலுண்டான துன்பம் முதலிய ஆபத்துக்களைப் போக்கியதாலும், மேலான பலன்களை அளிப்பதாலும், உன்னைத்தவிர வேறு யார் ப்ரஜாபதியான பிரமனையும், பசுபதியான சிவனையும் ரக்ஷிக்கிறார்கள்? அந்த சிவன் தன் தலையிலே தரிக்கப்பட்ட யாருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தாலே பரிசுத்தனானான்?] முதலான ப்ரமாணங்களைப் படிப்பது. (ஸூர்யம்) எங்களைத் தன்னைச் சரணமடையும்படி தூண்டுபவன். நாங்கள் இப்போது அவனைச் சரணமடைவதும் அவனுடைய க்ருஷிப$_2$லமேயொழிய எங்களால் வந்ததொன்றன்று என்கை. "அதுவுமவனதின்னருளே" என்கிறார்கள். (உத்தமம் ஜ்யோதி:) பரஞ்சோதியாயிருப்பவன். பரமபதத்திலே சோதியாயிருந்தவன் இச்சேதனனைப் பெற்றவுடன் உத்தமமான சோதியாகிறான். **"பரஞ்ஜ்யோதிருபஸம்பத்$_3$ய"** [பரஞ்சோதியை அடைந்தவுடன்] என்று வேதபுருஷனும், "என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்று ஆழ்வாரும் இவன சேதனலாபத்தாலே பரஞ்சோதியாகிறான் என்று அருளிச்செய்தனரன்றோ. அன்றிக்கே, "ஸூர்யம்" என்றதால் இவன் லோகத்திலே ப்ரஸித்தனான ஸூர்யன்தானோ என்னும் ஸந்தேஹமெழ, அதை நிவர்த்திக்கிறது 'உத்தமம் ஜ்யோதி' என்னும் பதம். **"நாராயணபரோ ஜ்யோதி:"** என்று வேதத்தில் ப்ரஸித்தனானவனே இவன் என்கை. **"யஸ்யாதி$_3$த்யோ பா$_4$முபயுஜ்ய பா$_4$தி"** [எவனுடைய ஒளியினாலே ஆதித்யன் ஒளிவிடுகிறானோ.] **"யேந ஸூர்யஸ் தபதி தேஜஸேத்$_3$த$_4$:"** [எந்தத் தேஜஸ்ஸினால் தூண்டப்பட்டு ஸூர்யன் பிரகாசிக்கிறானோ]

"ந தத்ர ஸூர்யோ பா4தி ந சந்த்3ரதாரகம்
நேமா வித்3யுதோ பா4ந்தி குதோऽயமக்3நி: ।
தமேவ பா4ந்தமநுபா4தி ஸர்வம்
தஸ்ய பா4ஸா ஸர்வமித3ம் விபா4தி ॥"

[அப்பரமபுருஷனிடத்தில், ஸூர்யனும் பிரகாசிக்கிறதில்லை; சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிப்பதில்லை; இந்த மின்னல்களும் ஒளி விடுவதில்லை; இவ்வக்னி எப்படிப் பிரகாசிக்கமுடியும்? ஒளிவிடும்படியான அவனை அநுஸரித்தே இவையனைத்தும் பிரகாசிக்கின்றன. அவனுடைய ஒளியாலேயே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.] என்கிறபடியே லோகப்ரஸித்த ஸூர்யனுக்கும் ஒளிகொடுக்கும் பரஞ்சோதி இவனேயன்றோ. (பஶ்யந்த:) அப் பரஞ்சோதியைக் கண்ணெதிரே காணும் நாம். "ந சக்ஷுஷா க்3ருஹ்யதே" "என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுரு". "கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக்கமலந்தன்னை அயன்" "ந ஸ ஶக்யஸ் த்வயா த்3ரஷ்டும் மயாऽந்யையர் வாபி ஸத்தம" [குழந்தாய்! (ருத்ரனான) உன்னாலும், (ப்ரஹ்மாவான) என்னாலும் மற்றவராலும் அவன் காண்பரியன்] என்று சொல்லப்பட்ட அவனை ஸம்ஸாரிகளுள் கடையான நாம் காணப்பெற்றோம் என்று ஆச்சரியமடைகிறான் மந்திரத்தை அநுஸந்திக்கும் சேதனன். "யமேவைஷ வ்ருணுதே...தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" [எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ, அவனுக்கே இப் பரமாத்மா தன் உருவைக் காட்டுகிறான்.] "நெஞ்சென்னும் உட்கண் காணுமேல் அன்றே நம் கண் காணும்" என்கிறபடியே ஸ்வயத்னத்தால் காண்பரிய அவனை, அவன் காட்டக் காண்பதுண்டன்றோ. (அக3ந்ம) ஶரணமடைந்தோம். "க3த்யர்த்தா2 பு3த்3த்4யர்த்தா2:" என்னும் நியாயத்தாலே, "உபாயமாக அத்4யவஸித்தோம்" என்று பொருள் படுகிறது. பின்வரும் யோஜநாபேதங்களும் அறியத் தக்கவை. (தமஸஸ் பரி) ப்ரக்ருதிக்கு மேலே. 'உபரி' என்பது 'பரி' என்று கிடக்கிறது. (உத்தமம் ஜ்யோதி:) உத்க்ருஷ்டதமமான சோதி. ஜ்யோதி:—அக்3ந்யாதி3கள்; உத் ஜ்யோதி:—ஸூர்யாதிகள்; உத்தரம் ஜ்யோதி:—பரமபதநாத2ன். ஜ்யோதிருத்தமம் என்றதாலே உத்தரஜ்யோதிஸ்ஸான பரமபதநிலயன் சேதனனைப் பெற்றபோது ஒளிவிஞ்சி உத்தமஜ்யோதிஸ்ஸாக ஆகிறான் என்று உணர்த்தப்படுகிறது. (உத் பச்யந்த:) உந்முக2ா: பஶ்யந்த: அவன் விஷயமான தியானத்தைச் செய்யும் நாம் என்றபடி. (தே3வத்ரா) தேவர்களிடம் அந்தர்யாமியாயிருப்பவன் என்கை. இங்கு தேவர்களைச் சொன்னது தே3வமனுஷ்ய திர்யக்ஸ்த2ாவரமாகிய நால்வகை யோனிகளுக்கும் உபலக்ஷணம். "மனிசர் தெய்வம் மற்றும் மற்றும் மற்றும் முற்றுமாய்" என்றாரன்றோ ஆழ்வாரும். (தே3வம் ஸூர்யம் அக3ந்ம) பரமாத்மாவான வாஸுதேவனை அடையக் கடவோம். (அக3ந்ம) 'ப்ராப்நுவாம' [அடையக்கடவோம்] என்றபடி. முந்தின யோஜனை ஸுதர்சன பட்டருடையது; பிந்தியது நாராயணமுனிவருடையது.



முதல் மந்திரத்தால் பரமபுருஷன் பரமபதத்திலிருந்து அவதரித்து, இச் சேதனனை அடைவதற்காக எதிர் சூழல் புக்கு வந்தபடியைப் பேசிற்று. இரண்டாவது மந்திரத்தால் அவனைச் சரணம் புகுந்தபடியைச் சொல்லிற்று. இனி, உத்தரக்ருத்யமான கைங்கர்யத்தில் அந்வயிக்குமித்தனையன்றோ. ஆகையால், மேலுள்ள மந்திரங்களால் ஸ்தோத்ரமங்களாஶாஸனரூபமான வாசிக கைங்கர்யம் செய்யப்படுகிறது.

"தத்3 விப்ராஸோ விபந்யவோ ஜாக்3ருவாம்ஸஸ் ஸமிந்த4தே"

[ஸர்வஜ்ஞர்களாய், துதிப்பதையே தொழிலாகக் கொண்டவர்களாயுள்ள நித்யஸூரிகள் அப்பரமபதத்தில் (எப்போதும்) விழிப்புடன் விளங்குகிறார்கள்.] என்று வேதபுருஷனும், "நமோ நாராயணாயவென்று பல்லாண்டும் பரமாத்ம

னைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்று பெரியாழ்வாரும், நித்யமுக்தர்களாலும் ஸ்துதிமங்களாஶாஸனரூபமான கைங்கரியங்களே எப்போதும் செய்யப்படுகின்றன என்பதை அறிவித்தனரன்றோ.

(உது3த்யம்) **உத் உ த்யம்** என்று பிரித்துக்கொள்வது. 'உத்' என்னும் உபஸர்க்கம் 'வஹந்தி' என்னும் வினைச் சொல்லுடன் சேருகிறது. 'உ' என்பது ஏவகாரார்த்தத்தில் படிக்கப்பட்டிருக்கிறது. (த்யம் உ) அந்த தேவனையே. அவன் எப்படிப்பட்டவனெனில் (ஜாதவேத3ஸம்) "ஜாதா: வேத3ா: யஸ்மாத் ஸ:" என்கிறபடியே வேதங்களைப் பிறப்பித்தவன். அபௌருஷேயமான வேதங்களுக்குப் பிறப்புண்டோ? எனில்: முதன் முதலில் இவனே பிரமனுக்கு இதை உபதேசித்தானாகையால் அதைக்கொண்டு வேதங்களைப் பிறப்பித்தவன் என்கிறது. "**யோ ப்3ரஹ்மாணம் வித3த்4ாதி பூர்வம் யோ வை வேத3ாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை**" [எவனொருவன் முதன் முதலில் பிரமனைப் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசிக்கிறானோ....] என்று சொல்லப்பட்டதன்றோ. "**ஜாதாநி வேத்தீதி ஜாதவேத3ா:**" [தன்னிடமிருந்து பிறந்தவற்றை அறிகிறானாகையால் ஜாதவேத3ஸ் எனப்படுகிறான் பரமாத்மா] என்றும் கொள்ளலாம். 'வேத3:'என்பது ஞானத்தைக்குறிப்பதாகையால்,'உண்டான ஞானத்தையுடையவன்' என்றும் பொருளுரைப்பர். ஓராஶ்ரிதன் தன்னைச் சரணமடைந்தானாகில், அந்த க்ஷணத்திலேயே அவனுக்குச் செய்யவேண்டியவற்றையெல்லாம் அறிபவன் என்றபடி. இத்தால் இவனுடைய ஸர்வஜ்ஞத்வம் சொல்லப்படுகிறது. "**லக்ஷ்மீம் ஜாதவேதோ3 ம ஆவஹ**" [ஜாதவேத3ஸ்ஸான பகவானே! லக்ஷ்மியை எனக்கு அளிப்பீராக.] என்று ஸ்ரீஸூக்தத்தில் லக்ஷ்மீநாதனைச் சொல்லப்பட்டவனே இங்கும் 'ஜாதவேத3ஸ்' எனப்படுகிறான் என்பது தெளிவு. "**ஜாதவேத3ஸே ஸுநவாம ஸோமம்**" என்று பரமாத்மஸூக்தத்திலும் ஜாதவேதஶ்ஶப்தம் பரமாத்மபரமாகப் படிக்கப்பட்டது. (தே3வம்) வாஸுதேவனை. (கேதவ:) கொடிபோல் உயர்ந்தவர்களான மஹான்கள். வஸிஷ்டர், பராஶரர், வ்யாஸர், நாரதர், பக்திஸார பராங்குஶ பட்டநாத பரகாலாதிகளான ஆழ்வார்கள், ப்ரஹ்லாதன், துருவன் முதலானோர். (உத்3வஹந்தி) தங்கள் நெஞ்சிலே தரித்து நிற்கிறார்கள். (த்யம்தே3வம் உ உத்3வஹந்தி) அந்த தேவனையே தரித்து நிற்கிறார்கள். வேறொரு திருவில்லாத தேவனை நெஞ்சால் நினைக்கவும் மாட்டார்கள். (தே3வம் உத்3 வஹந்தி) கர்ப்பிணிகள், குழந்தைக்கு ஒரு நோவும் வாராதபடி தரித்திருக்கிறாப்போலே, இவர்களும் பகவானுக்கு ஒரு நோவும் வாராதபடி நெஞ்சிலே தரித்து நிற்கிறார்கள். (தே3வம் உத்3வஹந்தி) இவர்கள் நெஞ்சால் தரிக்கப்பட்டவுடனேயே அவன் தேவனாகிறான்; பிரகாசத்தை உடையவனாகிறான். இவ்விடத்தில், "நெஞ்சமே நீள்நகராக இருந்த"

**"கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்**
**புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம்!—வெல்ல**
**நெடியான் நிறம் கரியான் உள்புகுந்து நீங்கான்**
**அடியேன துள்ளத் தகம்."**

**"அரவத் தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்**
**அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து"**

**"அநந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாக வைத்தென்**
**மனந்தன்னுள்ளே வந்து வைகி வாழச்செய்தாய் எம்பிரான்"**

**"பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்தென்**
**மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ"**

**"சுடரொளியாய் நெஞ்சினுள்ளே தோன்றுமென் சோதிநம்பீ**
**வடதடமும வைகுந்தமும் மதிள் துவராபதியும்**
**இடவகைகள் இகழ்ந்திட்டென்பால் இடவகை**
**கொண்டனையே"**

**"விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலனை",**

"நின்றதெந்தை ஊரகத்(து) இருந்ததெந்தை பாடகத்து
அன்று வெஃகணைத் கிடந்த(து) என்னிலாத முன்னெலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே.
நிற்பதும் ஓர் வெற்பகத்(து) இருப்பும் விண் கிடப்பதும்
நற்பெருந் திரைக்கடலுள் நானிலாத முன்னெலாம்
அற்புதன் அனந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே" என்னும்

ஸ்ரீஸூக்திகள் அநுஸந்திக்கவுரியன. (கேதவ: தே₃வம் உத்₃வஹந்தி)

"வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்"

என்று ஆண்டாளும் இந்த வேதவாக்யத்தின் அர்த்தத்தை அநுஸந்தித்தாள். (உத்₃வஹந்தி) நெஞ்சிலே வஹிக்கிறார்கள். தங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டாலும் அவனுக்கு ஒன்றும் நேரக்கூடாது என்னும் துணுக்குடன் தரிக்கிறார்கள்.

"ததஸ் தம் சிக்ஷிபுஸ் ஸர்வே பா₃லம் தை₃தேய கிங்கரா: |
பபாத ஸோऽப்யத₄: க்ஷிப்தோ ஹ்ருத₃யேநோத்₃வஹந் ஹரிம் ||"

[பிறகு, அஸுரனுகிய ஹிரண்யகசிபுவின் கிங்கரர்களனைவரும் பாலனான அந்த ப்ரஹ்லாதனைக் கீழே தள்ளினார்கள்; தள்ளப்பட்ட அவனும், ஹரியை நெஞ்சினால் தரித்துக்கொண்டு கீழே விழுந்தான்.] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் சொல்லப்பட்டதன்றோ. இவர்கள் எதற்காகத் தங்கள் ஹ்ருதயத்திலே இவனை தரிக்கிறார்களென்னில்: (த்₃ருஶே விஶ்வாய) உலகிலுள்ளாரனைவரும் காண்பதற்காக இவனை தரிக்கிறார்கள். (விஶ்வாய) ஆறுவது வேற்றுமைக்கு பதில் நான்காம் வேற்றுமை படிக்கப்பட்டுள்ளது. வேத மாகையாலே ஸர்வநாமமுப்தமாக இல்லை. (விஶ்வாய) உலகிலுள்ளார் அனைவரும் காண்பதற்காக தரிக்கிறார்கள். அதாவது: தங்கள் நெஞ்சிலேயுள்ள பகவானை அநுபவித்து, அவ்வநுபவ பரீவாஹ்ரூபமாகத் தாங்கள் சொல்லும் பாசுரங்களாலே, அவனுடைய ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை அறிந்து உலகினர் உஜ்ஜீவிக்கவேண்டுமென்கைக்காக தரிக்கிறார்கள். (உத்₃வஹந்தி) மிகவும் பிரியத்துடன் தரிக்கிறார்கள். இது வ்யாஸார்யருடைய வியாக்கியான க்ரமம்.



இனி, 'உது₃த்யம்' என்னும் மந்திரத்திற்கு நாராயண முனிவருடைய பாஷ்யரீதியிலே பொருள் விவரிக்கப்படுகிறது. (உத் உ த்யம்) உத்க்ருஷ்டனுகவே பிறப்பவன். பிறக்கப்பிறக்க ஒளி மழுங்கும் பிறரைப்போலல்லாமல், அஜஹத்ஸ்வபா₄வனுய்ப் பிறந்தபின்பே ஒளிபெறுமவன். "ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [அவன் பிறந்தபின்பே பெருமைபெறுகிறுன்.] என்று வேதத்திலும், "பல பிறப்பாய் ஒளிவரு முழுநலம்" என்று தமிழ் மறையிலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை அறிவிக்கிறது. (ஜாதவேத₃ஸம்) ஜாதவேத₃ஸ் என்று சுருதிகளில் பிரஸித்தனானவன். (தே₃வம் ஸூர்யம்) பரமாத்மாவை. (விஶ்வாய) எல்லா ஜனங்களுக்கும். (த்₃ருஶே) எங்கும் காண்பதற்காக. (கேதவ:) கொடியைப்போலே அவனுடைய ப்ரபா₄வத்தை ப்ரகாசிக்கச் செய்யும் ஜ்ஞாநம், ஶக்தி, வாத்ஸல்யம், ஸௌஶீல்யம், ஸௌலப்யம், காருண்யம் முதலான குணங்கள். (உத்₃வஹந்தி) பரமபதத்தை விட்டு அவதரிக்கச்செய்கின்றன. அவதாரங்கள் குணக்ருதங்கள் என்னும் அர்த்தத்தை அறிவிக்கிறது. "வைகுண்டே₂ து பரே லோகே" என்கிறபடியே பரமபதத்தில் நித்யமுக்தர்களுடன் அளவற்ற ஆநந்தத்தை அநுபவித்துக்கொண்டிருப்பவனை இவனுடைய காருண்ய ஸௌலப்₄ய ஸௌஶீல்யாதி குணங்கள் ஸம்ஸாரத்தில் தாபத்ரயங்களாகிய பெருநெருப்பிலே அகப்பட்டுத்

தவிக்கும் சேதனர்களை நோக்கி இழுத்துச் செல்கின்றன. அதனாலேயே இவன் ராமக்ருஷ்ணாதி3 ரூபமாக அவதரிக்கிறான்; அவனை அநுபவியுங்கள் என்று கூட்டிப் பொருள்கொள்வது.

''சித்ரம்'' என்னும் மந்திரத்தில் அவனை மேலும் துதிக்கிறது. (சித்ரம்) விசித்ரமானது, **''பரா஽ஸ்ய ஶக்திர் விவிதை4வ ஶ்ரூயதே ஸ்வாப4ாவிகீ ஜ்ஞாநப3லக்ரியா ச''** [இயற்கையானவையான இவனுடைய சக்தி, ஜ்ஞானம், ப3லம், க்ரியை முதலான குணங்கள் பல விதமாகச் சொல்லப் படுகின்றன.] என்று சொல்லப்பட்டதன்றோ. (சித்ரம்) 'சாயூ பூஜாயாம்' என்கிறபடியே பூஜிக்கத்தகுந்தது என்றும் கொள்ளலாம். (தே3வாநாம் அநீகம்) தேவர்களுக்குத் தலைபோலிருப்பது; **''ஸர்வஸ்ய கா3த்ரஸ்ய ஶிர: ப்ரத4ாநம்''** [உடம்பிலுள்ள அவயவங்களுள் தலையே முக்கியமானது] என்கிறபடியே தேவர்களுள் ப்ரத4ானனாயிருக்கும் பரம் ப்ரஹ்மம் என்றபடி. 'அநீக' பதம் அங்கங்களைச் சொல்லுவது; இங்கு தலையைச் சொல்லுகிறது. மேலும் எப்படிப்பட்டது இப் பரம்ப்ரஹ்மம்? எனில்: (மித்ரஸ்ய வருணஸ்ய அக்3நே: சக்ஷு:) ஸூர்யனுக்கும், வருணனுக்கும், அக்னிக்கும் கண் போலிருப்பவன். இங்கு மூன்று தேவர்களைச் சொன்னது ஸர்வதேவர்களுக்கும் உபலக்ஷணம். மித்ரஶப்தவாச்யனை ஸூர்யனுக்கும் கண் எல்கையால், 'ஸூர்ய ஆத்மா' முதலான விடங்களிற் சொல்லப்பட்டவன் பரமாத்மாவே என்று தெளிவாக விளங்குகிறது. 'தே3வாநாம் அநீகம்' என்று அவர்களுக்கு முக்கியகா3த்ரமான தலைபோல் ப்ரத4ானனா யிருப்பதோடன்றியில், **''ஸர்வேந்த்3ரியாணாம் நயநம் ப்ரத4ாநம்''** என்கிறபடியே அவர்களுக்கு முக்யேந்திரியமான கண்போலிருந்து உதவுமவன் என்கிறது. **''விஶ்வதஶ் சக்ஷுருத விஶ்வதோமுக2:''** [எல்லாருக்கும் கண்ணாயும், முகமாயுமிருப்பவன்] **''சக்ஷுர்தே3வாநாமுத மர்த்யாநாம்''** [விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் கண்ணாயிருப்பவன்] **''கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு''** என்று



வடமொழி தென்மொழி மறைகளில் சொன்னதை நினைப்பது. (உத3கா3த்) இப்படிப்பட்ட ப்ரஹ்மம் பிரகாசித்துக்கொண்டு நம்மை அடைந்தது. நெஞ்சினுள்ளே தோன்றிற்று என்றுமாம்.

(தே3வாநாம் அநீகம் உத3கா3த்) பிரகாசிப்பவையும், வ்யவஹாரத்திற்குக் காரணமானவையுமான கிரணங்கள் தே3வசப்தத்தால் சொல்லப்படுவதாகக் கொண்டு, இப்படிப் பட்ட கிரணங்களுடைய கூட்டம் நம்மை அடைந்தது என்றும் கொள்ளலாம். ''சோதி வெள்ளத்தினுள்ளே எழுவ தோர் உரு என் நெஞ்சுள் எழும்'' என்கை. ''தே3வாநாம் சித்ரம் அநீகம் மிதரஸ்ய....அக்3நே: சக்ஷு: உத3கா3த்'' என்று அந்வயம்.

(சித்ரம் தே3வாநாம் உத3கா3த் அநீகம்) எந்த பகவானிட மிருந்து தேவர்களுக்கு உதவிபுரிவதற்காக விசித்ரமான ஸேனை உண்டாயிற்றோ என்றும் பொருள் கொள்வர். ''(யஸ்மாத்) தே3வாநாம் சித்ரம் அநீகம் உத3காத்3 (ஸ:) மித்ரஸ்ய வருணஸ்யாக்3நே: சக்ஷு:'' என்று அந்வயம். பகவான் பல அவதாரங்களைச் செய்தும் ஸாத்யகி ப3லப4த்3ர ப4ரத லக்ஷ்மண ஶத்ருக்4நாதிகளைக் கொண்டும் தேவர்களுக்கு உதவி புரிந்தது ஸுப்ரஸித்தம். இந்த பகவான் மேலும் எப்படிப்பட்டவன் என்பதை விவரிக்கிறது; (ஸூர்ய:) மேலே சொன்ன பரமாத்மா (ஜக3த: தஸ்து2ஷஶ்ச ஆத்மா) ஜங்கமங்களாகிற அசையும் பொருள்களுக்கும், ஸ்த2ாவ ரங்களாகிய அசையாப் பொருள்களுக்கும் ஆத்மாவாயிருப் பவர். ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஆத்மஸமூஹம் முழு வதற்கும் ஆத்மாவாயிருப்பவர் என்றபடி. சேதனர்களுக்கு ஆத்மாவாயிருக்குமளவேயோ எனில்: (த்3யாவா ப்ருதி2வீ அந்தரிக்ஷம் ஆப்ரா:) தேவலோகம், பூமி, இவற்றுக்கு நடுவி லிருக்கும் அந்தரிக்ஷம் ஆகிய அசேதன பதா3ர்த்த2ங்களையும் சூழ்ந்து வியாபித்திருப்பவர். (ஆப்ரா:) 'ப்ரா' என்னும்

தாது நிறைந்திருப்பதைச் சொல்லுகிறதாகையாலே,'ஆப்ரா:' என்னும் பதம் நன்றாக வியாபித்திருப்பவர் என்று பொருள்படுகிறது. அதாவது ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வியாபித்திருக்குமாபோலே. ஒவ்வொரு அணு பதார்த்தத்திலும் தன்னுடைய அக4டிதக4டநாஶக்தியாலே பரிஸமாப்ய வியாபித்திருக்குமவர் என்றபடி.

**"யச்ச கிஞ்சித் ஜக3த்யஸ்மிந் த்3ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா।**
**அந்தர் ப3ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி2த:॥"**

*[இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமாக யாவை சில பதார்த்தங்கள் உள்ளனவோ அவையெல்லாவற்றையும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்.]*

**"ஈஶா வாஸ்யமித3ம் ஸர்வம் யத் கிஞ்ச ஜக3த்யாம் ஜக3த்"**

*[இவ்வுலகில் ஜங்கமமாகவும் (ஸ்தாவரமாகவும்) யாவை சில பதார்த்தங்களுண்டோ அவையெல்லாம் ஸர்வேஶ்வரனாலே வியாபிக்கப்பட்டு விளங்குகின்றன.]*

**"அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா"**

*[ஸர்வாத்மாவான நாராயணன் ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிறான்.]*

**"வ்ருக்ஷ இவ ஸ்தப்3தோ4 தி3வி திஷ்ட2த்யேகஸ்**
**தேநேத3ம் பூர்ணம் புருஷேண ஸர்வம்"**

*[பரமபதத்தில் வ்ருக்ஷம்போல் வணங்காதவனாயுள்ள அத்3விதீயனை புருஷனாலேயே இவையெல்லாம் வியாபிக்கப் பட்டுள்ளது.]*

**"ஏஷ ஸர்வபூ4தாந்தராத்மா தி3வ்யோ தே3வ ஏகோ நாராயண:"**

*[பரமபதத்திலிருக்கும் தேவனான இந்த நாராயணன் ஒருவனே ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன்.]*

**"யஸ்ய ப்ருதி2வீ ஶரீரம் யஸ்யாக்ஷரம் ஶரீரம்"**

*[எவனுக்கு பூமி சரீரமோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ]* என்று வேதங்களிலும்.



**"ஸர்வம் ஸமாப்நோஷி ததோऽஸி ஸர்வ:"**

*[எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறாயாகையால் நீ எல்லாமுமாகிறாய்]*

**"த்ரிபு4வந வபுஷம் விஷ்ணுமீஶம் நமாமி"**

*[மூவுலகங்களையும் சரீரமாகக்கொண்டு நியமிக்கும் விஷ்ணுவை வணங்குகிறேன்]*

**"ஜக3த் ஸர்வம் ஶரீரம் தே"**
**"தாநி ஸர்வாணி தத்3வபு:"**
**"தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு:"**

*[அவையெல்லாம் ஹரியின் தேஹமாகும்]* என்று இதிஹாஸ, புராணங்களிலும்.

**"திடவிசும்பெரி வளி நீர் நிலம் இவைமிசைப்**
**படர் பொருள் முழுவதும் ஆய் அவையவைதொறும்**
**உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்**
**சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே"**

**"பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்**
**பரந்த அண்டம் இ(து) என நில விசும்(பு) ஒழிவறக்**
**கரந்த சிலிடந் தொறும் இடந்திகழ் பொருள் தொறும்**
**கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட கரனே"**

**"ஓருயிரேயோ உலகங்கட்கெல்லாம்"**

**"சிறந்த கால் தீ நீர் வான் மண் பிறவுமாய பெருமானே!**
**கறந்த பாலுள் நெய்யே போல் இவற்றுளெங்கும் கண்டுகொள்**
**இறந்து நின்ற பெருமாயா!"**

என்று ஆழ்வாராலும் இவ்வர்த்தம் பலவிடங்களிலும் படிக்கப்பட்டதன்றோ. இந்தப் பரமபுருஷனை உபாஸிக்கக் கடவோம் என்று கூட்டிப்பொருள் கொள்வது. அன்றிக்கே, இப்படிப்பட்ட பரமாத்மா என் நெஞ்சிலே தோன்றினான் என்று "சித்ரம் தே3வாநாம் உத3கா3த்" என்னும் முன் வாக்யத்தோடே சேர்த்துப் பொருள் கொள்வது. ஸர்வ

பூ₄தங்களுக்கும் ஆத்மாவாயிருக்கை, விண்ணோர்க்குக் கண்ணு யிருக்கை முதலான தர்மங்கள் பகவானுக்கே அஸாதாரண மாகையாலே இம்மந்திரம் பகவத்பரமேயென்பதை.

''ஆத்மாஸ்ய ஜ₃ந்து: பரிதஸ்து₂ஷஶ்ச
மித்ரஸ்ய சக்ஷுர் வருணஸ்ய சாக்₃நே:।
லக்ஷ்ம்யா ஸஹௌஷத்பத்திக ஜ₃ாட₂ப₃ந்த₄ம்
பஶ்யேம ரங்கே₃ ஶரத₃: ஶதம் த்வாம்॥''

[இவ்வுலகிலுள்ள ஸ்தாவர ஜங்கமங்களுக்கு ஆத்மாவாய், ஸூர்யன், வருணன், அக்னி ஆகிய விண்ணோர்க்கும் கண்ணுயிருப்பவனுய், பிராட்டியுடன் இயற்கையாகவே நெருங்கிச் சேர்ந்திருப்பவனுன உன்னைத் திருவரங்கத்தில் நூறுண்டுகள் காணக்கடவோம்.] என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீபராசரபட்டார்யர் அருளிச்செய்தார். (தச்சக்ஷு:) முன் மந்திரத்தில் சொல்லப்பட்ட ஜ்ஞானப்ரத₃னை பரமாத்மா. கண்ணினுள் நிற்கும் புருஷனுகையாலும் எல்லாவிடத்திலும் கண்ணை உடைத்தாயிருக்கையாலும் 'சக்ஷு:' என்று சொல்லப்படுவதாகவும் கொள்ளலாம். ''அந்தரக்ஷிணி புருஷ:'' ''காவி நன்மேனிக்கமலக் கண்ணன் என் கண்ணினுள்ளானே'' ''கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்'' ''ஸஹஸ்ராக்ஷ:'' ''விஸ்வதஶ்சக்ஷு:'' ''கண்களாயிரத்தாய்'' என்று சொல்லப்பட்டதன்றே. (தச்சக்ஷு:) ஓர் ஆஶ்ரிதனை அடையப்பெற்றோம் என்னும் ஆநந்தத்திலுைம், ஆஶ்ரிதன் செய்யும் துதியினுல் உண்டான பிரீதியினுலும், பகவானுடைய கண்கள் மிகப் பெரிதாக விரிகையாலே, இவனுடைய உடம்பெல்லாம் கண்ணுய்த் தோன்றுகையாலும், கண்ணையொழிய வேறென்றிலே கண் செலுத்த மாட்டாமையாலும் இவனைக் 'கண்' என்றே சொல்லுவதாகவும் கொள்ளலாம்.

''பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம் நம்மேல்
ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்''



''வன்காற்றறைய ஒருங்கே மறிந்து கிடந்தலர்ந்த
மென்கால் கமலத் தடம்போல் பொலிந்தன........
தன்கால் பணிந்த என்பால் எம்பிரான தடங்கண்களே''
''அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்''
''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே''
என்று ஆழ்வார்களும்,

''ஸ புண்ட₃ரீகாக்ஷ இதி ஸ்பு₂டோऽப₄வத்''
[அவன் தாமரைக்கண்ணன் என்றே பிரஸித்தனுனன்] என்று கவிகளும் உரைத்தனரன்றே. ''ஜிதந்தே புண்ட₃ரீகாக்ஷ'' என்று அனுகூலரும், ''புண்ட₃ரீக விஶாலாக்ஷௌ'' என்று ப்ரதிகூலரும் வாசியற ஈடுபடும்படியாயிருப்பதன்றே இவன் கண்.

''கண்ணே! உன்னைக் காணக் கருதி என் நெஞ்சம்
எண்ணே கொண்ட சிந்தையதாய் நின்றியம்பும்''
என்று ஆழ்வாரும் இவனைக் 'கண்ணே!' என்றே கூப்பிட்டாரன்றே. அந்த பகவான் மேலும் எப்படிப்பட்டவன்? எனில்: (தே₃வஹிதம்) ப்₃ரஹ்மருத்₃ராதி₃ தே₃வர்களுக்கும் நன்மையைச் செய்பவன். (புரஸ்தாத் உச்சரத்) இச்சேதனன் அநுகூலனுவதற்கு முன்னமே இவனை அடைவதற்காக எதிர்சூழல்புக்குத் திரிந்தான் அப் பரமபுருஷன். சேதனன் அத்₃வேஷ ஆபி₄முக்₂யங்களை உடையவனுனன் என்று அறிந்தவுடன், அவன் பக்தி செய்ய ஆரம்பிப்பதற்கு முன்னமே அவன் ஹ்ருதயத்திலே எழுந்தருளினுன்.

''வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம்
பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினுன்''
என்கிறபடியே முற்பாடனுமவனன்றே பரமபுருஷன். (ஶுக்ரம் புரஸ்தாத் உச்சரத்) இப்படி முற்பாடனுனவுடனேயே அமலனுனன். ஶுக்ரம்—அமலன். தான் எம்பெரு

மானை அணுகினுல் அவனுக்கு அழுக்கேற்படுமோ என்று பயந்துகொண்டே உட்சென்ற முநிவாஹனராகிய திருப்பாணுழ்வார். தன்னைக் கண்டவுடனேயே அவன் அழுக்கற்றவனுஞன் என்பதை "அமலன்" என்று அருளிச்செய்தாரன்ருே. "புரஸ்தாத் பஶ்யேம" என்று கூட்டிப் பொருள் கொள்வாருமுண்டு. நமக்கு முன்னேயிருக்கும் அவனைக் காண்போமாக என்றபடி.

அடுத்தபடியாக, இப்படிப்பட்ட பரமபுருஷனைப் பல்லாண்டுகள் காண்போமாக என்று தொடங்கி மங்களங்களை ஆஶாஸிக்கிருன். முமுக்ஷுவானவன் ஆயுளை விரும்புவது பொருந்துமோ? என்னில்: "நாம் பரமபுருஷனைப் பல்லாண்டுகள் காணக்கடவோம்" என்கையால் இங்கு சேதனனுடைய ஆயுள் பிரார்த்திக்கப்படுவதாகக் கொள்ளலாகாது. பல்லாண்டுகள் நாம் காணும்படியாகப் பரமபுருஷனுக்கு ஒரு தீங்கும் வாராமலிருக்கவேண்டும் என்று அவனுக்கு மங்களாஶாஸனம் செய்வதிலே நோக்கு. அவனுக்கு மங்களாஶாஸனம் செய்யத் தானும் நெடுநாள் வாழவேண்டுமாகையால், தன்னுடைய வாழ்வும் அதற்கு உறுப்பாகப் பிரார்த்திக்கப்படுகிறது. "அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு" என்று பெரியாழ்வாரும் பிரார்த்தித்தாரன்ருே. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையும் 'எந்தை தந்தை' என்னும் பாட்டு வியாக்கியானத்தின் கீழே 'பஶ்யேம ஶரத3ஶ்ஶதம்' என்னும் வாக்யத்தை மங்களாஶாஸனத்திற்கு ப்ரமாணமாக எடுத்தருளினுர். ஆகையால், 'பஶ்யேம ஶரத3ஶ்ஶதம்' முதலான வாக்யங்களால் மாதவனுக்கு மங்களாசாஸனம் செய்யப்படுவதாகக் கொள்வதே சிறந்தது. விசிஷ்டாதிகாரிகள் இம்மந்திரங்களை மங்களாஶாஸன புத்தியுடனேயே உச்சரிப்பர். ஸாமாந்யாதிகாரிகள் ஆயுள் முதலானவற்றைப் பிரார்த்திப்பதாகவும் கொள்வர். மங்களாஶாஸனத்தைப் பற்றிய பூர்வபக்ஷ ஸித்தாந்தங்களைத் திருப்பல்லாண்டு வியாக்கியானத்திலே கண்டுகொள்வது.



(பஶ்யமே ஶரத3ஶ் ஶதம்) பரமபுருஷனை (அவனுடைய அநுக்3ரஹத்தினுலே) நூருண்டுகள் காணக்கடவோம். இங்கு 'ஶதம்' (நூறு) என்பது கணக்கற்றது என்னும் பொருளிலே பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. 'பல்லாயிரத்தாண்டு' என்னுமாபோலே. 'ஶரத3:' என்னுமிடத்திலேயுள்ள இரண்டாவது வேற்றுமை, "**காலாத்4வநோரத்யந்த ஸம்யோகே3 த்3விதீயா**" என்னும் ஸூத்திரத்தினுலேற்பட்டது. (ஶதம் ஶரத3: ஜீவேம) உனக்கு மங்களாஶாஸனம் செய்வதற்காகப் பல்லாண்டுகள் வாழக்கடவோம். (ஶதம் ஶரத3: நந்த3ாம) பல்லாண்டுகள் உன்னை அனுபவித்து ஆநந்திக்கக்கடவோம். (ஶதம் ஶரத3: மோத3ாம) பற்பல ஆண்டுகள் பாகவதர்களை அனுபவித்துப் பேரானந்தப்படக்கடவோம். 'நந்த3ாம' என்று பகவதநுபவமும். 'மோத3ாம' என்று பாகவதாநுபவமும் சொல்லப்படுகின்றன. (ஶதம் ஶரத3: ப4வாம) இப்படி மங்களாஶாஸனம் செய்வதாலேயும், பகவத்பாகவதர்களை அநுபவிப்பதாலேயும் பல்லாண்டுகள் ஸத்தை பெற்றவர்களாகக்கடவோம். (ஶதம் ஶரத3: ஶ்ருணவாம) பல்லாண்டுகள் பகவத் கதைகளையும், கேசவன் கீர்த்தியையும் கேட்கக்கடவோம். (ஶதம் ஶரத3: ப்ரப்3ரவாம) நூருண்டுகள் பகவத்ப்ரபாவத்தைச் சொல்லும் வேதம் முதலான வாக்குகளையும் பகவத் குணங்களையும் ப்ரவசனம் செய்யக்கடவோம். "**ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி**" [ஹரியைத் துதிப்பதே நாவாகும்.] "நாவாயிலுண்டே" என்கிறபடியே நாப்படைத்த பலனைப் பெறக்கடவோம். பாஹ்யகுத்3ருஷ்டிகளின் வாயை அடைக்கும்படியான வாதங்களைப் பண்ணக்கடவோம் என்பதாகவும் கொள்ளலாம். (அஜீதா: ஸ்யாம ஶதம் ஶரத3:) அந்த ப3ாஹ்யகுத்ருஷ்டிகளாலே என்றும் ஜயிக்கப்படாமலிருக்கக்கடவோம். பாபங்கள், இந்திரியங்கள் முதலானவற்ருல் ஜயிக்கப்படாமலிருக்கக்கடவோம். "அஜிதா:" என்றிருக்கவேண்டியது 'அஜீதா:' என்று கிடக்கிறது. (ஜ்யோக்)

வெகு நீண்டகாலம்; (ஸூர்யம்) ப்ராணிகளைக் கர்மங்களிலே ஏவுகிற பரமாத்மாவை; (த்₃ருஶே) அறியக்கடவோம். 'பஶ்யேம' என்றவிடத்தில் கண்ணினாலுண்டாகும் ஞானத்தையும், 'த்₃ருஶே என்றவிடத்தில் மநஸ்ஸினாலுண்டாகும் அறிவையும் சொல்லுகிறதாகையாலே புநருக்தியன்று.

"ய உத₃கா₃த்" என்னும் அடுத்த மந்திரத்தில் பகவான் க்ஷீராப்திநாதனாய் அவதரித்து, அங்கிருந்து ராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்தபடிகளைப் பேசித் துதிக்கிறான். (ய:) எந்தப் பரமபுருஷன்; (மஹத: அர்ணவாத்) பெரிதான ஸமுத்திரத்திலிருந்து; (உத₃கா₃த்) "அம்ப₄ஸ்யபாரே" [கரைகாணவொண்ணாத ஜலத்தில் (இருப்பவன்)] "யமந்தஸ்ஸமுத்₃ரே கவயோऽவயந்தி" [எவனை நடுக்கடலுள் துயில்பவனாக ஞானிகள் அறிகிறார்களோ] "ஸமுத்₃ரேந்தம் நாராயணம்" "நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே" என்கிறபடியே மிகப்பெரிதான பாற்கடலிலிருந்து இவ்வுலகில் ராமகிருஷ்ணாதி ரூபங்களுடன அவதரித்தாரோ.

"த்ரிபாதூ₃ர்த்₄வ உதை₃த் புருஷ: பாதோ₃ऽஸ்யேஹாப₄வாத் புந:।
ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாநஶநே அபி₄ ॥"

[பரமபதத்திலிருக்கும் பரமபுருஷன் மூன்று அவதாரத்தையுடையவராகி ஸங்கல்பித்தார். இவருடைய ஒரு அவதாரமான அநிருத்தன் இவ்வுலகில் அவதரித்தார். அதற்குப் பின் எல்லாப்பக்கத்திலும் ஜீவன், ஜடம் ஆகிய இவர்களைக் குறித்து (அவதாரம் செய்வதன் மூலம்) வியாபித்தார்.] என்று வேதத்திலும்,

"ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:।
நாக₃ பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக₃தோ மது₄ராம் புரீம் ॥"

[பாற்கடலில் பையத்துயின்ற பரமனான இந்த ஸ்ரீமந் நாராயணனேசேஷஶயனத்தைவிட்டு மதுராபுரிக்குக் கண்ணனாய் வந்துள்ளான்.] என்று ரிஷிகளாலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை அநுஸந்திக்கிறது. (ய உத₃கா₃த்) எந்த பகவான் அவதரித்தாரோ, அவரை நெடுங்காலம் காணக்கடவோம் என்று சென்ற மந்திரத்துடன் கூட்டுவது. அன்றிக்கே 'மநஸா புநாது' என்றதுடனும் கூட்டலாம். இப்படிப் பாற்கடலிலிருந்து பல அவதாரங்களைச் செய்தானென்றால் அக்காலங்களில் பாற்கடலில் பகவான் இல்லையோ? எனில்: (ஸரிரஸ்ய மத்₄யாத் விப்₄ராஜமாந:) அப்படி அவதாரங்கள் செய்தபோதும் பாற்கடலின்நடுவே பிரகாசித்துக்கொண்டே எழுந்தருளியிருந்தான். "ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து இங்கு பிறந்த" என்றாற்போலே. "நாக₃பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக₃தோ மது₄ராம் புரீம்" [பாற்கடலில் சேஷஶயனத்தை விட்டு மதுரைக்கு எழுந்தருளினான்] என்றதும் பாற்கடலைக்காட்டிலும் வடமதுரையில் அதிகமான பிரீதியைச் செய்தான் என்று அறிவிக்கைக்காக. "பணிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்து" "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல்" என்றாப்போலே. (ஸரிரஸ்ய மத்₄யாத்) 'ரலயோரபே₄த₃:' ['ர' 'ல' என்னும் எழுத்துக்களுள் பேதமில்லை.] என்னும் நியாயத்தாலே 'ஸலிலஸ்ய' என்றிருக்க வேண்டியது 'ஸரிரஸ்ய' என்று கிடக்கிறது. நீரின் நடுவில் என்றபடி. "ல்யப்₃லோபே பஞ்சமீ" என்னும் நியாயத்தினால் பஞ்சமீ வந்திருக்கிறது. (ஸரிரஸ்ய மத்₄யாத் விப்₄ராஜமாந:) பாற்கடலின் நடுவிலே பிரகாசிப்பவர். (விப்₄ராஜமாந:) 'சேதனரைத் திருத்தும் வழியெது' என்று சிந்தித்துக்கொண்டே யோகநித்திரை செய்வதால் உண்டான திருமேனியொளியைச் சொல்லுகிறது.

"குறைவில் தடங்கடல் கோளரவேறித் தன் கோலச்
செந்தாமரைக்கண்
உறைபவன் போல ஓர் யோகுபுணர்ந்த ஒளி மணிவண்ணன்"

என்று நம்மாழ்வாரும் உடையயவன் உடைமையை விட மாட்டாத நசையுடனே யோகநித்திரை செய்வதால் ஒளி மணிவண்ணனுகிறுன் என்றுரன்றே. "மஹதோர்ணவாத்" என்று பாற்கடலேயும். "ஸரிரஸ்ய ம்த்4யாத்" என்றவிடத்'தில் ப்ரளயஸமுத்ரத்தையும் சொல்லுவதாகவும் கொள்ளலாம். நாராயணசப்தத்தை விவரிக்கும்போது எடுத்த **"ஆபோ நாரா இதி ப்ரோக்தா:"** முதலான ப்ரமாணங்களே இங்கும் படிப்பது. இவைகளிலிருந்து க்ஷீரார்ணவ நிகேதனனுன நாராயணனே இங்கு சொல்லப்படுமவன் என்று தெளிவாகிறது. "மஹதோர்ணவாத்" என்றும், "ஸரிரஸ்ய மத்4யாத்" என்றும் ஜலதத்வத்தைச் சொன்னது பஞ்ச பூ4தங்களுக்கும் உபலக்ஷணமென்றும். இவற்றுல் ஸர்வ பூ4தங்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிறுன் என்று சொல்லுவதாகவும் கொள்வாருமுண்டு. "விப்4ராஜமாந:" என்றதால் **"அநஶ்நந் அந்ய: அபி4சாகஶீதி"** [கர்மப2லத்தை புஜியாத பரமாத்மா **பிரகாசிக்கிறுன்**] என்றவிடத்திற் போலே. பஞ்சபூதங்களில் வியாபித்திருந்தபோதிலும் தோஷமற்று விளங்காநிற்கிறபடியைச் சொல்லுவதாகவும் கொள்வர். க்ஷீராப்திநாதபரமாகச் சொன்ன முதற்பொருளே சிறந்தது.

(ஸ வ்ருஷப4:) **ஶ்ரேஷ்டரான** அப் பரமாத்மா. **"புருஷர்ஷப4:" "ஶார்த்தூ3ல வ்ருஷபே4ாபமௌ"** "ஆயர்டாடி கவர்ந்துண்ணும் காரேறு" என்று சொல்லப்பட்டானன்றே. **"யஶ்ச2ந்த3ஸாம் ருஷப4:"** என்று வேதத்தில் சொல்லிய படியே வேதம் முதலான ப்ரமாணங்களில் தலைவனுகச் சொல்லப்படுகிறவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

(வ்ருஷப4: ) ஸர்வலோகங்களையும் (மேகம்போலே) வர்ஷிக்கிறவன் (உண்டாக்குகிறவன்) என்றும் கொள்ளலாம். பசுமாடுகள்போலேயுள்ள ஸர்வப்ராணிகளுக்கும் புருஷனுயிருக்கும் ரிஷபம் இவனே என்றும் கொள்ளலாம்.



**"வ்ருஷம் த4ர்மம் பா4ஸயதீதி வ்ருஷப4:"** [வ்ருஷ ஶப்தத்தினுல் சொல்லப்படும் தர்மத்தைப் பிரகாசிக்கச்செய்கிறுனுகையால் வ்ருஷபனுகிறுன்] என்றும் கொள்ளலாம். "வ்ருஷாஹீ வ்ருஷப4:" என்று ஶ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் இது பகவந்நாமங்களில் ஒன்றுகப் படிக்கப்பட்டதென்பது அறியத்தக்கது. இப்படி பகவந்நாமத்தைப் படித்ததிலும் திருப்தியடையாமல் அவனுடைய அஸாதாரணமான அடையாளமான புண்டரீகாக்ஷத்வத்தை அடுத்தபடியாக அறிவிக்கிறது. (ரோஹிதாக்ஷ:) லோஹிதாக்ஷன்; சிவந்த கண்களையுடையவன்; செந்தாமரைக்கண்ணன் என்று பா4வம்.

**"ய ஏஷோ அந்தராதி3த்யே ஹிரண்மய: புருஷோ த்3ருஶ்யதே....**
**தஸ்ய யதா2 கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ"**

[ஆதித்யமண்டலத்தின் நடுவில் யாவனொரு ஸுவர்ணமயனுன புருஷன் காணப்படுகிறுனே, அவனுக்கு ஸூர்யனுல் மலர்ந்த தாமரைபோன்ற இரு கண்கள் உள.] என்று வேதமும் வாய்வெருவும்படியிருப்பதன்றே இவனுடைய செந்தாமரைக் கண்கள். **"ராமோ ராஜீவ லோசந:" "க்ருஷ்ண: கமலலோசந:" "மஹாவராஹ: ஸ்பு2டபத்3மலோசந:" "மத்ஸ்ய: கமலலோசந:"** என்கிறபடியே மனிதனுகவும், வராஹமாகவும், மீனுகவும் பிறவியெடுத்தபோதிலும் இவனுடைய கண்ணை மறைக்கமுடியாதபடியன்றே இருப்பது. ஸர்வாங்கங்களும் மறையக்கவசமிட்டாலும், கண்ணை மறைத்துக் கவசமிடுவதில்லையன்றே. **"லோஹிதாக்ஷ: ப்ரதர்த்த3ந:"** என்று ஶ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும் இது பகவந்நாமமாகப் படிக்கப்பட்டது. இக் காரணங்களால் இங்கு சொல்லப்படுமவன் லோகப்ரஸித்தனுன ஸூர்யனல்லன் என்று தெளிவாகிறது.(ஸூர்ய:)நன்றுகக் கர்மங்களிலே தூண்டுபவன்; **"ஸரதி இதி ஸூர்ய:"** [(எங்கும்) செல்கிறுனுகையால் ஸூர்யன்.] என்றும் கொள்ளலாம். 'ஸு ஆர்ய:— ஸூர்ய:" [மேலான ஸ்வாமியாயிருப்பவன் ஸூர்யன்]

என்றும் கொள்வர். (விபஶ்சித் ஸ:) ஸர்வஜ்ஞனை அப் பரமாத்மா. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம| யோ வேத3 நிஹிதம் கு3ஹாயாம்| ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ| ப்3ரஹ்மணா விபஶ்சிதா ||" [ஸத்யமாயும், ஜ்ஞானமாயும், அநந்தனுயும் ஹ்ருதயகுஹையிலுள்ளதுமான ப்ரஹ்மத்தை எவன் அறிகிருனே அவன் எல்லாக் காமங்களையும் (கல்யாணகுணங்களையும்) ஸர்வஜ்ஞன ப்ரஹ்மத்துடன் கூட அநுபவிக்கிருன்.] என்னும் வேதவாக்கியத்தில் விபஶ் சித்தாகச் சொல்லப்பட்ட அநந்தனே இங்கும் விபஶ் சித்தாகச் சொல்லப்படுகிருன் என்று தெளிவாகிறது. (மநஸா) நம்மிடத்தில் அருள்புரியும் மனத்தினுல். இதி லிருந்து பரமபுருஷனுக்கும் அப்ராக்ருதமான மனம் முதலிய இந்திரியங்கள் உள்ளனவென்று விளங்குகிறது. "ரோஹி தாக்ஷ:" என்றவிடத்திலும் இது தெளிவு. (மாம் புநாது) என்னைப் பரிசுத்தப்படுத்தட்டும். (மாம்) தன்னையல்லது வேறு ப்ராப்யப்ராபகங்களை அறியாத என்னை. 'பஶ்யேம' என்றவிடத்தில் பஹுவசனமாகவும், 'மாம்' என்று இங்கு ஏகவசனமாகவும் சொல்லியிருந்தபோதிலும் வேறு வேறு மந்திரங்களாகையாலே தோஷமில்லை. அன்றிக்கே ஏதாவ தொன்றை மாற்றிக்கொள்வது. "அபி4ஜந வித்3யாகு3ருஷு பு3ஹுவசநம்" என்னும் நியாயத்தாலே 'பஶ்யேம' என்னும் பு3ஹுவசநம் வந்திருப்பதாகவும் கொள்ளலாம். (புநாது) தன்னை அனுபவிக்கத் தகுந்தவனுகும்படி என்னை அவனே திருத்திக்கொள்ளவேண்டும். (விபஶ்சித் புநாது) ஸர்வ ஜ்ஞனுகிய அவன் என்னைத் திருத்துகையொழிய அஜ்ஞனை நான் என்னைத் திருத்திக்கொள்ள முடியுமோ? தன்னிடத் திலே ந்யஸ்தப4ரனை என்னை அவனே பரிசுத்தனுக்க வேணும் என்கை.

ஆக, இம் மந்திரங்களில், பகவான் அவதரித்து ஆள் பார்த்துழிதருவானய், எதிர்சூழல்புக்கு வந்தபடியையும் அவனைத் தான் சரணமடைந்தபடியையும் சொல்லி, அவனைப்



பற்றிய ஸ்துதிமங்களாஶாஸனங்களைச்செய்து முடிக்கிறது. இனி, ஸாயங்கால ஸந்த்யையின்போது அநுஸந்திக்க வேண்டிய உபஸ்த்2ாந மந்திரத்தைக் காண்போம்.

**इमं मे वरुण श्रुधी हवमद्या च मृडय। त्वामवस्युराचके॥ तत्त्वा यामि ब्रह्मणा वन्दमानस्तदाशास्ते यजमानो हविर्भिः। अहेडमानो वरुणेह बोध्युरुशँस मान आयुः प्रमोषीः॥ यच्चिद्धि ते विशो यथा प्रदेव वरुण व्रतम्। मिनीमसि द्यविद्यवि॥ यत्किञ्चेदं वरुण दैव्ये जनेऽभिद्रोहं मनुष्याश्चरामसि। अचिती यत्तव धर्मा युयोपिम मानस्तस्मादेनसो देव रीरिषः॥ कितवासो यद्रिरिपुर्न दीवि यद्वाघा सत्यमुत यन्न विद्म। सर्वा ता विष्य शिथिरेव देवाथाते स्याम वरुण प्रियासः॥**

இமம் மே வருண ஶ்ருதீ4 ஹவமத்3யாச ம்ருட3ய| த்வா மவஸ்யுராசகே|| தத் த்வா யாமி ப்3ரஹ்மணு வந்த3மாநஸ் தத3ாஶாஸ்தே யஜமாநோ ஹவிர்ப்பி4:| அஹேட3மாநோ வருணேஹபோ3தி4 உருஶம்ஸ மா ந ஆயு: ப்ரமோஷீ:|| யச் சித்3தி4 தே விஶோ யத2ா ப்ரதே3வ வருண வ்ரதம்| மிநீமஸி த்3யவித்3யவி|| யத் கிஞ்சேத2ம் வருண தை3வ்யே ஜநேऽபி4 த்3ரோஹம் மநுஷ்யாஶ் சராமஸி| அசித்தீ யத் தவ த4ர்மா யுயோபிம மாநஸ் தஸ்மாதே3நஸோ தே3வ ரீரிஷ:|| கிதவாஸோ யத்3 ரிரிபுர் நதீ3வி யத்3 வாக4ா ஸத்யமுத யந்ந வித்3ம| ஸர்வா தா விஷ்ய ஶிதி2ரேவ தே3வாத2ாதே ஸ்யாம வருண ப்ரியாஸ:||

ஸாயம் ஸந்த்4யா உபஸ்த2ான மந்திரங்கள் இவ்வைந்து ரிக்குகளும். முதல் மூன்று ரிக்குகளுக்கு ஶுநஶ்ஶேப2ர் ரிஷி. நான்காவதற்கு வஸிஷ்டர் ரிஷி. ஐந்தாவதற்கு அத்ரி ரிஷி. முதலாவது மூன்றுவது மந்திரங்களுக்கு காயத்ரீ சந்தஸ்ஸு. இரண்டாவது, நான்காவது, ஐந்தாவது ரிக்குகளுக்கு த்ரிஷ்டுப் சந்தஸ்ஸு. ஐந்துக்கும் வருணனுக்கு அந்தர்யாமி யான பரமாத்மா தேவதை. 'இமம் மே வருண' என்று தொடங்கும் மந்திரங்களுக்கு தேவராதர் ரிஷி என்று சிலர் படிப்பர். சுநச்சேபருக்கே தேவராதர் என்னும் பெயருண்டு

என்பது ஸ்ரீபாகவதத்தில் பிரஸித்தமாகையால் இது பக்ஷாந்தரமன்று. இந்த மந்திரங்களைப்பற்றி ப3ஹ்வ்ருச ப்ராஹ்மணத்திலும் இதிஹாஸ புராணங்களிலும் பின்வரும் இதிஹாஸம் சொல்லப்படுகிறது.

இக்ஷ்வாகு வம்ஶத்தில் பிறந்தவனாகிய ஹரிஶ்சந்த்ரன் என்னும் அரசனுக்கு நூறு பத்னிகளிருந்தபோதிலும் பிள்ளையுண்டாகவில்லை. ஒரு நாள் தற்செயலாகத் தன் வீட்டிற்கு வந்த நாரதர் பர்வதர் என்னும் ரிஷிகளைப் பூஜை செய்து, பிள்ளை பிறப்பதற்கு உபாயத்தைக்கேட்ட போது பகவான் நாரதர் "அரசனே! 'வருணனாகிற நீ எனக்குப் பிள்ளையை அளிப்பாயாகில் உன்னால் அருளப் பட்ட பிள்ளையையே யாக3 பசுவாக வைத்து உன்னைக்குறித்து யஜ்ஞம் செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து வருண னைக் குறித்துத் துதிசெய்; வருணன் உனக்குப் புத்திரனை அளிப்பான்" என்று கூறினார். இவ்வரசனும் அப்படியே ப்ரதிஜ்ஞை செய்து வருணனைத் துதிக்க அவனும் இவனுக்கு லோஹிதன் என்னும் பிள்ளை பிறக்குமாறு அருளினான். பிள்ளை பிறந்த சில காலங்களுக்குப் பிறகு 'உன் பிள்ளையைப் பசுவாகக் கட்டி யாகம் செய்' என்று வருணன் அரிச்சந்திரனைக் கேட்க ஆரம்பித்தான். அருந்தவம் செய்து பிள்ளையைப்பெற்ற அரிச்சந்திரனுக்கு அருமை மகனை யாகத்திலே அறுத்துத்தர மனமில்லை. 'என் மகன் உபநயனமாகிற ஸம்ஸ்காரமில்லாமலிருக்கிறான். உபநயன மானவுடன் இவனைப் பசுவாகக்கொண்டு யாகம் செய்விக் கிறேன்' என்று வருணனிடம் சொல்லிவந்தான். உபநயன காலம் வந்தவுடன் தன்பிள்ளையை அழைத்து வருணனுக் குத் தான் செய்த ப்ரதிஜ்ஞையைச் சொன்னான். அதைக் கேட்டுக் கோபங்கொண்ட பிள்ளை வில்லை எடுத்துக்கொண்டு வனம் சென்றான். தன் பிள்ளையை நியாயப்படி கொடுக்காம லிருக்கும் ஹரிச்சந்திரனை வருணன் பிடித்துக்கொண்டான். வருணனால் பிடிக்கப்பட்ட ஹரிச்சந்திரனை மஹோதர



வியாதி வருத்திற்று. காட்டில் ஒரு வருஷம் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த லோஹிதன் தன் தகப்பனைப் பார்க்க நாட்டிற்கு வந்தும் தெய்வ விரோதத்தினால் தகப்பனைக் காணமுடியாமல் திரும்பிக் காட்டிற்குச் சென்றுவிட்டான். இப்படியே ஐந்து வருடங்கள் கழிந்தன. ஒருநாள் லோஹிதன், பணத்தாசை நிறைந்தவரும், ஸம்ஸாரியும், ஸூயவஸர் என்பவருடைய பிள்ளையுமான அஜீக3ர்த்தர் என்னும் ரிஷி யைக் கண்டான். அவருடைய பிள்ளைகளுக்குள் நடுப்பிள்ளை யாகிய சுநச்சேபனைப் பல பசுமாடுகளை விலையாகக்கொடுத்து வாங்கினான். தனக்கு பதிலாக அவனைப் பசுவாகக்கொடுப்பது என்று நிச்சயித்துக்கொண்டு ஹரிச்சந்திரனிடம் வந்து சேர்ந் தான் ஹரிச்சந்திரனும் வருணனிடம் அநுமதி பெற்றுக் கொண்டு வியாதியிலிருந்து விடுபட்டு, ராஜஸூயம் என்கிற யஜ்ஞத்தை ஆரம்பித்து, சுநச்சேபனையே பசுவாகச்செய் தான். அப் பசுவைக் கொல்லும் ரித்விக்காக சுநச்சேப னுடைய தகப்பனாரே வந்துசேர்ந்தார். விஶஸனம் செய் வதற்குக் கூலியாக ஏற்படுத்தப்பட்ட நூறு பசுக்களையும் வாங்கிக்கொண்டு, வெட்டுவதற்காகக் கூர்மையான கத்தி யைத் தூக்கிக்கொண்டு தன் தகப்பனே தன்னைநோக்கி வருவதைக் கண்ணுற்றான் சுநச்சேபன்.

"மஹத்யாபதி3 ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப4க3வாந் ஹரி:"
[பேராபத்து நேர்ந்ததாகில் பகவான் ஹரியை நினைக்க வேண்டும்]

"பரமாபத3மாபந்நோ மநஸாऽசிந்தயத் ஹரிம்"
[பேராபத்தையடைந்த கஜேந்திராழ்வான் ஹரியை மனத் தாலே நினைத்தான்]

"ஆர்த்தா விஷண்ணா: ஶிதி2லாஶ்ச பீ4தா:
கோ4ரேஷு ச வ்யாதி4ஷு வர்த்தமாநா: ।
ஸங்கீர்த்ய நாராயணஶப்3த3மாத்ரம்
விமுக்தது3:க்கா2ஸ் ஸுகி2நோ ப4வந்தி"

[தாபத்ரயங்களால் பயந்தவர்களும், கோரமான வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களும் நாராயணஶப்தத்தை மட்டும் சொன்னாலும் துக்கம் நீங்கி ஸுகமுடையவர்களாகிறார்கள்.]

**"ஆபந்நாநாம் பரா க$_{3}$தி:"**

[ஆபத்தடைந்தவர்க்கு மேலான கதியாயிருப்பவன் நாராயணனே] முதலானவிடங்களில் பேராபத்தையடைந்தவர்கள் பகவான் விஷ்ணுவை நினைக்கவேணும் என்று பெரியோர்கள் பேசியிருப்பதை நினைத்து, பரமபுருஷனைத் துதிக்க முற்பட்டு, அதில் தானாகச் சில வார்த்தைகளைச் சொல்லித் துதிப்பதைக்காட்டிலும், அபௌருஷேயமான வேதவாக்குகளைக்கொண்டு துதிப்பதே சிறந்ததாகையாலே, தன் தபோ மஹிமையாலே இந்த மந்திரங்களை ஸாக்ஷாத்கரித்து பகவானைத் துதிக்கிறான் என்று கூறுவர். அந்த யாகத்திற்கு ஹோதாவாக வந்திருந்த விஶ்வாமித்ரரை சரணமடைந்து அவரிடமிருந்து இந்த மந்திரங்களை உபதேசம்பெற்றுத் துதிக்கிறான் என்றும் சொல்லப்படுகிறது. இப்படித் துதித்து பசுபந்தத்திலிருந்து தேவர்களால் விடுவிக்கப்பட்டு, விஶ்வாமித்ரருக்குப் புத்ரனாகவும் ஆனான் என்றும் கூறப்படுகிறது. ப$_{3}$ஹ்வ்ருசப்ராஹ்மணத்திலும், ஸ்ரீபாகவதம் ஒன்பதாவது ஸ்கந்தம் ஏழாவது, பதினாறாவது அத்தியாயங்களிலும் இந்த விருத்தாந்தம் விரிவாக வர்ணிக்கப்படுகிறது. ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் அறுபத்தொன்று, அறுபத்திரண்டு ஆகிய இரண்டு ஸர்க்கங்களிலும் இக் கதை சொல்லப்படுகிறது; ஆனால், அவ்விடத்தில் சொல்லப்படும் கதைக்கும் மேலே விவரிக்கப்பட்ட விருத்தாந்தத்திற்கும் பல பேதங்களுள்ளன. அரசனின் பெயர் அம்பரீஷன் என்றும், யாகத்தில் பசுவானது இந்திரனால் மறைக்கப்பட்டதனாலேயே, ப்ராயஶ்சித்தரூபமாக சுநச்சேபனை நரபசுவாக அம்பரீஷனே விலைக்கு வாங்கினான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு வியாக்கியானம் செய்த கோவிந்தராஜர் அம்பரீஷனுக்கே ஹரிச்சந்திரன் என்று பெயருள்ளதாகையால் விரோத



மில்லை என்று கூறிச்சென்றார். மற்ற பேதங்களைப்பற்றி ப்ரஸ்தாவிக்கவேயில்லை அவர். அவைகளைக் கல்ப பேதத்தினாலேயோ அல்லது வேறு விதமாகவோ பரிஹரித்துக் கொள்வது. இனி மந்திரங்களின் பொருளை விவரிப்போம்.

(வருண) வருணனுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனே! ஸகலதேவதைகளுக்கும் அந்தர்யாமியாயிருந்து பலன்களைக் கொடுப்பவன் வாஸுதேவனேயாகையால் இங்கு வருண சப்தம் வாஸுதேவபர்யந்தம் சொல்லுகிறது. அன்றிக்கே, நேராகவே பகவத் வாசகமாவதாகவும் கொள்ளலாம். **"இந்த்$_{3}$ரமிந்த்$_{3}$ராநுஜம்சைவ"** என்று ஸ்ரீராமாயணத்தில் சுநச்சேபன் இந்த்ராநுஜனை பகவானைத் துதித்தான் என்று சொல்லப்பட்டதன்றோ. (வருண) எல்லாராலும் வரிக்கத்தக்க கல்யாணகுணங்களையுடையவனே! என்றும் கொள்ளலாம். வரணன் என்பது வருணன் என்றாகியிருப்பதாகக் கொண்டு, சேதநாசேதநப்ரபஞ்சங்களுக்கு ஆவரணமாயிருப்பவன் என்றும் பொருள்கொள்வர். **"ஸர்வத்ர வஸ்தி பாதகௌக$_{4}$ாந் ருணத்$_{3}$தி$_{4}$. ஸம்பதோ$_{3}$க$_{4}$ாந் ப$_{3}$த்$_{4}$நாதீதி வருண:"** [வ—எங்கும் வஸிக்கிறான்; ரு—பாபஸமூஹங்களை விலக்குகிறான்; ண—செல்வங்களைச் சேர்ப்பிக்கிறான்; ஆகையால் வருணனாகிறான்.] என்றும் பொருள் கொள்வர். **"வருணோ வாருணோ வ்ருக்ஷ:"** என்று இது பகவந் நாமங்களில் ஒன்றாக ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் படிக்கப்பட்டது. (மே) என்னுடைய. (இமம்) இந்த. (ஹவம்) ஆஹ்வாநத்தை; ஆர்த்தியுடன் கூடியவனாய் நான்செய்யும் ஶப்$_{3}$த$_{3}$த்தை. **"கமலநாப! வாஸுதே$_{3}$வ! விஷ்ணோ! த$_{4}$ரணித$_{4}$ராச்யுத ஶங்க$_{2}$சக்ரபாணே!"** என்றாற்போலே செய்யும் ஆர்த்தத்$_{4}$வனியை. (ஶ்ருதி$_{4}$) கேட்பாயாக. 'ஶ்ருணு' என்றிருக்கவேண்டியது சா$_{2}$ந்த$_{3}$ஸமாகையாலே 'ஶ்ருதி$_{4}$' என்றிருக்கிறது.

(அத்$_{3}$ய) இப்பொழுதே; இந்த க்ஷணத்திலேயே; இக்கணம் தவறினால் மறு கணத்தில் நான் உயிருடனிருப்பது

அரிது; (மாம்) என்னை; தகப்பனாலும் விடப்பட்டு, தகப்பனே சத்ருவாக வெட்டும்படியிருக்கும் என்னை. (ம்ருட3ய) இந்த பந்தத்திலிருந்து விடுவித்து ஸுகப்படுத்து. (அத்ய ச ம்ருட3ய) சகாரத்தினால் இப்போது மட்டுமின்றியே எக்காலத்திலும் என்னை ஸுகப்படுத்து என்கிறான்.

(த்வாம்) ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தியாய், ஆச்ரிதர்களுடைய ஆர்த்தநாதம் செவிப்பட்டவுடன் அரைகுலையத் தலைகுலைய ஓடிவரும் அச்சுதனான உன்னை. (அவஸ்யு:) உன்னுடைய ரக்ஷணத்தை விரும்பினவனாய்க் கொண்டு. 'அவ-ரக்ஷணே' என்று தாது. (ஆசகே) நேரில் யாசிக்கிறேன். 'சிகதி' தாதுவானது யாசிப்பதைச் சொல்லுகிறது. அன்றிக்கே, 'சக த்ருப்தௌ' என்று தாதுவாகையாலே ஆத்மத்ருப்தியை வேண்டுகிறேன் என்றும் பொருள் கொள்வர். யாகபசுவாகக் கட்டப்பட்டிருக்கும் என்னை விடுவிப்பாயாக என்று பாவம். இது கோ3ப்த்ருத்வ வரணம்; இதுவரை முதல் மந்திரம்.

நீ உன்னை ரக்ஷித்துக்கொள்ள விரும்பினால் மட்டும் போருமோ! அதற்காக நீ என்செய்தாய்? எனில்: (தத் த்வா யாமி) என்னை ரக்ஷித்துக்கொள்வதற்காக நான் உன்னை சரணமடைகிறேன். 'நீயே எனக்கு உபாயமாவாயாக' என்று உன் கையிலே என்னை ஒப்படைத்த பிறகு என்னால் செய்யலாவதுண்டோ? என்கை. அன்றிக்கே, 'தத்' என்று இவன் நெஞ்சிலே ஓடும் ஆயுளை நினைக்கிறான். (தத் த்வா யாமி) ஆயுளுக்காக உன்னை ஶரணமடைகிறேன். இது ஆத்மநிக்ஷேபம். "தம் த்வா யாமி" என்று கொண்டு "அப்படிப்பட்ட பகவானாகிய உன்னை அடைகிறேன்" என்றும் பொருள்கொள்வர். (ப்3ரஹ்மணா வந்த3மாந:) வேதவாக்யங்களால் துதித்துக்கொண்டே உன்னைச் சரணமடைகிறேன். (ப்3ரஹ்மணா வந்த3மாந:) வேதவாக்யங்களால் வணங்கிக்கொண்டு. இத்தால் ஆநுகூல்ய ஸங்கல்பம்,



ப்ராதிகூல்யவர்ஜநம் ஆகிய இரண்டும் சொல்லப்பட்டன. மஹா விஶ்வாஸமும், கார்ப்பண்யமும் 'ஆசகே' [யாசிக்கிறேன்] என்னும் பதத்திலே அநுஸந்திக்கத்தக்கவை. இத்தால் ஆறுவிதமான ஸ்வபாவங்களையுடைய சரணவரணம் தன்னால் அநுஷ்டிக்கப்பட்டதைக் காட்டுகிறான். இங்கு சுநச்சேபன் ஆயுளையே முக்கிய பலனாகப் பிரார்த்திக்கிறானாகிலும், இதை அநுஸந்திக்கும் முமுக்ஷுக்கள் பகவத் கைங்கர்யத்தையே முக்கியபலனாகக் கொள்ளக்கடவர்கள்.

(தத் ஆஶாஸ்தே யஜமாநோ ஹவிர்பி4:) நான் விரும்பும் ஆயுளையே இந்த யாகத்திற்கு யஜமானனாகிற ஹரிச்சந்திரன் என்னை ஹவிஸ்ஸாகக்கொண்டு பெற விரும்புகிறான். அதாவது: தன் பிள்ளையின் ஆயுளைப் பெற விரும்புகிறான். (தத3ஶாஸ்தே) இந்த யாகத்தை என்னை ஹவிஸ்ஸாகக்கொண்டு முடித்துப் பலன்பெற விரும்புகிறான் என்றும் பொருள் கொள்வர். (வருண) ஆபத்துக்காலங்களில் ஶரணமாக வரிக்கத்தகுந்த பகவானே! சரணமடைந்த காகாஸுரனையும் ரக்ஷித்தவனாயிற்றே நீ.

"ஸக்ருதே3வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப4யம் ஸர்வபூ4தேப்4யோ த3தா3ம்யேதத்3 வ்ரதம் மம॥"

[ஒரு தடவை சரணமடைந்தவன் பொருட்டும், 'நான் உன்னுடையவன்' என்று யாசிப்பவன் பொருட்டும், ஸர்வ பூதங்களிடமிருந்தும் நான் அபயமளிக்கிறேன். இது என் விரதம்.] என்பவனாயிற்றே நீ. (இஹ) நான் வெட்டப்படவிருக்கும் இவ்விடத்திலேயே (போ3தி4) என்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்தருளவேணும். (இஹ) யஜமானனுக்கு விருத்தமாக நான் பிரார்த்திக்கும்படியான இவ்விஷயத்தில். (அஹேட3மாந:) கோபங்கொள்ளாமல். (போ3தி4) என்னுடைய பிரார்த்தனையே அறிந்துகொள். 'பு3த்4' என்னும் தாதுவின்மேல் சாந்தஸமான ரூபம். (போ3தி4) நீ நினைக்கிலோ கொடிய வினைபோம் என்கிறான்.

அநாதிகாலமாக நான் செய்து வந்த பாபங்களை நினைத்துக் கோபங்கொண்டு 'க்ஷிபாமி' 'ந க்ஷமாமி' என்னும் ஸங்கல்பங்களைச் செய்யாமல், ஶரணாகதனான என் விஷயத்தில் **'ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி'** என்னும் ஸங்கல்பத்தைச் செய் என்கிறான்.

"நீ கேட்பது மிக அழகாயிருக்கிறது; உன்னைப் பசுவாகக்கொண்டு பலனை அடைய விரும்பும் யஜமானனை நான் திருப்திசெய்வதா? அல்லது உனக்கு ஆயுளைக் கொடுத்து உன்னைமட்டும் த்ருப்தி செய்வதா?" என்று பகவதபிப்ராயமாக, சொல்லுகிறான்; (உருஶம்ஸ) பெரிய கீர்த்தியை உடையவனே! "**ரிபூணாமபி வத்ஸல:**" [எதிரிகளிடத்திலும் வாத்ஸல்யத்தையுடையவன்] என்று புகழ்பெற்ற அநந்தகீர்த்தியான நீ, அநுகூலனாய், சரணமடைந்த என்னை உபேக்ஷிக்கலாமோ? (உருஶம்ஸ) 'ப$_3$ஹுஶஸ்துத' என்றும் பொருள்கொள்ளலாம். பலராலும் துதிக்கப்படுபவனே! "**விஷ்ணுருருக$_3$ாயோ** நமஸ்ய:" என்று வேதமும் சொல்லிற்றன்றோ.

**"ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத் தெவ்வெவையும்**
**சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை"**

என்று ஆழ்வாரும் இவ்வர்த்தத்தை அருளினார்.

(ந: ஆயு:) ஒரு அபராதமும் செய்யாதவனாய், இந்த யூபஸ்தம்பத்திலே கட்டப்பட்டிருப்பவனாய், உன்னை சரணமடைந்தவனான என்னுடைய ஆயுளையும், என்னை விலை கொடுத்து வாங்கிய ராஜபுத்ரனுடைய ஆயுளையும், யாகம் செய்பவனான ஹரிச்சந்திரனுடைய ஆயுளையும், (மா ப்ரமோஷீ:) நீ அபஹரிக்காது அருளவேணும். "**அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ$_4$க்தா ச ப்ரபு$_4$ரேவச**" [நானே எல்லா யஜ்ஞங்களையும் புஜிப்பவனாகவும், அவற்றுக்கு ஸ்வாமியாகவுமாகிறேன்.] என்னும் நீ மனம் வைத்தால்



யாகத்தையும் ஸபலமாக்கி எனக்கும் ஆயுளை அருளமுடியும் என்கை. (ந: ஆயு: மா ப்ரமோஷீ:) என்றவிடத்திலுள்ள 'ந:' என்னும் பன்மையைச் சாந்தஸமாகக்கொண்டு 'என்னுடைய ஆயுளை நாசம் செய்யாதே' என்றும் பொருள் கொள்வர். இதுவரையில் இரண்டாவது மந்திரம்.

ஆக, முதல் இரண்டு மந்திரங்களால் மேலான ஆர்த்தியுடன் பகவானை சரணம் புகுந்தபடியைப் பேசிற்று. இனி, அடுத்துள்ள மந்திரங்களால் 'நான் செய்யும் பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் என்னும் மூவகை அபசாரங்களையும் க்ஷமித்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்கிறான். சரணாகதிகத்யத்தில் ஐந்தாவது சூர்ணையில் "**அநந்யஶரணஸ் த்வத் பாத$_3$ாரவிந்த$_3$யுக$_3$ளம் ஶரணமஹம் ப்ரபத்$_3$யே**" என்று சரணம்புக்குப் பத்தாவது சூர்ணையில், "**மநோவாக்காயை: அநாதி$_3$காலப்ரவ்ருத்த அநந்த அக்ருத்யகரண க்ருத்யாகரண ப$_4$க$_3$வத$_3$பசார பா$_4$க$_3$வதாபசார அஸஹ்யாபசாரரூப நாநாவித$_4$ அநந்தாபசாராந் ஆரப்$_3$த$_4$ கார்யாந் அநாரப்$_3$த$_4$ கார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வாந் அஶேஷத: க்ஷமஸ்வ**" [மனம், மொழி, மெய் என்னும் மூன்று உறுப்புக்களாலும், அநாதிகாலமாக விளைந்த அளவிறந்த செய்யத்தகாத காரியங்களைச் செய்வதும், செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாதொழிவதும், எம்பெருமான் விஷயத்திலே அபசாரப்படுவதும், அவனடியார்கள திறத்தில் அபசாரப்படுவதும், பொறுக்கவொண்ணாதபடி அபசாரப்படுவதும், பலங்கொடுக்க ஆரம்பித்தவையும் பலங்கொடுக்க ஆரம்பிக்காதவையும், செய்தவையும், செய்கின்றவையும், செய்யப்போகின்றவையுமாக இப்படிப் பலவகைப்பட்டிருக்கும் பாபகருமங்கள் எல்லாவற்றையும் முழுவதும் க்ஷமித்தருள வேண்டும்.] என்று பிரார்த்திப்பதன்மூலம் பகவான் பாஷ்யகாரர் இவ்வேதார்த்தத்தை அநுஷ்டித்தார். அதில் அடுத்த மந்திரத்தில் அதிக்ரூரமான அஸஹ்யாபசாரத்தை

க்ஷமிக்கவேண்டும் என்கிறது. அஸஹ்யாபசாரமாவது: பகவத் பாகவதவிஷயத்தில் நிஷ்காரணமாக வைரம் பூண்டு பகவத்பாகவத கைங்கர்யங்களை அழிக்கை.

(ஹே தே3வ) வாஸுதேவனே! தேவசப்தார்த்தம் முன்னமே விவரிக்கப்பட்டது. (வருண) அனைவராலும் ஆதரிக்கத்தகுந்தவனே! (தே வ்ரதம்) உன் விஷயமாக உன்னடியார் செய்யும் கைங்கர்யங்களாகிற கர்மாதிகளை. "**மத்கர்மக்ருத் மத்பரம:**" "**மத்3யாஜீ மாம் நமஸ்குரு**" முதலானவிடங்களில் சொல்லப்பட்ட உன் கைங்கரியரூபமான கர்மங்களை. (சித் ஹி) சேதனராயிருக்குமவர்களன்றோ நாங்கள். அறிவுடைமைக்கு அடையாளம் உன் கைங்கரியங்களிலே அந்வயிப்பதேயாயிருக்க அறிவுகேடர் செய்யும் காரியத்தைச் செய்தேனன்றோ என்று தன்னை வெறுக்கிறான். 'சித் ஹி' என்னும் பதங்கள் பாதபூரணத்திற்காகவுள்ளன என்றும் உரைப்பர். (விஶோ யதா2) நாய். பன்றி முதலான ஜந்துக்களைப்போல். அறிவற்றவர்களான ஸம்ஸாரி சேதனர்களைப்போல் என்றும் பொருள்கொள்ளலாம். "**விஶந்தீதி விஶ:**" [(ஸுகதுக்கங்களை)-அநுபவிக்கிறார்களாகையால் 'விட' எனப்படுகிறார்கள்.] என்கிற வ்யுத்பத்தியின்படி ஸம்ஸாரிகளும் அறிவற்ற ஜந்துக்களும் விட்சப்தவாச்யராகின்றனர். (சித் ஹி விஶோ யதா2) அறிவுடைய சேதனராயிருந்தும் அறிவற்ற ஜந்துக்களைப் போலே நடந்துகொண்டோம். "**ஜ்ஞாநேந ஹீந: பஶுபி4ஸ் ஸமாந:**" [ஞானமற்றவன் பிராணிகளுக்கு ஸமானமானவன்] என்னும் நிலையை அடைந்தோம். (த்3யவித்3யவி) தினந்தோறும் (யத்தே வ்ரதம் ப்ரமிநீமஸி) உன் விஷயமான கைங்கரியங்களாகிற வ்ரதங்களை மிகவும் நாசம் செய்கிறோமோ. 'மீஞ் ஹிம்ஸாயாம்' என்னும் தாதுவிலிருந்து உண்டானது. 'ப்ர' என்னும் உபஸர்க்கம் 'மிநீமஸி' என்னும் வினைச்சொல்லோடு சேருகிறது. இங்கு நிகழ்காலத்தில் நாசம்செய்கிறதைச் சொன்னது "**க்ருதாந் க்ரிய**



**மாணாந் கரிஷ்யமாணாந்**" என்று சொல்லப்பட்ட முக்காலங்களிலும் செய்த அஸஹ்யாபசாரங்களைக் குறித்து நிற்கிறது. (ப்ர மிநீமஸி) அதிகமாக நாசம் செய்கிறோம். நாங்கள் பகவத் கைங்கரியங்களைச் செய்யாமல் விருப்பதோடன்றியில் பிறரையும் அவற்றைச் செய்யவொட்டாமல் அழிக்கிறோம். இதுவன்றோ அஸஹ்யாபசாரத்தின் எல்லைநிலம். ஹிரண்ய ராவணாதிகளும் இவ்வபசாரத்தைச் செய்ததாலேயன்றோ பகவானுடைய கோபத்திற்கு இலக்கானார்கள். (யந் தே வ்ரதம் ப்ர மிநீமஸி.... மா நஸ் தஸ்மாதே3நஸோ தே3வ ரீரிஷ:) யாதொரு காரணத்தினால் உன் விஷயமான கைங்கர்யத்தை நாம் மிகவும் அழித்தோமோ அந்தப் பாபத்தைக் கண்டு நீ எங்களைக் கோபிக்கவேண்டாம் என்று கூட்டிப் பொருள் கொள்வது. "மிநீமஸி த்3யவித்3யவி" என்றதுடன் சுநச்சேபருடைய மூன்றாவது மந்திரம் முடிகிறது.

வஸிஷ்டருடையதான அடுத்த மந்திரத்தில் பாகவதாபசாரங்களை க்ஷமிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது. பாகவதாபசாரம் அதிக்ரூரமானது என்பது "ஓரோ அவதாரங்களில் செய்த ஆனைத்தொழில்களெல்லாம் ஓரோ பாகவதாபசாரம் பண்ணின பலம் அநுபவிப்பிக்கைக்காக" என்னும் நஞ்சீயர் வார்த்தையிலிருந்து விளங்குகிறது. "நல்லடிக்காலத்தில் நம் ஆசார்யர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தங்களோபாதி ப்ரக்ருதிமான்களாக நினைத்திருக்கும் புல்விமையின்றிக்கேயாயிற்று இருப்பது. 'திருவுடைமன்னர்' 'செழுமாமணிகள்' 'நிலத்தேவர்' 'தெள்ளியார்' 'பெருமக்கள்' 'பெருந்தவத்தர்' 'உருவுடையாரிளையார்' 'ஓத்துவல்லார்' 'தக்கார்' 'மிக்கார்' 'வேதம் வல்லார்' 'வேதவிமலர்' 'சிறுமாமனிசர்' 'எம்பிரான்றன சின்னங்கள்' என்று நம் குலநாதரான ஆழ்வார்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இப்படித் திருநாமம் சாற்றுகையாலே, கேவலம் தன்னோடொக்க ஒரு

மனுஷ்யர் என்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைத்திருக்கை பாகவதாபசாரம்'' என்று மாணிக்கமாலையிலே பெரியவாச்சான் பிள்ளை பாகவதாபசாரத்தின் லக்ஷணத்தை அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 'இருள் தரு மாஞாலம்' 'கொடுவுலகம்' என்று நிந்திக்கப்படும் இவ்வுலகத்திலிருக்கும் வரையில் இம்மூவகை அபசாரங்களும் விடவொண்ணாமல் நேரிடுமாகையால் அவற்றை க்ஷமிக்கவேண்டும் என்று ப்ரார்த்தனை செய்யப்படுகிறது.

(வருண) வரிக்கத்தகுந்த வாஸுதேவனே! (கிஞ்ச) மேலும், மேலே சொல்லப்பட்ட பாபத்தைக் காட்டிலும் வேறானது இது என்று உணர்த்தப்படுகிறது. (யத்) யாதொரு காரணத்தினால். (யத்கிஞ்ச) சிறிதாகவோ பெரிதாகவோ உள்ள அபசாரங்கள் என்றும் கொள்ளலாம். (தை3வ்யே ஜநே) தேவனாகிற உன்னுடைய அடியார்கள் விஷயத்தில். "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்'' [ஞானியானவன் எனக்கே ஆத்மாவாயிருப்பவன் என்பது என் சித்தாந்தம்.] "மம ப்ராணா ஹி பாண்ட3வா:" [பாண்டவர்கள் எனக்கு உயிரன்றோ] என்று நீயே அருளிச்செய்தபடி உனக்கு உயிர்நிலையாயிருக்கும் பாகவதர்கள் விஷயத்தில். (தை3வ்யே ஜநே) "மத்3 ப4க்த ஜந வாத்ஸல்யம்'' "ந மே ப4க்த: ப்ரணஶ்யதி" என்று உன்னால் அபிமானிக்கப்பட்டவர்களன்றோ இவர்கள். (யத் இத3ம் அபி4த்3ரோஹம் சராமஸி) யாதொரு பாபத்தினால் தூண்டப்பட்டு இந்த அபசாரங்களைச் செய்தேனோ. (அபி4த்3ரோஹம்) எல்லா விதத்திலும் த்ரோஹத்தை. அதாவது: மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் செய்யப்படும் அபசாரங்களை. (இத3ம் அபி4த்3ரோஹம்) "க்ஷமயா ப்ருதி2வீ ஸம:'' என்று புகழப்பட்ட உன்னாலும் பொறுக்கவொண்ணாததான இந்த அபசாரத்தை. "கோபஸ்ய வஶமேயிவாந்" என்கிறபடியே உன்னையும் கோபவசப்படுத்தும் அபசாரத்தை.

"மத்3ப4க்தம் ஶ்வபசம் வாபி நிந்த3ாம் குர்வந்தி யே நரா:।
பத்3மகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்த4ரே॥''



[பூதேவியே! சண்டாளனாயிருந்தபோதிலும் என்னுடைய பக்தனை எந்த ஜனங்கள் நிந்தை செய்கிறார்களோ, அவர்களைக் கோடிக்கணக்கான பத்மகாலங்களானாலும் பொறுக்கமாட்டேன்.] என்பதல்லவோ பகவான் அருளிச்செய்த பாசுரம்.

"அமரவோர் அங்கமாறும் வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவராய சாதி அந்தணர்களேலும்
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோரளவில் ஆங்கே
அவர்கள் தாம் புலையர்போலும் அரங்கமா நகருளானே''

என்று இவ்வபசாரத்தின் கொடுமையைத் தொண்டரடிப்பொடிகளும் அருளிச்செய்தார். 'இப்படிப்பட்ட அபசாரத்தை ஏன் செய்தாய்?' என்று பகவான் கேட்கச் சொல்லுகிறான்: (மநுஷ்யாஶ் சராமஸி) பொய்யையே இயற்கையாக உடைய மனிதர்களாகையாலே செய்தோம். "ஸத்யஸம்ஹிதா வை தே3வா அந்ருதஸம்ஹிதா வை மநுஷ்யா:'' [ஸத்யத்தோடு கூடியவர்கள் தேவர்கள்; பொய்யுடன் பொருந்தியிருப்பவர்கள் மனுஷ்யர்கள்.] என்று ப்3ருஹ்வ்ருசப்3ராஹ்மணத்திலும்,

"மெய்யெல்லாம் போகவிட்டு விரிகுழலாரில் பட்டுப்
பொய்யெல்லாம் பொதிந்துகொண்ட போட்கனேன் வந்துநின்றேன்
அய்யனே! அரங்கனே! உன் அருளென்னும் ஆசைதன்னால்
பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே''

என்று தொண்டரடிப்பொடியாழ்வாராலும் சொல்லப்பட்டதன்றோ. (மநுஷ்யாஶ் சராமஸி) ஐம்புலன்களுக்கு வசப்பட்டவராகையாலே இவ்வபசாரங்களைச் செய்தோம்.

"விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை
மண்ணுள் என்னைப்பெற்றால் என்செய்யா மற்று நீயும் விட்டால்''

என்கிறுன். "மாநஸ் தஸ்மாத்" என்றதுடன் கூட்டிப் பொருள் கொள்வது. ஆக, இத்தால் பாகவதாபசாரங்களை க்ஷமிக்கவேண்டும் என்றும் ப்ரார்த்திக்கப்பட்டதாயிற்று. அடுத்தபடியாக,

"ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்4ய வர்த்ததே।
ஆஜ்ஞாச்சசே2தீ3 மம த்3ரோஹீ மத்3ப4க்தோऽபி ந வைஷ்ணவ:॥

[ஶ்ருதியும், ஸ்ம்ருதிகளும் என்னுடைய ஆஜ்ஞைகளே. அவற்றை எவன் மீறி நடக்கிறுனே அவன் என் ஆணையை மீறி நடக்கிறவனுகையால் எனக்கு த்ரோஹம் செய்தவனுகிறுன். என்னுடைய பக்தனுயிருந்தபோதிலும் அவன் வைஷ்னவனல்லன்.]

"மநீஷீ வைதி3காசாரம் மநஸாऽபி ந லங்க4யேத்"

[நல்ல மனத்தையுடையவன் வேததர்மத்தை மனத்தினுலேயும் மீறக்கூடாது.]

"ய: ஶாஸ்த்ரவிதி4முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:।
ந ஸ ஸித்3தி4மவாப்நோதி ந ஸுக2ம் ந பராங்க3திம்"

[எவனெருவன் சாஸ்திரவிதியை விட்டுத் தன் இஷ்டப்படி நடக்கிறுனே அவன் சித்தியையும், ஸுகத்தையும் மேலான கதியையும் அடைவதில்லை.]

"தாநஹம் த்3விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத4மாந்।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுப4ாநா ஸுரீஷ்வேவ யோநிஷு॥"

[என்னை த்வேஷிப்பவர்களும், கொடூரமானவர்களும், மனிதர்களுள் கீழ்மையானவர்களும், சுபமற்றவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்தில் அதிலும் அஸுரயோனிகளில் எப்போதும் தள்ளுகிறேன்.] என்று ஸ்ரீமந் நாராயணனுலேயே நிந்திக்கப்பட்டதான பகவதபசாரங்களுக்கு க்ஷமை கொள்ளுகிறுன். இந்த பகவதபசாரமும், பாகவதாபசாரமும் ஒன்றையொன்று ஒழிந்திராது. "பகவதபசாரம் பண்ணுகையாவது: எம்பெருமானுடைய நற்சீவனை ஸ்ரீவைஷ்ணவர்கள திறத்துப்பண்ணும் அபசாரம். பாகவதாபசாரம் பண்ணுகையாவது: ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உயிர்நிலையான எம்பெருமான் திறத்துப் பண்ணுமபசாரம்." என்று மாணிக்கமாலையிலே பெரியவாச்சான்பிள்ளை அருளியதை அநுஸந்திப்பது.



"வரத்தால் வலிநினைந்து மாதவ! நின் பாதம்
சிரத்தால் வணங்காணும் என்றே?—உரத்தினுல்
ஈரரியாய் நேர் வலியோன் ஆய இரணியனை
ஓரரியாய் நீயிடந்த தூன்"

"யத3பராத4ஸஹஸ்ரமஜஸ்ரஜம்
த்வயி ஶரண்ய ஹிரண்ய உபாவஹத்।
வரத3 தேந சிரம் த்வமவிக்ரியோ
விக்ருதிம் அர்ப்ப4க நிர்ப4ஜநாத3கா3:॥"

[சரண்யனே! உன் விஷயத்தில் ஹிரண்யன் இடைவிடாது செய்த ஆயிரக்கணக்கான அபராதங்களினுலும் வெகுநாள் விகாரமடையாத நீ, சிறுவனுன ப்ரஹ்லாதனைத் துன்புறுத்தியதால் விகாரமடைந்தாய்] என்று பாகவதாபசாரம் செய்தவர்களில் தலைவனுக எண்ணப்படும் ஹிரண்யனே.

"உன்னைச் சிந்தையினுல் இகழ்ந்த இரணியன்
அகல்மார்வம் கீண்டவென் முன்னைக் கோளரியே!"

என்று பகவதபசாரம் செய்தவனுகவும் சொல்லப்படுகின்றுனன்றே. இப்படிப்பட்ட பகவதபசாரத்தை க்ஷமிக்கவேண்டும் என்கிறது. (அசித்தீ) அறியாமையினுல், இவன் அறிந்து செய்யும் பகவதபசாரங்களுமில்லையோவெனில்: இவன் அறிவுடையனுயிருந்தானுகில் பகவதபசாரம் செய்ய ப்ரஸக்தியேயில்லையே. பகவானுடைய நிருபாதி4க ஶேஷித்வத்தையும் தனக்கு இயற்கையாய், நித்யமாயுள்ள ஶேஷத்வத்தையும் அறியாமையாலேயன்றே இவன் அவனிடத்தில்

அபசாரப்படுகிருன். (அசித்தீ) ''யச்சித்$_3$தி$_4$'' என்கிற படியே ஸ்வரூபத்தில் சித்தாயிருந்தபோதிலும், நடத்தையில் அசித்தைப்போலிருந்தேன். (அசித்தீ) 'அசித்யா' என்றபடி, அஜ்ஞானத்தினுலே என்று பொருள். ''தீ$_4$மதீ **ஸுஷ்டுதீ இத்யாதி$_3$வத் த்ருதீயாயா: பூர்வஸவர்ண தீ$_3$ர்க்க$_4$:''** ['தீ$_4$மதீ 'ஸுஷ்டுதீ' என்றவிடங்களிற்போல் மூன்ரும் வேற்றுமைக்கு பதிலாக முன்னுள்ள எழுத்து நீண்டிருக்கிறது.] என்பர் வரருசி. (அசித்தீ) ''தெரியேன் பாலகனுய்ப் பல தீமைகள் செய்துவிட்டேன்'' என்கிருன். (தவ த$_4$ர்மா) உன் விஷயமான யஜ்ஞம் முதலிய தர்மங்களை. **''யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தே$_3$வாஸ் தாநி த$_4$ர்மாணி ப்ரத$_2$மாந்யாஸந்''** என்று வேதத்திலும் யஜ்ஞாதிகள் தர்மங்களாகச் சொல்லப்பட்டனவன்ரே. (தவ த$_4$ர்மா) உன்னை உகப்பிக்கும் தர்மங்களை.

**''வர்ணுஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்।**
**விஷ்ணுராராத்$_4$யதே பந்த$_2$ா நாந்யஸ் தத் தோஷகாரக: ॥''**

[வர்ணுஶ்ரம தர்மப்படி நடக்கும் புருஷனுலேயே பரம புருஷனை விஷ்ணு ஆராதிக்கப்படுகிருன். அவனை உகப்பிப்பது வேருென்றுமன்று.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டதன்ரே. (தவ த$_4$ர்மா) உன்னை அடைவதற்கு ஸாதனமாகச் சொல்லப்பட்ட தர்மங்களை **''யஜ்ஞேந தா$_3$நேந தபஸாऽநாஶகேந விவிதி$_3$ஷந்தி ப்$_3$ராஹ்மணு:''** [யஜ்ஞத்தினுலும், தானத்தினுலும், தபஸ்ஸினுலும் ப்ராஹ்மணர்கள் பரமாத்மாவை அறிய விரும்புகிருர்கள்.] என்று சொல்லப்பட்டதன்ரே. (தவ த$_4$ர்மா) **''யஜ்ஞதா$_3$நதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத்''** [யஜ்ஞம், தானம், தபஸ் ஆகிய கர்மங்கள் விடத்தக்கவையல்ல; செய்யத்தக்கவையே.] என்று உன்னுலேயே விதிக்கப்பட்ட தர்மங்களை. (த$_4$ர்மா) 'த$_4$ர்மாணி' என்னும் பதத்தின் ச$_2$ாந்த$_3$ஸரூபம். (யத்யுயோபிம) யாதொரு காரணத்தினுல் லோபம் செய்தோமோ. **''ம்ருத்யோ: பத$_3$ம் யோபயந்த:''** என்றவிடத்திற்போலே



'யோபயதி' என்னும் தாது லோபம் செய்வது என்னும் பொருளிலே வந்துள்ளது. (தே$_3$வ) வாஸுதேவனே! (தஸ்மாத் ஏநஸ:) அந்த அந்தப் பாபங்களினுல். (மா ந: ரீரிஷ:) எங்களை ஹிம்ஸிக்கவேண்டாம். 'ரிஷதி' தாது ஹிம்ஸை என்னும் பொருளையுடையது. (ஏநஸ:) **''ஏதி கர்த்தாரம் இதி ஏந:''** [தன்னைச் செய்பவனை வந்து அடைகிறதாகையால் 'ஏந:' என்று பாபம் சொல்லப்படுகிறது.] என்று வ்யுத்பத்தி.

**''யத$_2$ா தே$_4$நுஸஹஸ்ரேஷு வத்ஸோ விந்த$_3$தி மாதரம்।**
**தத$_2$ா பூர்வக்ருதம் கர்ம கர்த்தாரமதி$_4$க$_3$ச்ச$_2$தி ॥''**

[ஆயிரக்கணக்கான பசுக்களில் எப்படிக் கன்றுக்குட்டி தாயை அடைகிறதோ, அப்படியே முன் செய்யப்பட்ட கர்மமும் செய்தவனை அடைகிறது] என்று சொல்லப்பட்டதன்ரே. (மா ரீரிஷ:) ஹிம்ஸிக்கவேண்டாம். **''ந க்ஷமாமி'' ''க்ஷிபாமி''** 'மம த்$_3$ரோஹீ'' என்று சீறியருளவேண்டாம். (மா ந: ரீரிஷ:) உன்னிடம் ந்யஸ்தப$_4$ரர்களான எங்களை நீயே ஹிம்ஸித்தால் எங்களுக்கு வேறுகதியேது? இத்துடன் நான்காவது மந்திரம் முடிகிறது.

அத்ரியினுடையதான அடுத்த மந்திரத்தில் பிறருடைய சேர்க்கையினுல் உண்டாக்கப்பட்டவைகளும், புத்திபூர்வகமாகச் செய்யப்பட்டவையுமான பாபங்களிலிருந்து விடுவிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிருன். (தீ$_3$வி) சொக்கட்டான் முதலிய விளையாட்டுக்களில், 'தி$_3$வு-க்ரீட$_3$ா' என்று தாது. (கிதவாஸ: ந) துஷ்டர்களைப்போல். கிதவமென்னும் சொல் வஞ்சனையைக் குறிக்குமாகையால் வஞ்சகர்கள் என்றும் பொருள். **'கிம் தவ அஸ்தீதி வர்த்தமாநா:''** [எனக்குக் கருவதற்கு உன்னிடம் என்ன உள்ளது? என்றே இருக்குமவர்கள் கிதவர்கள்] என்றும் பொருள்கொள்வர். 'ந' என்னும் பதம் 'போல' என்னும் பொருளையுடையது. **''விப்ரம் ந ஜாதவேத$_3$ஸம''** [அக்னியைப் போலிருக்கும்

ப்ராஹ்மணனை.] என்று வேறொரு வாக்யத்திலும் 'ந' என்னும் பதம் 'போல்' என்னும் பொருளில் ப்ரயோகிக்கப் பட்டதையும் ''தத்ஸாத்$_3$ருஶ்யமபா$_4$வஶ்ச தத$_3$ந்யத்வம் தத$_3$ல்பதா। அப்ராஶஸ்த்யம் விரோத$_4$ஶ்ச நஞர்த்தா$_2$: ஷட் ப்ரகீர்த்திதா:॥'' என்று நிகண்டுவில் நகாரத்திற்கு ஸாத்$_3$ருஶ்யார்த்தத்தைச் சொல்லியிருப்பதையும் நினைப்பது. (யத்$_3$ரிரிபு:) யாதொரு பாபத்தை எங்களுக்கு ஒட்டவைத்தார்களோ. (தீ$_3$வி கிதவாஸ: ந யத்$_3$ ரிரிபு:) சொக்கட்டான் முதலிய விளையாட்டுக்களில் ஈடுபட்டிருக்கும் வஞ்சகர்கள், அவ்விளையாட்டில் சேராமல் அருகிலிருந்து அநுபவிப்பவர்களுடைய பணத்தையும் பிடுங்கிக்கொள்வதுபோல், பாபிகளான சிலர் தங்கள் ஸம்பந்தத்தினால் யாதொரு பாபத்தை எங்கள்மேல் ஒட்டவைத்தார்களோ என்றபடி. (ரிரிபு:) ''ரலயோரபே$_4$த$_3$:'' என்னும் நியாயத்தாலே ''லிலிபு:'' என்றிருக்கவேண்டியது 'ரிரிபு:' என்று கிடக்கிறது. 'ஸம்பந்தப்படுத்தினார்களோ' என்று பொருள். அன்றிக்கே 'ரிரிபு:' என்று சத்துருவைச் சொல்லுவதாகக்கொண்டு ''சத்துருக்களைப்போல் வஞ்சகர்களான நாங்கள் யாதொரு நிஷித்தமான விளையாட்டுக்களை விளையாடினோமோ அதனால் வரும் பாபத்தைப் போக்கடிக்கவேண்டும்' என்று ப்ரார்த்திப்பதாகவும் கொள்வர்.

(தீ$_3$வி கிதவாஸ: யத்$_3$ ரிரிபு:) ரேபஶப்தம் பாபத்தைச் சொல்லுவதாகக் கவிகளாலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கையால், நிஷித்தமான விளையாட்டுகளில் ஈடுபட்டிருக்கும் வஞ்சகர்கள் யாதொரு பாபத்தை நம் விஷயத்தில் செய்தார்களோ' என்றும் பொருள்கொள்ளலாம். 'ரிபு:' எனப்படும் சத்துருவைப்போல் துன்புறுத்துவதாகையால் பாபம் ரேபம் எனப்படுகிறது. 'ரிரிபு:' என்னும் பதம் 'பாபத்தைச் செய்தார்களோ' என்று பொருள்படுகிறது. இந்த யோஜனையில் 'ந' என்னும் பதம் பொருளற்றது.



பிறரால் ஏற்பட்ட பாபத்தைச் சொல்லிற்று கீழே. தன்னாலேயே அறிந்தும், அறியாமலும் செய்யப்பட்ட பாபங்களையும் போக்கடிக்கச் சொல்லுகிறது அடுத்தபடியாக: (யத்$_3$ வா) யாதொரு பாபத்தை. 'வா' என்னும் பதம் 'ச'காரத்தின் பொருளையுடையதாய், மேலே சொன்ன பாபத்துடன் ஸமுச்சயிக்கிறது (கூட்டுகிறது). 'வாக$_4$ா' என்றது பாத$_3$பூரணம் என்றுமாம். (ஸத்யம்) யாதொரு பாபம் புத்திபூர்வகமாகச் செய்யப்பட்டதோ. 'உத' என்னும் பதம் ப்ரஸித்தியைக் காட்டுகிறது. (யத் ந வித்$_3$ம) யாதொரு பாபத்தை நாங்கள் அறியாமல் செய்தோமோ. பால்யத்திலேயாவது. வேறு ஜந்மங்களிலேயாவது செய்யப்பட்டதாகையாலே யாவை சில பாபங்களை நாங்கள் அறியோமோ. முன் சொல்லப்பட்டவை அதிக்ரூரபாபங்களான அபசாரங்களிற் சேர்ந்தவை. இங்கு சொல்லப்படுவன ஸாமாந்ய பாபங்கள். ஆகையால் புநருக்தியில்லை (ஸத்யம் யந்ந வித்$_3$ம கிதவாஸ: ந யத்$_3$ ரிரிபு:) ஸத்யஶப்தவாச்யனான எந்த அநந்தனை நாங்கள் அறியவில்லையோ, அதனாலேயே சோரர்களைப்போல் யாதொரு பாபத்தைச் செய்தோமோ என்றும் பொருள்கொள்வர். 'யத்$_3$ வாக$_4$ா' என்பது இந்த யோஜனையில் பாதபூரணம்.

(ஸர்வா தா:) அந்த எல்லாப் பாபங்களையும். அவை எப்படி இருக்கின்றனவெனில்: (ஶிதி$_2$ரா இவ) ஶிதி$_2$லாநி இவ' என்றிருக்கவேண்டியதின் சாந்தஸரூபம். உன்னை சரணமடைந்த க்ஷணத்திலிருந்து அவை உடைந்துகிடக்கின்றன; போவதற்குக் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றன. ''மயைவைதே நிஹதா: பூர்வமேவ'' [என்னால் இவர்கள் முன்பே கொல்லப்பட்டுவிட்டார்கள்.] என்று சொல்லப்பட்ட நிலையை அடைந்துவிட்டன. ''மாடே வாப்பெறுவராமென்றே?' ''வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ கானோ ஒருங்கிற்று கண்டிலமால் ...வன்துயரை

ஆ! ஆ! மருங்கு" "இங்கில்லைபண்டுபோல் வீற்றிருத்தல்.... வல்வினையார் தாம் மீண்டு அடியெடுப்புதன்றே அழகு என்று முன் பாபங்களைக் கண்டு நடுங்கிக்கொண்டிருந்த என்னைக் கண்டு அவை நடுங்கும்படியான நிலையாயிற்று. (விஷ்ய) உடைந்துகிடக்கும் அப் பாபங்களை என்னைவிட்டுப் பிரிந்து ஓடச்செய்யும். "நாட்டிலுள்ள பாவமெல்லாம் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" "பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" "தீயினில் தூசாகும்" என்னும் நிலையை அடையவும்.

"பாபங்களை நீக்கினால்மட்டும் போதுமோ? என்று பகவான் கேட்கச் சொல்லுகிறான்: (தே₃வ வருண அத₂ தே ப்ரியாஸ: ஸ்யாம) வரணீயனான வாஸுதேவனே! பாபங்கள் நீங்கினால்மட்டும் போராது. 'இறுகல் இறப்பு' 'இறப்பதற்கே எண்ணாது' 'பெருந்துன்பம்' என்று இகழப் படும் கைவல்ய மோக்ஷத்திலே எங்களைத் தள்ளாமல், உனக்கு இனியவர்களாய். உன் கைங்கர்யமே த₄ாரக போஷகபோ₄க்₄யங்களாயிருப்பவர்களாகச் செய்யவேணும். (தே ப்ரியாஸ: ஸ்யாம) உனக்கு இனியவர்களாகக்கடவோம். "உன்றன் திருவுள்ளம் இடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்" என்கிறபடியே அவனுடைய ப்ரீதி யன்றோ இவனுக்குப் புருஷார்த்தமாயிருப்பது. "ப்ரஹர்ஷ யிஷ்யாமி" என்று ஞானிகளும் அவனை உகப்பிக்கவன்றோ ஆசைப்படுவது. (தே ப்ரியாஸ: ஸ்யாம) "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்த₂ம் அஹம் ஸ ச மம ப்ரிய:" [ஞானிக்கு நான் மிகவும் இனியன்; அவனும் எனக்கு மிகவும் பிரியன்.] என்று தேவரீரே அருளிச்செய்திலீரோ? அதை நான் 'பிரார்த்திப்பதும் மிகையன்றோ? என்கிறான். (தே ப்ரியாஸ: ஸ்யாம) "ப்ரீயதே ஸததம் ராம:" [ராமன் எப்போதும் ப்ரீதியடைகிறான்.] என்று ஸ்ரீராமாயணத்திலும், "எம்பிரார்க்கினியவாறே" என்று தொண்டரடிப்பொடிக ளாலும் ப₂லஸ்ருதியில் சொல்லப்பட்ட பகவத் ப்ரீதியைப்



பிரார்த்தித்துத் தலைக்கட்டுகிறான். ஆக, இம்மந்திரங்களால் பகவானை ரக்ஷகனாக வரித்து, அவனை ஶரணம்புக்கு, தன்னுடைய அபசாரங்களுக்கு அவனிடம் க்ஷமைகொண்டு, பாபநிவ்ருத்திபூர்வகமாக பகவத்ப்ரீதியானது பிரார்த்திக்கப் பட்டதாயிற்று.

இப்படி உபஸ்த₂ாநம் செய்தபிறகு, "ஸந்த்₄யாயை நம:" "ஸாவித்ர்யை நம:" "கா₃யத்ர்யை நம:" "ஸரஸ் வத்யை நம:" "ஸர்வாப்₄யோ தே₃வதாப்₄யோ நமோ நம:" [எல்லா தேவதைகளுக்கும் அந்தர்யாமியான பகவானுக்கு நமஸ்காரம்] "காமோऽகார்ஷீத் மந்யுரகார்ஷீத் நமோ நம:" [காமம் செய்தது; கோபம் செய்தது; (நான் செய்யவில்லை) (காமக்ரோத₄ நிர்வாஹகனான பகவானுக்கு) நமஸ்காரம்.] "பூ₄ம்யை நம:" [பூமிதேவிக்கு நமஸ்காரம்] "விஷ்ணவே நம:" [ஸ்ரிய: பதியான விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.] என்று கைகூப்பியவனாய் நான்கு திக்குகளையும் நோக்கி உச்சரித்துக் கொண்டு, இரண்டுதடவை தன்னைத் தானே ப்ரதக்ஷிணம் செய்துகொள்வது. [இப்பிரதக்ஷிண நமஸ்கார மந்திரங்கள் இடத்திற்கிடம் மாறுபடுகிறது. அவரவர்கள் அநுஷ்டானப் படி செய்துகொள்வது. பின்வரும் ஸ்தோத்ரங்களும் அப் படியே.] இங்கு "ஸந்த்₄யாயை நம:" முதலானவை அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான நாராயணனுக்கே விஷய மாகின்றன. இதன்பிறகு.

"அபி₄வாத₃யே........த்ரயார்ஷேயப்ரவராந்வித........கோ₃த்ர:..... ஸூத்ர: யஜு: ஶாகா₂த்₄யாயீ....ஶர்மா நாமாஹமஸ்மி போ₄:"

என்று தங்கள் ப்ரவரம், கோத்ரம், ஸூத்ரம், சாகை, சர்மந் (பெயர்) ஆகியவற்றைச் சொல்லி ஸாஷ்டாங்கமாக, தண்டம்போல் பூமியில் விழுந்து ப்ரணமம் செய்யவேண்டி யது. இப்படி அபிவாதனம் செய்தபிறகு, கீழேயுள்ள பகவத் ஸ்தோத்ரங்களில், அவரவர்கள் ஆசாரத்திற்குத் தக்கவாறு, யதாசக்தி அநுஸந்திப்பது.

ஶங்க2சக்ரக3த்3ாபாணே த்3வாரகாநிலயாச்யுத।
கோ3விந்த3 புண்ட3ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக3தாம்॥
[சங்கசக்ரகதைகளைக் கையிலுடையவனே! த்வாரகாவாஸியான அச்யுதனே! கோவிந்தனே! புண்டரீகாக்ஷனே! சரணாகதனான என்னை ரக்ஷிப்பாயாக.]

நமோ ப்3ரஹ்மண்ய தே3வாய கோ3ப்3ராஹ்மணஹிதாய ச।
ஜக3த்3தி4தாய க்ருஷ்ணாய கோ3விந்தா3ய நமோ நம:।
[ப்ராஹ்மணர்களுக்கு தேவதையும், பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் ஹிதத்தைச் செய்பவனும், உலகம் முழுவதற்கும் நன்மையைச் சிந்திப்பவனுமான கோவிந்தனுக்கு நமஸ்காரம்.]

ப்ராயஶ்சித்தாந்யஶேஷாணி தப:கர்மாத்மகாநி வை।
யாநி தேஷாமஶேஷாணாம் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம்॥
[தபஸ், கர்மம் முதலிய எல்லாப் பிராயச்சித்தங்களுள்ளும் க்ருஷ்ணனை ஸ்மரிப்பதே மேலானது.]

த்4யேயஸ் ஸதா3 ஸவித்ருமண்ட3ல மத்4ய வர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:।
கேயூரவாந் மகரகுண்ட3லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்4ருதஶங்க2சக்ர:॥
[தோள்வளைகள், மகரகுண்டலங்கள், கிரீடம், ஹாரம் முதலிய ஆபரணங்களை அணிந்தவராய், சங்கசக்ரங்களை தரித்தவராய், பொன்போன்ற மேனியராய், பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய், ஸூர்யமண்டலத்தின் நடுவில் விளங்கும் நாராயணர் எப்போதும் தியானிக்கத்தக்கவர்.]

ஸ்ரீரங்க3மங்க3ளநிதி4ம் கருணாநிவாஸம்
ஸ்ரீவேங்கடாத்3ரி ஶிக2ராலயகாளமேக4ம்।
ஸ்ரீஹஸ்திஶைல ஶிக2ரோஜ்ஜ்வல பாரிஜாதம்
ஸ்ரீஶம் நமாமி ஶிரஸா யது3ஶைலதீ3பம்॥
[கருணைக்கோரிருப்பிடமான திருவரங்கத்தின் மங்களச் செல்வத்தையும், திருவேங்கடமலையுச்சியில் விளங்கும் கார்மேகத்தையும், அத்திகிரி (காஞ்சி) மேல் விளங்கும் பாரிஜாதத்தையும், யதுகிரி (திருநாராயணபுரம்) மேல் விளங்கும் விளக்கையும் தலையால் வணங்குகிறேன்.]



காயேந வாசா மநஸேந்த்3ரியைர் வா
பு3த்3த்4யாத்மநா வா ப்ரக்ருதேஸ் ஸ்வபா4வாத்।
கரோமி யத்3 யத் ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்ப்பயாமி॥

வாக்காயங்களாலும், புத்தியினாலும், ப்ரக்ருதியின் ஸ்வபாவத்தினால் எது எதைச் செய்கிறேனோ அவையெல்லாம் பரப்ரஹ்மமான ஸ்ரீமந்நாராயணனுக்கேயென்று ஸமர்ப்பிக்கிறேன்.]

இம்மாதிரியாக ஸ்தோத்ரங்களை அநுஸந்தித்து க்ருஷ்ணார்ப்பணம் செய்து ஸந்த்யாவந்தநத்தை முடிப்பது. இந்த ஸந்த்யாவந்தனத்தை

"நித்யம் காம்யம் பரமபி கதிசித்
த்வய்யத்4யாத்மஸ்வமதிபி4ரமமா:।
ந்யஸ்யாऽஸங்க3ா வித3த்4தி விஹிதம்
ஸ்ரீரங்கே3ந்தே3ா! வித3த்4தி ந ச தே॥"

[ஸ்ரீரங்கசந்த்ரரே! சில விசிஷ்டாதிகாரிகள் ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தினால் மமகாரமற்றவர்களாய், ப2லஸங்க3மற்றவர்களாய், தேவரீரிடத்தில் கர்த்ருத்வத்தை அநுஸந்தித்து நித்யம், காம்யம், நைமித்திகம் என்னும் விஹிதகர்மங்களை அநுஷ்டிக்கிறார்கள்: (ப2லாதி3த்யாக3பூர்வகமாக அநுஷ்டிக்கிறார்களாகையாலே) அவர்கள் அநுஷ்டிக்கிறார்களுமல்லர்.] என்று பட்டர் அருளிய ரீதியிலே கர்மயோக3நிஷ்ட3ர்களைப் போலே ப2லாதி3த்யாகத்துடனும், ப்ரபந்நர்க்கேயுரிய உபாயத்வபு3த்3தி4 த்யாகத்துடனும் ப4கவத3ாஜ்ஞாகைங்கர்யம் என்னும் நினைவுடன் ப்ரபந்நர்கள் அவஶ்யம் அநுஷ்டிக்கவேண்டும்.

इत्थं कौण्डिन्यान्वयमणिना श्रीश्रीनिवासदासेन।
सन्ध्यावन्दनभाष्यं लिखितं संयग्विगाह्यतां सद्भिः॥

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶன ஸ்தாபகரான
ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி அருளிய ஸந்த்யாவந்தனபாஷ்யம் முற்றிற்று.